# அகநானூற்றுப் பதிப்புகள் : பாடவேறுபாடுகளும் உரைவேறுபாடுகளும்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர்பட்ட (பிஎச்.டி.,)
ஆய்வின் நிறைவாகப் பணிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**மா. பரமசிவன்**

பதிவு எண் : 1709



நெறியாளர்

**பேரா. இரா. தாமோதரன்**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் ‘ஏ’ தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

நவம்பர் - 2011

**முனைவர் இரா.தாமோதரன்,**
முன்னை இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி–630 003.

பேராசிரியர், தலைவர்,
பெரியார் உயராய்வு மையம்,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி.

நாள்: 16.11.2011

# நெறியாளர் சான்றிதழ்

**‘அகநானூற்றுப் பதிப்புகள்: பாடவேறுபாடுகளும் உரை வேறுபாடுகளும்’** என்னும் தலைப்பில் ஆய்வாளர் திரு.மா.பரமசிவன் அவர்களால் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப் பெற்ற இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னிச்சையாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்வுக்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

16.11.2011

**துறைத்தலைவர்**
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி–630 003

(இரா.தாமோதரன்)
நெறியாளர்

**மா.பரமசிவன்,**
பதிவு எண்:1709,
முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003.

நாள் : 16.11.2011

## ஆய்வாளர் உறுதிமொழி

**'அகநானூற்றுப் பதிப்புகள்: பாடவேறுபாடுகளும் உரை வேறுபாடுகளும்'** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இவ்ஆய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

(மா.பரமசிவன்)

ஆய்வாளர்

# நன்றியுரை

*'அகநானூற்றுப் பதிப்புகள்:பாடவேறுபாடுகளும் உரை வேறுபாடுகளும்'* எனும் தலைப்பில் முனைவர் பட்டம் மேற்கொள்வதற்கு எனக்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர், தமிழ்த்துறைத் தலைவர் ஆகிய அனைவருக்கும் முதற்கண் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

ஆய்வியல் நிறைஞர் பயின்று கொண்டிருந்த காலத்திலேயே முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ள வேண்டும் என்று எனக்கு அறிவுறுத்தியவர் எம் பேராசிரியர். 'அவர் இல்லை என்றால் நான் இல்லை; இவ்ஆய்வு இல்லை'. என் குடும்பச்சூழலை மையப்படுத்தி ஆய்வியல் நிறைஞர் பயின்றபின் பணிக்குச் செல்ல இருந்த என்னை அழைத்துப்பேசிப் பொருளாதார உதவிகள் செய்வதாகக் கூறி, அதேபோல் செம்மொழி நிறுவன ஆய்வு உதவித்தொகை கிடைக்கும் வரை என் பொருளாதாரச் சிக்கலைத் தீர்த்து, அறிவுசார் சிந்தனைகளையும் வழங்கி என்னை நெறிப்படுத்தியவரும் அவரே.

'செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவன ஆய்வு உதவித்தொகை உழைத்தால் கிடைக்கும்' என்று குறிப்பிட்டு, நம்பிக்கை தெரிவித்து, அத்தேர்வு குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தி, ஊக்கமளித்து, செம்மொழி நிறுவன உதவித்தொகை கிடைத்ததும் முதல் மகிழ்ச்சியடைந்தவர் எம் பேராசிரியரே ஆவார். இதுபோன்ற பல்வேறு சூழல்களில் என்னை உருவாக்கி, நெறிப்படுத்தி வரும் எம் மதிப்புமிகு பேராசிரியப் பெருந்தகை முனைவர் இரா.தாமோதரன் (அறவேந்தன்) ஐயா அவர்களுக்கு என் வாழ்நாள் முழுதும் நன்றிக்கடன் பட்டவனாவேன்.

2009 ஆம் ஆண்டிற்கான ஆய்வு உதவித்தொகை பெறும் பதின்மரில் ஒருவராக என்னையும் தேர்ந்தெடுத்து முனைவர்பட்ட ஆய்விற்குரிய பொருளாதாரச் சிக்கலைத் தீர்த்துவைத்த செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் பொறுப்பு அலுவலர் பேரா.க.இராமசாமி ஐயா அவர்களுக்கும் பிற அலுவலர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன். ஆய்வுக் காலங்களில் ஆய்வுக்குழுக்கூட்ட அறிக்கை

அளிப்பது போன்ற செயல்களைச் செய்து எம் ஆய்விற்கு உதவிய எம்துறைப் பேராசிரியர்களுக்கும் நன்றி.

'நீ நன்றாகப் படித்து ஒரு நல்ல வேலைக்குச் சென்றால் போதும். அதுவே, எனக்கு நிம்மதி' என்று அடிக்கடிக் கூறுபவர் என் தாத்தா திருமிகு.உ.உடையான் அவர்கள். நான் சிற்றூரில் பிறந்திருந்தாலும் வயல்வெளி வேலைகள் என் கல்வியைப் பாதிக்காமல் இருக்க எனக்குப் பேருதவி புரிந்தவர் என் தாயார் திருமதி.மா.சுந்தரம்பாள். இன்று எம்முடன் இல்லாவிட்டாலும் நான் படித்து ஒரு நல்ல பணிக்குச் செல்லவேண்டும் என்று தம் வாழ்நாள் இறுதிவரை எண்ணிக்கொண்டு வாழ்ந்தவர், உழைத்தவர் என் தந்தையார் தெய்வத்திரு உ.மாரிமுத்து அவர்கள். இளமைக்காலம் தொட்டு நான் படித்து முன்னேற வேண்டும் என்பதற்காகத் தம் படிப்பைத் தியாகம் செய்தவர்கள் என் சகோதரர்களான திரு.மா.கணபதி, திரு.மா.ஆனந்தன் ஆகியோர். இளவயது முதலே என் படிப்பில் அக்கறை செலுத்தி எனக்கு அகரம் எழுதக் கற்றுக் கொடுத்து உதவியவர்கள் என் சகோதரிகளான திருமதி.கு.பாண்டிமீனா, திருமதி.ஜெ.வாசுகி, திருமதி.மா.மேகலை ஆகியோர். இவர்கள் அனைவருக்கும் என்றென்றும் நான் நன்றிக்கடன் பட்டவனாவேன்.

அகநானூற்றின் முதற்பதிப்பு பல்வேறு வகையான கருத்து வேறுபாடுகளுடன் காணப்பெறுகிறது. அதற்குக் காரணம் அம்முதற்பதிப்பு நூல் கிடைக்கப்பெறாமையே ஆகும். அந்நிலையில் அம்முதற்பதிப்பின் முகப்பைக் கொடுத்து உதவியவர் சென்னை, குருநானக் கல்லூரித்தமிழ் விரிவுரையாளர் திரு.பா.இளமாறன் அவர்கள். 1920 இல் வெளிவந்த பதிப்பு என்னிடம் இருந்தும் அது வெளிவந்த ஆண்டு பற்றிய தெளிவை அறிய இயலாத சூழலில், அது 1920 இல் வெளிவந்தது என்பது குறித்த செய்தியைத் தெளிவாக்க உதவியவர் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவன நூலகர் திரு.கண்ணன் ஆவார். அப்பதிப்பின் முகப்பினைத் தமிழ்ப் பல்கலைக்கழக டாக்டர் வ.அய்.சு. நூலகத்திலிருந்து நகல் எடுத்து அனுப்பி வைத்து உதவியவர், தமிழ்ப்பல்கலைக்கழக, இந்திய மொழிகள் பள்ளியின் முனைவர்பட்ட ஆய்வாளர் சகோதரர் திரு.கா.குமார் ஆவார். மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பை ஜெ.ஜெ.கலை, அறிவியல் கல்லூரி

நூலகத்திலிருந்து எடுத்து எனக்கு அனுப்பி உதவியவர் அண்ணன் முனைவர் அ.செல்வராசு அவர்கள். இவர்கள் அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகள்!

எனக்கு இளங்கலையில் வகுப்பு எடுத்திருந்தாலும் என் முனைவர்பட்ட ஆய்வு வரை உதவி செய்ய முன்வந்து தம்துறை நூலகத்தில் தம் பெயரில் எனக்கு நூல்களை எடுத்துத்தந்து உதவிய அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் பேரா.ம.துரை அவர்களுக்கும் என் நன்றிகள் உரித்தாகுக.

முனைவர்பட்ட ஆய்வின்போது தரவு திரட்டலுக்குப் பின்வரும் நூலகங்கள் உதவின.

- அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறை நூலகம்
- அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகம்
- அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறை நூலகம்
- காரைக்குடி கிளை நூலகம்
- தேவகோட்டை கிளை நூலகம்
- பாகனேரி வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் நூலகம்
- மதுரைத் தமிழ்ச்சங்க நூலகம்
- தமிழ்ப் பல்கலைக்கழக டாக்டர் வ.அய்.சு. நூலகம்
- சரசுவதி மகால் நூலகம்
- ஜெ.ஜெ. கலை, அறிவியல் கல்லூரி நூலகம்
- செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவன நூலகம்
- உ.வே.சாமிநாதையர் நூலகம்
- கன்னிமாரா பொது நூலகம்
- மறைமலையடிகள் நூலகம்
- ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம்
- உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம்
- அள்ளூர் திருவள்ளுவர் தவச்சாலை நூலகம்.

இந்நூலகங்களில் பணியாற்றுவோர், அந்நூலகங்களில் இருந்து நூல்களைப் பெற உதவியோர் ஆகிய அனைவருக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றிகள்.

அகநானூற்றின் பதிப்பு வரலாற்றைத் தெளிவுற எழுதுவதற்கு அறிஞர் பெருமக்கள் சிலரின் ஆலோசனைகளும் அறிவுரைகளும் உதவின. அவ்வகையில் தம் நேரத்தை ஒதுக்கிக் கருத்துத் தெரிவித்தும் அகநானூற்று வெளியீடுகள் சிலவற்றை வழங்கியுமாக உதவி செய்த புலவர் இரா.இளங்குமரன், பேரா.செ.வை.சண்முகம், பேரா.க.இராமசாமி, பேரா.கு.சிவமணி, திரு.மயிலம்வே.சிவசுப்பிரமணியன், பேரா.ஆ.மணி, திரு.தி.ந.இராமச்சந்திரன், திரு.பா.இளமாறன், திரு.ஸ்ரீபிரசாந்தன் ஆகிய அனைவருக்கும் என் நன்றிகள் உரித்தாகுக.

எம்துறையில் எம் நெறியாளரின் வழிகாட்டுதலில் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ளும் ஆய்வாளர்கள் அனைவரும் இரண்டு வாரங்களுக்கு ஒருமுறை ‘ஆய்வாளர் சந்திப்பு’ மேற்கொள்வது வழக்கம். இவ்ஆய்வாளர் சந்திப்பில் இருவர் ஆய்வேடு தொடர்பான கட்டுரை வாசிப்பர்; இருவர் புதிதாக வந்த ஆய்வு நூல் ஏதேனும் ஒன்றினை வாசித்து மதிப்பீடு செய்வர். இம்முறையில் மேற்கொள்ளப்பெற்ற இவ்ஆய்வாளர் சந்திப்பின் மூலம் ஆய்வேடு தொடர்பான கட்டுரைகள் பல திருத்தம் பெற்றன. இவ்வகையில் திருத்தம் பெறுவதற்கு உதவியவர்கள் முனைவர் அ.இராஜசேகர், திரு.மு.முனீஸ்மூர்த்தி, திரு.க.பாலாஜி, திரு.ம.லோகேஸ்வரன் ஆகியோர். இவர்கள் அனைவருக்கும் நெஞ்சார்ந்த நன்றிகள். எம் ஆய்விலும் உழைப்பிலும் அக்கறை காட்டி சில உதவிகள் செய்து, என்னை ஊக்குவிக்கும் என் அறை நண்பர்கள் திரு.ப.சிவமாருதி, திரு.இர.சக்திவேல் ஆகியோருக்கும் ஆய்வின் இறுதிக்கட்டத்தில் உதவி செய்த எம்துறை ஆய்வியல் நிறைஞர் மாணவர் திரு.ந.ஜெகதீஸ்குமார், ஆங்கிலத்துறை ஆய்வியல் நிறைஞர் மாணவர் திரு.அ.கோபாலகிருஷ்ணன் ஆகியோருக்கும் நன்றி.

ஆய்வின் தொடக்க காலத்தில் பாடவேறுபாடுகளை ஒப்பிட்டுப் பார்க்க உதவிய எம்துறையில் முனைவர்பட்டம், ஆய்வியல் நிறைஞர் பட்டம் மேற்கொள்ளும் நண்பர்களான திரு.ந.இராஜேந்திரன், திரு.மூ.அய்யனார், திரு.இ.முனியசாமி, திரு.மு.இரவிக்குமார் ஆகியோருக்கும் பதிப்பு வரலாற்றின்

மூன்றாம்படியினைப் பிரதி எடுத்துத்தந்து உதவிய என் ஊரைச் சார்ந்த அன்புத்தம்பிகள் திரு.பா.இராஜவேல்குமார், திரு.பி.பிரபாகரன், திரு.கரு.விஜயகாந்த் ஆகியோருக்கும் நன்றி.

ஆய்வின் இறுதிக்காலக் கட்டத்தில் என் ஆய்வேட்டின் இறுதிப் பிரதியினைப் படி எடுத்துத் தந்து உதவிய என் சகோதரிகள் திருமதி.மா.மேகலை, செல்வி.அ.ரம்யா, செல்வி.ஜெ.மதுவாணி ஆகியோருக்கும் ஆய்வேடு செம்மையுற வெளிவருவதற்கு மெய்ப்புப்பார்த்து உதவிய திரு. மு.முனீஸ்மூர்த்தி, திரு.ம.லோகேஸ்வரன், திரு.மூ.அய்யனார் ஆகியோருக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.

ஆய்வேட்டைக் கணினியில் தட்டச்சுச் செய்தளித்த அருண் கணினியகத்தாருக்கும் அட்டை வடிவமைப்பு, நூல்கட்டு செய்தளித்த இரவி அச்சகத்தாருக்கும் என்றென்றும் என் நன்றிகள் உரியதாகும்.

நன்றி!

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ.எ. | – | அடி எண் |
| அகப். | – | அகப்பொருள் விளக்கம் |
| அகம். | – | அகநானூறு |
| ஆ.பெ.இ. | – | ஆசிரியர் பெயர் இல்லை |
| ஆ.வி.இ. | – | ஆண்டு விளக்கம் இல்லை |
| இளம். | – | இளம்பூரணர் |
| உ.வே.சா. | – | உ.வே.சாமிநாதையர் |
| உரை. | – | உரையாசிரியர்/உரையாசிரியர்கள் |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| க.வா. | – | கடவுள் வாழ்த்து |
| கலி. | – | கலித்தொகை |
| குறி. | – | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | – | குறுந்தொகை |
| சமா. | – | சமாஜப்பதிப்பு |
| சிலம்பு. | – | சிலப்பதிகாரம் |
| சிறு. | – | சிறுபாணாற்றுப்படை |
| சேனா. | – | சேனாவரையர் |
| சொல். | – | சொல்லதிகாரம் |
| திரு. | – | திருமுருகாற்றுப்படை |
| தொல். | – | தொல்காப்பியம் |
| ந.மு.வே.,கரந்தை.உரை | – | ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக்கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை உரை |

| | | |
|---|---|---|
| நச்./நச்சர். | – | நச்சினார்க்கினியர் |
| நற். | – | நற்றிணை |
| நெடு. | – | நெடுநல்வாடை |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பட். | – | பட்டினப்பாலை |
| பதி. | – | பதிப்பாசிரியர் |
| பதி.,உரை. | – | பதிப்பும் உரையும் |
| பதிற். | – | பதிற்றுப்பத்து |
| பதிற்.தி. | – | பதிற்றுப்பத்து திரட்டு |
| பரி. | – | பரிபாடல் |
| பரி.தி. | – | பரிபாடல் திரட்டு |
| பரிமே. | – | பரிமேலழகர் |
| பரிமே.உரை | – | பரிமேலழகர் உரை |
| பா.எ. | – | பாடல் எண் |
| பிற. | – | பிறபதிப்புகள் |
| பின்னத்தூரார் | – | பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் |
| புறப். | – | புறப்பொருள் வெண்பாமாலை |
| புறம். | – | புறநானூறு |
| பெரு. | – | பெரும்பாணாற்றுப்படை |
| பேரா. | – | பேராசிரியர் |
| பொரு. | – | பொருநராற்றுப்படை |
| மது. | – | மதுரைக்காஞ்சி |
| மர்ரே. | – | மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு |

| | | |
|---|---|---|
| மலை. | – | மலைபடுகடாம் |
| மு.காசி. | – | வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு |
| மு.நூ. | – | முன்னர்ச்சுட்டிய நூல் |
| முல். | – | முல்லைப்பாட்டு |
| மேலது | – | மேலே சுட்டியது |
| ரா.இரா. | – | ரா.இராகவையங்கார் |
| ராஜ.குறிப்புரை | – | ராஜகோபாலார்யன் குறிப்புரை |
| ராஜ./ராஜ.பதி. | – | ராஜகோபாலார்யன் பதிப்புகள் |
| ராஜ.1920 | – | 1920 இல் வெளிவந்துள்ள ராஜகோபாலார்யன் பதிப்பு |
| ராஜ.1923 | – | 1923 இல் வெளிவந்துள்ள ராஜகோபாலார்யன் பதிப்பு |
| ராஜ.1926 | – | 1926 இல் வெளிவந்துள்ள ராஜகோபாலார்யன் பதிப்பு |
| ராஜ.1933 | – | 1933 இல் வெளிவந்துள்ள ராஜகோபாலார்யன் பதிப்பு |

# உள்ளடக்கம்

14. எழுத்துநிலை வேறுபாடுகள் – ஓர் எழுத்து மிகுவதால் வேறுபடுதல் – உயிர்மெய் எழுத்து மிகுதல்
15. எழுத்துநிலை வேறுபாடுகள் – குறில்,நெடில் வேறுபாடுகள்
16. எழுத்துநிலை வேறுபாடுகள் – ஓர்எழுத்திற்குப்பதில் பிறிதோர் எழுத்து வருதல் – அச்சுப்பிழையாகக் கருதத்தகுந்தவை
17. எழுத்துநிலை வேறுபாடுகள் – ஓர் எழுத்திற்குப்பதில் பிறிதோர் எழுத்து வருதல் – சொல்நிலையிலான மாற்றம்
18. அடிக்குறிப்புகளுடன் கூடிய வேறுபாடுகள் – ஒரு பதிப்பு மட்டும்
19. அச்சுப்பிழையாகக் கருதத்தகுந்த அடிக்குறிப்புகளுடன் கூடிய வேறுபாடுகள் ஒரு பதிப்பு மட்டும்
20. அடிக்குறிப்புகளுடன் கூடிய வேறுபாடுகள் – இரு பதிப்புகள்
21. ஒரு பதிப்பின் முதன்மை வேறொரு பதிப்பின் அடிக்குறிப்பு – ஒரு பதிப்பின் அடிக்குறிப்பு வேறொரு பதிப்பின் முதன்மை
22. முற்றிலுமான வேறுபாட்டுத் தன்மையில் மயிலம்வே.பதிப்பு மட்டும் வேறுபடுதல்
23. அடிக்குறிப்புகளுடன் கூடிய வேறுபாடுகள் – மூன்று பதிப்புகள்
24. ராஜ.முதன்மை பிற அடிக்குறிப்பு – ராஜ.அடிக்குறிப்பு பிற முதன்மை
25. உரை வேறுபாடுகள் – இரண்டு பொருண்மைகள் காணப்பெறுதல்
26. மூன்று பொருண்மைகள் காணப்பெறுதல்
27. அகநானூற்றுப் பதிப்புகளின் முகப்புகளும் முதற்பதிப்பிற்கான நூலக ஆணையும்
28. பதிப்பாசிரியர்களின் நிழற்படங்கள்

# முன்னுரை

பல்வேறு காலங்களில் தோன்றிய பல்வேறு சுவடிகளை ஒப்பிட்டு நூல்களைப் பதிப்பிக்கும்போது ஒரு எழுத்து அல்லது ஒரு சொல் அல்லது ஒரு தொடர் ஒரு சுவடியிலிருந்து பிறிதொரு சுவடியில் மாறியிருப்பதைப் பதிப்பாசிரியர்கள் கண்டறிந்து பாடவேறுபாடுகளைக் குறித்துள்ளனர். இவ்வகையிலான மாற்றங்கள் பிற்கால உரைமாற்றங்களுக்கும் அடிப்படையாய் அமைந்தன. அச்சுப் பரவலாக்கத்தில் சுவடிகளில் இருந்த தமிழ்நூல்கள் அச்சுக்கு மாற்றம் பெற்றபோது ஒவ்வொரு பதிப்பாசிரியரும் தமக்குச் சரியாகத் தோன்றிய பாடத்தையும் அப்பாடத்திற்குப் பொருந்தும் உரைக்கருத்தையும் அந்நூலில் அச்சிட்டுப் பதிப்பித்தனர். பிறவற்றை அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகளாகக் குறித்தனர். அவ்வகையில் ஒரு குறிப்பிட்ட பாடத்தைச் சரியானதாகத் தேர்ந்தெடுத்தமைக்கான காரணத்தைப் பதிப்பாசிரியர் எவரும் குறிக்கவில்லை.

இச்சூழலில் ஒருவருக்குப் பொருத்தமானதாகத் தோன்றிய பாடம் மற்றொருவருக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. இந்நிலையில் தமிழ் நூல்களில் பாடவேறுபாடுகள் மிகுந்தன. இத்தகைய பாடவேறுபாடுகள் பதிப்பாசிரியர் சார்ந்த சமூகப் பின்னணி, காலப்பின்னணி ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்து விடுவதும் உண்டு. தமிழ், செம்மொழியாக அறிவிக்கப்பெற்ற இச்சூழலில் ஒவ்வொரு தமிழ் நூலுக்கும் மேற்கண்ட குழப்பங்களை நீக்குதலும் பொருத்தமான பாடங்களைக் கொண்டு, பாடவேறுபாடுகள், உரைவேறுபாடுகள் குறித்த விளக்கங்கள் அமைத்தலுமான தன்மைகளுடன் கூடிய செம்பதிப்பு காலத்தின் கட்டாயமாக்கப் பெற்றுள்ளது. இதனைக் கருத்தில் கொண்டு அகநானூற்றுப் பதிப்புகளை ஆராய்வதாக இவ்வாய்வு அமைகிறது.

## ஆய்வுத் தலைப்பு

'அகநானூற்றுப் பதிப்புகள்: பாடவேறுபாடுகளும் உரை வேறுபாடுகளும்' என்பது இவ்வாய்விற்கான தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

தமிழ்நூல் பதிப்பாசிரியர்கள் பெரும்பாலும் சுவடிகளில் காணப்பெற்ற பல்வேறுபட்ட பாடங்களில் தமக்குச் சரியாகத்

தோன்றியவற்றை முதன்மைப் பாடமாகவும் பிறவற்றை அடிக்குறிப்பிலும் அமைத்தனர். இதற்குத்தக உரைகளும் மாற்றம் பெற்றன. பல்வேறுபட்ட பாடங்களில் ஏதேனும் ஒரு பாடத்தைப் பொருத்தமானதாகக் கருதி முதன்மைப்பாடமாக அமைக்கும் பதிப்பாசிரியர்கள் எவரும் அதன் பொருத்தம் குறித்த காரணத்தை இதுவரை விளக்கவில்லை. இந்நிலையில் இந்த ஆய்வு கீழ்வரும் நோக்கங்களைக் கொண்டமைகிறது. அவை:

★ பதிப்பாளர்களும் வெளியீட்டாளர்களும் குறிப்பிடாத பாடவேறுபாடுகளை அறிதல்★; அதாவது இதுவரை வெளிவந்துள்ள பதிப்புகளில் மூலபாடங்களை ஒப்பிட்டு அவற்றிற்கு இடையிலான பாடவேறுபாடுகளை அறிதல்.

★ இதுவரை முன்வைக்கப்பெற்ற பாடவேறுபாடுகளில் எந்தப்பாடம் ஏற்புடைத்து★ என்பதனைக் காரண, காரிய அடிப்படையில் சுட்டுதல்.

★ உரைகளுக்கு இடையே காணலாகும் உரைவேறுபாடுகளைக்★ கண்டறிந்து ஏற்புடைய உரையை இனங்காணுதல்; ஏற்புடைய உரையைக் குறிப்பிடுதல்.

### ஆய்வு முன்னோடிகள்

இன்றைய தமிழ் ஆய்வுச்சூழலில் மூலபாட ஆய்வுகள் மிகுதியாக மேற்கொள்ளப்பெறவில்லை என்றே குறிக்கலாம். இருப்பினும் அ.விநாயகமூர்த்தி (மூலபாட ஆய்வியல்), மூ.இராமகிருட்டிணன்(பிரதிபேத ஆராய்ச்சி), வெ.பழநியப்பன் (தமிழ் நூல்களில் பாடவேறுபாடுகள்) ஆகியோர் ஆய்வு முன்னோடிகளாகவும் அவர்தம் ஆய்வுகள் முன்னாய்வுகளாகவும் அமைகின்றன. இருப்பினும் அகநானூற்றுப் பாடவேறுபாடுகளை விரிவான நிலையில் விளக்கிப் பொருத்தமான பாடத்தைக் காரண, காரிய அடிப்படையில் விளக்குவதாக எந்த ஆய்வும் இதுவரை வெளிவரவில்லை. இத்தன்மையில் இதுவே முதல் ஆய்வாக அமைகிறது.

---

★ இயல்களின் விளக்கப்பகுதியில் பாட, உரைவேறுபாடுகளும் ஏற்புடையனவும் சாய்வு எழுத்துவடிவில் (Italic) அளிக்கப்பெற்றுள்ளன.

**ஆய்வு எல்லை**

அகநானூற்றிற்கான முதல் பதிப்பு 1918 இல் வெளிவந்துள்ளது. அக்காலம் முதல் 2010 டிசம்பர் வரை அகநானூற்றுப் பதிப்பு, வெளியீடுகளாக 47 நூல்கள் வெளிவந்துள்ளன. இவற்றுள் 43 நூல்கள் அகநானூறு மட்டுமானதாகும். 4 நூல்கள் சங்க இலக்கியம், செவ்வியல் இலக்கியம் வரிசையில் வெளிவந்தனவாகும். இந்த 47 நூல்களில் 13 நூல்களே சுவடிகளைப் பார்வையிட்டுப் பதிப்பிக்கப்பெற்ற பதிப்புகளாக அமைகின்றன. பிற நூல்கள் அனைத்தும் இப்பதின்மூன்று நூல்களை அடிப்படையாகக் கொண்டே வெளிவந்துள்ளன. இப்பதின்மூன்று நூல்களையும் பதிப்பாசிரியர்களை அடிப்படையாகக் கொண்டு, ராஜகோபாலார்யன் பதிப்புகள் (1918,1920,1923,1926,1933), சமாஜப் பதிப்பு(1940), வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு(1943,1944), மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு (1958), மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு(1990) என்று ஐந்து வகையாகப் பகுக்கலாம். அவை குறித்த விவரங்கள் வருமாறு:

1) **ராஜகோபாலார்யன் பதிப்புகள்**

- 1918: அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதி, MADRAS, KAMBAR VILAS BOOK DEPOT, MYLAPORE.
- 1920: ஸ்ரீ: அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும், MADRAS, KAMBAR VILAS BOOK DEPOT, MYLAPORE.
- 1923: வே.இராஜகோபாலையங்கார்(பதி.), ஸ்ரீ: எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும், இவை ஸேதுஸமஸ்தான வித்வான் ஸ்ரீ உ.வே.ரா. இராகவையங்கார் ஸ்வாமிகள் சோதித்துத் தந்தன, சென்னை, மயிலாப்பூர், கம்பர் விலாசம், வே.இராஜகோபாலையங்கார் பதிப்பு.
- 1926: ராஜகோபாலார்யன் (பதி.), ஸ்ரீ: எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் முதற்றொண்ணூறு பாட்டிற்குப் பழைய உரையும் இறுதி முப்பது பாட்டிற்கு ஸ்ரீ வத்ஸசக்ரவர்த்தி ராஜகோபாலார்யன் எழுதிய

குறிப்புரையும், சென்னை, கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர்.

- *1933:* ராஜகோபாலார்யன் (பதி.), ஸ்ரீ: எட்டுத் தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும், இவை ஸேதுஸமஸ்தான மகாவித்வான் பாஷா கவிசேகரர் ஸ்ரீ.உ.வே.ரா.இராகவையங்கார் ஸ்வாமிகள் பரிசோதித்துத் தந்தன, ஸ்ரீ வத்ஸசக்ரவர்த்தி ராஜகோபாலார்யன் பதிப்பு, கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர்.

- *1940:* சைவ சித்தாந்த மகா சமாஜம்(பதி.), சங்க இலக்கியம் எட்டுத் தொகையும் பத்துப்பாட்டும், சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை.

- *1943:* ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை(உரை.), எட்டுத்தொகையுள் ஒன்றாகிய அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும், பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது, தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம்: கழக வெளியீடு, சென்னை.

- *1944:* ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை(உரை.), எட்டுத்தொகையுள் ஒன்றான அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும், பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது, தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம்: கழக வெளியீடு, சென்னை.

- *1944:* ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை(உரை.), எட்டுத் தொகையுள் ஒன்றான அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும், பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது, தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம் பாகனேரி, கிடைக்குமிடம்: கழக வெளியீடு, சென்னை.

- *1958:* மர்ரேஎஸ்.இராஜம்(பதி.), அகநானூறு, மர்ரே அண்டு கம்பெனி, தம்புச்செட்டி தெரு, சென்னை.

- *1990:* மயிலம்வே.சிவசுப்பிரமணியன்(பதி.), அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும், உ.வே.சா.நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை.

- *1990:* மயிலம்வே.சிவசுப்பிரமணியன்(பதி.), அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும், உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை.

- *1990:* மயிலம்வே.சிவசுப்பிரமணியன்(பதி.), அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும், உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை.

மேற்கண்ட 13 நூல்களில் 1918 இல் வெளிவந்த முதல் பதிப்பு கிடைக்கப்பெறவில்லை. பிற நூல்கள் அனைத்தும் கிடைக்கின்றன. இவையே ஆய்வுக்குரிய எல்லையாக அமைகின்றன.

**சான்றுகள்**

**முதன்மைச் சான்றுகள்**

ஆய்வு எல்லையில் கண்ட அகநானூற்றுப் பதிப்புகளாக அமைந்த பதின்மூன்று நூல்களும் ஆய்விற்குரிய முதன்மைச் சான்றுகளாக அமைகின்றன.

**துணைமைச் சான்றுகள்**

அகநானூற்றுப் பதிப்புகள் தவிர்ந்த பிற வெளியீட்டு நூல்கள், பிற சங்க இலக்கிய மூல நூல்கள், பதிப்பு வரலாறு, பாடம், உரைவேறுபாடு தொடர்பான ஆய்வு நூல்கள், கட்டுரைகள், அகராதிகள், சொல்லடைவுகள் முதலானவை இவ்வாய்விற்கான துணைமைச் சான்றுகளாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

பதிப்பு வரலாறு, உரை வரலாறு குறித்த தெளிவுகளை விளக்க வரலாற்றியல் அணுகுமுறையும் பாடம், உரைவேறுபாடுகளைச்

சுட்டிக்காட்டிப் பொருத்தமான பாடத்தை இனங்கண்டறிந்து விளக்க விளக்கவியல் அணுகுமுறையும் இவ்வாய்வில் பின்பற்றப்பெற்றுள்ளன.

**இயல் பகுப்புகள்**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களைக் கொண்டமைகிறது. அவை வருமாறு:

1. அகநானூறு: பதிப்பு வரலாறும் உரைவரலாறும்
2. அகநானூறு: பாடவேறுபாடுகள்
3. அகநானூறு: உரை வேறுபாடுகள்

'அகநானூறு: பதிப்பு வரலாறும் உரைவரலாறும்' எனும் முதல் இயலில் பதிப்பு, உரைவரலாறுகள் கால வரிசைப்படி விளக்கப்பெற்றுள்ளன. முதற்கண் பதிப்பு வரலாறும் அதனைத் தொடர்ந்து உரை வரலாறுமாக இவ்வியல் அமைகிறது. கால வரிசைப்படி விளக்கப்பெற்றாலும் பதிப்பாசிரியர்களின் பெயர்களைக் குறித்தே பதிப்பு, உரைவரலாறுகள் விளக்கப்பெற்றுள்ளன.

இரண்டாம் இயலான 'அகநானூறு: பாடவேறுபாடுகள்' எனும் இயலில் அகநானூற்றுப் பதிப்புகளின்வழிக் கண்டறியப்பெற்ற 2367 வேறுபாடுகள் குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் பதிப்பாசிரியர்களால் குறிக்கப்பெற்றுள்ள பாடவேறுபாடுகள் 1191 ஆகும். தற்போது கண்டறியப்பெற்றவை 1176 பாடவேறுபாடுகள் ஆகும். இவ்வேறுபாடுகளுள் 182 வேறுபாடுகள் பொருள் மாற்றமுடையனவாக அமைகின்றன. பிற அச்சுப்பிழை முதலானவற்றால் தோன்றியனவாக அமைகின்றன. பொருள் மாற்றமுடைய 182 வேறுபாடுகள் இவ்வியலில் விரிவாக விளக்கப்பெற்றுள்ளன. அவ்வேறுபாடுகள் அடிநிலை, சொல்நிலை, எழுத்துநிலை, அடிக்குறிப்புகளுடன் கூடியவை, அடிக்குறிப்பு மட்டுமானவை, உடம்படுமெய், ஒற்றெழுத்து, ஆய்த எழுத்து வேறுபாடுகள் என்று வகைப்படுத்தப் பெற்றுத் தனித்தலைப்புகளின் கீழ் விளக்கப்பெற்றுள்ளன. இவைதவிர ராஜகோபாலார்யன் பதிப்புகளில் (1920,1923,1926,1933) மட்டும் காணலாகும் பாடவேறுபாடுகளின் எண்ணிக்கை 241 ஆகும். அவையும் கண்டறியப்பெற்று தனித்து விளக்கப்பெற்றுள்ளன.

‘அகநானூறு: உரைவேறுபாடுகள்’ எனும் மூன்றாம் இயல் அகநானூற்றுப் பதிப்புகளில் காணலாகும் உரைவேறுபாடுகளைக் கண்டறிந்து, அவற்றை விளக்கிப் பொருத்தமான உரையை இனங்கண்டறிவதாக அமைகிறது. இவ்வுரை வேறுபாடுகளின் மொத்த எண்ணிக்கை 116 ஆகும். இவ்வேறுபாடுகள் இரண்டு வேறுபாடுகள்(89), மூன்று வேறுபாடுகள்(27) எனும் இருநிலைகளில் பகுத்து விளக்கப்பெற்றுள்ளன.

**இயல் விளக்கமுறை**

இவ்வாய்வின் மூன்று இயல்களும் பின்வரும் நிலைகளில் விளக்கப்பெற்றுள்ளன.

இவ்வாய்வின் முதல் இயல் கால வரிசைப்படி அமைக்கப்பெற்று ஒவ்வொரு பதிப்பு, உரைகளுக்குமான வரலாறுகள் சுருக்கமாக விளக்கப்பெற்றுள்ளன. மூலபாடவேறுபாடு, உரைவேறுபாடு ஆகியனவற்றிற்கு முதன்மை அளிக்க வேண்டும் என்பதனைக் கருத்தில் கொண்டே இம்முதல் இயல் சுருக்கமாக அமைக்கப்பெற்றுள்ளது.

பாடவேறுபாடுகளைக் குறித்து விளக்கும் இரண்டாம் இயல் பாடவேறுபாடுகளை 6 பிரிவுகளாகப் பிரித்து அவற்றைத் தெளிவாக்குவதாக அமைகிறது. இவ்ஆறு பிரிவுகளுக்குள்ளும் பாடல் வரிசைமுறை பின்பற்றப்பெற்று அதன்வழிப் பாடவேறுபாடுகள் விளக்கப்பெற்றுள்ளன. பாடவேறுபாடுகளே உட்தலைப்புகளாகவும் கொடுக்கப் பெற்றுள்ளன. எந்தெந்தப் பாடவேறுபாடுகளை எந்தெந்தப் பதிப்புகள் குறித்துள்ளன என்பன அந்தந்தப் பாடங்களுக்கருகில் சுருக்கக் குறியீடாகக் கொடுக்கப் பெற்றுள்ளன. பாடவேறுபாடுகளில் பொருத்தமான பாடத்தை இனங்கண்டறியப் பின்வரும் நிலை மேற்கொள்ளப்பெற்றுள்ளது. பாடலின் சூழல், பாடல் கருத்து, பாடலுக்கான உரைப்பொருத்தம், சமகால இலக்கியப் பயன்பாட்டுச் சொல் பதிவு, அகராதிப் பொருண்மை, யாப்பியல் நிலை என்பன அவை.

உரைவேறுபாடுகள் குறித்து விளக்கும் மூன்றாம் இயல் இரண்டு பெரும் பிரிவுகளாகப் பகுத்து விளக்கப்பெற்றுள்ளது. இவ்வுரைவேறுபாட்டுப் பகுதியில் ‘பாடம் வேறுபடுதலால் உரைவேறுபடும் தன்மை’ விளக்கப்பெறவில்லை. இது பாடவேறுபாட்டுப் பகுதியில் அமைகிறது.

பாடம் வேறுபடாது உரை மட்டும் வேறுபடும் தன்மையே இப்பகுதியில் விளக்கப்பெற்றுள்ளது. பொருள் மாற்றமின்றிச் சொல் மட்டும் வேறுபடும் உரைவேறுபாட்டுத் தன்மையும் இப்பகுதியில் விளக்கப்பெறவில்லை. இத்தன்மை பெரும்பாலும் வடமொழிச் சொல்லுக்கு நிகரான தமிழ்ச்சொல்லைக் குறிப்பதாகவே அகநானூற்று உரைகளில் காணப்பெறுகிறது.

**சான்றெண் அளிப்புமுறை**

ஒவ்வொரு இயலின் இறுதியிலும் சான்றெண் விளக்கம் அளிக்கப் பெற்றுள்ளது. இது முதற்கண் ஆசிரியர் பெயரையும் அதனைத் தொடர்ந்து நூல்/கட்டுரைத் தலைப்பையும் கொண்டதாக அமைகிறது. இவற்றைத் தொடர்ந்து பக்க எண்கள் கொடுக்கப்பெற்றுள்ளன.

அகநானூற்றுப் பாடல் எண்கள் ஆய்வேட்டின் உட்பகுதி முழுவதும் கொடுக்க வேண்டிய சூழல் இருப்பதால் பாடவேறுபாடுகள், உரைவேறுபாடுகள் எனும் இரு இயல்களில் அகம். என்ற சுருக்கக் குறியீடின்றி அகநானூற்றுப் பாடல் எண்கள் பிறைநகக்குறிக்குள் அளிக்கப்பெறுகின்றன. அதேவேளை கருத்தியல் அடிப்படையில் பிற சங்க இலக்கியப் பாடல்களின் எண்கள் வரிசையில் அகநானூற்றுப் பாடல் எண்களும் இடம்பெற்றிருந்தால், வேறுபாட்டுத் தெளிவிற்காக அவ்விடங்களில் அகம். என்ற சுருக்கக்குறியீடு அளிக்கப்பெறுகிறது.

**துணைநூற்பட்டியல்**

ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலில் அளிக்கப் பெற்றுள்ளன. இந்நூல்கள் முதன்மை நூல்கள், துணைமை நூல்கள் என்று இருபெரும் பிரிவுகளாகப் பிரித்தளிக்கப்பெற்றுள்ளன. மேலும் துணைமை நூல்கள் எனும் பகுதி மூலநூல்கள், திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், அகராதிகள் என்ற நிலையிலும் பகுத்தளிக்கப்பெற்றுள்ளன. இப்பட்டியல் ஆசிரியர் பெயர் அகரவரிசைப்படி அமைக்கப்பெற்றுள்ளது.

**பின்னிணைப்புகள்**

ஆய்விற்குரிய தரவுகள் அனைத்தும் ஆய்வேட்டின் இறுதியில் பின்னிணைப்புகளாக அமைக்கப்பெற்றுள்ளன. இவ்வகையில் இவ்வாய்வில்

*28 பின்னிணைப்புகள் அளிக்கப் பெற்றுள்ளன. இப்பின்னிணைப்புகளுள் 2 (1, 27) பின்னிணைப்புகள் முதல் இயலுக்குரியனவாகவும் 23 (2-24) பின்னிணைப்புகள் இரண்டாம் இயலுக்குரியனவாகவும் அமைகின்றன. மூன்றாம் இயலுக்கான பின்னிணைப்புகளாக 2 (25, 26) பின்னிணைப்புகள் அமைய 1 (28) பின்னிணைப்பு ஆய்வேட்டிற்கான பொதுவான பின்னிணைப்பாக அமைகிறது.*

*அகநானூற்றுப் பதிப்புகளின் அடிக்குறிப்புகளில் காணப்பெறும் பாடவேறுபாடுகளின் எண்ணிக்கை 1191 ஆகும். மேலும் ஒற்றெழுத்து (345), உடம்படுமெய் (90), ஆய்த எழுத்து (7) வேறுபாடுகளின் எண்ணிக்கை 442 ஆகும். இப்பாடவேறுபாடுகளை கணினியாக்கம் செய்த போது 89 பக்க அளவில் அமைந்தது. 'ஆய்வேட்டின் பக்க எல்லை மிகுதி' என்று பல்கலைக்கழக அலுவலகம் அறிவுறுத்தியதன்படி இப்பின்னிணைப்புகள் ஆய்வேட்டிலிருந்து நீக்கப்பெற்றுள்ளன.*

# இயல் ஒன்று

## அகநானூறு : பதிப்பு வரலாறும் உரைவரலாறும்

### முன்னுரை

அகநானூற்றிற்கான பதிப்பு, வெளியீடுகளாக இதுவரை 48 நூல்கள் வெளிவந்துள்ளன(விவரம்: பின்னிணைப்பு–1). இவற்றுள் 13 நூல்கள் பதிப்புகளாகவும் 35 நூல்கள் வெளியீடுகளாகவும் அமைகின்றன. பதிப்பு நூல்களின் மூலம், உரை இவற்றை முதன்மையாகக் கொண்டே வெளியீட்டு நூல்களின் மூலம், உரைப்பகுதிகள் அமைகின்றன. எனவே, பதிப்பு நூல்களின் வரலாறு, அவற்றின்வழி அறியலாகும் உரைவரலாறு குறித்து விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

### ★ பதிப்பு வரலாறு

அகநானூற்றினை முதன்முதலில் பதிப்பிக்க முயற்சி செய்தவர் சி.வை.தாமோதரம்பிள்ளை ஆவார். அவரின் பதிப்பு முயற்சி 1897 இல் நடைபெற்றது. அதனைத் தொடர்ந்து ரா. இராகவையங்கார் (1903), பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் (1908), உ.வே.சா. (1903 முதல் வாழ்நாள் இறுதிவரை) ஆகியோரின் பதிப்பு முயற்சிகள் நிகழ்ந்துள்ளன. இப்பதிப்பு முயற்சிகள் எதுவும் முற்றுப்பெறவில்லை. இந்நிலையில் அகநானூற்றிற்கு முதன்முதலில் வெளிவந்த பதிப்பாக 1918 இல் 'கம்பர் விலாசம்' வழி வெளிவந்துள்ள ராஜகோபாலார்யனின் பதிப்பு அமைகிறது. இம்முதல் பதிப்பு தொடர்பாகப் பல்வேறு கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன.

### முதல்பதிப்பு: கருத்து வேறுபாடுகள்

அகநானூற்றின் முதல் பதிப்பு 1918 இல் வெளிவந்துள்ளது என்று மயிலம்வே.சிவசுப்பிரமணியன்[1], பூ.அமிர்தலிங்கம்[2], இ.சுந்தரமூர்த்தி[3], பா.இளமாறன்[4], கா.அய்யப்பன்[5] ஆகியோர் குறிப்பிடுகின்றனர். 1920 இல்

---

★ அகநானூற்றுப் பதிப்புகள் குறித்த விரிவான விளக்கங்கள் பக்க எல்லையைக் கருத்தில் கொண்டு ஆய்வேட்டில் விளக்கமாக அளிக்கப்பெறவில்லை. இவ்விளக்கங்கள் 'அகநானூறு: பதிப்பு வரலாறு (1918–2010)' எனும் தனி நூலாக இவ்வாய்வாளரால் (மா.பரமசிவன்) காவ்யா பதிப்பகம்வழி வெளியிடப்பெற்றுள்ளது.



வெளிவந்ததாகப் புலியூர்க்கேசிகன்[6], ந.சஞ்சீவி[7], குளோறியா சுந்தரமதி[8], ந.விசாலாட்சி[9] ஆகியோர் குறிக்கின்றனர். ஆனால், இம்முதல் பதிப்பு 1918 இல் வெளிவந்துள்ளது. இம்முதல்பதிப்பு நூல் தற்பொழுது கிடைக்கப்பெறவில்லை. இப்பதிப்பின் முகப்பு கா.அய்யப்பனின் 'தமிழ்ச் செவ்வியல் நூல்கள் பதிப்புரைத் தொகுப்பு – தமிழ்(ப்) பதிப்பு வரலாற்று ஆவணம்' (2009) எனும் நூலிலும் இரா.ஜானகியின் 'சங்க இலக்கியப் பதிப்புரைகள்' (2010) எனும் நூலிலும் அளிக்கப்பெற்றுள்ளது.

இம்முகப்பில், '*அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதி,* ***KAMBAR VILAS BOOK DEPOT, MYLAPORE, 1918***' எனும் குறிப்புகள் (விவரம்: பின்னிணைப்பு–28) காணப்பெறுகின்றன. இவற்றின் வழி அகநானூற்றின் முதல்பதிப்பு 1918இல் வெளிவந்துள்ளது என்பதனை அறியலாம்.

அகநானூற்றின் முதற்பதிப்பைப் பதிப்பித்தவர் ரா.இராகவையங்கார் (ரா. இரா.) என்று ந.சஞ்சீவி[10], மு.சண்முகம்பிள்ளை[11], பூ.அமிர்தலிங்கம்[12], இ.சுந்தரமூர்த்தி[13] ஆகியோரும் இராஜகோபாலையங்கார் (ராஜகோபாலார்யன்) என்று சமாஜப்பதிப்பின் பதிப்பாசிரியர் குழு[14], வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார்[15], புலியூர்க்கேசிகன்[16], குளோறியாசுந்தரமதி[17], மயிலம்வே.சிவசுப்பிரமணியன்[18], பா.இளமாறன்[19], அ.சதீஷ்[20], கா.அய்யப்பன்[21] ஆகியோரும் குறிப்பிடுகின்றனர். இக்கருத்து வேறுபாடுகளில் ராஜகோபாலார்யன் என்பதே சரியானதாகும். ரா.இரா. அகநானூற்றைப் பதிப்பிக்க முயன்றிருக்கிறாரே அன்றிப் பதிப்பை வெளியிடவில்லை. இருப்பினும் ரா.இராகவையங்காரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 1–36 பாடல்களுக்கான அகநானூற்றுப் பதிப்பு ஒன்று வெளிவந்துள்ளதாக ந.சஞ்சீவி (1973), இரா.இளங்குமரன் (1978) மு.சண்முகம்பிள்ளை (1980) ஆகியோர் குறிப்பிடுகின்றனர். அக்கருத்துகள் முறையே வருமாறு:

> "அகநானூறு மூலமும் உரையும்(1–36), பதிப்பாசிரியர் வே.இராஜகோபாலையங்கார், மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை வெளியீடு, மதுரை, முதற்பதிப்பு 1957"[22]

> "அகநானூறு மூலமும் உரையும் 1904. இப்பதிப்பு மதுரைத் தமிழ்ச் சங்கத்தினின்று வெளிவந்ததாகும். இதனை ஏட்டுச் சுவடிகளைக் கொண்டு பழைய உரையுடன் ஆராய்ந்து

வெளியிட்ட அறிஞர் இரா.இராகவையங்கார் ஆவார். இதில் 1 முதல் 36 பாடல்கள் மட்டுமே உரையுடன் உள்ளன. 37 ஆம் பாடல் மூலமும் முதலடிக்கு மட்டும் உரையும் அமைந்துள்ளன. இப்பதிப்பு 1904 ஆம் ஆண்டு பதிப்பிடப்பெற்றதாயினும் 1952 ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றதென்பது அதன் முகப்பட்டையால் புலப்படுகின்றது. இப்பதிப்பின் தொடர்பாகவே இப்பதிப்பாசிரியர் உதவியைக் கொண்டே பின்னே வரும் பதிப்புகள் வந்துள்ளன. ஆகலின் இவ்வுரை பற்றிய குறிப்புகளை மேலே காணலாம்."[23]

"தமிழ்ச்சங்க வேலையை இவர் விட்ட (ரா.இராகவையங்கார்) சில ஆண்டுகளின்பின் இவரிடமிருந்த ஏட்டுப் பிரதிகளையும் இவர் சோதித்து வைத்திருந்தவற்றையும் பாண்டித்துரைத்தேவர் விருப்பப்படி டாக்டர் சாமிநாதைய(ர)வர்களுக்குத் தந்தனர். ஆயினும் அவராலும் பல வருடங்கள் இந்நூலை அச்சிட அவகாசமின்றிக் கழிந்தன. இவர் தொடக்கத்தில் எழுதிப் பரிசோதித்து வைத்த கையெழுத்துப் பிரதி இப்பொழுது டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூலகத்தில் உள்ளது. ராயல் வடிவில் 64 பக்கங்கள் அச்சிட்ட பிரதியும் (37 ஆம் பாடல் வரை) எஞ்சிய பகுதிகளுக்கு இவர் எழுதிய காகிதப் பிரதியும் ஆக இது உள்ளது."[24]

இக்கருத்துகளில் குறிக்கப்பெற்றிருக்கும் நூல் 1978களில் மறைமலையடிகள் நூலகத்தில் இருந்ததாக இரா.இளங்குமரனும்[25] 1980களில் உ.வே.சா. நூலகத்தில் இருந்ததாக மு.சண்முகம்பிள்ளையும் (மேற்கண்ட கருத்து) குறிப்பிடுகின்றனர். அவ்விரு நூலகங்களை நேரில் ஆய்வு செய்தபோது அந்நூல் பற்றிய குறிப்பெதையும் அறிய இயலவில்லை. மேலும், இந்நூல் தொடர்பாக உ.வே.சா. சேகரித்து வைத்திருந்த குறிப்புகளைப் பயன்படுத்தி 1990 இல் அகநானூற்றைப் பதிப்பித்த மயிலம்வே.சிவசுப்பிரமணியன் அவர்களிடம் 12.11.2010 அன்று தொடர்பு கொண்டு பேசியபோது 'சண்முகம் பிள்ளை அந்நூல் பற்றி என்னிடமும் குறிப்பிட்டுள்ளார். ஆனால், உ.வே.சா. சேகரித்து வைத்திருந்த குறிப்புகளை

ஆராய்ந்தபோது அந்நூல் பற்றிய குறிப்பேதும் அகப்படவில்லை' என்று குறிப்பிட்டார்.

இதன்வழி 1–36 பாடல்களுக்கான அகநானூற்றுப் பதிப்பு வெளிவந்ததா? இல்லையா? என்பதே ஆய்வுக்குரியதாக அமைகிறது. இந்நிலையில் 1923 இல் வெளிவந்துள்ள ராஜகோபாலார்யனின் பதிப்பிற்கு முகவுரை எழுதியுள்ள ரா.இரா. தாம் அகநானூற்றைப் பதிப்பிக்க முயன்றதாகவும் அதை நிறைவு செய்ய இயலவில்லை என்றும் குறிப்பிட்டு, ராஜகோபாலார்யன் பதிப்பிற்குச் சோதனை செய்துதர ஒப்புக் கொண்டது பற்றிக் குறிப்பிடுகிறார். அக்கருத்துகள் வருமாறு:

> "இற்றைக்கு ஒரிருபது வருடங்கட்குமுன் மதுரைத் தமிழ்ச்சங்கத்து என்னால் இவ்வகநானூறு அச்சிடத் தொடங்கப்பட்டுச் சிறிதுதூரம் நடைபெற்றது. அக்காலத்து எனக்கு உண்டாகிய நோயாலும் மற்றும் சில இடையூறுகளாலும் நிறைவேறாம நின்றது"[26]

> "என் நண்பரும் பண்டைச் சங்கத்தமிழ் நூல்களை ஆராய்தலிலே ஊக்க மிகுந்தவரும், சங்ககாலத்து நிகழ்ச்சிகளைச் சிறுவரும் எளிதிலறியும்படி(ப்) பலபல கதை நூல்களால் விளக்கியவரும் ஆகிய தமிழ்ப்பண்டிதர் கம்பர் விலாஸம் ஸ்ரீமான்.வே.இராஜகோபாலையங்காரவர்கள், இந்நூல் அச்சிடுதலை மேற்கொண்டு அதற்கான வேண்டிய பரிசோதனையைச் செய்தளிக்குமாறு என்னை வேண்டினார்கள். அவர்களுக்கும் பண்டைத்தமிழ் விருப்பமும் இப்பெருங்காரியத்தை இடையில் விடாது நிறைவேற்றல் கூடுமென்னும் வேணவாவாலும் என் சிற்றறிவிற்கியன்றவரைப் பரிசோதித்துத்தர இணங்கினேன்"[27]

இக்கருத்துகளின்வழி ரா.இரா. 1903களில் அகநானூற்றைப் பதிப்பிக்க முயன்று வெளிவராமல் போக, ராஜகோபாலார்யன் (1923) பதிப்பிற்கு உதவி செய்துள்ளார் என்று குறப்பிடலாம். எனவே, அகநானூற்றின் முதல் பதிப்பாசிரியர் 'ராஜகோபாலார்யனே' என்பதனை அறியலாம். பதிப்பாசிரியர் குறித்த கருத்து வேறுபாடுகள் மேற்கண்டவாறு அமைவதற்குக் காரணமானவற்றைப் பின்வருமாறு குறிக்கலாம்.

1. 1903களில் மதுரைத் தமிழ்ச்சங்கம் வழி ரா.இரா. அகநானூற்றைப் பதிப்பிக்க முற்பட்டமை.

2. அவரால் 1–36 பாடல்களுக்கான பதிப்பு ஒன்று வெளியிடப்பெற்றுள்ளது என்று அறிஞர் பெருமக்களால் குறிக்கப் பெற்றுள்ளமை.

3. 1923இல் வெளிவந்துள்ள ராஜகோபாலார்யன் பதிப்பை ரா.இரா. சோதித்துத் தந்துள்ளமை.

மேற்கண்ட பதிப்பாண்டு, பதிப்பாசிரியர் தொடர்பான கருத்து வேறுபாடுகள் மட்டுமின்றி, 'பதிப்பின்பகுதி' தொடர்பான கருத்து வேறுபாடுகளும் காணப்பெறுகின்றன. அகநானூற்றின் முதல் பதிப்பு 'களிற்றியானைநிரை' மட்டுமானது என்று அ.சதீஷ்,[28] பா.இளமாறன்[29], கா.அய்யப்பன்[30] ஆகியோரும் 'நித்திலக்கோவை' மட்டுமானது என்று பூ.அமிர்தலிங்கம்[31], அ.ஆலிஸ்[32] ஆகியோரும் குறிக்கின்றனர். 'அகநானூறு நூல் முழுமைக்குமானது' என்று சமாஜப் பதிப்பின் பதிப்பாசிரியர்கள்[33], வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார்[34], புலியூர்க்கேசிகன்[35], ந.சஞ்சீவி[36], இ.சுந்தரமூர்த்தி[37] ஆகியோரும் குறிக்கின்றனர்.

அகநானூற்று முதல் பதிப்பின் முகப்புப் பக்கத்தில் 'முதற்பகுதி' என்று காணப்பெறுவதைக் கொண்டே பெரும்பாலோர் இது 'களிற்றியானை நிரை' மட்டுமானது என்று குறிப்பிடுகின்றனர். முதற்பதிப்பைப் பற்றி அறியாது 1920இல் வந்த முழுமைப்பதிப்பை அறிந்தோர் அது 'நூல் முழுமைக்குமானது' என்று குறிக்கின்றனர். ஆனால் 'நித்திலக்கோவை மட்டுமானது' என்ற கருத்து எவ்வாறு குறிக்கப்பெற்றது என்பதனை அறிய இயலவில்லை.

1918இல் வெளிவந்துள்ள பதிப்பின் முகப்புப் பக்கத்தில் 'முதற்பகுதி' என்ற குறிப்புக் காணப்பெற்றாலும் 1920இல் வெளிவந்துள்ள அகநானூறு முழுமைக்குமான பதிப்பின் முகப்புப் பக்கத்தில் 'முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும்' என்ற குறிப்புக் காணப்பெறுவது இங்கு நினைவில் கொள்ளத்தக்கது. இதனால், முதற்பதிப்பு 1–200 பாடல்களைக் கொண்டதாக வெளிவந்திருக்குமோ என்று எண்ணுவதற்கும் வாய்ப்புண்டு. இருப்பினும் இம்முதற்பதிப்பு களிற்றியானைநிரை (1–120) மட்டுமான பதிப்பு என்பதனை

1926இல் வெளிவந்துள்ள 'ஸ்ரீ : பொன்ஆடு' எனும் நூல்வழி அறியமுடிகிறது. இராஜகோபாலையங்கார் (ராஜகோபாலார்யன்) எழுதி வெளியிட்டுள்ள அந்நூலின் பின்பகுதியில் தம் அகநானூற்று நூலுக்கான 'நூலக ஆணை' பற்றிய பதிவினைக் கொடுத்துள்ளார் (விவரம்: பின்னிணைப்பு - 32). அப்பதிவின் மையப்பகுதி வருமாறு:

> "A copy of the first part of "Ahananuru" containing 120 stanzas is a useful addition to the library and the Deputy Inspectors of Schools are permitted to purchase a copy of the same from the allotment placed at their disposal under "Books and periodicals" in the current year's budget"[38]

இந்நூலக ஆணை 1924இல் கிடைத்துள்ளது. 1924இக்கு முன் வெளிவந்துள்ள களிற்றியானைநிரை மட்டுமான ராஜகோபாலார்யன் பதிப்பாக 1918இல் வெளிவந்துள்ள பதிப்பு மட்டுமே அமைவதனை, அப்பதிப்பின் முகப்புப் பக்கக் குறிப்பு உணர்த்துகிறது. மேற்கண்ட ஆணையில் 'First Part' என்ற குறிப்புக் காணப்பெறுவதும் இத்துடன் இணைத்து எண்ணத்தக்கது.

மேற்கண்ட கருத்துகள், விளக்கங்கள் வழி அகநானூற்றின் முதல் பதிப்பு 1918இல் கம்பர் விலாசம் ராஜகோபாலார்யனால் களிற்றியானைநிரை மட்டுமானதாகப் பதிப்பித்து வெளியிடப்பெற்றுள்ளது என்பதனை அறியலாம். இம்முதற்பதிப்பு நூலைத் தொடர்ந்து 13 நூல்கள் அகநானூற்றின் பதிப்புகளாக வெளிவந்துள்ளன. அவை குறித்த கால வரிசைப்படி அமைந்த விவரங்கள் வருமாறு:

- **1918** : அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதி, MADRAS KAMBAR VILAS BOOK DEPOT, MYLAPORE.
- **1920** : ஸ்ரீ அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும், MADRAS KAMBAR VILAS BOOK DEPOT, MYLAPORE.
- **1923** : வே.இராஜகோபாலையங்கார் (பதி.), ஸ்ரீ : எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும், இவை ஸேதுஸமஸ்தான வித்வான் ஸ்ரீ உ.வே.ரா. இராகவையங்கார்

ஸ்வாமிகள் சோதித்துத் தந்தன, சென்னை மயிலாப்பூர், கம்பர் விலாசம் வே.இராஜகோபாலையங்கார் பதிப்பு.

- *1926* : ராஜகோபாலார்யன் (பதி.), ஸ்ரீ: எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் முதற்றொண்ணூறு பாட்டிற்குப் பழைய உரையும் இறுதி முப்பது பாட்டிற்கு ஸ்ரீ வத்ஸசக்ரவர்த்தி ராஜகோபாலார்யன் எழுதிய குறிப்புரையும், சென்னை கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர்.

- *1933* : ராஜகோபாலார்யன் (பதி.), ஸ்ரீ : எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும், இவை ஸேதுஸமஸ்தான மகாவித்வான் பாஷா கவிசேகரர் ஸ்ரீ உ.வே.ரா. இராகவையங்கார் ஸ்வாமிகள் பரிசோதித்துத்தந்தன, ஸ்ரீவத்ஸசக்ரவர்த்தி ராஜகோபாலார்யன் பதிப்பு, கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர்.

- *1940* : சைவ சித்தாந்த மகா சமாஜம், சங்க இலக்கியம் எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும், சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை.

- *1943* : ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை (உரை.), எட்டுத்தொகையுள் ஒன்றாகிய அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும், பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது, தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம் : கழக வெளியீடு, சென்னை.

- *1944* : ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை (உரை.), எட்டுத்தொகையுள் ஒன்றான அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும், பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது, தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம் : கழக வெளியீடு, சென்னை.

- **1944** : ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை (உரை.), எட்டுத்தொகையுள் ஒன்றான அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும், பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது, தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம் : கழக வெளியீடு, சென்னை.
- **1958** : மர்ரேஎஸ். இராஜம் (பதி.), அகநானூறு, மர்ரே அண்டு கம்பெனி, தம்புச்செட்டி தெரு, சென்னை.
- **1990** : மயிலம்வே.சிவசுப்பிரமணியன் (பதி.), அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும், உ.வே.சா. நூல் நிலையம், பெசன்ட் நகர், சென்னை.
- **1990** : மயிலம்வே.சிவசுப்பிரமணியன் (பதி.), அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும், உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை.
- **1990** : மயிலம்வே.சிவசுப்பிரமணியன் (பதி.), அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும், உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை.

மேற்கண்ட 13 நூல்களையும் பதிப்பாசிரியர்களை முதன்மையாகக் கொண்டு கீழ்வருமாறு பகுக்கலாம். அவையாவன:

1. ராஜகோபாலார்யன் பதிப்புகள்
2. சமாஜப் பதிப்பு
3. பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார்பதிப்பு
4. மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு
5. மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு.

**1918–1933:ராஜகோபாலார்யன் பதிப்புகள்**

ராஜகோபாலார்யனின் பதிப்பு முயற்சி 6 நிலைகளைக் கொண்டதாகும். இவற்றுள் முதல் 5 நிலைகள் பதிப்புகளாகவும் 6 ஆம் நிலையிலான இருநூல்கள் வெளியீடுகளாகவும் அமைகின்றன.

ஆறாம் நிலையில் வெளிவந்திருக்கும் வெளியீடுகள் நித்திலக்கோவை மட்டுமானவையாகும்.

1918 இல் 'அகநானூறு மூலமும் உரையும் முதற்பகுதி' என்று பதிப்பித்து வெளியிட்ட ராஜகோபாலார்யன் அதனை 120 பாடல்கள் வரையிலான களிற்றியானைநிரை மட்டுமானதாக வெளியிட்டுள்ளார். அதனைத் தொடர்ந்து 1920இல் 'ஸ்ரீ : அகநானூறு மூலமும் உரையும் முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும்' என்று அகநானூற்றுப் பாடல்கள் அனைத்தையும் அமைத்து முகவுரை முதலான எக்குறிப்புகளுமின்றிப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இவ்விரு பதிப்புகளையும் தொடர்ந்து 1923இல் ராஜகோபாலார்யனால் வெளியிடப்பெற்ற மூன்றாம் நிலையிலான பதிப்பு ரா.இராகவையங்காரால் பரிசோதிக்கப்பெற்று வெளிவந்ததாகும். இப்பதிப்பை ரா.இரா.வின் முகவுரை, 'ஸ்ரீ : ஒரு விஞ்ஞாபனம்' எனும் தலைப்பிலான தம்முகவுரை முதலான பல குறிப்புகளுடன் ராஜகோபாலார்யன் பதிப்பித்துள்ளார்.

இம்மூன்று படிநிலைகளைத் தொடர்ந்து அகநானூற்றிற்கு உரை எழுத முயற்சிக்கும் ராஜகோபாலார்யன் முந்தைய பதிப்புகளில் வெளியிடப்பெற்ற 1 முதல் 90 பாடல்களுக்கான பழைய உரையுடன் 91 முதல் 120 வரையிலான பாடல்களுக்குத் தாம் எழுதிய குறிப்புரையையும் சேர்த்து 1926இல் அகநானூறு களிற்றியானைநிரையை மட்டும் பதிப்பிக்கிறார். அவரின் உரைமுயற்சி மேலும் வளர்ச்சி பெற்று 91 முதல் 160 பாடல்களுக்கானதாக அமைகிறது. இதனை, 1933இல் வெளிவந்துள்ள அகநானூறு முழுமைக்குமான பதிப்பில் வெளியிடுகிறார்.

மேற்கண்டவாறு வெளிவந்திருக்கும் ராஜகோபாலார்யனின் பதிப்புகள் ஒவ்வொரு நிலையிலும் முன்னேற்றம் அடைந்துள்ளன. இறுதிக்கட்ட முன்னேற்றமாக அவரின் உரை முயற்சி அமைகிறது. ராஜகோபாலார்யன் தம் உரையைக் குறிப்புரை என்று குறித்திருந்தாலும் அவ்வுரை விரிவாக, தெளிவாக, இலக்கணப் புலமையுடன் பின்னர் வெளிவந்த உரைகளுக்கெல்லாம் முன்னோடியாக அமைகிறது. அவரின் உரை முயற்சி முழுமை பெற்றிருந்தால் அகநானூற்றுப் பதிப்பு வரலாற்றில் மட்டுமின்றி உரை வரலாற்றிலும் அது சிறப்பான இடம் பிடித்திருக்கும் என்பதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை. மேலும் 20 ஆம் நூற்றாண்டில்

வெளிவந்த அகநானூற்றிற்கான முதல் உரை என்ற பெருமையையும் ராஜகோபாலார்யனின் குறிப்புரை பெறுகிறது.

**1940 : சமாஜப்பதிப்பு**

1940இல் எஸ்.வையாபுரிப்பிள்ளை முதலான பதிப்பாசிரியர் குழுவினரைக் கொண்டு சமாஜப்பதிப்பு வெளியிடப்பெற்றுள்ளது. இப்பதிப்பே 'சங்க இலக்கியம்' எனும் சொல்லை முதன்முதலில் கையாண்டதாகும். இது சங்கப் பாடல்களைப் புலவர் பெயர் அகரவரிசைப்படி வரிசைப்படுத்தியுள்ளது. புலவர் பெயர் அகரவரிசையிலும், ஒரே புலவர் பல நூல்களில் பாடியிருந்தால், பாடல் வைப்புமுறையில் நூற்பெயர் அகரவரிசையும் பின்பற்றப்பெற்றுள்ளது. இப்பதிப்பில் பாடத்தேர்வு மேற்கொண்ட முறையினைப் பின்வரும் முகவுரைக் கருத்துகள் வழி அறியலாம். அவை வருமாறு :

"1. உரையின்றி நூல்களின் மூலமட்டுங் கிடைக்குமிடத்து, பிரதிகளிலுள்ள மூலத்தால் மட்டும் திருத்தம் செய்தல்.
2. உரைகளுமுள்ளவிடத்து அவைகளின் துணைகொண்டு பிரதிகளிலுள்ள மூலத்தை நோக்கிப் பொருத்தமுள்ள பாடங்கொள்ளுதல்.
3. தொல்காப்பிய உரை முதலியவற்றில் மேற்கோளாக எடுத்தாளப்பட்டவிடத்து, அவ்வுரையிற் காணும் பாடத்தோடு ஒப்பு நோக்கித் தகுதியான பாடங்கொள்ளுதல்"[39]

இப்பதிப்பு சங்க இலக்கியம் தொடர்பான பலவகை ஆராய்ச்சிக் குறிப்புகளைக் கொண்டு வெளிவந்துள்ளது. இது 1967 இல் பாரிநிலையத்தாராலும் 2006இல் முல்லை நிலையத்தாராலும் மறுபதிப்புச் செய்யப்பெற்றுள்ளது. இப்பதிப்பின் அமைப்பில் வேறு எந்த இலக்கிய வகைக்கும் பதிப்பு வெளிவராதது இதன் தனித்தன்மையை உணர்த்துவதாக அமைகிறது.

**1943 – 1944 : பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு**

1 முதல் 90 பாடல்களுக்கான பழையஉரை, 91 முதல் 160 பாடல்களுக்கான ராஜகோபாலார்யன் குறிப்புரை என்ற நிலையில்

அகநானூற்றுப் பாடல்களுக்கான நிறைவற்ற உரைத்தன்மையைக் கண்ணுற்ற பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார், அக்குறையை நிறையாக்க முயன்று 1943,1944களில் வெளியிடப்பெற்றது இவ் அகநானூற்றுப் பதிப்பு ஆகும். இப்பதிப்பு, நூல் பெரும்பிரிவுப்படி மூன்று பகுதிகளாக அமைகின்றது. இப்பதிப்பிற்கு ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை ஆகியோர் உரை எழுதியுள்ளனர். பாடத்தேர்வு செய்தவர்களும் இவர்களே ஆவர்.

இப்பதிப்பின் பாடங்களுக்குப் பாடவேறுபாடுகளும் குறிக்கப் பெற்றுள்ளன. இப்பதிப்பின் உரை முந்தைய உரைகளை முதன்மையாகக் கொண்டு அமைந்தாலும் ஒவ்வொரு பாடலுக்கும் முடிபு, விளக்கவுரை, மேற்கோள்விளக்கம் ஆகியனவற்றையும் தேவையான இடங்களில் சிறப்புக் குறிப்பையும் கொண்டு அமைகின்றது. இப்பதிப்பின் மூன்று பகுதிகளிலும் முன்பகுதியில் முகவுரைகளும் பின்பகுதியில் பாட்டுமுதற்குறிப்பு அகரவரிசை, புலவர் பெயர் அகரவரிசை ஆகியனவும் காணப்பெறுகின்றன. உரைக்கு முதன்மை கொடுத்துப் பதிப்பிக்கப் பெற்றிருந்தாலும் மூலப்பகுதியும் பெரும்பாலும் ஏற்கத்தக்க பாடங்களைக் கொண்டு அமைவது போற்றத்தக்கதாகும்.

**1958 : மர்ரேஎஸ்.இராஜம்பதிப்பு**

மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பாசிரியர் குழு ஒன்றைக் கொண்டு, சந்திப்பிரிப்புச் செய்து இலக்கியங்கள் பலவற்றை வெளியிட்டார். அவ்வகையில் சங்க இலக்கிய வரிசையில் 1958இல் அகநானூறு வெளியிடப்பெற்றுள்ளது. பதிப்பாசிரியர் குழு என்று முகப்புப் பக்கத்தில் குறித்திருந்தாலும் அப்பதிப்பாசிரியர் குழு பற்றிய எவ்விதக் குறிப்பும் இப்பதிப்பில் இடம்பெறவில்லை. இக்குழுவில் எஸ்.வையாபுரிப்பிள்ளை இருந்துள்ளார் என்பதனை ஆய்வாளர்களின் கருத்துவழி அறியமுடிகிறது.

இப்பதிப்பு அகநானூற்றின் மூன்று பகுதிகளையும் ஒன்றாகக் கொண்டு ஒரே நூலாக அமைந்துள்ளது. பாடல் நிறைவு பெற்றவுடன் துறைக்குறிப்பு, புலவர்பெயர் ஆகியனவும் காணப்பெறுகின்றன. திணைக்குறிப்பே பாடல்களின் தலைப்பாக அமைகின்றது. தலைப்பினைத்

தொடர்ந்து பாடல் இடம்பெறுகின்றது. சந்திப்பிரிப்புச் செய்திருக்கும் இப்பதிப்பில் சந்திப்பிரிப்பே நிறையாகவும் குறையாகவும் கருதத்தக்கதாக அமைகிறது. இப்பதிப்பு 1981இல் என்.சி.பி.எச்.நிறுவனத்தாரால் மறுபதிப்புச் செய்யப்பெற்றுள்ளது. இம்மறுபதிப்பில் முதல் பதிப்பிலிருந்து எவ்வித மாற்றமும் செய்யப்பெறவில்லை. இம்மறுபதிப்பே 2004 இல் என்.சி.பி.எச். வழி இரா.செயபால் அவர்களின் உரையுடன் வெளிவந்திருக்கும் அகநானூற்று வெளியீட்டிற்கு அடிப்படையாக அமைந்துள்ளது. இது மட்டுமின்றி, தற்காலத்தில் வெளிவரும் அகநானூற்று வெளியீடுகள் பெரும்பாலானவற்றிற்கு இப்பதிப்பே மூலமாக அமைகிறது.

**★ 1990:மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு**

உ.வே.சா. சேகரித்து வைத்திருந்த குறிப்புகளைக் கொண்டு 1990இல் மயிலம்வே.சிவசுப்பிரமணியனால் அகநானூறு பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இது நூல் பெரும்பிரிவுப்படிப் பகுத்து மூன்று நூல்களாக வெளிவந்துள்ளது. இப்பதிப்பில் பாடவேறுபாடுகள் மிகுதியாகக் காணப்பெறுகின்றன. உரையுடன் தொடர்பற்ற பாடங்கள் பல இடம்பெறுகின்றன. இப்பதிப்பில் ராஜகோபாலார்யன் பதிப்பில் காணலாகும் பழைய உரை, 'குறிப்பு, இதன் பொருள்' எனும் இரு தலைப்புகளில் கொடுக்கப்பெற்றுள்ளது. மேலும் பொழிப்புரை, குறிப்புரை ஆகியனவும் காணப்பெறுகின்றன. ஒருசில பாடல்களில் பதவுரை, விளக்கவுரை ஆகியன விரிந்தும் சில இடங்களில் பொழிப்புரை, குறிப்புரை ஆகியனவற்றில் ஏதேனும் ஒன்று குறைந்தும் உள்ளன. ஆனால் 171 முதல் 400 வரையுள்ள பாடல்களில் பொழிப்புரை, குறிப்புரை ஆகியன மட்டுமே காணப்பெறுகின்றன. இவ்வுரை மயிலம்வே.சிவசுப்பிரமணியனால் எழுதப்பெற்றது என்பதனை 05.08.2011 அன்று மயிலம்வே. சிவசுப்பிரமணியன் அவர்களிடம் தொடர்பு கொண்டு பேசியதன் வழி அறியமுடிந்தது. சில பாடல்களில் உள்ளுறை (27 பாடல்கள்) இறைச்சி (5 பாடல்கள்), மெய்ப்பாடு (17 பாடல்கள்), பயன் (23 பாடல்கள்), முடிபு (5 பாடல்கள்) ஆகியன காணப்பெறுகின்றன. அவை காணப்பெறும் பாடல்களில் அவற்றின் விளக்கங்களும் கொடுக்கப்பெற்றுள்ளன.

---

★ இப்பதிப்பிற்கு மத்திய அரசின் நிதிஉதவி கிடைத்துள்ளது. இருப்பினும் இதனைச் சிறந்த பதிப்பாகக் கருத இயலவில்லை.

மேலும் மன்னர்கள், வள்ளல்கள் பற்றிய விளக்கங்கள் (20, 29, 44, 45, 54), ஊர் குறித்த விளக்கம் (57) ஆகியனவும் இவ்வுரையில் இடம்பெறுகின்றன.

இப்பதிப்பின் மூன்று பகுதிகளிலும் 'அரும்பத அகராதி' காணப்பெறுகின்றது. இதன் முகவுரையில்,

"16, 17, 18. அரும்பத அகராதி ஐயரவர்கள் தொகுத்தமைத்தது"[40] எனும் குறிப்புக் காணப்பெறுவதால், இவ்வரும்பத அகராதி உ.வே.சா.வால் தொகுக்கப்பெற்றிருக்க வேண்டும் என்பதனை அறியமுடிகிறது.

**உரை வரலாறு**

அகநானூற்றுப் பதிப்புகளின்வழி 6 உரைகள் இருப்பதை அறிய முடிகிறது. அவ்வுரைகள் ஒவ்வொன்றும் வெவ்வேறு காலக்கட்டங்களில் தோன்றியனவாகும். அகநானூற்றின் தொடக்ககால உரைகள் பற்றிப் பின்வரும் கருத்துகள் வழி அறியலாம்.

> "குறிப்புரைகாரர் : இவ்வகத்தின் முதல் தொண்ணூறு பாட்டிற்குக் குறிப்புரை எழுதினார் இன்னாரென்று தெரியவில்லை. இவரது உரையில் காணப்படும் பல சொன்னயங்களால் இவரை வைணவராகக் கருதலாம். இவர் குறிப்புரையின்றேல் இவ்வகத்துச் சில பாடல்களுக்கு உண்மைப்பொருள் காண்டல் இக்காலத்து அரிதாகும்.
>
> தேவன் : இவர் பால்வண்ண தேவனான வில்வதரையனார் எனவும் கூறப்படுவார். வளவன் நாட்டுள்ளதான இடையள நாட்டு மனக்குடியினர். இடையனாடென்றும் பாடம். இம்மணக்குடி, முதிய ஊரென்றும், இவர் மரபு தொன்மை சான்றதென்றும் அறியலாவது. பண்டையோர் அகப்பாட்டிற்குக் கூறிய உரை செவ்வியதல்லாதிருத்தலைக் கண்டு, இவர் பாட்டொடு பொருந்த அகவல் நடையாற் கருத்து இயற்றினார் எனப்பாயிரம் கூறா நின்றது.
>
> வேறோர் உரைகாரர் : இவர் சுருக்கமாகப் பல பாடல்கட்கு உரை கூறியுள்ளார். இவ்வுரை கருத்துரையாகவும், திணைவிளக்கமாகவும், பிறவாகவும் அமைந்து கிடக்கின்றது"[41]

மேற்கண்ட ராஜகோபாலார்யனின் கருத்துகள் அவர் காலத்து அறியப்பெற்ற அகநானூற்று உரைகள் பற்றிய குறிப்பினைத் தருகின்றன. இம்மூன்று உரைகளில் பாயிரம் குறிப்பிடும் அகவல் நடையில் கருத்து இயற்றிய 'பால்வண்ண தேவன்' உரை கிடைக்கப்பெறவில்லை. மற்ற இருவரின் உரைகள் ராஜகோபாலார்யன் பதிப்புகளில் காணப்பெறுகின்றன.

இவ்விரு உரைகாரர்களில் ஒருவரைக் 'குறிப்புரைகாரர்' என்றும் மற்றொருவரை 'வேறோர் உரைகாரர்' என்றும் ராஜகோபாலார்யன் குறிப்பிடுகிறார். மேலும், 'குறிப்புரைகாரர்' என்று குறிக்கப்பெற்றிருப்பவரின் உரையைப் பழையஉரை என்றும் தம்பதிப்புகளில் பதிவு செய்துள்ளார். இது மட்டுமின்றி 1926 இல் அகநானூற்றிற்கு உரை எழுத முயற்சி செய்து தம்மால் எழுதப்பெற்ற உரைக்கும் 'குறிப்புரை' என்றே பெயர் குறிக்கிறார்.

ராஜகோபாலார்யனின் பெயர்க்குறிப்புகள் அடிப்படையில் அகநானூற்றின் தொடக்ககால உரைகளைப் பழைய உரை, வேறோர் உரை, ராஜகோபாலார்யன் குறிப்புரை என்று மூன்றாகப் பகுக்கலாம். பழைய உரை, ராஜகோபாலார்யன் குறிப்புரை ஆகியவற்றின் பெயர்கள் தெளிவானதாக அமைய வேறோர் உரைகாரரின் உரை என்பது தெளிவான பெயர்க் குறிப்பின்றிக் காணப்பெறுகிறது. 56 பாடல்களுக்குக் காணப்பெறும் இவ்வுரை குறிப்புரையாகவே உள்ளது. எனவே, இவ்உரைக்குக் குறிப்புரை என்று பெயர் குறிப்பது பொருத்தமானதாக அமையும். இதன்வழி ராஜகோபாலார்யன் பதிப்புகள் வழி அறியப்பெற்ற உரைகளாகப் பழைய உரை, குறிப்புரை, ராஜகோபாலார்யன் குறிப்புரை ஆகியன அமைகின்றன என்று குறிப்பிடலாம்.

1918–1933 வரையிலான பதிப்புகளில் காணப்பெறும் இவ் உரைகளைத் தொடர்ந்து 1943, 1944 ஆண்டுகளில் ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக்கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை ஆகியோர் உரையும் 1990 இல் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பின் வழிப் பழைய உரை (ராஜகோபாலார்யன் பதிப்பில் உள்ள பழைய உரை), பொழிப்புரை, குறிப்புரை ஆகியனவும் வெளிவந்துள்ளன. மேற்கண்ட இவ்வுரைகளைப் பின்வருமாறு பகுத்து விளக்கலாம். அவை:

1. பழைய உரை
2. குறிப்புரை
3. ராஜகோபாலார்யன் குறிப்புரை
4. ந.மு.வே., கரந்தைக் கவியரசு. ஆகியோரின் பதவுரை, விளக்கவுரைகள்.
5. மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பின் பொழிப்புரை, குறிப்புரைகள்.

**பழைய உரை**

அகநானூற்றிற்குக் கிடைக்கும் இப்பழைய உரை 1–90 பாடல்களுக்கானதாக அமைகிறது. இவ்வுரை எழுதியவர் யார் என்பதை அறிய இயலவில்லை. அவர் உரையின் சொல்லாடல்களை முன்வைத்து 'அவர் வைணராக இருக்கலாம்' எனும் கருத்தினை ராஜகோபாலார்யன் குறிப்பிடுகிறார்.

இவ்வுரை 1990இல் வெளிவந்துள்ள மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பிலும் காணப்பெறுகிறது. இப்பதிப்பில் ராஜகோபாலார்யன் பதிப்பைக் காட்டிலும் கூடுதலான உரைக்குறிப்புகள் காணப்பெறுகின்றன. இவ்உரை, 'குறிப்பு, இதன்பொருள்' எனும் தலைப்புகளின்கீழ்க் கொடுக்கப்பெற்றுள்ளது. ராஜகோபாலார்யன் 1918,1920,1923,1926,1933 என்று அனைத்து நிலைகளிலும் இப்பழைய உரையைப் பதிப்பிக்கிறார். இவ்வைந்து பதிப்புகளில் ஒரு பதிப்பில் கூடக் கூடுதலாக இடம்பெறாத இப்பழைய உரை மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் மட்டும் கூடுதலாகக் காணப்பெறுவது ஆய்விற்குரியதாக அமைகிறது. மேலும் இவ்வுரை ராஜகோபாலார்யன் பதிப்பில் காணப்பெறும் உரை என்பதை அவ்விரு பதிப்புகளையும் ஒப்பிட்டு நோக்கியதன் வழி அறியமுடிந்தது. மயிலம்வே.சிவசுப்பிரமணியன் இது பற்றிய குறிப்பை ஏன் தரவில்லை என்பது சிந்தனைக்கு உரியதாக உள்ளது.

இத்தகைய குழப்பநிலைக்கு மத்தியில் இருவேறு பதிப்பாசியர்களால் பதிப்பிக்கப் பெற்றிருக்கும் பழைய உரையின் தன்மைகளாகப் பின்வருவன அமைகின்றன. அவை, அருஞ்சொற்பொருள் தருதல், அருஞ்சொற் பொருளுடன் கூடுதல் விளக்கம் அளித்தல், உரையில் அளபெடை வருதல், வடமொழிப்புலமை வெளிப்படுதல், ஒரு சொல்லுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பொருள் காணப்பெறுதல், பாடலின் கருத்து உரைத்தல், உள்ளுறை, இறைச்சி பற்றி விளக்குதல், துறைக்குறிப்பை உரையுடன் பொருத்துதல், வழக்குச்சொல்

பயன்படுத்துதல், இலக்கணப் புலமையுடன் உரைஎழுதுதல், பழமரபுக் கதைகள் கூறல். இத்தன்மைகள் பழைய உரை முழுவதும் பரவலாகக் காணப்பெறுகின்றன. இவற்றைக் கொண்டு அமையும் இப்பழையஉரை அகநானூறு முழுமைக்கும் இல்லாதிருப்பது பெருங்குறையாகக் கருதத்தக்கதாகும்.

## குறிப்புரை

1923 இல் வெளிவந்துள்ள அகநானூற்றுப் பதிப்பில் உள்ள பதிப்பாசிரியர் குறிப்பை முதன்மையாகக் கொண்டே இக்குறிப்புரையைப் பிரித்தறிய முடிந்தது. 1920 இல் வெளிவந்துள்ள பதிப்பிலும் இவ்வுரை காணப்பெறுகிறது. இவ்வுரை துறைக்குறிப்புடன் சேர்த்துக் குறிக்கப் பெற்றிருப்பதால் துறைக்குறிப்பாகவே இதனை எண்ணுவதற்கும் வாய்ப்புண்டு. இந்நிலையில் 1923 இல் வெளிவந்த பதிப்பில் உள்ள ‘உரையாசிரியர் வரலாறு’ என்னும் பகுதியில் ராஜகோபாலார்யன் 51 பாடல்களுக்கு (37,39,81,85,88,89,101,122,123,136,139,141,156,167, 176,178,194,195,201,210,216,217,225,226,233,236,238,246,255,256,269, 270,276,286,287,292,302,306,313,317,318,323,325,331,336,342, 346,348,351,361,366) வேறோர் உரை உள்ளது எனும் குறிப்பினைக் கொடுக்கிறார்.

அக்குறிப்பை முதன்மையாகக் கொண்டு 1920 இல் வெளிவந்த பதிப்பைக் கண்ணுற்றபோது, இக்குறிப்புரையைக் கண்டறிய முடிந்தது. இது பழையஉரையைப் போன்று ராஜகோபாலார்யனின் அனைத்துப் பதிப்புகளிலும் (1920,1923,1926,1933,(1918: பதிப்பு கிடைக்கப்பெறவில்லை)) காணப்பெறுகிறது. இவ்வுரையைப் பற்றிக் குறிப்பிடும் அ.சதீஷ்,

> “ஒவ்வொரு பாடலின் இறுதியிலேயும் தொகுப்பாசிரியர் அளித்துள்ள சூழல் விளக்கத்தினைத் தொடர்ந்து இந்த வேறோர் உரையினைப் பதிப்பித்துள்ளார். பார்ப்பதற்கு இது தொகுப்பாசிரியர் கொடுத்துள்ள குறிப்புப் போலவே தோன்றும். தொகுப்பாசிரியர்கள் இத்தகைய சூழல் விளக்கத்தினைத் தொடர்ந்து எத்தகைய மேல் விளக்கமும் அளிப்பது இல்லை என்பது கொண்டும் இச்சூழல் விளக்கத்தினைத் தொடர்ந்து

இடம்பெற்றுள்ள இவ்வுரைக் குறிப்புகள் அமைந்துள்ள பாடல் எண்களும் பதிப்பாசிரியர் கொடுத்துள்ள பாடல் எண்களும் ஒன்றாக இருப்பது கொண்டும் இதுதான் வேறு உரை என அடையாளங்காண முடிந்தது. இங்கு இவ்வுரை இடம் பெற்றுள்ள 12 ஆம் பாடல் எண்ணினை இப்பதிப்பாசிரியர் 'வேறோர் உரைகாரர்' என்பதன் கீழ் கொடுக்கப்பட்டுள்ள எண்களுடன் கொடுக்கவில்லை. ஆக வேறோர் உரை அகநானூற்றின் 52 பாடல்களுக்குக் கிடைக்கின்றது "[42]

என்று குறிப்பிடுகிறார். மேலும்,

"அகநானூறு முழுவதிலும் ஆங்காங்கு 52 பாடல்களுக்குக் கிடைக்கின்ற இவ்வுரை இதுவரை பதிப்பாசிரியர்களால் பிரித்து ஆராயப்படவில்லை என்பதும் கவனத்திற்குரியது"[43]

என்று குறிப்பதும் அவரின் கருத்தாக அமைகிறது.

உரை ஆய்வாளர்களால் இக்குறிப்புரை பிரித்து ஆராயப் பெறவில்லை என்னும் கருத்து மறுத்தற்கியலாதது. ஆனால், அவ்வுரை அகநானூற்றின் 52 பாடல்களுக்கு மட்டும் காணப்பெறுகிறது என்பதும் பதிப்பாசிரியரால் பிரித்துப் பதிக்கப்படவில்லை என்பதும் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. அது தொடர்பான கருத்தியலைப் பின்வருமாறு குறிக்கலாம்.

1. 'வேறோர் உரைகாரர்' எனும் குறிப்பின் கீழ் ராஜகோபாலார்யன் 51 பாடல் எண்களைக் குறித்துள்ளார். அவ்எண்களுடன் 12 ஆம் பாடலைச் சேர்த்து அ.சதீஷ் 52 என்று குறிப்பிடுகிறார். ஆனால், அக்குறிப்புரை 56 பாடல்களுக்குக் காணப்பெறுகிறது. ராஜகோபாலார்யன் கொடுத்திருக்கும் 51 பாடல் எண்கள் அ.சதீஷ் கொடுத்துள்ள 12 ஆம் பாடல், இவை தவிர 28, 134, 191, 228 ஆகிய பாடல்களுக்கும் அக்குறிப்புரை காணப்பெறுகிறது.

2. மேற்கண்ட 56 பாடல்களுக்கான குறிப்புரையை 1920, 1923 ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ள பதிப்புகளில்

ராஜகோபாலார்யன் முதல் 90 பாடல்களுக்குள் வருவனவற்றைத் துறைக்குறிப்போடும் 91இக்கு மேற்பட்ட பாடல்களுக்கான உரைக்குறிப்பைத் துறைக்குறிப்பு, புலவர்பெயர் ஆகியன நிறைவு பெற்றவுடனும் கொடுக்கிறார். முதல் தொண்ணூறு பாடல்களுக்கான உரையை 91இக்கு மேற்பட்ட பாடல்களுக்கான உரை போலக் கொடுத்திருந்தால் அதுவும் பழைய உரை என்று கருதத்தக்கதாகவே அமைந்திருக்கும். இதனை மனதிற்கொண்டே மேற்கண்ட வைப்புமுறையை ராஜகோபாலார்யன் பின்பற்றியுள்ளார். இத்தனை கவனத்துடன் இவ்உரையைப் பதிப்பித்திருக்கும் ராஜகோபாலார்யன் 56 என்பதை 51 என்று குறித்திருப்பதுதான் ஏனென்று தெரியவில்லை.

இக்குறிப்புரையின் தன்மைகளாக அருஞ்சொற்பொருள் உரையாக வருதல் (12,37,81,88,89,101,123,136,141,167,191,195,201,225,226,233,246, 270,287,313,317,331,336,342,361,366) துறைக்குறிப்பைத் தெளிவுபடுத்துதல் (28,122,228), திணை விளக்கம் தருதல் (39,139,255,325,351), காலத்தன்மையை உணர்த்துதல் (85, 217, 269, 323), இலக்கணக் குறிப்புத் தருதல் (134), பாட்டின் கருத்தை ஒரே வரியில் விளக்குதல் (156, 176, 178, 210, 216, 236, 238, 276, 286, 292, 302, 306, 318, 346, 348), பாட்டின் பயன்கூறுதல் (194) ஆகியன அமைகின்றன. இவை தவிரச் சிதைந்த நிலையிலான குறிப்புரைக் (256) கருத்து ஒன்றும் காணப்பெறுகிறது.

இவற்றுள் பாட்டின் கருத்தை விளக்குதல் என்பது ஒரே வரியில் அமைந்து ஒரு முழுப்பாடலின் கருத்தைத் தெளிவுபடுத்துவதாக அமைகிறது. இது துறைக்குறிப்புடன் இணைத்து எண்ணத்தக்கதாகும். இருப்பினும் துறைக்குறிப்பைவிடச் சொற்சிக்கனம் இதில் கையாளப் பெற்றுள்ளது என்பதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

### ராஜகோபாலார்யன் குறிப்புரை

தற்போது கிடைக்கும் அகநானூற்று உரைகளின் மூன்றாவதாகக் கருதத்தக்கது ராஜகோபாலார்யன் குறிப்புரை ஆகும். இது 1926 இல் எழுதப்பெற்றது. இருபதாம் நூற்றாண்டில் வெளிவந்த முதல் உரை என்ற பெருமை இவ்வுரையையே சாரும். 1920, 1923 ஆம் ஆண்டுகளில் முதல்

தொண்ணூறு பாடல்களுக்குப் பழைய உரையையும் இடையிடையே 56 பாடல்களுக்குக் குறிப்புரையையும் பதிப்பித்து வெளியிடும் ராஜகோபாலார்யன் 1926 இல் களிற்றியானைநிரையின் இறுதி முப்பது பாடல்களுக்குக் குறிப்புரை எழுதிப் பதிப்பிக்கிறார். இவ்வாறு பதிப்பிக்கும் இவர் தம் உரையைக் குறிப்புரை என்று பதிவு செய்கிறார். ஆனால், அது விரிவாக, தெளிவாக, இலக்கணப் புலமையுடன் அமைகிறது.

அகநானூற்றுப் பாடல்கள் அடியளவில் நீண்டதாகையால் கருத்து அடிப்படையில் அகப்பாடலடிகளைப் பகுத்துக்கொண்டு உரை எழுதுகிறார் ராஜகோபாலார்யன். அவ்வாறு தாம் உரை எழுதும்போது அவ்வவ் அடிகளுக்கான விளக்கவுரையையும் அப்பகுதியிலேயே அமைத்துள்ளார். இவரின் உரையில் ஒவ்வொரு பாடலுக்குமான கருத்து விளக்கமும் இடம்பெறுகின்றது. இதுவே 1943, 1944களில் ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை ஆகியோரால் எழுதப்பெற்றுள்ள உரையில் காணப்பெறும் 'முடிவு' எனும் பகுதிக்கு முன்னோடியாக அமைந்தது என்று குறிப்பிடலாம்.

ராஜகோபாலார்யன் குறிப்புரையின் உரைத்தன்மைகளாகப் பின்வருவன அமைகின்றன. அவை, கருத்து அடிப்படையில் அடிகளைப் பகுத்து உரைகூறுதல், ஒவ்வொரு அடிகளுக்குமான பகுதியிலேயே விளக்கவுரை அமைத்தல், உரைப்பகுதியோடு தொடர்புடைய பிற இலக்கண (தொல்.,புறப்.,அகப்.), இலக்கிய (பதிற்.,பரி.,கலி.,அகம்.,புறம்.,சிலம்பு., நற்.,) நூல்களிலிருந்து சான்று காட்டி விளக்குதல், தாம் உரை எழுதும் அப்பாடலைப் பிற உரையசிரியர்கள் (இளம்.,நச்.,சேனா.,பேரா.,பரிமே.,) எடுத்தாண்டமை குறித்து விளக்குதல், உள்ளுறை, இறைச்சி, இடம்பெறும் பாடல்களுக்கு அவை குறித்த விளக்கங்கள் அளித்தல், உரையிடையே இலக்கணக் குறிப்புத்தருதல், அருஞ்சொற்பொருள் தருதல், கொண்டுகூட்டுத் தன்மையில் உரை எழுதுதல், வடமொழிப் புலமை வெளிப்படுத்தல், இணைப்புச் சொல் (அதனால், ஆதலால் போன்றவை) பயன்படுத்துதல், புதிய செய்திகள் தருதல்.

ராஜகோபாலார்யன் பதிப்புகளில் காணப்பெறும் மேற்கண்ட மூன்று உரைகளும் அகநானூறு முழுமைக்கும் இல்லாதது தமிழரின் தவக்குறையே ஆகும். இவ்வுரைகளே பின்னர் வெளிவந்த உரைகள் அனைத்திற்கும் முன்னோடி என்பதும் நினைவில் கொள்ளத்தக்கதாகும்.

**ந.மு.வே.,கரந்தைக் கவியரசு.-பதவுரை,விளக்கவுரைகள்**

*1943 வரை அகநானூற்றிற்கு முழுமையான உரை இன்மையைக் கண்ணுற்ற பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் அகநானூறு நூல் முழுமைக்கும் ஓர் உரை வேண்டும் என்பதை எண்ணினார். அதன்படி ந.மு.வேங்கடசாமிநாட்டார், கரந்தைக்கவியரசு இரா.வேங்கடாசலம்பிள்ளை ஆகியோரைக் கொண்டு நூல் முழுமைக்கும் பதவுரை, விளக்கவுரை எழுதச்செய்து 1943 இல் களிற்றியானைநிரையைப் பதிப்பித்து வெளியிட்டார். அதனைத் தொடர்ந்து 1944 இல் மணிமிடைபவளம், நித்திலக்கோவை ஆகியனவற்றையும் பதிப்பித்தார்.*

*இப்பதிப்பில் பாடல்பகுதி நிறைவுபெற்றவுடன் தொடங்கும் உரைப்பகுதி, சொற்பொருள் எனும் தலைப்பிலான பதவுரை, முடிவு, விளக்கவுரை, மேற்கோள் விளக்கம், உள்ளுறை உள்ள பாடல்களில் உள்ளுறைக் குறிப்பு ஆகியவற்றைக் கொண்டு அமைகின்றது. இப்பதிப்பின் பதவுரைப்பகுதி பெரும்பாலும் ராஜகோபாலார்யன் உரையின் அமைப்பிலேயே உள்ளது.*

*இவ்வுரையின் பதவுரை, முடிவு, விளக்கவுரை இவற்றின் தன்மைகளாகப் பின்வருவன அமைகின்றன. அவை, வினாவிடையில் விளக்கம் தருதல், அருஞ்செற்பொருள் குறித்தல், சொற்களுக்குக் கூடுதல் விளக்கம் தருதல், இலக்கணக் குறிப்புத் தருதல், வடமொழிச் சொற்களுக்குத் தமிழ் விளக்கம் தருதல், உரையின் இடையிடையே இணைப்புச்சொல் பயன்படுத்துதல், பழமரபுக்கதை கூறல், அடிக்குறிப்பில் பிற பதிப்பாளர்களின் நிலை கூறுதல், உள்ளுறை விளக்குதல்.*

*இவ்வுரையின் மேற்கண்ட தன்மைகளில் வினாவிடை அமைப்பில் உரை எழுதுதல், அகநானூற்றின் பிற உரையாசிரியர் கருத்தை எடுத்து விளக்குதல், வடமொழிச் சொற்களுக்குத் தமிழ் விளக்கம் தருதல், அடிக்குறிப்பில் பிற பதிப்பாளர்களின் நிலை கூறுதல் ஆகியன இவ்வுரைக்கு மட்டுமான தனித்தன்மைகளாக அமைகின்றன. இவ்வுரையில் உள்ளுறை, இறைச்சி எனும் இரு தன்மைகளும் உள்ளுறை என்றே குறிக்கப்பெற்றுள்ளன. இறைச்சி என்பது இவ்வுரையில் குறிக்கப்பெறவில்லை.*

**மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு–பொழிப்புரை, குறிப்புரைகள்**

1990 இல் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் உ.வே.சா. சேகரித்து வைத்திருந்த குறிப்புகளைக் கொண்டு அகநானூற்றை உரையுடன் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இப்பதிப்பு நூல்பெரும்பிரிவுப்படி மூன்று பகுதிகளாக அமைகிறது. இப்பதிப்பைப் பற்றி, 'இது 1990 இல் மணிமிடைபவளத்தை மட்டும் கொண்டு வெளிவந்ததாகவும் அதில் எவ்விதச் சுவடிக்குறிப்பும் இல்லை' என்றும் அ.சதீஷ் குறிப்பிடுகிறார். ஆனால், இப்பதிப்பு மூன்று பகுதிகளைக் கொண்டது என்பதும் களிற்றியானைநிரைப் பகுதியின் முகவுரையில் இப்பதிப்பிற்குப் பயன்பட்ட சுவடிகள் பற்றிய குறிப்புகள் உள்ளன என்பதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

இப்பதிப்பில் காணலாகும் உரைகுறித்து அ.சதீஷ் ஒரு பக்க அளவில் விளக்குகிறார். அவற்றுள்,

> "அகநானூற்றிற்கு உரையெழுதிப் பதிப்பிக்கும் பணியினை உ.வே.சா. மேற்கொண்டிருக்க அவரது மறைவுக்குப் பின்னர் அவரது உரைகளே பழைய உரையாக மாறிவிட்டனவோ என்ற ஐயம் ஏற்படுகிறது"[44]

எனும் கருத்து ஆய்விற்குரியதாக அமைகிறது.

இப்பதிப்பின் முகவுரையில் உ.வே.சா. சேகரித்து வைத்திருந்த அகநானூற்று உரைக்குறிப்புகளாகப் பின்வருவனவற்றை மயிலம் வே.சிவசுப்பிரமணியன் குறித்துள்ளார். அவை:

> "தற்போது அகநானூற்றைப் பதிப்பிக்க முற்பட்டு ஸ்ரீ ஐயரவர்கள் தேடித்தொகுத்த களஞ்சியத்தை ஆராய்ந்த பொழுது அகநானூற்றின் சில பாடல்களுக்குப் பொழிப்புரையும் குறிப்புரையும் உள்ளதோர் கையெழுத்துப் பிரதி கிடைத்தது. முன்னைய பழைய உரை போல் இல்லையாயினும், பெரிய பல கருத்துகளை இவ்வுரை நமக்குத் தருகிறது. கிடைத்தற்கரிய இவ்வுரையும் கடவுள் வாழ்த்துள்பட 1 முதல் 170 பாடல்களுக்கு மட்டுமே கிடைத்த உரைப்பகுதியும் (1) தமிழ் மக்களுக்கு ஸ்ரீ ஐயரவர்கள் தேடித்தந்த புதையல்களாக இப்பதிப்பின்கண் தரப்பெறுகிறது"[45]

"297. அரும்பதவுரை 1 முதல் 90 செய்யுள்களுக்கு (அரும்பதவுரையும் சிற்சில இடங்களில் விளக்கும்)

292. அரும்பதவுரை 1–155 வரை உள்ள செய்யுள்களில் சிலவற்றிற்கு அரும்பதவுரை உள்ளது.

394. திரட்டு (மூலமும் உரையும்) இதில் தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் "முதல் கரு உரிப்பொருள்கள் என்ற மூன்றாவது நூற்பாவுக்கு நச்சினார்க்கினியர் மேற்கோளாகக் காட்டிய 1, 4, 40, 46, 218 ஆகிய ஐந்து செய்யுள்களுக்கு உரை எழுதி இலக்கணக் குறிப்புகளும் எழுதப் பெற்றுள்ளன. இவ்வுரையாசிரியர் யார் என்று புலப்படவில்லை"[46].

இக்குறிப்புகளில் 1–170 பாடல்களுக்கான உரைப்பகுதி ஒன்று காணப்பெறுவதாகக் குறிக்கப்பெற்றுள்ளது. ஆனால், அது போன்ற தனித்த எந்தவோர் உரைப்பகுதியையும் அந்நூலில் அறிய இயலவில்லை. மேலும் சில பாடல்களுக்குப் பொழிப்புரை, குறிப்புரை என்று ஓர் உரைத்தன்மை குறிக்கப்பெற்றுள்ளது. 121–400 வரையிலான அனைத்துப் பாடல்களுக்கும் பொழிப்புரை, குறிப்புரைகளே காணப்பெறுகின்றன. 1–90 பாடல்களுக்கான அரும்பதவுரை, 1–120 பாடல்களுக்கு அமைய 1–155 வரை சில பாடல்களுக்கான அரும்பதவுரை என்ன என்பதை அறிய இயலவில்லை. அவ்வுரைக் குறிப்புகள் இப்பதிப்பில் காணப்பெறவுமில்லை. 91–120 பாடல்கள் வரையுள்ள பழைய உரை, இ–ள் எனும் தலைப்பில் காணப்பெறுகிறது.

1–90 முதல் காணலாகும் பழையஉரை தொடக்ககால உரையசிரியர் ஒருவரால் எழுதப்பெற்றது என்பதனை அறியமுடிகிறது. 91–120 வரைக் காணப்பெறும் உரையாசிரியர் யார் என்பதை அறிய இயலவில்லை. அவ்வுரையும் 1–90 வரைக் காணப்பெறும் பழைய உரைத்தன்மையிலேயே அமைகிறது. 121–400 வரையிலான அனைத்துப் பாடல்களுக்கும் பொழிப்புரை, குறிப்புரைகள் காணப்பெறுகின்றன.

இப்பொழிப்புரை, குறிப்புரைகள் பற்றி, '121–170 வரையிலான உரைத்தன்மைகள் உ.வே.சா. சேகரித்து வைத்திருந்த கையெழுத்துப்

*பிரதிகளில் இருந்தவை என்றும் 171–400 வரையிலான பாடல்களுக்குரிய பொழிப்புரை, குறிப்புரைகள் தம்மால் எழுதப்பெற்றவை' என்றும் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் தெரிவிக்கின்றார்★. இதன்வழி 121–170 வரையுள்ள பாடல்களுக்கான உரைக்குறிப்புகள் யாரால் எழுதப்பெற்றவை என்பது ஆய்விற்குரியதாக அமைகிறது.*

*திரட்டாகச் சேகரித்துள்ள 1, 4, 40, 46, 218 ஆகியவற்றில் 218 தவிர்ந்த பிற பாடல்கள் கூடுதல் உரைப்பகுதிகளைக் கொண்டமைகின்றன. ஆனால், 218 ஆம் பாடலில் பொழிப்புரை, குறிப்புரைகளே உள்ளன. இவ்வகையில் பல்வேறு குழப்பங்களுடன் காணப்பெறும் இப்பதிப்பின் பொழிப்புரை, குறிப்புரைகள் ந.மு.வே., கரந்தைக் கவியரசு. ஆகியோரின் பதவுரை, விளக்கவுரைகள் ஆகியவற்றை ஒத்தே காணப்பெறுகின்றன. அதேவேளை ந.மு.வே., கரந்தைக் கவியரசு. உரைபோல் விரிவாகவும் இல்லை.*

*இப்பதிப்பின் உரைப்பகுதியில் கடவுள் வாழ்த்து உட்பட 376 பாடல்களுக்கு ஒப்புமைப்பகுதியும் 129 பாடல்களுக்கு மேற்கோள் ஆட்சியும் கொடுக்கப்பெற்றுள்ளன. இவைதவிரக் கூடுதலாக முதற்பாடலுக்கு 'மேற்கோள்' என்ற ஒன்றும் குறிக்கப்பெற்றுள்ளது. இவ்வுரையில் 27 பாடல்களுக்கு உள்ளுறையும் 5 பாடல்களுக்கு (5,7,15, 21,170) இறைச்சியும் குறிக்கப்பெற்றுள்ளன. மெய்ப்பாடு 17 இடங்களிலும் பயன் 23 இடங்களிலும் முடிவு 5 இடங்களிலும் இடம்பெறுகின்றன. மேலும் இவ்வுரையில் கருத்து / கருத்துரை என்பது 20, 29 ஆகிய பாடல்களிலும் வள்ளல், மன்னர், ஊர் பற்றிய செய்திகள் 20,27,44,45,54,57 ஆகிய பாடல்களிலும் உள்ளன. இப்பதிப்பின் உரைத்தன்மைகள் எதனையும் தனிச்சிறப்பாகக் கருத இயலவில்லை. முந்தைய உரைகளில் உள்ள தன்மைகளே இப்பதிப்பின் உரைகளிலும் காணப்பெறுகின்றன.*

## தொகுப்புரை

*இவ்வியல்வழி அறியலாகும் கருத்துகள் வருமாறு:*

- *அகநானூற்றின் முதல் பதிப்பு* 'MADRAS, KAMBAR VILAS BOOK DEPOT, MYLAPORE' *வழி 1918 இல் வெளியிடப்பெற்றுள்ளது. அப்பதிப்பு தற்பொழுது கிடைக்கப்பெறவில்லை. அப்பதிப்பின் முகப்பு கா. அய்யப்பனின் 'தமிழ்ச் செவ்வியல் நூல்கள் பதிப்புரைத்*

---

*★ 05.08.2011 அன்று தொலைபேசி வழிப் பெறப்பட்ட செய்தி*

*தொகுப்பு' இரா.ஜானகி அவர்களின் 'சங்க இலக்கியப் பதிப்புரைகள்' ஆகிய நூல்களில் கொடுக்கப்பெற்றுள்ளது.*

- *1918 முதல் தற்பொழுது வரை வெளிவந்துள்ள அகநானூற்று நூல்களில் 13 நூல்கள் பதிப்பு நூல்களாக அமைகின்றன. அவற்றுள் 5 நூல்கள் ராஜகோபாலார்யனின் 5 கட்டப் பதிப்பு முயற்சியில் வெளிவந்தனவாகும்.*
- *அகநானூற்றுப் பதிப்புகள் வழி ஐந்து உரைகளைக் காணமுடிகிறது.*
- *56 பாடல்களுக்கான குறிப்புரை, 1 முதல் 90 பாடல்களுக்கான பழைய உரை இவற்றில் எது காலப்பழைமையானது என்பதை அறிய இயலவில்லை.*
- *ராஜகோபாலார்யன் தம் உரையைக் குறிப்புரை என்று குறித்தாலும் அது விரிவாக, தெளிவாக, இலக்கணப் புலமையுடன் அமைகிறது. இதுவே 20ஆம் நூற்றாண்டின் முதல் அகநானூற்று உரையாகும்.*
- *அகநானூறு முழுமைக்கும் உரை கொண்ட பதிப்பாக ந.மு.வே., கரந்தை. ஆகியோர் உரை எழுதிப் பதிப்பித்திருக்கும் வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு அமைகிறது.*
- *மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பின் பொழிப்புரை, குறிப்புரைகள் எந்தத் தனித்தன்மையையும் கொண்டிருக்கவில்லை. அவை, முந்தைய பதிப்புகளின் உரைகளைப் பின்பற்றியே அமைகின்றன.*

**சான்றெண் விளக்கம்**

1. மயிலம்வே.சிவசுப்பிரமணியன் (பதி.), ***அகநானூறு களிற்றியானை நிரை மூலமும் உரையும்,*** முகவுரை.
2. பூ.அமிர்தலிங்கம், ***சங்க இலக்கியக் களஞ்சியம்,*** ப.357
3. இ.சுந்தரமூர்த்தி, ***பதிப்பியல் சிந்தனைகள்,*** ப.74
4. பா. இளமாறன், ***பதிப்பும் வாசிப்பும் – தமிழ் நூல்களின் பதிப்பு மற்றும் ஆய்வு,*** ப.30
5. கா. அய்யப்பன், "தமிழ்ப் பதிப்பு வரலாறு : ரா.இராகவையங்கார் (20.09.1870–11.07.1946)", ***தமிழ்ப் புத்தக உலகம் 1800–2009,*** ப.35.
6. புலியூர்க்கேசிகன் (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை தெளிவுரை,*** முகவுரை, ப.3
7. ந.சஞ்சீவி, ***சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,*** ப.322
8. குளோறியா சுந்தரமதி, ***டாக்டர் உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள்,*** ப.9
9. ந.விசாலாட்சி, ***பழந்தமிழ்ப் பதிப்புகள்,*** google search, Sanga Ilakkiyam.
10. ந. சஞ்சீவி, ***சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,*** ப.322
11. மு.சண்முகம் பிள்ளை, "சேதுசமஸ்தான மகாவித்வான் ரா.இராகவையங்கார்" ***ஆய்வுலகம் போற்றும் ஆசிரிய மணிகள்,*** ப.115
12. பூ.அமிர்தலிங்கம், ***சங்க இலக்கியக் களஞ்சியம்,*** ப.357
13. இ.சுந்தரமூர்த்தி, ***பதிப்பியல் சிந்தனைகள்,*** ப.74
14. எஸ்.வையாபுரிப்பிள்ளை (பதி.), ***சங்க இலக்கியம் – பாட்டும் தொகையும்,*** ப.1535
15. வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் (பதி.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பதிப்புரை.
16. புலியூர்க்கேசிகன் (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை தெளிவுரை,*** ப.3
17. குளோறியா சுந்தரமதி, ***டாக்டர் உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள்,*** ப.9
18. மயிலம்வே.சிவசுப்பிரமணியன்(பதி.), ***அகநானூறு களிற்றியானை நிரை மூலமும் உரையும்,*** முகவுரை.

19. பா.இளமாறன், ***பதிப்பும் வாசிப்பும் – தமிழ் நூல்களின் பதிப்பு மற்றும் ஆய்வு,*** ப.30

20. அ.சதீஷ், ***சங்க இலக்கிய உரைகள்–பழந்தமிழ்க் கவிதைகளின் இடைக்கால வாசிப்பு முறைகள்,*** ப.136

21. கா.அய்யப்பன், "தமிழ்ப்பதிப்பு வரலாறு: ரா.இராகவையங்கார் (20.09.1870–11.07.1946)", ***தமிழ்ப் புத்தக உலகம் 1800–2009,*** ப.35

22. ந.சஞ்சீவி, ***சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,*** ப.322

23. இரா.இளங்குமரன், ***சுவடிக்கலை,*** ப.264

24. மு.சண்முகம்பிள்ளை, "சேதுமஸ்தான மகாவித்வான் ரா.இராகவையங்கார்", ***ஆய்வுலகம் போற்றும் ஆசிரிய மணிகள்,*** ப.115

25. தகவல் : இரா.இளங்குமரன், நாள்: 15.06.2010

26. வே.இராஜகோபாலையங்கார் (பதி.), ***ஸ்ரீ : எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் முதற்றொண்ணூறு பாட்டிற்குப் பழைய உரையும்,*** முகவுரை, ப.9

27. மேலது, ப.10

28. அ.சதீஷ், ***சங்க இலக்கிய உரைகள் – பழந்தமிழ்க் கவிதைகளின் இடைக்கால வாசிப்பு முறைகள்,*** ப.136

29. பா.இளமாறன், ***பதிப்பும் வாசிப்பும் – தமிழ் நூல்களின் பதிப்பு மற்றும் ஆய்வு,*** ப.30

30. கா.அய்யப்பன், "தமிழ்ப் பதிப்பு வரலாறு: ரா.இராகவையங்கார் (20.9.1870–11.07.1946)", ***தமிழ்ப் புத்தக உலகம் 1800–2009,*** ப.35

31. பூ.அமிர்தலிங்கம், ***சங்க இலக்கியக் களஞ்சியம்,*** ப.357

32. அ.ஆலிஸ், "அகநானூற்றுப் பதிப்புகள்", ***தொல்காப்பியம், சங்க இலக்கியம் : பதிப்பும் பதிப்பாளரும்,*** ப.344

33. எஸ்.வையாபுரிப்பிள்ளை (பதி.), ***சங்க இலக்கியம் – பாட்டும் தொகையும்,*** ப.1374

34. வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் (பதி.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** முகவுரை.

35. புலியூர்க்கேசிகன், (உரை), ***அகநானூறு களிற்றியானைநிரை தெளிவுரை,*** ப.3

36. ந.சஞ்சீவி, *சங்க இலக்கிய ஆராய்ச்சிஅட்டவணைகள்,* ப.322

37. இ.சுந்தரமூர்த்தி, *பதிப்பியல் சிந்தனைகள்,* ப.74

38. மா.பரமசிவன், *அகநானூறு: பதிப்பு வரலாறு (1918–2010),* ப.141

39. எஸ்.வையாபுரிப்பிள்ளை (பதி.), *சங்க இலக்கியம்–பாட்டும் தொகையும்,* முதற்பதிப்பின் முகவுரை.

40. மயிலம்வே.சிவசுப்பிரமணியன் (பதி.), *அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,* முகவுரை.

41. வே.இராஜகோபாலையங்கார் (பதி.), *ஸ்ரீ: எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் முதற்றொண்ணூறு பாட்டிற்குப் பழைய உரையும்,* முகவுரை, ப.61

42. அ.சதீஷ், *சங்க இலக்கிய உரைகள் – பழந்தமிழ்க் கவிதைகளின் இடைக்கால வாசிப்பு முறைகள்,* ப.137

43. மேலது, ப.138

44. மேலது, ப.139

45. மயிலம்வே.சிவசுப்பிரமணியன்(பதி.), *அகநானூறு களிற்றியானை நிரை மூலமும் உரையும்,* முகவுரை.

46. மேலது.

# இயல் இரண்டு

## அகநானூறு:மூலபாட வேறுபாடுகள்

### முன்னுரை

தமிழ்க் கல்விச் சூழலில் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் இலக்கியங்கள் பல நிலைகளில் பல சுவடிகளாகப் படியெடிக்கப்பெற்றன. படியெடுக்கும்போது ஏதேனும் ஓர் எழுத்து, ஒரு சொல், ஒரு தொடர் (பாடம்) சில காரணங்களால் மாற்றிப் பதிவு செய்யப்பெற்றன. அப்போது நிகழ்ந்த மாற்றங்கள் பாடவேறுபாடுகளாக உருவெடுத்தன. 19,20ஆம் நூற்றாண்டுகளில் சுவடிகளில் இருந்த தமிழ் நூல்களை அச்சுக்குக் கொண்டு வந்த பதிப்பாசிரியர்கள் ஒருநூல் குறித்த பல்வேறு சுவடிகளைச் சேகரித்து அதில் பாடங்கள் பல வேறுபட்டிருப்பதைக் கண்டறிந்தனர். பாட வேறுபாடுகளில் தமக்குப் பொருத்தமாகத் தோன்றிய பாடத்தை முதன்மையாகவும் பிறவற்றை அடிக்குறிப்பிலும் இட்டுப் பதிப்பித்தனர். இவ்வகையிலான பாடவேறுபாடுகளில் அகநானூற்றுப் பாடவேறுபாடுகள் குறித்து விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

### பாடவேறுபாடுகள்

'பாடவேறுபாடு' என்பதற்கு, 'பாடபேதம், பிரதிபேதம், பாடாந்தரம்' ஆகிய சொற்கள் அறிஞர்களால் வழங்கப்பெறுகின்றன. சுவடிகளில் ஏற்பட்ட இப்பாடவேறுபாடுகள் குறித்து அறிஞர் பலரும் பலவிதமான கருத்துகளைக் குறித்துள்ளனர். அவை வருமாறு:

**எஸ். வையாபுரிப்பிள்ளை**

> "பொருள் மாற்றத்திற்கு இடம் தந்தும் தராதும் ஒருசொல் அல்லது தொடருக்கு அமையும் எழுத்து அல்லது சொல் மாற்றங்களே பாடவேறுபாடுகள் எனலாம்"[1].

**மு. சண்முகம் பிள்ளை**

> "பாடவேறுபாடு என்பது ஒரு சொல்லுக்கு மாறாக அதே ஓசையுடைய வேற்றுச்சொல் அல்லது அதே

பொருளுடைய பிரிதொரு சொல் வந்து வழங்குவதாகும்"[2].

சு.செல்லையா பிள்ளை

"படைப்பு ஒன்றில் ஓர் எழுத்துக்கோ, ஒரு சொல்லுக்கோ, ஒரு தொடருக்கோ பதிலாக வேறு எழுத்தோ, சொல்லோ, தொடரோ வந்து பொருள் மாறியோ, மாறாமலோ பயின்று வருவது பாடவேறுபாடு ஆகும்."[3].

இக்கருத்துகளின் அடிப்படையில் 'பாடவேறுபாடு' என்பதற்கு, 'பல்வேறு காலங்களில் ஒரு நூலுக்கான பல்வேறு சுவடிகள் பெயர்த்து எழுதப்பெறும்போது காலமாற்றத்தாலோ, சுவடிச்சிதைவாலோ ஓர் எழுத்து அல்லது ஒரு சொல் அல்லது ஒரு தொடர் பெயர்த்து எழுதப்பெறும் சுவடியில் மாற்றி எழுதப்பெற்றன. இவ்வகையிலான மாற்றத்தையே பாடவேறுபாடு' என்று விளக்கம் அளிக்கலாம். இத்தன்மை சுவடியிலிருந்து அச்சுக்கு மாறியபோதும் எவ்வித மாற்றமுமின்றித் தொடர்ந்தது.

பாடவேறுபாடுகள் தோன்றுவதற்குப் பலரும் பலவிதமான கருத்துகளைக் காரணங்களாகக் குறிக்கின்றனர். அவற்றுள் குறிப்பிடத்தக்க சில கருத்துகள் வருமாறு:

வ.சுப.மாணிக்கம்

"ஒரு படைப்பு அதிகமாகப் பயின்று வருவதாலும் பாடவேறுபாடுகள் அமையலாம். பாடபேதங்கட்கும் பிற மாற்றங்கட்கும் கற்போர் தொகைப் பெருக்கே காரணம்"[4]

வ.அய்.சுப்பிரமணியம்

"படியெடுப்போர் ஏடுகளைப் பார்த்துப் படியெடுக்கும் போது விலகிய அல்லது அழிந்த சீர்களையும் அளவுகளையும் பொருள் பொருத்தமுறத் தம் புலமையால் நிரப்பி எழுதினர். அதனால் பாடவேறுபாடுகள் தோன்றின. பொருளில் காணும் சில சிக்கல்கள், செய்யுளமைப்பில் பிழை, பொடிந்த

இடங்களை நிரம்பும் முயற்சி, பதவேறுபாடு ஆகியனவே ஏடுகளில் பாடவேறுபாடு எழுவதற்குரிய காரணங்களில் முக்கியமானவை."[5].

அ.விநாயகமூர்த்தி

"போதுமான கல்வியறிவு இல்லாதவர் கூலிக்காகவோ பிற காரணங்களுக்காகவோ பிரதியெடுக்க முற்படும்போது பிழைகள் மிகுதியாக நிகழும். பார்வைக் கோளாறும் கண் சோர்வும் உடல் நலிவும் பிழைகட்குக் காரணமாகின்ற நிலையும் உண்டு."[6].

மேற்கண்ட கருத்துகளில் வ.சுப.மாணிக்கனாரின் கருத்து கல்விப் பின்புலம் சார்ந்த நிலையில் இருப்பதையும் பிற இரண்டு கருத்துகளும் சுவடிகளில் பாடவேறுபாடு தோன்றுவதற்குரிய காரணங்களை இயல்பாக வெளிப்படுத்துவதையும் அறியலாம். இவ்வகையிலேயே தமிழ் நூல்களில் பாடவேறுபாடுகள் பல தோன்றின. அகநானூறும் இதற்கு விதிவிலக்கல்ல.

**அகநானூறு: பாடவேறுபாடுகள்**

'தமிழ்நூல்களில் பாடவேறுபாடுகள்' எனும் ஆய்வினை மேற்கொண்ட 'வெ.பழநியப்பன்' 'அகநானூற்றுப் பாடவேறுபாடுகள்' குறித்துப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

"அகநானூற்றில் கடவுள் வாழ்த்துடன் அமைந்த 401 பாடல்களில் வேறுபாடு அமைந்த 382 பாடல்களில் மொத்தம் அமைந்த வேறுபாடுகளின் எண்ணிக்கை 1466. இவற்றில் பொருள் வேறுபாடு என்னும் பகுப்புக்குரியன 460 மட்டுமே"[7].

என்று குறிப்பிடுகிறார். இக்கருத்து மீளாய்விற்கு உரியதாகும். இதற்கான காரணங்கள் வருமாறு:

1. அகநானூற்றுப் பாடவேறுபாடுகளைக் கண்டறிய எந்தெந்த அகநானூற்றுப் பதிப்புகளை அவர் ஆய்விற்கு உட்படுத்தினார் எனும் செய்தியை அவர் தம் நூலில் குறிக்கவில்லை. மேலும் 382 பாடல்கள் என்று குறிப்பிடும் அவர் அப்பாடல்கள் எவை என்பதனைக் குறிக்கவில்லை.

2. 1466 பாடவேறுபாடுகள் என்று குறிக்கும் அவர் தம் பின்னிணைப்பில் 1244 வேறுபாடுகளை மட்டுமே அளித்துள்ளார். மீதமுள்ள 222 வேறுபாடுகள் என்னவாயிற்று? என்பது பற்றி அறிய இயலவில்லை.

3. பொருள் மாற்றமுடைய பாடவேறுபாடுகள் 460 என்று குறிக்கும் அவர் 90 பாடவேறுபாடுகளை மட்டுமே தம் நூலில் விளக்குகிறார். பிற பாடங்களை விளக்கவுமில்லை; அவை குறித்த பதிவுகளையும் தரவில்லை.

இந்நிலையில் 1918 முதல் 2010 டிசம்பர் வரை வெளிவந்த பதிப்பு, வெளியீடுகளில் ராஜகோபாலார்யன் பதிப்புகள் (1918, 1920, 1923, 1926, 1933), சமாஜப் பதிப்பு (1940), மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு (1943, 1944), மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு (1958), மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு(1990) ஆகியனவே பதிப்புகளாக அமைகின்றன. இப்பதிப்புகளுக்கிடையில் கடவுள் வாழ்த்து, பாயிரம் உட்பட 402[8] பாடல்களிலும் 2368 பாடவேறுபாடுகள் இருப்பதை அறியமுடிகிறது. அப்பாட வேறுபாடுகளுள் 182 வேறுபாடுகள் (விவரம்: பின்னிணைப்பு-3) பொருள் மாற்றமுடையனவாகவும் 2186 வேறுபாடுகள் அச்சுப்பிழை முதலான காரணங்களால் வேறுபட்டனவாகவும் அமைகின்றன. இங்கு அடிக்குறிப்பு மட்டுமான பாடவேறுபாடுகள் (1191) தனித்து ஆராயப்படவில்லை என்பதும் தனித்து ஆராயப்பெறும் சூழலில் முற்றிலுமான வேறுபாட்டு எண்ணிக்கை மிகும் என்பதும் நினைவில் கொள்ளத்தக்கன.

அகநானூற்றின் முதல் பதிப்பாசிரியரான ராஜகோபாலார்யன் 1918, 1920,1923,1926,1933 ஆகிய ஆண்டுகளில் அகநானூற்றைப் பதிப்பித்துள்ளார் (1933 இல் இரு நித்திலக்கோவை வெளியீடுகளையும் வெளியிட்டுள்ளார்). இவற்றுள் 1918இல் வெளிவந்த அகநானூற்றுப் பதிப்பு கிடைக்கப் பெறவில்லை; பிற பதிப்புகள் கிடைக்கின்றன. இப்பதிப்புகள் அனைத்தும் ஒவ்வொரு படிநிலை வளர்ச்சியைக் கொண்டு அமைகின்றன என்பது முதல் இயலில் விளக்கப்பெற்றுள்ளது. 1920இல் ராஜகோபாலார்யனால் பதிப்பிக்கப்பெற்ற பாடங்கள் சில 1923இல் ரா.இராகவையங்காரின் பரிசோதனையால் திருத்திப் பதிப்பிக்கப்படுகின்றன. இது மட்டுமின்றி 1926, 1933 ஆம் ஆண்டுகளில் உரை எழுத முயற்சிக்கும் ராஜகோபாலார்யன் தம் உரை முயற்சி, பதிப்பு அனுபவம் ஆகியவற்றின் வழிப் பொருத்தமான பாடங்களைச் சுவடிகள் உதவிவழிக் கண்டறிந்து 1920இலிருந்து மாறுபட்டுப்

பதிப்பிக்கிறார். இவ்வகையில் 241 பாடங்கள் (விவரம் : பின்னிணைப்பு-2) 1923, 1926, 1933 ஆம் ஆண்டுகளில் சோதனைக்கு உள்ளாகி மாறுபாடு செய்யப்பெற்றுப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

1923, 1926, 1933 ஆம் ஆண்டுகளில் ராஜகோபாலார்யனால் மாற்றம் செய்யப்பெற்ற பொருத்தமான பாடங்கள் பெரும்பாலான பதிப்புகளில் அமைய மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு மட்டும் 1920இல் ராஜகோபாலார்யனால் குறிக்கப்பெற்ற, திருத்தம்பெறாத பாடங்களைப் பெரும்பாலான இடங்களில் குறித்துள்ளது. அதேவேளை அப்பதிப்பின் உரையில் திருத்தம் பெற்ற பாடத்திற்கான உரைக்கருத்தே காணப்பெறுகிறது. இதன்வழியும் திருத்தம் பெற்ற பாடம் பொருந்துவதனை அறியலாம். இதுமட்டுமின்றி இன்னும் பல அச்சுப்பிழைகள், பொருள் பொருத்தமற்ற, வலிந்து கூறப்பெற்ற, உரைக்கருத்தில் (அதே பதிப்பின் உரை) மாறுபெற்ற பாடங்கள் பலவும் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் காணப்பெறுகின்றன. அவை அந்தந்தப் பகுதியில் விளக்கப்பெற்றுள்ளன.

ஒரு பாடவேறுபாட்டில் உள்ள சிக்கலை நீக்கிப் பொருத்தமான பாடத்தை இனங்காண்பதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. இது குறித்த,

> "ஒரு பாடத்தை ஒப்புக் கொள்ளுதல், தள்ளிவிடுதல், ஐயத்தோடு ஒப்புக் கொள்ளுதல், ஐயத்தோடு தள்ளிவிடுதல் என்ற இவற்றுள் மூன்றாவது நிலையில் பாடத்திருத்தம் நிகழ்கின்றது. நூலின் அகச்சான்று கொண்டு, ஐயத்திற்கிடமான பாடத்தை ஒரெழுத்து மாற்றுதலால் மூலத்தினுடைய ஒழுங்கு தவறாமல் புலப்படும் என்றால் மட்டுமே திருத்த வேண்டும். அத்திருத்தம் புறச்சான்றினாலும் வலிமை பெறவேண்டும்."[9]

என்ற அ.விநாயகமூர்த்தியின் கருத்து இங்கு நினைவில் கொள்ளத்தக்கதாகும். இந்நிலையில்,

1. பாடலின் சூழல்
2. பாடல் கருத்தமைவு
3. பாடலுக்கான உரை, விளக்கம்

4. இருவேறுபட்ட பாடங்களில் சமகால இலக்கியப் பதிவுகள் (சங்க இலக்கியப் பதிவுகள்) அடிப்படையில் பொருத்தமான பாடத்தைத் தெரிவு செய்தல்
5. அகராதிப் பொருண்மைகள் வழித்தேர்வு
6. யாப்பியல் நிலையைக் கருத்தில் கொள்ளுதல்

ஆகியவற்றின் அடிப்படையில் பாடவேறுபாடுகள் இவ்வியலில் தெளிவாக்கப் பெற்றுள்ளன. பாட வேறுபாடுகள் அவை வேறுபடும் தன்மைகளின் அடிப்படையில் கீழ்வருமாறு பகுத்து விளக்கப்பெறுகின்றன.

1. அடிநிலை வேறுபாடுகள் (114)
2. சொல்நிலை வேறுபாடுகள் (92)
3. எழுத்துநிலை வேறுபாடுகள் (225)
4. அடிக்குறிப்புகளுடன் கூடிய வேறுபாடுகள் (303)
5. அடிக்குறிப்புகள் மட்டுமான வேறுபாடுகள் (1191)
6. ஒற்றெழுத்து, உடம்படுமெய், ஆய்த எழுத்து வேறுபாடுகள் (442).

மேற்கண்ட 6 வகை வேறுபாடுகளில் ஒன்றான அடிக்குறிப்புகள் மட்டுமான வேறுபாடுகள் என்பது, 'அகநானூற்றுப் பதிப்புகளில் எந்தவித வேறுபாடும் இன்றிப் பதிப்பாசிரியர்களால் அடிக்குறிப்பில் அளிக்கப் பெற்றிருக்கும் பாடவேறுபாடுகள்' ஆகும். இவ்வகையில் 1191 பாடவேறுபாடுகள் காணப்பெறுகின்றன. ஆய்வேட்டின் பக்க எல்லை, காலவரையறை இவற்றைக் கருத்தில் கொண்டு இவ்வேறுபாடுகள் தனித்து விளக்கப்பெறவில்லை.

இறுதி வகையாக அளிக்கப்பெற்றுள்ள ஒற்றெழுத்து, உடம்படுமெய், ஆய்த எழுத்து வேறுபாடுகள் முறையே அகநானூற்றுப் பதிப்புகளில் 345, 90, 7 என்ற எண்ணிக்கைகளில் காணப்பெறுகின்றன. முற்காலப் பதிப்புகள் பெரும்பாலும் சந்திப்பிரிப்பின்றி அமையும். அவ்வாறு அமையும் பாடங்களைப் பிற்காலப் பதிப்புகள் சந்திப்பிரிப்புடன் அமைக்கும்போது தேவையான இடங்களில் ஒற்றெழுத்துகள் இட்டும் உடம்படுமெய்யை நீக்கிப் பொருத்தமான உயிரெழுத்தை அமைத்தும் ஆய்த எழுத்தை நீக்கி அதற்குப் பொருத்தமான எழுத்துகளை அமைத்தும் பதிப்பித்தன.

இம்மூவகைப்பட்ட வேறுபாடுகளில் எவ்விதப் பொருள் மாற்றமும் இல்லை. இருப்பினும் பழம்பெரும் பதிப்பாசிரியர்களில் இவையும் படவேறுபாடுகளாகக் குறிக்கப் பெற்றுள்ளன. எனவே, அகநானூற்றுப் பதிப்புகளில் காணலாகும் இவ்வகை வேறுபாடுகள் அட்டவணைப்படுத்தப் பெற்றன. ஆய்வேட்டின் பக்க எல்லை மிகுதி குறித்த பல்கலைக்கழக அறிவுறுத்தலின்படி இந்நான்கு பின்னிணைப்புகளும் ஆய்வேட்டிலிருந்து நீக்கப்பெற்றுள்ளன. இவ்விருவகைப்பட்ட (5, 6ஆம் வகைகள்) வேறுபாடுகள் தவிரப் பிறவற்றை விளக்குவதாக இனிவரும் பகுதி அமைகிறது.

**அடிநிலை வேறுபாடுகள்**

ஓர் அடியில் இரண்டிற்கு மேற்பட்ட சீரும் இரண்டி அடிகளுடன் தொடர்புடையனவுமாக வரும் வேறுபாடுகளை அடிநிலை வேறுபாடுகள் என்று குறிக்கலாம். இவ்வேறுபாடுகளைக் கீழ்வருமாறு இருவகைப்படுத்தி விளக்கலாம்.

1. அடிக்குறிப்பின்றிப் பாடம் மட்டும் அமைந்த வேறுபாடுகள்.
2. அடிக்குறிப்புகளுடன் கூடிய வேறுபாடுகள்.

**அடிக்குறிப்பில்லாதவை**

அடிக்குறிப்பின்றிப் பாடம் மட்டுமான வேறுபாடுகளாக ஓர் அடியில் வரும் தன்மையில் 19 வேறுபாடுகளும் (விவரம்: பின்னிணைப்பு-4) இரண்டு அடிகளில் வரும் தன்மையில் 3 வேறுபாடுகளும் (விவரம்: பின்னிணைப்பு-5) அகநானூற்றுப் பதிப்புகளிடையே காணப்பெறுகின்றன. இம்முப்பத்துமூன்று பாடவேறுபாடுகளையும் பின்வருமாறு இருவகைப்படுத்தி விளக்கலாம். அவை:

1. பெரும்பாலான பதிப்புகளில் ஒரே பாடம் அமைய ஏதேனும் ஒருசில பதிப்புகளில் மட்டும் சில பாடங்கள் வேறுபட்டு அமைதல்.

2. வேறுபாட்டுத் தன்மையில் அமையும் பாடங்கள்.

**ஒருசில பதிப்புகளில் வேறுபட்டு அமைதல்**

அகநானூற்றின் பெரும்பாலான பதிப்புகளில் ஒரு பாடம் அமைய, அப்பாடம் ஏதேனும் ஒருசில பதிப்புகளில் மாற்றிக்

குறிக்கப்பெற்றிருத்தல் இத்தன்மையில் அடங்கும். இத்தன்மை ஒரு அடியிலான பாடவேறுபாட்டுத் தன்மையில் 17, இரண்டு அடிகளிலான பாடவேறுபாட்டுத் தன்மையில் 2 என்று 19 வேறுபாடுகளைக் கொண்டு அமைகிறது. அவ்வேறுபாடுகள் முறையே வருமாறு:

*கவவின் புறாமைக் கழிக வளவயல்–கவவின் புறாமைக் கழிக வள்வாய் ★ (அகம்.13:17), யிசையி னிரட்டு மாங்கண்-யிசையி னிரட்டும் ஆமாங்கட் (89:5), கொல்லோநா நயந்திசி னோரே-கொல்லோநந் நயந்திசினோரே (103:5), மாண்டமைந் துறைந ரல்லர்-ஆண்டமைந் துறைகுநர் அல்லர் (201:14), வருது மெனத்தெளித் தோரே – வருதும் எனத்தெளிந் தோரே (229:21), வெஞ்சுர மிறந்தன ராயினு நெஞ்சுருக – வெஞ்சுரம் இறந்தனர் ஆயினும் நெஞ்சுநக (231:9), யாயு மாயமோ டயரு நீயுந்–யாயும் ஆயருமா டயரு நீயுந் (240:9), நல்குவர் நல்ல கூறினு மல்கலும் – நல்குவர் நல்ல கூறி அல்கலும் (241:3), மணிமருள் கலவத் துறைப்ப வணிமிக் – மணிமருள் கலாவத் துறைப்ப வணிமாக் (242:3) பாணன் வந்தனன் றூதே நீயும் – பரணன் வந்தனன் றூதே நீயும் (244:11), நேரா வன்றோள் வடுகர் – நேரா இன்றோள் வடுகர் (253:18), புதுப்புன லுரிதினி னுகர்ந்து – புதுப்புனல் உரிதினி னுகர்ந்தது (256:11), பசுங்காட் டரிற்பவர் மயக்கிப் – பசுங்கா டரிறப வயக்கிப் (262:1), கலத்து முண்ணாள் வாலிது முடாஅள் – கலத்தும் உண்ணான் வாலிதும் உடாஅன் (262:7), ரொராஅ வுருட்டுங் குடுமிக் – ஒராஅ உருள்துடி குடுமிக் (265:19), பசுங்கண் வானம் பாய்தளி – பசுங்கண் வானம் பாஅய்த்துளி (283:12), தேரை யொலியின் மானச் சீரமைத்துச் – தேரை யொலியின் மரனச் சீரமைத்து (301:19), கைம்மிக் ககன்சுடர் – கைம்மிகக் கனைசுடர் (47:8–9), மயரிறந் துள்ளுப தில்ல – மயறுறந் துள்ளுவ தில்ல (253:20–21).*

---

★ அகநானூற்றுப் பாடல் எண்கள் ஆய்வேடு முழுவதும் குறிக்கப்பெறுவதால் அகம். என்ற சுருக்கக் குறியீடு இனிக் குறிக்கப்பெறாமல் பாடல் எண்கள் மட்டுமே அளிக்கப்பெறும். அதேவேளை பிறநூல் (குறுந்.,நற்., போன்றவை) பயன்பாடு வரும்போது அவற்றின் சுருக்கக் குறியீடுகள் அளிக்கப்பெறும். கருத்தியல் அடிப்படையில் குறுந்தொகை, நற்றிணை போன்றவற்றோடு அகநானூறு வரிசைப்படுத்தப் பெறும்போது அவ்விடத்தில் அகம். என்ற சுருக்கக் குறியீடு பயன்படுத்தப்பெறும்.

மேற்கண்ட பாட வேறுபாடுகளில் 265:19 ஆம் பாடவேறுபாடு மட்டும் மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பில் காணலாகும் பாட வேறுபாடு ஆகும். பிற வேறுபாடுகள் அனைத்தும் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பிற்கு உரியனவாகும். இவ்வேறுபாட்டுக் குறிப்புகளில் இரண்டாவதாகக் குறிக்கப்பெற்றிருக்கும் பாடங்களே மயிலம்வே.பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றிற்கு உரியனவாகும்.

இப்பாடங்கள் பெரும்பாலும் அச்சுப்பிழையுடன் காணப்பெறுகின்றன. மாற்றுப் பாடங்கள் இப்பதிப்பில் குறிக்கப்பெற்றிருந்தாலும் பிற பதிப்புகளின் உரைக்கருத்துகளே இப்பதிப்பிலும் காணப்பெறுகின்றன. இவ்வகையில் அச்சுப்பிழை திருத்தம் பெறுதல், உரைத்தன்மையால் விளக்கம் பெறுதல், பெரும்பான்மையான, காலப்பழைமையான பதிப்புகளில் காணப்பெறுதல் ஆகியவற்றின் அடிப்படையில் திருத்தம் பெற்ற பாடங்களாகப் பின்வருவனவற்றைக் குறிக்கலாம்.

*கவவின் புறாமைக் கழிக வளவயல் (13:17), யிசையி னிரட்டு மாங்கண் (89:5), கொல்லோநா நயந்திசி னோரே (103:15), மாண்டமைந் துறைந ரல்லர் (201:14), வருது மெனத்தெளித் தோரே (229:21), வெஞ்சுர மிறந்தன ராயினு நெஞ்சுருக (231:9), யாயு மாயமோ டயருநீயுந் (240:9), நல்குவர் நல்ல கூறினு மல்கலும் (241:3), மணிமருள் கலாவத் துறைப்ப வணிமிக் (242:3), பாணன் வந்தனன் றூதே நீயும் (244:11), நேரா வன்றோள் வடுகர் (253:18), புதுப்புன லுரிதினி னுகர்ந்து (256:11), பசுங்காட் டரிற்பவர் மயக்கிப் (262:1), கலத்து முண்ணாள் வாலிது முடாஅள் (262:7), றொராஅ வுருட்டுங் குடுமிக் (265:19), பசுங்கண் வானம் பாய்தளி (283:12), தேரை யொலியின் மானச் சீரமைத்துச் (301:19), கைம்மிக் ககன்சுடர் (47:8-9), மயரிறந் துள்ளுப தில்ல (25:20-21).*

**வேறுபாட்டுத் தன்மையில் அமைவன**

அடிக்குறிப்பில்லாத அடிநிலை வேறுபாடுகளாக அமையும் இப்பகுதியில் அகநானூற்றுப் பதிப்புகளிடையே முற்றிலும் வேறுபடும் பாடவேறுபாடுகளாக ஒரே அடியில் வரும் தன்மையில் 3 வேறுபாடுகளும் இரண்டு அடிகளில் வரும் தன்மையில் ஒரு வேறுபாடுமாக 4 வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. அவை குறித்து விளக்குவதாக இனிவரும் பகுதி அமைகிறது.

**21:22 வல்வாய்க் கணிச்சிக் கூழார் கூவல (ராஜ.,மு.காசி.)–வல்வாய்க் கணிச்சிக் கூழார் கோவல (பிற.)**

பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைவன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லும் போது பாலைநில வழிபற்றி,

"வல்வாய்க் கணிச்சிக் ***கூழார் கூவல்***" (21:22)

என்று குறிப்பிடுகிறான். இவ்வடி சமாஜம்., மர்ரே., மயிலம்வே. பதிப்புகளில்

"வல்வாய்க் கணிச்சிக் ***கூழார் கோவல்***" (21:22)

என்று மாற்றிப் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

'கூழார் கூவல்' எனும் பாடத்தைப் பதிவு செய்யும் பதிப்புகளில் அப்பாடத்திற்கு,

"வலிய வாயினையுடைய குந்தாலியையுடைய கூழினை
யுண்ணும் கிணறு வெட்டுவோர்"[10]

என்ற பொருண்மைகள் காணப்பெறுகின்றன. 'கூழார் கோவல' எனும் பாடத்தைக் குறிக்கும் பதிப்புகளில் மயிலம்வே.பதிப்பு மட்டும் உரையுடன் கூடியதாகும். அப்பதிப்பு,

"வலிய வாயினையுடைய குந்தாலியையுடைய கூழுண்ணும் இடையர் அகழ்ந்ததில் நீரூறாமையலே அவர் விட்டுப்போன சருகடைந்த கூவலை"[11]

என்று பொருள் குறிக்கின்றது.

பாலை நிலத்தில் நீர் ஊறாது, அதனால் வெட்டிய கிணற்றில் நீரின்றி சருகுகள் அடைந்திருப்பது என்பது இயல்பானது. அதேவேளை கிணறு வெட்டுவதற்கென்று அக்காலத்தில் இருந்தோரை 'கூவலர்' என்று அழைத்திருக்க வேண்டும் என்பதனையும் இப்பாடல்வழி அறியமுடிகிறது. இந்நிலையில் கோவலர் (ஆயர்–ஆநிரைமேய்ப்போர்) கிணறு வெட்டினர் என்பதும் பாலை நிலத்தில் ஆநிரைகள் நீரருந்துவதற்காகத் தன் கைகளில் இருந்த குந்தாலியால் வெட்டினர் என்பதும் பொருத்தமாகத் தோன்றவில்லை.

ஆநிரை மேய்ப்போருக்கும் குந்தாலிக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. ஆநிரை மேய்ப்போர் அரிவாள், கம்பு போன்றவற்றையே வைத்திருப்பர். எனவே, '***வல்வாய்க் கணிச்சிக் கூழார் கூவல்***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***124:14 யந்தி காவ லாம்பனை யிமிழிசை (ராஜ.)–யந்தி காவல ரம்பனை யிமிழிசை (ராஜ. 1933, மயி.) அந்திக் கோவல ரம்பணை யிமிழிசை (பிற.)***

தேர்ப்பாகற்கு உரைக்கும் தலைமகன் தலைமகளின் ஊர் பற்றிக் குறிக்கும்போது பின்வரும் அடி பயின்று வந்துள்ளது. அவ்வடி வருமாறு:

"யந்தி ***காவ லாம்பணை யிமிழிசை***" *(124:14)*

இவ்வடி ***1933*** இல் வெளிவந்த ராஜகோபாலார்யன் பதிப்பில்,

"யந்தி ***காவல ரம்பணை யிமிழிசை***" (மேலது)

என்று மாற்றிக் குறிக்கப்பெற்றுள்ளது. இதனையே ராஜகோபாலார்யன் பாடமாகக் கொள்ளலாம். இப்பாடமே மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பிலும் காணப்பெறுகிறது. சமாஜம், மு.காசி., மர்ரே.பதிப்புகளில் இதற்கு மாறாக,

"*அந்திக்* ***கோவல ரம்பணை யிமிழிசை***" *(மேலது)*

என்ற பாடம் காணப்பெறுகிறது. இவ்விரு வேறுபட்ட பாடங்களில் '***அந்திக் கோவல ரம்பணை யிமிழிசை***' என்பதனையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. இப்பாடல் முல்லைத் திணையில் பயின்று வந்துள்ளது.

2. முல்லை நில ஆயர்களே மாலை நேரத்தில் புல்லாங்குழலில் ஒலி எழுப்புவர். அவ்வொலி தலைவன் இல்லாத தலைவிக்குத் துன்பம் அளிப்பதை முல்லைத்திணைப் பாடல்கள்வழி அறியலாம்.

3. காவலர் என்னும் பதிவு முல்லைத் திணையைப் பொறுத்தவரைச் சங்க இலக்கியத்தில் எங்கும் குறிக்கப்பெறவில்லை, ஒருவேளை காணப்பெற்றாலும் அவர்கள் (காவலர்) வேல், வாள் போன்றவை வைத்திருப்பாரேயன்றிப் புல்லாங்குழல் வைத்திருக்கமாட்டார்.

***297:2* நோயொ டழிபடாக் கலங்கி (ராஜ.)–நோயொ டழிபடர்க் கலங்கி (பிற.) நோயோ டழிபடர்க் கலங்கி (மயி.)**

பொருள்வயிற் பிரிவு மேற்கொண்ட தலைவன், தலைவியின் நிலைபற்றி எண்ணி வருந்தித் தன் நெஞ்சிற்குக் கூறவதாக அமைந்த இப்பாடலில்,

"***நோயொ டழிபடாக் கலங்கி***" *(297:2)*

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடி சமாஜம்,மு.காசி.,மர்ரே. பதிப்புகளில் '***நோயொ டழிபடர்க் கலங்கி***' என்று மாற்றிக் குறிக்கப் பெற்றுள்ளது. மயிலம்வே.பதிப்பில் '***நோயோ டழிபடர்க் கலங்கி***' என்று காணப்பெறுகிறது.

'தலைவி, தலைவனைப் பிரிந்து மிக்க துன்பத்தால் வருந்துவாள்' என்பதனைக் குறிக்கும் இப்பாடலுக்கு 'அழிபடாக் கலங்கி' என்பது எந்தப் பொருளையும் தரவில்லை. 'அழிபடர்க் கலங்கி' என்பதே மிகுதியான துன்பத்தைக் குறிக்கிறது. அதேவேளை, 'நோயொடு, நோயோடு' எனும் இரு பாடங்களும் துன்பமுறும் நிலையை விளக்குவன. இவ்விரண்டில் பொருள் மாற்றம் இல்லையெனினும் காலப்பழைமையைக் கருத்தில் கொண்டு 'நோயொடு' என்பதைப் பாடமாகக் குறிக்கலாம். இதன்வழி, '***நோயொ டழிபடர்க் கலங்கி***' எனும் பாடமே பொருத்தமானது என்பதை அறியலாம்.

***384:3–4* மேறிய தறிந்தன் றல்லது வந்தவாறு, நனியறிந் தன்றோ விலனே தாஅய் (பிற.)–ஏறிய தறிந்தன் றல்லது வந்த, ஆறுநனி யறிந்தன்றோ விலனே தாஅய் (சமா.,மர்ரே.)**

வினைமுற்றித் திரும்பும் தலைவனைப் பற்றிக்கூறும் உழையர், 'அவன் தேர் ஏறியதைக் கண்டதாகவும் இங்கு வந்துற்றதை அறியவில்லை' என்றும் குறிப்பிடுகின்றனர். அதனை,

"மேறிய தறிந்தன் றல்லது வந்தவாறு
நனியறிந் தன்றோ விலனே தாஅய்" *(384:3–4)*

என்ற அடிகள் வழி அறியலாம். இவ்வடிகள் சமாஜம், மர்ரே. பதிப்புகளில்,

"ஏறிய தறிந்தன் றல்லது வந்த
ஆறுநனி யறிந்தன்றோ விலனே தாஅய்" (மேலது)

என்று மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது.

இவ்விரு பாடங்களுக்கும் எவ்விதப் பொருள் மாற்றமும் இல்லை. 'வந்தவாறு நனியறிந் தன்றோ' என்பதைவிட 'வந்த ஆறுநனி அறிந்தன்றோ' என்ற பாடம் யாப்பியல் அமைப்பில் பொருந்துகிறது. '***ஏறிய***' என்ற பாடத்திற்கு இணையான எதுகையாக அடுத்த அடியில் '***ஆறுநனி*** என்பது வந்திருக்க வேண்டும் என்பதே சமாஜம், மர்ரே. பதிப்பாளர்களின் கருத்தாக அமைந்திருக்கலாம். 'வந்தவாறு நனியறிந் தன்றோ' எனும் போது வாசிப்பில் இடர்ப்பாடு தோன்றுவதையும் அறியமுடிகிறது. இதன்வழி, '***ஏறிய தறிந்தன் றல்லது வந்த, ஆறுநனி யறிந்தன்றோ விலனே தாஅய்*** என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

மேற்கண்ட 4 வேறுபாட்டுத் தன்மைகளில் மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பின் பாடங்களே மிகுதியாகப் (3 இடங்கள் – 21:22, 124:14, 297:2) பொருந்துகின்றன. அதே எண்ணிக்கையில் அதனைத் தொடர்ந்து சமாஜப் பதிப்பு, மர்ரே.பதிப்பின் பாடங்கள் (3 இடங்கள் – 124:14, 297:2, 384:3–4) பொருந்துகின்றன. ராஜ.பதிப்புகள் ஓரிடத்தில் (21:22) பொருத்தமான பாடத்தைக் குறித்துள்ளது என்பதனை மேற்கண்ட கருத்துகள், விளக்கங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் அறியமுடிகிறது.

**அடிநிலை வேறுபாடுகள்–அடிக்குறிப்புகளுடன் கூடியவை**

அடிக்குறிப்புகளுடன் கூடிய அடிநிலை வேறுபாடுகளை இரு வகைப்படுத்தலாம். அவை:

1. ஓர் அடியில் வருவன
2. ஒன்றுக்கு மேற்பட்ட அடிகளில் வருவன.

**ஓர் அடியில் வருவன**

ஓர் அடியில் வரும் அடிக்குறிப்புகளுடன் கூடிய அடிநிலை வேறுபாடுகளாக அகநானூற்றுப் பதிப்புகளில் 53 வேறுபாடுகள் (விவரம்: பின்னிணைப்பு–6) காணப்பெறுகின்றன. இவ்வேறுபாடுகளைப் பின்வருமாறு வகைப்படுத்தி விளக்கலாம். அவையாவன:

1. பிழையாகக் கருதத்தகுந்த வேறுபாடுகள்

2. வேறுபாட்டுத் தன்மையில் அமைவன.

**பிழையாகக் கருதத்தகுந்தவை**

பாடல் சூழல், கருத்து இவற்றுடன் பொருந்தி வரக்கூடிய பாடங்கள் பெரும்பாலான பதிப்புகளில் மாற்றம் பெறாது அமைந்து, ஒரு சில பதிப்புகளில் மாற்றம் பெற்றுக் காணப்பெறும் பாடங்களைப் பிழையாகக் கருதத் தகுந்தவைகளாகக் குறிக்கலாம். இந்நிலையிலான பாடங்களில் பிழையாகக் கருதத்தகும் பாடங்கள் இடம்பெறும் பதிப்புகளில் உரை இருக்குமாயின் (பெரும்பான்மை:மயிலம்வே.பதிப்பு) அவ்வுரை பிற பதிப்புகளில் உள்ள பொருத்தமான பாடங்களுக்கான உரைக்கருத்துகளாக அமைந்திருக்கும். இத்தன்மையில் அகநானூற்றுப் பதிப்புகளில் 52 வேறுபாடுகள் (விவரம்: பின்னிணைப்பு-7) காணப்பெறுகின்றன.

இவ்வேறுபாடுகளில் பாடல் சூழல், உரைக்கருத்து, காலப்பழைமை, பெரும்பான்மை இவற்றின் அடிப்படையில் பின்வரும் பாடங்களைப் பொருத்தமுடையனவாகக் குறிக்கலாம். *பிறரு மொருத்தியை நம்மனை (46:49), பிரியிற் புணர்வ தாயிற் (51:10), பின்னின்று சூழ்ந்தனை யாயினன் றின்னாச் (77:3), பசலை நோன்று தம்மொடு (103:13).*

*வழங்கா தாஅங் கிடும்பை (148:10), மணியோர்த் தன்ன தெண்குரற் (151:14), யீரணிப் பொலிந்த நம்மொடு (166:13), கோடுதோய் மலிர்நிறை யாடியோரே (166:15), வெரிநோங்கு சிரிபுற முரிஞ வொல்கி (167:12), புல்வேய் குரம்பை புலர வூன்றி (172:10), நேர்கதிர் நிரைத்த நேமியஞ் செல்வன் (175:14), வேங்கைப் பொன்னிணர் மிலைந்து (182:1), சிறுபை நாற்றிய பஃறலைக் கொடுங்கோ (195:13), யாம்ப லகலிலை யமலை வெஞ்சோறு (196:5), நாண்கொளுவுண் கோலின் மீன்கொள் பாண்மகள் (216:1), பெருமலை விடரகம் வரவரி தென்னாய் (218:12), பிறந்ததற் கொன்றுஞ் சிறந்தவை செய்தியா (219:8), னுண்கே ழடங்க வாரிப் பையுள்கெட (223:13), மருளின் மாலையொ டருளின்றி (235:16), அளிதோ தானே யெவனா வதுகொண் (239:1), நெடுந்தே ரூர்மதி வலவ (244:13), மண்ணா முத்த மொழுக்கிய வனமுலை (247:1), னணிமாண் சிறுபுறங் காண்கஞ் (261:7), னந்திப் பாஅயப் புதுப்புன (266:2), ணோக்குதொறு நோக்குதொறுந் தவிர்விலை (266:7),*

*தலைவரம் பறியாத் தகைவரல் வாடையொடு (273:5), இருவிசும் பதிர முழங்கி யரநலிந் (274:1), பந்தர் வயலைப் பந்தெறிந் தாடி (275:3), யிளமைத் தகைமையை வளமனைக் கிழத்தி (275:4), பெறலருங் குரைய ளாயி னறந்தெரிந்து (280:6), துணைப்புறா விரிக்குந் தூய்மழை நனந்தலைக் (287:9), கொந்தோ டுதிர்த்த கதுப்பி (288:16), தோன்று குயிலெழுத் (297:8), முன்ன முன்னுறு படைய வுள்ளிய (299:2).*

*வனைகழை யுடைந்த கவண்விசைக் கடியிடிக் (309:13), யெம்முறு துயரமொ டியாமிவ ணொழிய (318:10), மடும்பம ரெக்க ரஞ்சிறை (320:9), முரச மிழுமென முழங்க (334:2), கையர் வடுதொடர் நோக்கி (337:8), சென்றோர் மன்ற மான்றின்று பொழுதென (340:11), கூர்வளிக் கடுவிசை மண்டலிற் பாய்ந்துடன் (340:20), தெண்கடற் பரப்பினெம் முறைவி னூரே (340:24), மரங்கோ ளுமண்மகன் பேரும் பருதிப் (343:4), மாமுறி யீன்று மரக்கொம் பகைப்ப (345:13), கெடுநா மொழியல னன்பின னெனநீ (352:9), தொன்னசை சாலாமை நன்னன் பறம்பிற் (356:8), பன்னா ளும்பர்ப் பெயர்ந்து சின்னாள் (368:12), காழ்புனைந் தியற்றிய வனப்பமை (369:7), தற்புறந் தெடுத்த வெற்றுறந் துள்ளா (383:1), யாம்பல புணர்ப்பச் சொல்லாள் (385:7), வுளைக்குரற் சிறுதினை கவர்தலிற் கிளையமல் (388:4), நனவுறு கட்சியி னன்மயி லால (392:17).*

மேற்கண்ட பொருத்தமான பாடங்களிலிருந்து மாறுபட்ட பாடங்களாகச் சமாஜப் பதிப்பு 3 பாடங்களையும் (166:13, 239:1, 275:3), மு.காசி.பதிப்பு 1 பாடத்தையும் (318:10), சமாஜம், மர்ரே.பதிப்புகள் இரண்டும் பொருந்தும் நிலையில் 2 பாடங்களையும் (266:2, 340:20) கொண்டிருக்கின்றன. இவ்ஆறு பாடங்களைத் தவிர்த்துப் பிற 46 பாட வேறுபாடுகளும் மயிலம்வே.பதிப்பிற்கு உரியனவாக அமைகின்றன.

**வேறுபாடுகளாக அமைவன**

மேற்கண்ட பிழையாகக் கருதத்தகுந்த வேறுபாடுகளைத் தவிர்த்து ஓர் அடியில் வரும் அடிக்குறிப்புகளுடன் கூடிய அடிநிலை வேறுபாடுகளில் அகநானூற்றுப் பதிப்புகளிடையே முற்றிலும் வேறுபட்டு அமையும் தன்மையினதாக 9 பாடவேறுபாடுகள் (5:2,44:4,129:10,167:17,170:7, 193:10,283:15,311:4,377:3 - பதிப்பு விவரங்களுக்கு: பின்னிணைப்பு-6)

அமைகின்றன. அவற்றுள் பொருத்தமான பாடங்களை இனங்கண்டறிவதாக இனிவரும் பகுதி அமைகிறது.

***5:2 விளிநிலை கொள்ளா டமியண் (பிற.)–விளிநிலை கேளாள் தமியள் (விளிநிலை கொள்ளா டமியண்) (மு.காசி.)–விளிநிலை கேளாள் தமியள் (விளிநிலை கொளாஅள்) (மயி.)***

பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவன், தலைவியைப் பற்றித் தன்னெஞ்சிற்குச் சொல்லும் போது அவள் நிலை பற்றிக் கூறுகிறான். 'தான் பொருள் வயிற்பிரியக் கருதும் சூழலை அவளுக்குக் கூறும்போது அவள் காது கொடுத்துக் கேட்காதிருந்தாள்' என்பதனைப் பற்றிக் குறிப்பதாக,

"விளிநிலை கொள்ளா டமியண்" *(5:2)*

என்ற அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் 'கொள்ளாள் தமியள்' எனும் பாடம் மு.காசி., மயிலம்வே.பதிப்புகளில் 'விளிநிலை கேளாள் தமியள்' என்று மாற்றிப் பதிவு செய்யப்பெற்றுள்ளது. அதுமட்டுமின்றி மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பில் 'விளிநிலை கொள்ளாள் தமியள்' எனும் பாடமும் மயிலம்வே.பதிப்பின் அடிக்குறிப்பில் 'விளிநிலை கொளாஅள்' எனும் பாடமும் இடம்பெறுகின்றன. இதன்வழி, '***விளிநிலை கொள்ளாள் தமியள், விளிநிலை கேளாள் தமியள், விளிநிலை கொளாஅள் தமியள்***' எனும் மூன்று பாடங்கள் இவ்விடத்தில் பயின்று வந்துள்ளதை அறியலாம்.

'விளிநிலை கொளாஅள்' எனும் பாடம் மயிலம்வே.பதிப்பின் அடிக்குறிப்பில் மட்டுமே காணப்பெறுகிறது; பிற பதிப்புகளில் இல்லை. அதேவேளை 'விளிநிலை கொள்ளாள்' என்பதற்கான பொருளே 'விளிநிலை கொளாஅள்' என்பதற்கும் பொருளாகிறது. எனவே, 'விளிநிலை கெள்ளாள், விளிநிலை கேளாள்' என்ற இரு பாடங்களை மட்டும் வேறுபாடுகளாகக் கருதலாம். 'விளிநிலை கொள்ளாள்' என்ற பாடத்திற்குப் பழைய உரை,

"விளிநிலை – அழைக்கும் நிலை; கொள்ளாள் என்றது போக்கிற்கு உடன்படாது ஆற்றளாய் நின்ற நிலையைப் பற்றி"[12]

என்று கருத்து விளக்கமளிக்கிறது. 'விளிநிலை கேளாள்' என்பதற்கு ந.மு.வே., கரந்தை. உரை,

"நாம் அழைத்தலைக் கேளாமலே"[13]

என்று பொருள் குறிக்கிறது.

'தலைவனின் பிரிவில் நாட்டமில்லாத தலைவி அவன் கூறுவதைக் கேட்டும் கேட்காமலும் (கண்டு கொள்ளாமல்) இருந்தாள்' என்பதே இப்பாடலின் சூழல் தரும் கருத்து. 'விளிநிலை கொள்ளாள்' எனும் பாடம் 'அவன் சொல்வதைக் கேட்டு மனதிற்கொள்ளாமல் இருந்தாள்' என்பதையும் 'விளிநிலை கேளாள்' எனும் பாடம் 'அவன் சொல்வதைக் கேட்காமலேயே இருந்தாள்' என்பதையும் விளக்குவனவாக உள்ளன. இதனையே மேற்கண்ட உரைக்கருத்துகளும் தெளிவுபடுத்துகின்றன.

தலைவி, 'தலைவன் சொல்வதைக் கேட்காமல் இருந்தாள்' என்பதைவிடத் 'தலைவன் சொல்வதை மனதிற் கொள்ளாமல் இருந்தாள்' என்று குறிப்பதையே பொருத்தமுடையதாகக் கொள்ளலாம். இவற்றின்வழி, '***விளிநிலை கொள்ளாள் தமியள்***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***44:4 மொன்றென வோர்ந்தன படையேய் (வறைந்தன பணையே) (ராஜ.)–ஒன்றென அறைந்தன பணையே (பிற.)–ஒன்றென அறைந்தன பணையே (ஓர்ந்தன படையே) (மு.காசி.)–ஒன்றென வறைந்தன பறையே (வறைந்தன பணையே) (மயி.)***

தலைவன் இருக்கும் போர்ப்பாசறையின் நிலை பற்றிக் குறிப்பதாகப் பின்வரும் அடிகள் பயின்று வந்துள்ளன.

> "வந்துவினை முடித்தனன் வேந்தனும் பகைவருந்
> தந்திரை கொடுத்துத் தமரா யினரே
> முரண்செறிந் திருந்த தானை யிரண்டு
> மொன்றென வோர்ந்தன படையேய்" *(44:1–4)*

படைகள் இரண்டும் ஒன்று கலத்தல் பற்றிக் குறிக்கும் இவ்வடிகளின் இறுதியில் வரும் 'ஒன்றென வோர்ந்தன படையேய்' எனும் அடிக்கு மாறாக 'ஒன்றென அறைந்தன பணையே, ஒன்றென வறைந்தன பறையே' எனும் அடிகள் பிற அகநானூற்றுப் பதிப்புகளில் குறிக்கப்

பெற்றுள்ளன. இதன்வழி, '***ஒன்றென வோர்ந்தன படையேய், ஒன்றென அறைந்தன பணையே, ஒன்றென அறைந்தன பறையே***' எனும் மூன்று பாடங்கள் அகநானூற்றுப் பதிப்புகளில் குறிக்கப்பெற்றுள்ளதை அறியலாம்.

படைகள் இரண்டும் ஒன்று கலத்தல் பற்றிய இச்சூழலில் '***ஒன்றென அறைந்தன பறையே***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'ஓர்ந்தன படையேய்' என்பதற்கு எப்பொருளையும் அறிய இயலவில்லை. மேலும் படைகளைக் குறிக்கத் 'தானை' என்ற சொல்லும் இதற்கு முந்தைய அடியில் பயன்படுத்தப்பெற்றுள்ளது. அதனால் மீண்டும் 'படையேய்' என்று வந்திருக்க வாய்ப்பில்லை.

2. 'அறைந்தன பணையே' என்ற பாடத்திற்கான உரைக்கருத்தாக 'முரசு அறைந்து அறிவித்தல்' குறிக்கப்பெற்றுள்ளது.

3. பறை அறைந்து அறிவித்தல் உண்டு என்பதாலும் 'பறை அறைதல்' தெளிவாக வெளிப்படுவதாலும் '***ஓர்ந்தன பறையே***' என்பதனைப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

இப்பாவேறுபாட்டுத் தன்மையில் ராஜ.பதிப்புகளின் பாடம் பொருந்தாது மயிலம்வே.பதிப்பின் பாடம் பொருந்துவனவாக 129:10, 167:17, 170:7,283:15,311:4 ஆகிய பாடவேறுபாடுகள் (பாட விளக்கத்திற்கு: பின்னிணைப்பு-6) அமைகின்றன. பாடலின் கருத்து, சூழல், உரைத்தன்மை ஆகியவற்றின் அடிப்படையிலேயே ராஜ.பதிப்புகளின் பாடப் பொருத்தமின்மையை அறிய முடிந்தது. அவை அச்சுப்பிழையாக இருக்கலாம் என்று கருதவும் வாய்ப்புண்டு. அந்நிலையில் பொருத்தமான பாடங்களாக இனங்கண்டறியப்பெற்ற பாடங்கள் பின்வருமாறு:

*நல்கூர் பெண்டிர் அல்கற் கூட்டும் (129:10), பானாய் துள்ளிய பறைக்கட் சிற்றிற் (167:17), பறைஇய தளருந் துறைவனை நீயே (170:7), வேனில் வெற்பிற் கானங்காய (187:16), வண்ண மூதாய் தண்ணிலம் வரிப்ப (283:15), வெயிலவிர்பு நுடங்கும் வெவ்வெங் களரிக் (293:5), கழுதுவழங் கரைநாள் காவலர் மடிந்தென (311:4). இப்பாடங்களில் 129:10 ஆம் பாடலின் பொருத்தமான பாடம் மு.காசி.பதிப்பில் மட்டும் காணப்பெறுகிறது என்பது இங்குக் குறிக்கத்தக்கதாகும்.*

***193:10* கொல்பசி முதுநரி வல்சி யாருஞ் (தொல்பசி முதுநரி வல்சியாகும்) (பிற.)–கொல்பசி முதுநரி வல்சி யாருந் (சமா.)–தொல்பசி முதுநரி வல்சியாகும் (மு.காசி.)–கொல்பசி முதுநரி வல்சி ஆகும் (மர்ரே.)**

செலவு அழுங்கும் தலைவன் தான் செல்லும் சுர நெறியின் தன்மை பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிறான்.

> "கானுயர் மருங்கிற் கவலை யல்லது
> வானம் வேண்டா வில்லே ருழவர்
> பெருநாள் வேட்டங் கிளையெழ வாய்த்த
> பொருகளத் தொழிந்த குருதிச் செவ்வாய்ப்
> பொறித்த போலும் வானிற வெருத்தி
> னணிந்த போலுஞ் செஞ்செவி யெருவை
> குறும்பொறை யெழுந்த நெடுந்தாள் யாஅத்
> தருங்கவட் டுயர்சினைப் பிள்ளை யூட்ட
> விரைந்துவாய் வழுக்கிய கொழுங்க ணூான்றடி
> கொல்பசி முதுநரி வல்சி யாருஞ்
> சுரனமக் கெளிய மன்னே..." *(193:1–11)*

இவ்வடிகளில் வரும் 'கொல்பசி முதுநரி வல்சி யாரும்' என்னும் பாடத்திற்கு மாறாக, 'தொல்பசி முதுநரி வல்சியாகும்' என்று மு.காசி.பதிப்பிலும் 'கொல்பசி முதுநரி வல்சி ஆகும்' என்று மர்ரே.பதிப்பிலும் மாற்றிக் குறிக்கப் பெற்றுள்ளது. மு.காசி.பதிப்பில் காணலாகும் 'தொல்பசி முதுநரி வல்சி யாரும்' எனும் பாடம் ராஜ., மயிலம்வே.பதிப்புகளின் அடிக்குறிப்புகளிலும் காணப்பெறுகிறது. இந்நிலையில், '***கொல்பசி முதுநரி வல்சி யாருந், தொல்பசி முதுநரி வல்சி யாகும், கொல்பசி முதுநரி வல்சி ஆகும்***' எனும் மூன்று வேறுபட்ட பாடங்கள் இருப்பதை அறியலாம்.

எருவை தன் குஞ்சுகளுக்கு ஊட்டிய மாமிசத் துண்டு தவறி விழுந்து நரி தனக்கு உணவாக உட்கொண்ட சூழலை விளக்கும் இவ்விடத்திற்குக் 'கொல்பசி முதுநரி வல்சி யாகும்' எனும் பாடத்தையே பொருத்தமுடையாகக் கொள்ளலாம். 'தொல்பசி' எனும் போது 'பழைமை பொருந்திய பசி' என்று

பொருள்படுகிறது. 'கொல்பசி' எனும் போது 'உயிரைப் போக்கும் பசி' என்று பொருள்படுகிறது. 'பழமை பொருந்திய பசி' என்பதைவிட, 'உயிரைப் போக்கும் பசி' என்பதே இயல்பாகவும் பசியின் கொடுமைகளையும் அப்போது மாமிசத் துண்டு தவறி விழ நரி விரைந்து எடுத்தலையும் தெளிவாக விளக்குகிறது.

அதேபோல் 'வல்சியாருந், வல்சி ஆகும்' என்பனவற்றிலும் 'வல்சி ஆகும்' என்பதையே பொருத்தமுடையதாகக் கருதலாம். 'வல்சி' என்பது சங்க இலக்கியத்தில் 38 இடங்களில் பயின்று வந்துள்ளது. அது 'உணவு' எனும் பொருளைக் குறிக்கிறது. இந்நிலையில் 'வல்சியாரும்' என்று பாடம் கொண்டால் 'உணவு ஆறும்' என்றே பொருள்படும். 'வல்சி யாகும்' என்று பாடம் கொண்டால் 'உணவு ஆகும்' என்று பொருள் படும். 'உணவு ஆறும்' என்பதைவிட, 'பசி ஆறும்' என்பதே பொருத்தமுடையது. எனவே 'பசியாறக்கூடிய உணவு ஆகும்' எனும் பொருளைத் தரும் 'வல்சியாகும்' என்பதே பொருத்தமுடையதாகும்.

இவற்றின்வழி மேற்கண்ட மூன்று பாடவேறுபாடுகளில் '***கொல்பசி முதுநரி வல்சி யாகும்***' என்பதையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***244:10 வருந்துய ருடைய ளிவளென (வருந்துவ ளவளென) (ராஜ., மயி.)–அருந்துய ருடையள் இவளென (பிற.)–அருந்துய ருடையள்அவளென (வருந்துவள் அவளென) (மு.காசி.)***

வினை முற்றிய தலைமகன் தலைவியின் நிலைபற்றித் தேர்ப்பாகற்குக் கூறும்போது, பாணன் தூது வந்த நிலை பற்றியும் குறிப்பிடுகிறான். அதனை,

> "வருந்துய ருடைய ளிவளென விரும்பிப்
> பாணன் வந்தனன் றூதே நீயும்
> புல்லார் புரவி வல்விரைந்து பூட்டி
> நெடுந்தே ரூர்மதி வலவ" *(244:10–13)*

எனும் அடிகள்வழி அறியலாம். இவ்வடிகளில் வரும் 'அருந்துயருடையள் இவளென' எனும் பாடம் மு.காசி. பதிப்பில் 'அருந்துயருடையள் அவளென' என்று மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது. இதுமட்டுமின்றி ராஜ., மு.காசி., மயிலம்வே.பதிப்புகளின் அடிக்குறிப்புகளில் 'வருந்துவள் அவளென' எனும்

பாடமும் காணப்பெறுகிறது. '***அருந்துயருடையள் இவளென, அருந்துய ருடையள் அவளென, வருந்துவள் அவளென்*** எனும் மூன்று பாடங்களில் '***அருந்துயருடையள் அவளென்*** என்ற பாடத்தைப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. பாணன் தலைவனிடம் தூது வந்து கூறும் போது தலைவி அருகில் இருக்கமாட்டாள், அதனால் சேய்மைச் சுட்டுச் சொல்லான 'அவளென' என்பதே பொருந்தும். அண்மைச் சுட்டுச் சொல்லான 'இவளென' என்பது பொருந்தாது.

2. 'வருந்துவள் அவளென' என்பது அனைத்துப் பதிப்புகளிலும் அடிக்குறிப்புகளில் குறிக்கப்பெற்றுள்ளனவேயன்றி முதன்மைப் பாடமாகக் குறிக்கப்பெறவில்லை.

3. 'அருந்துயர், வருந்துவள்' இவற்றில் 'அருந்துயர்' என்பதே தலைவியின் மிகுதியான துன்பத்தை வெளிப்படுத்துவதாகவும் அமைகிறது.

***377:3 நுண்பல் லெறும்பு கொண்டளைச் செறித்த (லெறும்பின் கொண்டளை) (ராஜ.)–நுண்பல் லெறும்பி கொண்டளைச் செறித்த (பிற.)–நுண்பல் எறும்பு கொண்டளைச் செறித்த (எறும்பினம்)–நுண்பல் லெறும்பினங் கொண்டளைச் செறித்த (மயி.)***

கோடை காலத்தில் எறும்புகள் புல்லரிசியை உணவாகக் கொண்டு சேர்ப்பதைப் பற்றிக் குறிப்பதாக,

> "கோடை நீடலின் காடுபுலந் துருகச்
> சிறுபுல் லுணவு நெறிபட மறுகி
> நுண்பல் லெறும்பு கொண்டளைச் செறித்த
> வித்தா வல்சி ....." *(377:1–4)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் 'நுண்பல் லெறும்பு கொண்டளைச் செறித்த' எனும் அடி 'நுண்பல் எறும்பி கொண்டளைச் செறித்த' என்றும் 'நுண்பல் எறும்பினம் கொண்டளைச் செறித்த' என்றும் அகநானூற்றுப் பதிப்புகளில் மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது. இவை மட்டுமின்றி 'லெறும்பின் கொண்டளை, எறும்பினம்' எனும் பாடங்கள் முறையே, ராஜ.,மு.காசி.பதிப்புகளில் குறிக்கப் பெற்றுள்ளன. இந்நிலையில்

‘***நுண்பல் லெறும்பு கொண்டளைச் செரித்த, நுண்பல் எறும்பி கொண்டளைச் செறித்த, நுண்பல் எறும்பினங் கொண்டளைச் செறித்த, நுண்பல் எறும்பின் கொண்டளைச் செறித்த***’ எனும் நான்கு பாடங்கள் அகநானூற்றுப் பதிப்புகளில் குறிக்கப்பெற்றுள்ளதை அறியலாம்.

‘நுண்பல் எறும்பு கெண்டளைச் செறித்த, நுண்பல் எறும்பினங் கெண்டளைச் செறித்த’ எனும் இரு பாடங்களுக்கும்,

> “சிறிய புல்லரிசியை சிறிய பலவாய எறும்புகள்
> ஒழுங்கு பெறச் சென்று கொண்டுவந்து தம் வளையில்
> தொகுத்து வைத்தனவாகிய”[14]

என்னும் உரைக்கருத்துக் காணப்பெறுகிறது. ‘நுண்பல் எறும்பி கெண்டளைச் செறித்த, நுண்பல் எறும்பின் கொண்டளைச் செறித்த’ எனும் இரு பாடங்களுக்கும் அந்த உரைக்கருத்து இல்லை; பொருத்தமான பொருளைக் குறிக்க இயலவும் இல்லை.

தனிப்பட்ட ஓர் எறும்பின் செயலைக் குறிக்காது ஒட்டுமொத்த எறும்புக் கூட்டங்களின் செயலைக் குறிப்பதால் ‘***நுண்பல் எறும்பினங் கொண்டளைச் செறித்த***’ எனும் பாடத்தைப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

முற்றிலும் வேறுபட்டு அமையும் மேற்கண்ட 12 வேறுபாடுகளில் ராஜ.பதிப்புகள், சமாஜப் பதிப்பு ஆகியன 8 இடங்களில் (5:2,129:10, 167:17,170:7,187:16,283:15,293:5,311:4) பொருந்துகின்றன. மர்ரே எஸ். இராஜம் பதிப்பு 9 இடங்களிலும் (5:2,129:10,167:17,170:7,187:16, 193:10,283:15,293:5,311:4), மயிலம்வே.பதிப்பு 10 இடங்களிலும் (44:2,129:10,167:17,170:7,187:16,193:10,283:15,293:5,311:4,377:3) பொருந்துகின்றன. மு.காசி.பதிப்பு 8 இடங்களில் (129:10,167:17,170:7, 187:16,244:10,283:15,293:5,311:4) பொருத்தமான பாடங்களைக் குறித்துள்ளது.

இத்தனிப்பட்ட பகுதியில் மயிலம்வே.பதிப்பு மிகுதியான அளவில் (10) பொருத்தமான பாடங்களைக் குறித்திருந்தாலும் ‘ஓர் அடியில் வரும் அடிக்குறிப்புகளுடன் கூடிய அடிநிலை வேறுபாடுகள்’ எனும் இப்பெரும்

பகுதியில் மிகுதியான இடங்களில் வேறுபடுகிறது. அதன் வேறுபாட்டு எண்ணிக்கை 53 ஆகும். இதன்வழி இப்பகுதியில் மிகுதியான அளவில் பொருத்தமற்ற பாடத்தைக் கொண்டிருப்பதாக மயிலம்வே.பதிப்பு இருப்பதை அறியலாம்.

**ஒன்றுக்கு மேற்பட்ட அடிகள்**

ஒன்றுக்கு மேற்பட்ட அடிகளைக் கொண்ட அடிக்குறிப்புகளுடன் கூடிய அடிநிலை வேறுபாடுகளாக அகநானூற்றுப் பதிப்புகளில் 24 வேறுபாடுகள் (விவரம்:பின்னிணைப்பு-8) காணப்பெறுகின்றன. அவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தி விளக்கலாம்.

1. அச்சுப் பிழையாகக் கருதத்தகுந்தவை
2. ராஜ.பதிப்புகளில் பாடங்கள் பொருத்தமின்றி அமைதல்
3. வேறுபாடுகளாகக் கருதத் தகுந்தவை.

**அச்சுப் பிழையாகக் கருதத் தகுந்தவை**

அகநானூற்றின் பெரும்பாலான பதிப்புகளில் ஒரே பாடம் அமைய மயிலம்வே.பதிப்பு மட்டும் வேறுபட்ட பாடத்தைக் குறித்துப் பிற பதிப்புகளிலிருந்து வேறுபடுவனவாக 19 வேறுபாடுகள் (விவரம்: பின்னிணைப்பு-9) காணப்பெறுகின்றன. 272:4-5 இக்கான வேறுபாடு மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பிலும் காணப்பெறுகிறது.

மேற்கண்ட 19 இடங்களிலும் மயிலம்வே.பதிப்பு வேறுபட்டாலும் பிற பதிப்புகளில் உள்ள உரைக்கருத்துகளே அப்பதிப்பிலும் காணப்பெறுகின்றன. இவ்வுரைக்கருத்துகளே பாடல் சூழல், கருத்து ஆகியனவற்றிற்கும் பொருந்துகின்றன. இந்நிலையில் பொருத்தமான பாடங்களாகப் பின்வருவன அமைகின்றன.

*யாயி னன்று, அரிது துற்றனையாற் (10:6-7), தூக்கலி னூதுலை, யிசைவாங்கு தோலின் வீங்குபு ஞெகிழுங் (96:6-7), வறுமை யஞ்சுதி யழிதக, வுடைமதி வாழிய நெஞ்சே (123:7-8), குன்றம் போகுங், கதழ்கோ லுணமர் (140:4-5), பலருடன் றுவன்றிய, விழவுட னயர (141:10-11), கண்ணொ டினைபாங், கின்னா துறைவி (164:9-10), நன்மலை நாடனொ, டுணர்ந்தனை (178:13-14), தாயநின், சுணங்கடை வரித்த றொய்யிலை நினைந்தே*

*(177:19–20), நெஞ்சுணர, வரிய (175:6), புணரி யலைப்பவு, முழைக்கடல் வழங்கலும் உரியன் அதன்றலை (190:9–10).*

*விவளெனப் பன்மா, ணீர்மலி (227:3–4), செல்லா, தருவழி விலக்குமெம் பெருவிறல் (248:8–9), வள்ளிதழ் நீல, புலாஅன் மறுகிற் (270:1–2). யாரிரு ளகற்றிய, மின்னொளி ரெஃகஞ் (272:4–5), விழையா வுள்ளம் விழையு மாயினும், என்றுங், கேட்டவை தோட்டியாக மீட்டாங் (286:8–9), கருவின, மாவிசும் பதிர (314:1–2), நெகிழ்தோ, ளூர்கொள் (316:8–9), குழுமுஞ்சார, லறையுறு (322:11–12), தண்ணறுங் கதுப்பிற் புணர்ந்தோர் புனைந்தவென், பொதிமாண் முச்சி காண்டொறும் பண்டைப், பழவணி யுள்ளப் படுமோ தோழி (391:6–8).*

**வேறுபாட்டுத் தன்மையில் அமைவன**

ஒன்றிற்கு மேற்பட்ட அடிகளில் வரும் அடிக்குறிப்புகளுடன் கூடிய அடிநிலை வேறுபாட்டுத் தன்மையில் அகநானூற்றுப் பதிப்புகளிடையே முற்றிலும் வேறுபட்டு அமையும் வேறுபாட்டுத் தன்மை கொண்டனவாக 10 வேறுபாடுகள் *(138:12–13,156:9–10,167:14–15, 195:10–11, 301:7–8, 325:7–9, 328:7–8, 340:14–15, 375:8–10, 387:4–5)* காணப்பெறுகின்றன. இவ்வேறுபாடுகளில் பொருத்தமான பாடங்களை இனங்கண்டறிவதாக இனிவரும் பகுதி அமைகிறது.

***138:12–13***

தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லும் தலைவி தனக்காக வெறியாட்டு எடுத்ததைக் குறிப்பிடுகிறாள். இதனைப் பின்வரும் அடிகள் விளக்கும்.

> "நதும்புசீ ரின்னியங் கறங்கக் கைதொழு
> துருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇக்
> கடம்புங் களிறும் பாடித் தொடங்குபு
> தோடுந் தொடலையுங் கைகொண் டல்கலு
> மாடி னளாத னன்றோ..." *(138:9–13)*

இவ்வடிகளில் வரும் 'மாடின ளாத னன்றோ' எனும் பாடம் சமாஜம், மர்ரே. பதிப்புகளில் 'மாடி னளாத நன்றே' என்று மாறுபட்டுப் பதிவு

செய்யப்பெற்றுள்ளது. இப்பாடம் ராஜ.பதிப்பின் அடிக்குறிப்பில் காணலாகும் பாடமாகும். இப்பாடங்கள் மட்டுமின்றி மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பில் 'கைக்கொண் டாடின, ளாஅத னன்றோ வன்றே நீடு' ஆகிய பாடங்களும் மயிலம்வே.பதிப்பின் அடிக்குறிப்பில் 'கைக்கொண்டாடின னன்றோ வன்றே, டல்கலும் பாடின ளாத' ஆகிய பாடங்களும் காணப்பெறுகின்றன. இதன்வழி, '***ஆடின ளாத நன்றோ, ஆடின ளாத நன்றே, கைக்கொண் டாடின, ளாஅத னன்றோ வன்றே நீடு, கைக்கொண்டாடின னன்றோ வன்றே, டல்களும் பாடின ளாத***' ஆகிய 6 பாடங்கள் காணப்பெறுவதை அகநானூற்றுப் பதிப்புகள் வழி அறியலாம்.

தனக்கு எவ்வித நோயும் இல்லாத சூழலில் வெறியாட்டு எடுப்பது நான்றாகுமோ (நியாயமாகுமோ) என்று தலைவி வருந்திக் கூறுவதாக அமையும் இச்சூழலுக்கு '***ஆடின ளாதல் நன்றே***' என்ற படமே பொருந்துவதாக அமைகிறது. உரையுடன் கூடிய அனைத்துப் பதிப்புகளிலும் இப்பாடமே முதன்மையாகக் குறிக்கப் பெற்றுள்ளது என்பதும் நினைவில் கொள்ளத்தக்கது. பிற பாடங்கள் (அடிக்குறிப்பு உட்பட) அனைத்தும் பாடல் சூழலுக்கு நேரடிப் பொருத்தமின்றிக் காணப்பெறுகின்றன.

சமாஜம்,மர்ரே.பதிப்புகளில் உரைக்கருத்துக் காணப்பெறாததாலேயே பொருத்தமான பாடங்களைத் தேர்ந்தெடுப்பதில் சிக்கல் நேர்ந்திருக்கலாம் என்று கருத வாய்ப்புண்டு. இதேபோல் *301:7–8, 340:14–15, 375:8–10, 387:4–5* ஆகியவற்றின் பாடங்களும் சமாஜம்,மர்ரே.பதிப்புகளில் பொருத்தமற்றனவாகப் பதிவு செய்யப் பெற்றுள்ளன. இப்பொருத்தமற்ற பாடங்கள் ஓரிரு எழுத்துகளில் மாற்றமடைவதால் அவற்றை அச்சுப்பிழையாகவும் கருதலாம். இப்பிழைகள் நீங்கிய, உரையுடன் கூடிய பதிப்புகளில் காணலாகும் பொருத்தமான பாடங்களாகப் பின்வருவனவற்றைக் குறிக்கலாம்.

*வாரை வேய்ந்த வறைவாய்ச் சகடத்து தூரிஃதென்னா வூறில் வாழ்க்கை (301:7–8), லத்த வெருவைச் சேவல் சேர்ந்த, வரைசேர் யாத்த வெண்டிரன் விளைவிற, லெழாஅத் திணிதோட் சோழர் பெருமகன் (அகம்.375:8–10) புகருணப் பறைந்த புன்றலைச் சிறாஅரொ, டவ்வரி கொன்ற (387:4–5) பசுமீன் நொடுத்த வெண்ணெல்மாத் தயிர்மிதி, மிதவை மாவர் குநவே நினக்கே (340:14:15).*

மேற்கண்ட பொருத்தமான பாடங்களிலிருந்து சமாஜம், மர்ரே. பதிப்புகள் வேறுபடுதல் மட்டுமின்றி *340:14–15* ஆம் பாடலுக்கான அடியமைப்பில் ராஜ.பதிப்புகளும் வேறுபடுகின்றன என்பதும் இங்குக் குறிக்கத்தக்கது. முற்றிலும் வேறுபடும் இத்தன்மையில் சமாஜம், மர்ரே. பதிப்புகள் 4 இடங்களிலும் *(138:12–13, 301:7–8, 375:8–10, 387:4–5)* ராஜ.பதிப்புகள் வேறுபடுவதாக ஓரிடமும் *(340:14–15)* காணப்பெறுகின்றன.

ஒன்றுக்கு மேற்பட்ட அடிகளைக் கொண்ட அடிக்குறிப்புகளுடன் கூடிய அடிநிலை வேறுபாடுகளில் *(35)* மயிலம்வே.பதிப்பு மட்டும் வேறுபடுவனவாக 21 இடங்கள் *(10:6–7,96:6–7,123:7–8,140:4–5,141:10–11, 164:9–10,178:13–14,177:19–20,175:6–7,190:9–10,227:3–4,248:8–9, 270:1–2,286:8–9,298:11–13,314:1–2,316:8–9,319:12–13,322:11–12, 343:7–8,391:6–8)* காணப்பெறுகின்றன. இதன்வழி இத்தன்மையிலும் மயிலம்வே.பதிப்பு மிகுந்தளவில் வேறுபடுவதை அறியலாம்.

**சொல் நிலையிலான வேறுபாடுகள்**

அகநானூற்றுப் பாடவேறுபாடுகளில் முற்றிலும் மாறுபட்டமையும் சொல்நிலையிலான வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. அவ்வேறுபாடுகளை இருவகைப்படுத்தி விளக்கலாம். அவை:

1. இரண்டு வேறுபாடுகள் கொண்டிருத்தல்
2. மூன்று வேறுபாடுகள் கொண்டிருத்தல்.

**இரண்டு வேறுபாடுகள்**

முற்றிலுமான சொல்நிலையில் மாறுபட்டு அமையும் இரண்டு வேறுபாடுகள் கொண்டனவாக அகநானூற்றுப் பதிப்புகளில் (பாயிரம் உட்பட) 79 பாடங்கள் (விவரம் : பின்னிணைப்பு–10) காணப்பெறுகின்றன. அவற்றைப் பொருண்மை, பெரும்பான்மை அடிப்படையிலும் சில இடங்களில் யாப்பியல் நிலையிலும் விளக்கிச் சரியான பாடத்தை இனங்காண்பதாக இனிவரும் பகுதி அமைகிறது.

இப்பகுதியின் பாடவேறுபாடுகளைப் பின்வருமாறு இருவகைப்படுத்தி விளக்கலாம்.

1. அச்சுப் பிழையாகக் கருதத்தகுந்த வேறுபாடுகள்

2. பொருள் மாற்றமுடைய பாடவேறுபாடுகள்.

**பிழையாகக் கருதத்தகுந்தவை**

பெரும்பாலான பதிப்புகளில் பாடம் ஒன்றாக அமைய ஏதேனும் ஒன்றில் மட்டும் வேறுபட்டு அமையும் பாடங்களை இவ்வகையில் அடக்கலாம். எழுத்து மாற்றம் நேருவதால் இத்தன்மை மிகுந்திருக்க வாய்ப்புண்டு. இவ்வகையில் இப்பகுதியில் பிழையாகக் கருதத்தகுந்த வேறுபாடுகளாக 46 வேறுபாடுகள் (விவரம்: பின்னிணைப்பு-11) காணப்பெறுகின்றன.

இவ்வேறுபாடுகளைக் குறிக்கும் பதிப்புகளில் மயிலம்வே.பதிப்பு உரையுடன் கூடியதாகும். இப்பதிப்பின் பாடம் பிற பதிப்புகளிலிருந்து வேறுபட்டிருந்தாலும் உரை பிற பதிப்புகளில் காணலாகும் பொருத்தமான பாடங்களுக்கான உரையாகவே காணப்பெறுகிறது. இத்தன்மையில் உரையில் மாற்றம், பாடல் சூழலுக்குப் பொருந்துதல், கருத்தியல் நிலை, காலப்பழைமையான பதிப்புகளில் குறிக்கப்பெற்றிருத்தல், பெரும்பான்மையான பதிப்புகளில் இடம்பெறுதல் ஆகியவற்றின் அடிப்படையில் பின்வரும் பாடங்களைப் பொருத்தமுடையனவாகக் குறிக்கலாம்.

*பாடுபல வமைத்துக் (30:10), சென்றா ரென்பிலர் (31:12), மருதமரனிழல்(37:16), நீடிதழ் தலைஇய (38:10), வயின்மரத் தியாத்த (49:4), பல்கான் (49:9), நீர்கொடு (50:13), யுழிஞ்சில் (53:7), வூதை யீட்டிய (60:9), கலுழ்தளிற் றடுத்த (66:16), துள்ளூ தாவியிற் (71:14), நலம்பாராட்டி (87:14), திருமா வியனகர் (93:21), மீண்டோர் மன்னென (103:11), கணையிருஞ் சுருணை (113:15), வார்பெயற் (139:5), பொருந்தி யிமையாது (387:15), பூக்கணு மிமையார்(136:9), துவரப் புலர்ந்து (141:12), ஞிமிலி (142:11), பிறன்கடைச் செலாஅச் (155:2), பாசடை மருங்கிற் (176:4).*

*கரந்துவிடு கவுள (207:8), வயக்களி றுரினு தொறும் (211:4), ஊினியெவ னாகியர் (216:7), குவளையுங் (216:9), வைவாலெயிற்று (219:12), சாந்து புலரகல (224:9), பெயனீர் புதுவரல் (243:5), பெருங்கவின் சாய (255:17), விளங்க வீசி (257:11), நெருப்பின் வைத்தெடுத்து (265:13), தூட்டு பஞ்சி (283:14), வென்னை யாகுமோ (297:4), தேமொழிப் புதல்வர் (316:15),*

*செறுவோரேச்சொல் (323:2), பல்காற் குறும்பொறை (337:6), லெக்கர்த் துஞ்சும் (341:11), தாதுகு தண்பொழி (355:7), ணவன்கை விட்டனனே (356:7), வரகின் யாணர்ப் (359:13), முன்கை யூழ்கொள்பு (369:2), துயல்வர வந்தி (370:11), களர்தோன் றியவிற் (374:11), இனிய ஆலிப் (378:8), வனையமை வரனீர் (383:9).*

மேற்கண்ட பொருத்தமான பாடங்களுக்கு நிகரான வேறுபட்ட பாடங்களைச் சமாஜப்பதிப்பு, **387:15, 337:6, 341:11** ஆகிய மூன்று இடங்களிலும் மயிலம்வே.பதிப்பு பிற **43** இடங்களிலும் கொண்டுள்ளன. இதன்வழி மயிலம்வே.பதிப்பு மிகுதியான அளவில் பிழையான பாடங்களைக் கொண்டுள்ளதை அறியலாம்.

**பொருள் மாற்றமுடைய வேறுபாடுகள்**

மேற்கண்ட பிழையான பகுதிகள் நீங்கிய சொல்நிலையில் பொருள் மாற்றமுடைய வேறுபாடுகளாக **55** வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. அவற்றுள் பொருத்தமான பாடத்தை இனங்கண்டறிந்து விளக்குவதாக இனிவரும் பகுதி அமைகிறது.

**2:1 கோண்மிகு பெருங்குலை (பிற.) – கோள்முதிர் பெருங்குலை (சமா.,மர்ரே.)**

இரண்டாம் பாடலின் முதல் அடி,

“கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை” **(2:1)**

என்பதாகும். இவ்வடியில் வரும் ***‘கோண்மிகு பெருங்குலை’*** என்பதற்குச் சமாஜப் பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் ***‘கோள்முதிர் பெருங்குலை’*** என்று குறிக்கப்பெற்றுள்ளது.

இப்பாடலடியில் வந்துள்ள ‘கோள்’ என்பதற்குக் ‘காய்’ எனும் பொருண்மையினை அகநானூற்று உரைகள் வழி அறிய முடிகிறது. கோண்மிகு, கோள்முதிர் எனும் இவ்விரு பாடங்களில் “கோண்மிகு” எனும் பாடத்தையே நச்சினார்க்கினியரும் குறிக்கின்றார். களவியல் **114** ஆம் நூற்பாவில் வரும் வரைவுகடாதல் பற்றி விளக்கப்புகும் நச்சினார்க்கினியர், ‘கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை’ எனத் தொடங்கும் இப்பாடலைக் குறிக்கின்றார்.

இந்நிலையில் 'கோண்மிகு பெருங்குலை' எனும் பாடம் காலப் பழைமையானதாக இருப்பினும் 'கோண்முதிர் பெருங்குலை' எனும் பாடத்தையும் சாதாரணமாகக் குறிக்க இயலாது. இப்பாடமும் சிந்தனைக்குரியதாக அமைகிறது.

வாழைப்பழம், பலாப்பழம் இவையிரண்டும் சுனையில் விழுந்து கள்ளாக மாறிய சுனைநீரினை உண்ட கடுவன் மெய்மறந்திருந்த நிலையினை விளக்கி, அவ்வாறு விலங்குகளே இன்பங்களை எய்தும் நாட்டில் தலைவி வருந்துகிறாள் என்பதனைத் தலைவனுக்கு உணர்த்துவதாக இப்பாடலின் கருத்து அமைகிறது. இந்நிலையில்,

"கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை
ஊழுறு தீங்கனி..." (2:1-2)

என்று பாடம் கொள்ளும்போது, 'கொழுவிய இலைகளையுடைய வாழையின் காய்கள் மிகுந்த பெருங்குலையில் உள்ள இனிய கனி' என்று பொருள் அமைகிறது. 'கோண்மிகு' என்பதற்குப் பதிலாக, 'கோள்முதிர் பெருங்குலை' என்பதனைப் பாடமாகக் கொள்ளும்போது, 'கொழுவிய இலைகளையுடைய வாழையில் காய்கள் முதிர்ந்த குலையில் உள்ள முற்றிய இனிய கனி' என்ற பொருள் பெறப்படுகிறது.

காய் மிகுந்த குலையைவிடக் காய் முதிர்ந்த குலையில் மட்டுமே கனி இருக்க வாய்ப்புண்டு. எனினும் 'கோள்முதிர்' எனும் பாடத்தைக் கொள்ளும்போது முதிர்தல் என்பது 'கோள்முதிர், ஊழுறு' எனும் இருநிலைகளில் இப்பாடலில் வருகிறது. ஒரு பொருள் குறிக்கும் இருசொற்கள் அடுத்தடுத்து ஒரு பாடலில் வரவேண்டிய தேவை இல்லை. எனவே, ***'கோண்மிகு பெருங்குலை'*** எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**16:2 யயலிதழ் புரையு (பிற.)–அவிரிதழ் புரையும் (சமா.,மர்ரே.)**

தலைமக்களின் புதல்வன் பற்றி விளக்கும் புலவர்,

"நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதி னல்லி யயலிதழ் புரையு
மாசி லங்கை மணிமரு ளவ்வாய்

நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்

யாவரு விழையும் பொலந்தொடிப் புதல்வனை" *(16:1–5)*

என்று குறிப்பிடுகிறார்.

இவ்வடிகளில் வரும் 'அயலிதழ் புரையும்' எனும் பாடத்திற்கு மாறாக, 'அவிரிதழ் புரையும்' எனும் பாடம் சமாஜப் பதிப்பு, மர்ரே எஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் குறிக்கப்பெற்றுள்ளன. 'அயலிதழ்' என்பதற்கு, 'தாதின் அருகில் உள்ள இதழ்' என்பதும் 'அவிர்இதழ்' மலர்ந்த இதழ் என்பதும் பொருண்மைகளாக அமைகின்றன. புதல்வனின் குற்றமற்ற, அழகிய, தூய்மையான கைகளை விளக்க வரும் இவ்விடத்தில், எளிதில் தன் தூய்மையை இழக்கும் அவிர்ந்த இதழ் எனும் பொருள் தரும் 'அவிர் இதழ் புரையும்' எனும் பாடத்தைவிட, தூய்மையாக இருக்கும் தாதின் அருகில் உள்ள இதழ் என்று பொருள்தரும் 'அயலிதழ் புரையும்' எனும் பாடத்தையே பொருத்தமானது என்று குறிப்பிடலாம்.

***21:5 புலம்பச் சேய்நாட்டு (பிற.)–பசப்பச் சேய்நாட்டு (சமா.)***

பொருள்வயிற் பிரியும் தலைவன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குச் சொல்லும்போது, 'தலைவியின் அழகுகெட அவளை விட்டுவிட்டுப் பொருள் தேடித் துணிகிறாய் நெஞ்சே' என்று கூறுகிறான். அந்நிலையில்,

"மடந்தை மாணலம் புலம்பச் சேய்நாட்டுச்

செல்ல, லொன்றியான் சொல்லவு மொல்லாய்" *(21:5–6)*

எனும் அடிகள் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

இவ்வடிகளில் வரும் ***'புலம்பச் சேய்நாட்டு'*** எனும் பாடம் சமாஜப் பதிப்பில் ***'பசப்பச் சேய்நாட்டு'*** என்று குறிக்கப் பெற்றுள்ளது. இவ்விடத்தில் புலம்ப என்பதற்கு, "தலைவியின் மாண்புறும் அழகு கெட" ***(1943:52)*** எனும் பொருள் குறிக்கப் பெற்றுள்ளது. 'அழகு கெட' எனும் பொருள் பசப்ப என்பதற்கும் பொருந்தும்.

புலம்ப என்பதற்கு 'அழகுகெட' எனும் கருத்தினை அகநானூற்று உரைகள் குறித்திருந்தாலும் தனிமைத் துன்பத்தால் மிக்கு வருந்தும் நிலையை விளக்குவதாக அச்சொல் தொல்காப்பியத்தில் கையாளப்பெற்றுள்ளது. இதனை,

“புலம்பே தனிமை” (தொல்.சொல்.இளம்.325)

என்னும் நூற்பாவழி அறியலாம்.

‘பசத்தல்’ என்பதும் தலைவியின் வருத்தத்தால் உண்டாவது என்றாலும் புலம்பலுக்குப் பின்னரே ‘மேனி பசத்தல்’ என்பது உருவாகும். எனவே, ‘புலம்பல்’ என்பதனை அழகுகெடுவதற்கு முதற்காரணம் என்று குறிப்பிடலாம். எனவே, ‘புலம்ப, பசப்ப’ எனும் இவ்விரு பாடங்களில் ***‘புலம்ப’*** எனும் பாடத்தைப் பொருத்தமுடையதாகக் கொள்ளலாம்.

**23:5 யவல (பிற.) – யாறே (சமா.)**

மழைபெய்தலால் பள்ளங்களில் நீர்பெருகியிருத்தலைக் குறிக்க,

“காடே கம்மென் றன்றே யவல” (23:5)

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் பள்ளத்தைக் குறிக்கும் ***‘யவல’*** என்பது சமாஜப்பதிப்பில் ***‘யாறே’*** என்று மாறுபட்டுக் குறிக்கப் பெற்றுள்ளது.

‘மழைநீரால் பள்ளங்கள் பெருகியுள்ளது’ எனும் கருத்தினை விளக்கக் குறிக்கப்பெற்றுள்ள மேற்கண்ட அடிக்கு, ‘வழியானது மழைநீரால் பெருகியுள்ளது’ எனும் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு சமாஜப் பதிப்பு ‘ஆறே’ எனும் பாடத்தைக் குறித்துள்ளது. இவ்வடியைத் தொடர்ந்து மான்கள் நீரருந்துதல் பற்றிய குறிப்புக் காணப்பெறுகிறது. ‘வழியில் உள்ள நீரை மான்கள் அருந்தின என்பதைவிடப் பள்ளங்களில் உள்ள நீரை மான்கள் அருந்தின’ எனும் கருத்துப் பொருத்தமாக அமையும். எனவே ***‘யவல’*** எனும் பாடத்தைப் பொருத்தமுடையதாகக் கருதலாம்.

**23:9 தாழ்ந்துபட் டனவே (பிற.) – தாழ்ந்துபட் டன்றே (சமா.)**

பாலை நிலத்தில் தான் கண்ட காட்சியாகத் தலைவன் தனக்குக் கூறியதாகத் தோழிக்குக் குறிப்பிடும் தலைவி,

“யண்ண லிரலை யமர்பிணை தழீஇத்
தண்ணறல் பருகித் தாழ்ந்துபட் டனவே” (23:8–9)

என்று குறிப்பிடுகிறாள்.

இதில் வரும் ***'தாழ்ந்துபட் டனவே'*** எனும் பாடம் சமாஜப் பதிப்பில் ***'தாழ்ந்துபட் டன்றே'*** என்று குறிக்கப்பெற்றுள்ளது. இவ்விரு பாடங்களுக்கும், "குளிர்ந்த நீரைப் பருகி ஓரிடத்தில் தங்கிவிட்டன" *(1943:57)* என்பதே பொருள் ஆகும். இவ்விரு பாடங்களிலும் பொருள் வேறுபாடு இல்லை என்றாலும் சமகால இலக்கியப் பயன்பாட்டு அடிப்படையில் நோக்க, 'பட்டன்று, பட்டன' என்பனவற்றில் பட்டன்று என்பதே மிகுதியாகப் பயின்று வந்துள்ளது (9 இடங்கள் – குறுந்.*289:5, 355:3,* நற்.*182:1, 348:2,* பரி.*12:97,* கலி.*145:37,* அகம்.*201:10, 47,13:8, 134:4).* பட்டன என்பது ஓரிடத்தில் மட்டுமே (பெரு.*336)* காணப்பெறுகிறது. இவ்வகையிலான சமகால இலக்கியப் பயன்பாட்டு அடிப்படையில் நோக்க, ***'தாழ்ந்து பட்டன்றே'*** என்ற பாடத்தையே பொருத்தமானதாகக் கருதமுடிகிறது.

***34:15 யின்றுவர லுரைமோ (பிற.)–யின்றுவரி னுரைமோ (மயி.)***

பிரிந்துவாடும் தலைவியின் நிலையை எண்ணித் தலைவன் கூறுவதாக அமையும் இப்பாடலில்,

"சென்றிசினோர் திறத்து யின்றுவர லுரைமோ" *(34:15)*

எனும் அடி காணப்பெறுகிறது. இவ்வடியில் காணலாகும் ***'இன்றுவர லுரைமோ'*** எனும் பாடம் மயிலம்வே.பதிப்பில் 'இன்றுவரின் உரைமோ' என்பதாக அமைகிறது.

இத்தகைய பாடவேறுபாடு கொண்ட இவ்வடியின் கருத்தாக, 'தலைவி கிளியைக் கையில் எடுத்துத் தலைவர் இன்று வருவதற்கானதைக் கூறு' எனக் கூறினாள் என்பதாக அமைகிறது. மயிலம்வே.பதிப்பில் காணப்பெறும் 'இன்றுவரின் உரைமோ' எனும் பாடம் 'இன்று வந்தால் கூறு' எனும் பொருளைத் தருகிறது. இவ்விரு உரைக்கருத்துகளில் 'இன்று வருவதற்குக் கூறு' எனும் பொருளை 'இன்றுவரல் உரைமோ' எனும் பாடமே தருகிறது என்பதனை அறியலாம்.

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி, தலைவன் வரவை எதிர்பார்த்துக் காத்திருக்கும் சூழலில் இத்தகைய நிலை ஏற்படுவது உண்டு. இந்நிலையில் (தலைவன் வராத நிலையில்) சகுனம் பார்த்தல் (புள் நிமித்தம் முதலானவை) தலைவியால் மேற்கொள்ளப்படுவது வழக்கம்.

"பல்லியும் பாங்கொத்து இசைத்தன" (கலி.11:21)

எனும் கலித்தொகை அடி இதற்குச் சான்றாகும். அவ்வகையிலான தன்மையிலேயே தலைவி கிளியைப் பார்த்துக் கூறுவது அமைகிறது. இந்நிலையில் தலைவன் வராத சூழலில் அவன் 'வருவதற்காக உரை' என்ற பொருளைத் தரும் ***'இன்றுவரல் உரைமோ'*** எனும் பாடத்தைப் பொருத்தமானதாகக் குறிப்பிடலாம்.

***48:11 குயமண் டாகஞ் (பிற.) – குயமண் டாகத்து (மயி.)***

*'மகளிர் விருப்பமுடன் சாயும் மார்பில் சிவந்த சந்தனத்தைப் பூசி'* என்ற பொருளில் அமைந்துள்ள,

"குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி" (48:11)

எனும் அடியில் வரும் ***'குயமண் டாகம்'*** என்பதற்கு மாறாக மயிலம்வே. பதிப்பில் ***'குயமண்டாகத்து'*** என்பது குறிக்கப்பெற்றுள்ளது.

இவ்விரு பாடங்களும் மார்பில் சந்தனத்தைப் பூசுதலையே குறிக்கின்றன. இருப்பினும் சங்கப்பாடல் பதிவுகளைப் பொறுத்தவரை 'ஆகம், ஆகத்து' என்பனவற்றில் 'ஆகம்' என்பதே மிகுதியான இடங்களில் (71)[15] பதிவாகி உள்ளது. 'ஆகத்து' எனும் பதிவு எங்கும் இல்லை. எனவே, சமகால இலக்கியப் பதிவு அடிப்படையில் ***'குயமண்டாகம்'*** எனும் பாடத்தையே சரியானது என்று குறிப்பிடலாம்.

***55:15 பிறிந்திவட் (பிற.) – பிரிந்தவட் (மயி.)***

"பெரும்பிறி தாகி யாங்குப் பிறிந்திவட்" (55:15)

எனும் அடியில் வரும் ***'பிறிந்திவட்'*** என்பதற்கு, மயிலம்வே.பதிப்பில் ***'பிரிந்தவட்'*** என்று பாடம் குறிக்கப் பெற்றுள்ளது. இவ்விரு பாடங்களில் இரண்டு வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. அவை:

பிறிந்து – பிரிந்து

இவண் – அவள்

'பிறிந்து, பிரிந்து' எனும் பாடங்களில் பிறிந்து என்பதற்கு எவ்விதப் பொருளும் இல்லை. பிரிந்து என்பதற்குப் 'பிரிந்து சென்று' என்பது பொருளாகும். இது தொடர்பான சங்கப்பாடல் பதிவுகளாகப்

பிரிந்த, பிரிந்தக்கால், பிரிந்ததற்கு, பிரிந்தவர், பிரிந்தன்று என்பன போன்ற பல சொற்கள் காணப்பெறுகின்றன. இவை அனைத்தும் பிரிவு என்பதையே உணர்த்துகின்றன. ஆனால் 'பிறிந்து' எனும் சொல்லுக்கு எவ்விதப் பொருளும் இல்லை; அது 'பிரிந்து' எனும் பொருளையும் வெளிப்படுத்தவில்லை. எனவே ***'பிரிந்து'*** எனும் பாடத்தையே பொருத்தமான பாடமாகக் குறிக்கலாம்.

'இவண்' என்பதற்கு 'இங்கு' எனும் பொருள் அகநானூற்று உரைகளில் குறிக்கப்பெற்றுள்ளது. 'அவள்' என்பது தலைவியைக் குறிப்பதாகும். இச்சொல்லுடன் தொடர்புடைய,

"... இவண்
காதல் வேண்டி ..." *(55:15–16)*

என்பதற்கு, 'இங்குக் காதல் வேண்டி' என்பது பொருளாக அமைகிறது. 'அவள் காதல் வேண்டி' என்பதற்கு, 'தலைவியின் காதல் வேண்டி' என்பது பொருளாக அமைகிறது. இப்பாடலின் சூழலைப் பொறுத்தவரை 'இங்கு காதல் வேண்டி' என்பதே பொருத்தமாக அமைகிறது. எனவே, 'இவண், அவள்' எனும் இரு பாடங்களில் ***'இவண்'*** எனும் பாடமே பொருத்தமாக அமைகிறது என்பதனை அறியமுடிகிறது.

'பிறிந்து, பிரிந்து' என்பனவற்றில் 'பிரிந்து' எனும் பாடம் பொருத்தமாக அமைவதாலும் 'இவண், அவள்' எனும் பாடங்களில் 'இவண்' என்பது பொருத்தமாக அமைவதாலும் ***'பிரிந்திவட்'*** எனும் பாடத்தையே சரியானதாகக் குறிக்கலாம்.

**97:6 கொலைவி லாடவர் (பிற.) – கோள்வ லாடவர் (மயி.)**

பாலை நிலத்தின் தன்மை பற்றியதாக,

"............................ நிரைபகுத்து
இருங்கண் முடுக்கர்த் திற்றி கெண்டுங்
கொலைவி லாடவர் போல..." *(97:4–6)*

எனும் அடிகள் குறிக்கப்பெற்றுள்ளன. இவ்வடிகளில் வரும் ***'கொலைவில் ஆடவர்'*** என்பதற்கு மயிலம்வே.பதிப்பில் ***'கோள்வல் ஆடவர்'*** என்ற

பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. பாலை நிலத்தில் வாழும் வெட்சியார் பற்றிக் குறிக்கும் இவ்வடிகளுக்கு ராஜகோபாலார்யன்,

> "நிரையை ஆண்டிருந்து வேறு பிரித்துப் பெரிய கற்பாறையின் முடக்கத்திலே அவற்றின் தசையை அறுத்துத் தின்னும் கொலைத் தொழிலையுடைய வில்வீரரான வெட்சியார் போல"[16]

என்று உரை எழுதுகிறார்.

மயிலம்வே.பதிப்பில் உள்ள பொழிப்புரை 'கோள்வல் ஆடவர்' என்று பாடம் குறித்து அதற்கு,

> "பிறருடையனவற்றைக் கொள்ளுதலில் வல்ல ஆடவர்"[17]

என்று உரை குறித்துள்ளது.

இப்பாடலில் நிரை கவர்தல், அவ்வாறு கவர்ந்த பசுவின் தசையினை அறுத்துத் திண்ணுதல் ஆகியன குறிக்கப்பெற்றிருக்கின்றன. மேலும் புலவு நாற்றம், எருவையுடன் பருந்து பறந்து திரிதல் ஆகியனவும் குறிக்கப் பெற்றுள்ளன. இவையனைத்தும் கொலைத் தொழிலுடன் தொடர்புடையனவாகவே அமைகின்றன. இதுமட்டுமின்றி நிரைகவர்வோருக்கு வில் இன்றியமையாதது என்பதும் இங்குக் குறிக்கத்தக்கது. இவற்றின்வழி மேற்கண்ட இரு பாடங்களில் '***கொலைவில் ஆடவர்*** எனும் பாடமே பொருத்தமுடையது என்பதனை அறியலாம்.

***97:15 ஆழேலென்றி (பிற.) – ஆழல் என்றி (மர்ரே.)***

பிரிவால் வருந்தும் தலைவியின் வருந்தத்தக்க நிலைபற்றிக் குறிக்கும்போது,

> "அலர்முலை யாகம் புலம்பப் பலபுலந்
> தாழே லென்றி தோழி" *(97:14–15)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வந்துள்ள '***ஆழேல் என்றி***' எனும் பாடம் மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பில் '***ஆழல் என்றி***' என்று குறிக்கப்பெற்றுள்ளது.

'ஆழல்' என்பதற்குக் கலங்குதல், வருந்துதல் என்று பொருள் குறிக்கலாம். சங்க இலக்கியத்தில் தலைவியின் வருத்தம் அழுகை இவற்றுடன் தொடர்புடைய சொற்களாக ஆழல் *(11)*[18], ஆழ *(1)*[19], ஆழல *(1)*[20] என்னும் சொற்கள் குறிக்கப்பெற்றுள்ளன. இதேவேளை 'ஆழேல்' என்பது எவ்விடத்தும் குறிக்கப்பெறவில்லை. எனவே, தலைவியின் வருத்தமான நிலைபற்றி விளக்கும் இவ்விடத்திற்கு '***ஆழல் என்றி***' எனும் பாடமே பொருத்தமாக அமையும் எனலாம்.

**125:3 யீர்ங்காழன்ன (ராஜ.,மயி.) – இரங்காழன்ன (பிற.)**

"ஈர்ங்கா ழன்ன வரும்புமுதி ரீங்கை" *(125:3)*

எனும் அடியில் வரும் '***ஈர்ங்காழன்ன***' எனும் பாடத்திற்கு மாறாகச் சமாஜப் பதிப்பு, மு.காசி.பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் '***இரங்காளன்ன***' எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது.

ஈங்கை மரத்தின் மலர் விழுவதைக் குறிக்க 'ஈர்ங்காழ்/இரங்காழ்' என்று பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. ஈர்ங்காழ் என்பதற்கு,

'குளிர்ந்த முத்துப்போன்ற'[21]

என்றும் 'இரங்காழ்' என்பதற்கு,

'இரவம் வித்தினை ஒக்கும்'[22]

என்றும் உரைகள் குறிப்பிடுகின்றன. 'காழ்' என்பது விதையைக் குறிக்கும். முத்துப்போன்ற மலர் என்பதே பொருத்தமாக அமைகிறது. இது மலரின் மேன்மையைக் குறிக்க வந்ததாகும். எனவே, '***ஈர்ங்காழன்ன***' என்ற பாடத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

**127:6 நன்னகர் மாந்தை (பிற.) – நல்நகர் மரந்தை (மர்ரே.)**

சேரலாதனின் வெற்றி பற்றிக் குறிக்கும் இப்பாடலில் '***மாந்தை, மரந்தை***' எனும் இரு பாடங்கள் அகநானூற்றுப் பதிவுகளில் குறிக்கப் பெற்றுள்ளன.

"நன்னகர் மாந்தை முற்றத் தென்னார்" *(127:6)*

எனும் அடிக்கே மேற்கண்ட இரு பாடங்கள் காணப்பெறுகின்றன.

‘மாந்தை’ என்பதற்குச் ‘சேரலாதனின் ஊராகிய மாந்தை’ என்று அகநானூற்று உரைகளில் குறிக்கப்பெற்றுள்ளது. ஆனால் ‘மரந்தை’ எனும் பாடம் மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பில் காணப்பெறுவதால் எவ்வித உரைக் கருத்தையும் அறிய இயலவில்லை.

மாந்தை, மரந்தை எனும் பதிவுகள் சங்கப் பாடல்களில் முறையே 4(நற்.35,395,அகம்.127,376), 3 (குறுந்.34,166,பதிற்.90) என்ற எண்ணிக்கையில் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் பின்னத்தூரார், ராஜகோபாலார்யன் ஆகியோர் ‘மாந்தை’ என்றும் உ.வே.சா. மரந்தை என்றும் பாடம் கொண்டோராக உள்ளனர். ‘மாந்தை/மரந்தை’ என்பது குட்டுவனுக்குரிய ஊர் என்பதை,

“குட்டுவன் மரந்தை யன்னவெம்” (குறுந்.34:6)

எனும் குறுந்தொகைப் பாடலடிவழி அறியமுடிகிறது.

‘மரந்தை’ என்று பாடம் கொண்டமைக்கான காரணத்தை உ.வே.சா.வும் அவரைப் பின்பற்றிய மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பின் பதிப்பாசிரியர் குழுவினரும் கூறாதிருக்க, மாந்தை எனும் பாடத்தைக் கையாண்டமைக்கான காரணத்தை ராஜகோபாலார்யன் அகநானூற்றின் 376ஆம் பாடலின் அடிக்குறிப்பில் குறித்துள்ளார்.

“இறையனார் களவியல் பாடல்களான் மாந்தையென்றே
தெரிகின்றது காண்க”[23]

என்பது அவர் தரும் காரணமாகும்.

‘இந்நிலையில் பழைமையான இலக்கண நூலான இறையனார் களவியலில் ‘மாந்தை’ என்று குறிக்கப்பெற்றுள்ளது’ எனும் ராஜகோபாலார்யனின் அடிக்குறிப்புக் கருத்தைக்கொண்டு ‘***மாந்தை***’ எனும் பாடத்தையே சரியானதாகக் குறிப்பிடலாம்.

**136:25 பையென (ராஜ.,மயி.) – ஒய்யென (பிற.)**

தலைவியின் நிலைபற்றிக் கூறும் தலைவன் தலைவி நாணினாள் என்பதனை விளக்க,

“மறைதிற னறியா ளாகிப் பையென
நாணினள் ...........” (136:25–26)

என்று குறிப்பிடுகிறான். இவ்வடிகளில் வரும் 'பையென' எனும் பாடம் 'ஒய்யென' என்று சில பதிப்புகளில் குறிக்கப்பெற்றுள்ளது.

*1920,1923* ஆகிய ஆண்டுகளில் வெளிவந்துள்ள ராஜகோபாலார்யன் பதிப்புகளில் குறிக்கப்பெற்றிருக்கும் ***'பையென'*** எனும் பாடம் 1933 இல் வெளிவந்த ராஜகோபாலார்யன் பதிப்பில் ***'ஒய்யென'*** என்று குறிக்கப்பெற்றுள்ளது. அதனைத் தொடர்ந்து வெளிவந்த பதிப்புகளில் மயிலம்வே.பதிப்புத் தவிர்ந்த பிறபதிப்புகள் அனைத்தும் 'ஒய்யென' என்றே பாடம் குறிக்கின்றன.

'பையன' என்று பாடம் குறிக்கும் மயிலம்வே.பதிப்பு இதற்கு, "மெதுவாக நாணினாள்"[24] என்று குறிப்புரை தருகிறது. 'ஒய்யென' என்பதற்கு 'விரைவாக' என்பது பொருளாகும். மென்மைத் தன்மையுடைய தலைவி 'விரைவாக/விரைந்து நாணினாள், என்று கூறுவதைவிட, மெதுவாக நாணினாள்' என்று கூறுவதே ஏற்புடையதாக அமைகிறது. எனவே, ***'பையென நாணினாள்'*** எனும் பாடத்தையே பொருத்தமானதாகக் கொள்ளலாம்.

***139:8 கவாஅற் (பிற.) – கவர்வுற (மயி.,மர்ரே.)***

"வயலைக் கொடியாலாகிய அழகிய தழையுடை தாழ்ந்த துடையினையும்"[25]

எனும் பொருள் தரும்,

"வயலையம் பிணையற் வார்ந்த கவாஅற்" *(189:8)*

எனும் அடியில் வரும் ***'கவாஅன்'*** என்பதற்கு ***'கவர்வுற'*** எனும் பாடம் சமாஜப் பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் குறிக்கப் பெற்றுள்ளது.

'கவாஅன்' எனும் சொல் பல பொருள் குறித்த ஒரு சொல்லாகச் சங்க இலக்கியத்தில் 32[26] இடங்களில் குறிக்கப்பெற்றுள்ளது. 'கவர்வுற' எனும் சொல் இப்பாடல் தவிர வேறு எந்தப் பாடலிலும் குறிக்கப்பெறவில்லை. இப்பாடல் பதிவும் பிற பதிப்புகளில் 'கவாஅன்' என்பதாகவே குறிக்கப் பெற்றுள்ளது. மேலும் இப்பாடலின் பொருண்மைக்கும் 'கவாஅன்' என்பதே

பொருந்துகிறது (கவாஅன்–தொடை). எனவே, '***கவாஅன்***' என்ற பாடத்தையே பொருத்தமானதாகக் குறிப்பிடலாம்.

***142:21 துருவுகிள ரேர்வினை (பிற.) – துருவுகிள ரோவினை (மர்ரே.)***

"அழகு விளங்குகின்ற தோற்றப் பொலிவுடைய கம்மியத் தொழிலாற் பொலிந்த பாவை"[27]

எனும் பொருளுடைய,

"துருவுகிள ரேர்வினைப் பொலிந்த பாவை" *(142:21)*

எனும் அடியில் வரும் '***துருவுகிள ரேர்வினை***' எனும் பாடம் மர்ரே எஸ்.இராஜம் பதிப்பில் '***துருவுகிள ரோவினை***' என்று மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது.

'உருவுகிளர் ஏர்வினை' என்பதற்கு 'மிக்க அழகு விளங்குகின்ற தோற்றப் பொலிவு' எனும் பொருளை அகநானூற்று உரைகள் வழி அறியமுடிகிறது. 'உருவுகிளர் ஓவினை' என்பதற்கு எப்பொருளையும் காண இயலவில்லை. இதனால், '***உருவுகிளர் ஏவினை***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

***199:24 வாரலெனியானே (ராஜ.,மு.காசி.) – வாரலென்யானே (பிற.)***

'***வாரலெனியானே, வாரலென்யானே***' எனும் இரு பாடங்களும் 'வருவேன் அல்லேன்' என்னும் ஒரே பொருளைத் தருவனவாகும். 'வாரலெனியானே' என்பது சேர்த்து எழுதுதலாலும் 'வாரலென்யானே' என்பது சந்திப் பிரிப்புச் செய்து எழுதுதலாலும் வந்தனவாகும். இவற்றுள் பொருள் மயக்கம், தடுமாற்றம் தோன்றா வண்ணம் இருக்க '***வாரலென்யானே***' என்ற சந்திப்பிரிப்புச் செய்த பாடத்தை மேற்கொள்ளுதலே சரியானதாக அமையும்.

***216:16 வருந்துவர் மாதவர் (பிற.)–வருந்துப மாதவர் (சமா.,மர்ரே.)***

'***வருந்துவர், வருந்துப***' எனும் இரு பாடங்களும் ஒரே பொருளுடையனவாகும். ஆதன் எழினி என்பானின் வீரம் பற்றிப் பேசும் இப்பாடல், 'மாற்றார் மீது அவன் எறியும் வேல்பட்டு அவர்கள் வருந்துவர்' எனும் பொருளைத் தருகிறது. இதனை,

"வருந்துவர் மாதவர் சேரியாஞ் செலினே" (216:16)

எனும் அடிவழி அறியலாம்.

இப்பாடலில் வரும் 'வருந்துவர், வருந்துப' எனும் இரு சொற்களும் ஒரே பொருள் குறித்தாலும் '**வருந்துப**' என்பதனையே பொருத்தமானதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'வருந்துவர், வருந்துப' என்பனவற்றில் 'வருந்துப' எனும் சொல் காலப் பழைமையானதாகக் கருதத்தக்கது.

2. 'வருந்துவர்/வருந்துப' எனும் சொற்களுக்கு அடுத்து 'மாதவர்' என்ற சொல் குறிக்கப்பெற்றுள்ளது. மாதவர் என்பதில் உள்ள மகரம், பகரத்திற்கு இன எழுத்தாகும். இவ்வகையிலான இன எழுத்துத் தன்மைகள் கவிதைக்கு மெருகூட்டுவன என்பது மொழியியலார் கருத்து. இவ்வகையில் 'வருந்துப' என்பதே வந்திருக்க வாய்ப்புகள் அதிகம்.

**217:13 வற்சிரம் வந்தன் (பிற.)–அச்சிரம் வந்தன் (மயி.)**

பனிக்காலம் பற்றிக் குறிக்கும்,

"வற்சிரம் வந்தன் றமைந்தன் றிதுவென" (217:13)

எனும் அடியில் வரும் '**அற்சிரம்**' என்பது '**அச்சிரம்**' என மயிலம்வே. பதிப்பில் குறிக்கப்பெற்றுள்ளது. 'அற்சிரம், அச்சிரம்' எனும் இவ்விரு சொல்லுக்கும் பனிக்காலம் என்பதே பொருள் ஆகும். எனவே, இச்சொற்களைச் சங்கப்பாடல் பயன்பாட்டு அடிப்படையில் விளக்கலாம்.

சங்க இலக்கியத்தில் அற்சிரம் எனும் சொல் 23 இடங்களில் பதிவாகி உள்ளது. இது 'அற்சிர' (குறுந்.277,நற்.5,ஐங்.470,அகம்.294), 'அற்சிரம்' (குறுந்.68,76,82,338,நற்.5,86,312,ஐங்.223,464,அகம்.78,97,178,183, 205,217,273,317,339,378) எனும் இரு நிலைகளில் குறிக்கப்பெற்றுள்ளது. 'அச்சிரம்' என்பது ஓரிடத்தில் (பரி.18) மட்டும் குறிக்கப்பெற்றுள்ளது.

ஓரிடத்தில் மட்டும் பயன்படுத்தப்பெற்ற 'அச்சிரம்' எனும் சொல் எதுகைக்காகக் கையாளப்பெற்றிருக்குமோ என்று எண்ணத்தோன்றுகிறது. இதனை,

"அச்சிரக் கால்ஆர்த்து அணிமழை கோலின்றே
வச்சிரத் தான்வான் வில்லு" (பரி.18:38–39)

எனும் அடிகள்வழி அறியலாம். கீழடியில் 'வச்சிரம்' என்று வருவதால் மேலடியில் உள்ள அற்சிரம், அச்சிரமாக மாறியிருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. இப்பாடல் முழுவதும் எதுகை, மோனைத் தன்மை நிறைந்து காணப்பெறுவதும் இங்குக் குறிக்கத்தக்கது.

மேற்கண்ட விளக்கங்களின் வழி 'அற்சிரம், அச்சிரம்' எனும் இரு பாடங்களில் '***அற்சிரம்***' என்பதே பொருத்தமானது என்பதனை அறியலாம்.

***234:9 வல்விரைந் தூர்தி (ராஜ.)–வல்விரைந் தூர்மதி (பிற.)***

'வல்விரைந்து ஊர்தி' என்பதற்கு 'மிக விரைந்து செல்' என்பது பொருளாகும். '***வல்விரைந்து ஊர்மதி***' என்பதற்கு 'மிக விரைந்து செலுத்து' என்பது பொருளாகும். வினைமுடித்து மீண்ட தலைமகன் தன் தலைவியின் நிலைபற்றித் தேர்ப்பாகனிடம் கூறி, தேரைவிரைந்து செலுத்தச் சொல்லும் சூழலில் இப்பாடவேறுபாடுகள் காணப்பெறுகின்றன. சமகால இலக்கியங்களின் பயன்பாடும் ஒத்த தன்மையிலேயே காணப்பெறுகின்றன. 'ஊர்தி' என்பது 9 இடங்களிலும் (பதிற்.தி.1:6,பரி.3:60,கலி.13:16, அகம்.44:5, 360:2,புறம்.1:3,56:8,305:2,399:32) ஊர்மதி இப்பாடல் தவிர்த்து 4 இடங்களிலும் (ஐங்.481:3,486:4,அகம்.154:13,244:13) பயின்று வந்துள்ளன. இவற்றுள் அகநானூற்றைப் பொறுத்தவரையில் ஊர்தி, ஊர்மதி இவையிரண்டும் இரண்டிரண்டு இடங்களில் பயின்று வந்துள்ளன. இதன்வழி யாப்பியல் நிலையில் இதனை விளக்க முற்படலாம்.

விரைந்து செல், விரைந்து செலுத்து எனும் இரு பொருண்மைகளும் இவ்விடத்தில் பொருந்தக்கூடியன என்றாலும் யாப்பியல் நிலையில் வேறுபட்டு அமைகின்றன.

| நே நி | நே நே | நே நி | நி நே |
|---|---|---|---|
| வல்/விரைந் | தூர்/தி | நல்/வலம் | பெறு/ந |

(தூர்/தி – நல்/வலம்) → நேரொன்றாசிரியத்தளை




'ஊர்தி' எனும் பாடத்தைக் கொள்ளும்போது நேரொன்றாசிரியத் தளையும் 'ஊர்மதி' எனும் பாடத்தைக் கொள்ளும்போது இயற்சீர் வெண்டளையும் பயின்று வருகின்றன. இது ஆசிரியப்பாவாதலின் நேரொன்றாசிரியத்தளை வரும் '***வல்விரைந் தூர்தி***' எனும் பாடத்தையே பொருத்தமானதாகக் குறிப்பிடலாம்.

***234:17 ஞொலியற் கூந்த (ராஜ.)–ஒலிபல் கூந்தல் (பிற.)***

'***ஒலிபல் கூந்தல்***' என்பதற்கு 'தழைத்த கூந்தல்' என்று பொருள் கூறப்பெற்றுள்ளது. '***ஒலியற் கூந்தல்***' என்பதற்கு எவ்விதப்பொருளும் காண இயலவில்லை. எனவே, தலைவியின் நிலைபற்றிய இவ்விரு பாடங்களில் '***ஒலிபல் கூந்தல்***' எனும் பாடமே சரியானது எனலாம். ஒலியற் கூந்தலை எழுத்துப் பிழையிலான பாடம் என்று குறிக்கலாம்.

***257:18 துன்புறு தகுந (பிற.)–துன்புறு தகுவன (சமா.,மர்ரே.)***

'***துன்புறு தகுந, துன்புறு தகுவன***' எனும் இரு பாடங்களுக்கும் 'துன்பம் வரத்தகுவன' என்பதே பொருள் ஆகும். இவ்விரு பாட வேறுபாடுகளுக்கும் இடையில் எவ்விதப் பொருள் மாற்றமுமின்றிக் காணப்பெறுவதால் இப்பாட வேறுபாடு வந்துள்ள அடியை, யாப்பியல் நிலையைக் கருத்தில் கொண்டு விளக்கலாம்.






'தகுந' எனும் பாடத்தைக் கொள்ளும்போது ஆசிரியப்பாவிற்குரிய நேரொன்றாசிரியத்தளையும் 'தகுவன' என்பதனைப் பாடமாகக் கொள்ளும் போது வெண்பாவிற்குரிய இயற்சீர் வெண்டளையும் வருவதால் '***துன்புறு தகுந***' எனும் பாடத்தையே பொருத்தமானது என்று குறிப்பிடலாம்.

***266:4 நரந்தை (ராஜ.)–நரந்தம் (பிற.)***

'நரந்தம் புல் நாறுகின்ற திரண்ட கரிய காந்தளையுடைய தலைவி' எனும் பொருள் குறிக்க,

"நரந்தை நாறு குவையிருங் கூந்த" *(266:4)*

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியிலுள்ள '***நரந்தை***' என்பதற்கு '***நரந்தம்***' எனும் பாடத்தை ராஜகோபாலார்யன் பதிப்புகள் தவிர்ந்த பிற பதிப்புகள் குறித்துள்ளன. இவ்விரு பாடங்களுக்கும் 'நரந்தம் புல்' எனும் பொருளே குறிக்கப்பெற்றுள்ளது.

இவற்றுள் நரந்தம் புல்லைக் குறிக்க 'நாரத்தம் புல்' *(1984:878)*என்ற சொல் நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதியில் குறிக்கப்பெற்றுள்ளது. எனவே 'நரந்தம்' எனும் பாடத்தையே பொருத்தமானதாகக் குறிப்பிடலாம்.

***272:5 சென்னெறி விளக்க (பிற.)–சென்னெறி விளக்கத்து (சமா.)***

இரவுக்குறி வரும் தலைவனுக்கு அவன் வைத்திருக்கும் வாள் அவன் செல்லும் பாதையில் வழிகாட்டக்கூடிய விளக்காக அமைந்தது என்பதனை விளக்கப் பின்வரும் அடிகள் பயின்று வந்துள்ளன. அவ்வடிகள் வருமாறு:

"யருவி தந்த வணங்குடை நெடுங்கோட்டு
வஞ்சுவரு விடர்முகை யாரிருள் ளகற்றிய
மின்னொளி ரெஃகஞ் சென்னெறி விளக்கத்
தனியன் வந்து" *(272:3–6)*

இவ்வடிகளில் வரும் '***சென்னெறி விளக்க***' எனும் பாடத்திற்குச் சமாஜப் பதிப்பில் '***சென்னெறி விளக்கத்து***' என்று பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. 'மின்னும் ஒளிமிக்க வாள் அவள் செல்லும் வழியினை விளக்கத்

தலைவன் தனியனாய் வந்தான்' எனும் தொடர்ச்சியினையுடைய பொருளைச் 'சென்னெறி விளக்க' எனும் பாடம் குறிக்கிறது. 'மின்னுகின்ற வாளைச் செல்லுகின்ற வழியின் விளக்காகக் கொண்டு தலைவன் தனியனாய் வந்தான்' எனும் பொருளை 'செல்நெறி விளக்கத்து' எனும் பாடம் தருகிறது.

இவ்விரு பொருண்மைகளில் 'வாள் வழியை விளக்கியது' எனும் பொருண்மையே பொருத்தமாக அமைகிறது. எனவே, '***செல்நெறி விளக்க***' எனும் பாடமே பொருத்தமாக அமைகிறது எனலாம்.

***273:5 நலியவு நந்துயர் (பிற.)–நலியு நந்துயர் (மயி.)***

பிரிவின்கண் வருந்தும் தலைவி,

"நலங்கவர் பசலை நலியவும் நந்துய
ரறியார் கொல்லோ" (273:5–6)

என்று குறிப்பிடுகிறாள். இவ்வடிகளில் வரும் '***நலியவும் நந்துயர்***' என்பதற்குப் பதில் '***நலியு நந்துயர்***' எனும் பாடம் மயிலம்வே.பதிப்பில் காணப்பெறுகிறது.

இதற்குமுன் குருகின் செயல்பற்றிக் குறிக்கும் தலைவி 'பசலை நம்மை வருத்த அதனைத் தலைவன் அறியாதிருக்கின்றான்' என்று உரைக்கிறாள். பசலை வருந்தும் ஒருநிலை மட்டுமே இங்குக் குறிக்கப்பெறுகிறது. 'நலியவும்' எனும் உம்மைத் தொகை வரும் பாடம் ஒன்றிற்கு மேற்பட்ட பொருண்மையுடன் தொடர்புடையதாக வரும். இங்கு 'பசலை வருத்துதல்' எனும் ஒருநிலை மட்டுமே விளக்கப்பெற்றுள்ளதால் '***நலியு நந்துயர்***' என்ற பாடமே பொருத்தமானது எனலாம்.

***290:7 வாங்கட் பெண்ணை (ராஜ.)–அம்கண் பெண்ணை (பிற.)***

கொக்கின் பெட்டை, 'தன் சேவல் சிறுவர்களின் வலையில் பட்டதை எண்ணி உணவினை உண்ணாது அங்குள்ள பனைமரத்தின் மீதிருந்து அன்புதோன்ற ஒலிக்கும்' எனும் கருத்தின் இறுதியில்,

"வாங்கட் பெண்ணை யன்புற நரலுந்" (290:7)

எனும் அடி பயின்று வந்துள்ளது.

ஆங்கண் பெண்ணை என்பதற்கு 'அங்குள்ள பனைமரம்' என்பது பொருளாகும். அம்கண் பெண்ணை என்பதற்கு "அழகிய இடத்தையுடைய பனை மரத்தின் கண்"[28] என்று அகநானூற்று உரைகள் குறிக்கின்றன. பனைமரம் அழகிய இடத்தில் தான் இருக்க வேண்டும் என்பதில்லை. எனவே, அங்குள்ள பனைமரம் என்று குறிப்பதே பொருத்தமானதாகவும் இயல்பானதாகவும் அமைகிறது. எனவே, '***ஆங்கட் பெண்ணை***' எனும் பாடத்தையே சரியானதாகக் குறிக்கலாம்.

**293:8 யுகாஅமென்சினை (பிற.)–உகாஅய் மென்சினை (மர்ரே.)**

'குயிலின் கண்போல் விளங்கும் அழகிய பொற்காசு போன்ற நிறமுடைய பெரிய கனி உகாவின் மெல்லிய கிளைகளிலிருந்து உதிர்ந்து ஒழியும்' எனும் கருத்தினை விளக்க,

"யுகாஅ மென்சினை உதிர்வன கழியும்" (293:8)

எனும் அடி குறிக்கப்பெற்றுள்ளது. இதில் வரும் '***உகாஅ மென்சினை***' என்பதற்கு மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பில் '***உகாஅய் மென்சினை***' என்று பாடம் குறிக்கப்பெற்றுள்ளது.

இப்பாடலுக்கான விளக்கவுரையில் ந.மு.வேங்கடசாமி நாட்டார் கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை ஆகியோர், "உகா–பாலைக் கண்ணுள்ளதோர் மரம்; இது உகாய் எனவும் வழங்கும்"[29] என்று குறிக்கின்றனர். உகா, உகாஅய் எனும் இரு பெயர்களும் ஒரே மரத்திற்குரியன என்பதனை மேற்கண்ட கருத்துவழி அறியமுடிகிறது. எனவே, இவ்விரு பாடங்களில் எப்பாடத்தைக் கொண்டாலும் தவறில்லை. இருப்பினும் காலப்பழைமையைக் கருத்தில் கொண்டு '***உகாமென்சினை***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

**295:17 தேஎய மிறந்தனர் (ராஜ.)–தேஎம் இறந்தனர் (பிற.)**

"மொழிபெயர் தேஎய மிறந்தன ராயினும்" (295:17)

எனும் அடிக்கு, 'வேற்றுமொழி வழங்கும் தேயத்தைக் கடந்து சென்றுளாராயினும்'[30] எனும் உரைக்கருத்துக் காணப்பெறுகிறது.

'தேஎய மிறந்தனர்' எனும் பாடம் பிற்காலத்தில் சந்திப்பிரிப்புக்

காரணமாக 'தேஎம் இறந்தனர்' என்று பயன்படுத்தப்பெற்றிருக்கலாம். எனவே, இவ்விரு பாடல்களில் எப்பாடத்தைக் கொண்டாலும் தவறில்லை. இருப்பினும் காலப்பழைமையைக் கருத்தில் கொண்டு '***தேஎய மிறந்தனர்*** எனும் பாடத்தைக் கையாள்வது பொருத்தமானது எனலாம்.

***301:1 வறனுறு செய்தியின் (பிற.)–வறனுறு செய்யின் (மு.காசி.)***

"வறனுறு செய்தியின் வாடுபு வருந்தி" *(301:1)*

அகநானூற்றுப் பதிப்புகளில் நித்திலக்கோவைக்கான இரு உரைகளிலும் இவ்வடிக்கு 'வறண்ட காலத்தில் நீர்வற்றி வரண்டிருக்கும் நிலம்போல' எனும் பொருள் குறிக்கப்பெற்றுள்ளது.

'செய்' என்பது வயலைக் குறிக்கும். இப்பாடல் சூழலில் வயலானது வளமையின்றிக் குறிக்கப்பெற்றுள்ளதால் '***வறனுறு செய்யின்***' எனும் பாடமே பொருத்தமானதாகும். தலைவனை நினைத்து வருந்தும் தலைவிக்கு வறண்ட வயல் உவமையாயிற்று எனக்கூறுதல் பொருத்தமானது.

***311:12 செலவருஞ் (ராஜ.)–செல்லருஞ் (பிற.)***

"புல்லி நன்னாட் டும்பர்ச் செலவருஞ்
சுரமிறந் தேகினும்" *(311:12–13)*

என்று '***செலவரும்***' என்று பாடம் கொண்ட ராஜகோபாலார்யன் பதிப்பில் இப்பாடத்திற்கான உரைக்குறிப்பு இல்லை. '***செல்லருஞ்***' என்று பாடம் கொண்ட பதிப்புகளில் மு.காசி.பதிப்பு, மயிலம்வே.பதிப்பு ஆகியனவற்றில் உரைகள் உள்ளன.

'செலவருந் சுரம், செல்லருஞ் சுரம்' எனும் இரண்டு பாடங்களுக்கும் 'கடத்தற்கரிய வழி' என்பதே பொருள். அப்பொருளையே உரையுள்ள இரண்டு பதிப்புகளும் குறித்துள்ளன. எனவே, இவ்விரு பாடங்களில் பொருத்தமானதைக் கண்டறிய யாப்பியல் நிலை கருத்தில் கொள்ளப்படுகிறது.

| நே நே | நே நே | நே நே | நி நி |
|---|---|---|---|
| புல்/லி | நன்/னாட் | டும்/பர்ச் | செல/வருஞ் |

(டும்/பர்ச் – செல/வருஞ் → வெண்சீர்வெண்டளை)

நே நே  நே நே  நே நே  நே நி

புல்/லி நன்/னாட் டும்/பார்ச் செல்/லருஞ்

நேறொன்றாசிரியத்தளை

மேற்கண்ட கருத்துகள் வழி 'செலவருஞ், செல்லருஞ்' என்பனவற்றில் '***செல்லருஞ்***' எனும் பாடமே பொருத்தமானது என்று குறிப்பிடலாம்.

***313:3 சென்றவாறு நினைத்தலுங் (ராஜ.,மயி.)–சென்றவாறு நினைந்தல்கலும் (பிற.)***

தலைவனைப் பிரிந்து வாடும்தலைவியின் நிலையை விளக்கும் இப்பாடலில்,

"பிணித்தோர் சென்ற வாறு நினைத்தலுங்" *(313:3)*

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் '***நினைத்தலும்***' என்னும் பாடம் சமாஜப் பதிப்பு, மு.காசி.பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் '***நினைந்தல்கலும்***' என்று குறிக்கப்பெற்றுள்ளது.

சென்றவாறு நினைத்தல் என்பது 'தலைவன் சென்ற வழியை நினைத்தலைக்' குறிக்கும். 'செல்றவாறு நினைந்தல்கல்' என்பது 'தலைவன் சென்ற வழியை நினைத்து வருந்துதலைக் குறிக்கும்.' தலைவன் செல்லும் கொடிய வழியால் தலைவனுக்குத் துன்பங்கள் ஏற்பட வாய்ப்புண்டு என்பதனை நினைத்துத் தலைவி வருந்துவதைப் பாலைத்திணைப் பாடல்களின் மூலம் அறியலாம். எனவே, தலைவி, 'தலைவன் சென்ற வழியை நினைத்தாள்' என்பதைவிட, 'தலைவன் சென்ற வழியை நினைத்து வருந்தினாள்' என்பதையே பொருத்தமுடையதாகக் கருதி '***சென்றவாறு நினைந்தல்கலும்***' எனும் பாடத்தைச் சரியானதாகக் குறிக்கலாம்.

***314:12 பையு ணல்லியாழ் (ராஜ.)–பையுள் நல்யாழ் (பிற.)***

"பையு ணல்லியாழ் செவ்வழி பிறப்ப" *(314:12)*

நல்யாழ் என்பதைச் சேர்த்து எழுதும்போது 'ணல்லியாழ்' என்று வந்துள்ளது. இவ்விரு பாடங்களும் இங்குப் பொருந்தக்கூடியது. இருப்பினும் தற்கால நிலைக்குத்தக '***பையுள் நல்யாழ்***' என்ற பாடத்தை ஏற்புடையதாகக் கருதலாம்.

***319:7 நுணங்கிய நுசும்பி (ராஜ.)-நுணங்கிய நுசுப்பின் (பிற.)***

"நுணங்கிய நுசும்பி நுண்கேழ் மாமை" *(319:7)*

எனும் இவ்வடியில் வரும் ***'நுசும்பி'*** என்பதற்கு, ராஜகோபாலார்யன் பதிப்புகள் தவிர்ந்த பிற பதிப்புகளில் ***'நுசுப்பி'*** என்று பாடம் குறிக்கப் பெற்றுள்ளது.

மேற்கண்ட இருபாடங்களில் 'நுசும்பு' என்பதற்கு எவ்விதப் பொருளையும் அறிய இயலவில்லை. 'நுசுப்பு' என்பதற்கு 'இடை' *(1984:906)* எனும் பொருளை நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி குறிக்கிறது.

'கொடுமையான வழியில் சென்ற தலைவனை எண்ணி வருந்தும் தலைவி மாமை நோயால் துன்புற்று இடைமெலிந்த நிலை' இப்பாடலில் குறிக்கப்பெற்றுள்ளது. தலைவியின் வருத்தம், உடல் மெலிவு ஆகியன பற்றி இப்பாடல் குறிப்பதால் ***'நுசுப்பின்'*** என்ற பாடத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

***324:11 வண்டு ணறுவி (பிற.)-வண்டுண் நறுவீ (மு.காசி.,மர்ரே.)***

'வண்டுகள் தேன் உண்ணும் நறிய பூக்கள்' எனும் பொருள் தருகின்ற இவ்விருபாடங்களுக்கும் எவ்வித மாற்றுக் கருத்தும் இல்லை. ***'வண்டு உண் நறுவீ'*** என்பதனைச் சேர்த்து எழுதும்போது ***'வண்டு ணறுவீ'*** என்றாகிறது. மற்ற நிலையில் எவ்விதப் பொருள் மாறுபாடும் இல்லை. இருப்பினும் தற்கால நிலையினைக் கருத்தில் கொள்ளும்போது ***'வண்டுண் நறுவீ'*** என்று பாடம் குறிப்பதே பொருத்தமானதாக அமையும் எனலாம்.

***325:6 திவணுறை வெவனோ (பிற.)-இவணுறைபு எவனோ (சமா.,மர்ரே.)***

"இவணுறை வெவனோ யளியளென் றருளி" *(325:6)*

எனும் அடியில் வரும் ***'இவணுறை வெவனோ'*** எனும் பாடம் சமாஜப் பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் ***'இவணுறைபு எவனோ'*** என்று குறிக்கப்பெற்றுள்ளது.

'கொண்டு நீங்கக் கருதிய தலைவன்; நம்மை இங்கு விட்டுவிட்டுச் சென்றுவிட்டான்; இங்கு எவ்வாறு இருப்பது' என்று வருந்தும் தலைவியின் நிலைபற்றி விளக்கவரும் மேற்கண்ட இரு பாடங்களும் ஒரே பொருள் குறிப்பன ஆகும். இவற்றுள் பொருண்மை அடிப்படையில் சரியானதைத் தேர்ந்தெடுக்க இயலவில்லை. காலப்பழைமையைக் கருத்தில் கொண்டு '***இவணுறை வெவனோ***' எனும் பாடத்தைப் பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

***325:12 டலையுக (பிற.)–தலைஇயிய (மு.காசி.)***

வறண்ட பாலைநிலத்தில் ஒருநாள் மழை பெய்யும் எனும் குறிப்புடைய,

"டண்மழை யொருநாட் டலையுக வொண்ணுத" *(325:12)*

எனும் அடியில் உள்ள '***தலையுக***' எனும் பாடம் மு.காசி.பதிப்பில் '***தலைஇயிய***' என்று குறிக்கப்பெற்றுள்ளது. ஒருநாள் மழை பெய்வதாக என்பதைக் குறிக்கவே, யொருநாட் டலையுக, 'ஒருநாள் தலைஇயிய' எனும் இரு பாடங்களும் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

இவ்விரு பாடங்களும் குறிக்கும் பொருண்மை ஒன்று என்றாலும் 'தலைஇயிய' எனும் பாடம் சங்க இலக்கியத்தில் 26 இடங்களில் *(குறுந்.35,222,நற்.17,205,261,268,346,347,ஐங்.418,437,பதிற்.15,31,பரி.2, கல.53,அகம்.8,38,68,132,163,194,337,392,புறம்.2,119,திரு.9,மலை.1)* பயன்படுத்தப்பெற்றுள்ளது. 'தலையுக' எனும் பாடம் இப்பாடலில் மட்டுமே குறிக்கப்பெற்றுள்ளது. இப்பாடமும் பிற பதிப்புகளில் 'தலைஇயிய' என்றே காணப்பெறுகிறது.

மேற்கண்ட சமகால இலக்கியப் பயன்பாட்டுச் சூழல் அடிப்படையில் '***தலைஇயிய***' எனும் பாடத்தையே சரியானது எனக் குறிப்பிடலாம்.

***327:4 யாயினோரும் (ராஜ., மயி.)–யாயின் ஒரூஉம் (பிற.)***

பொருள் தேடி முனைந்து தன் நெஞ்சிற்குக் கூறும் தலைமகன், 'இவளை நீங்கிச் செல்லும் இன்னாமையையுடைய கொடிய சுர நெறி' என்று கூறி வருந்தும் நிலைபற்றி விளக்க,

"துளவென உணர்ந்தனை யாயி னோரும்" *(327:4)*

எனும் அடி பயன்படுத்தப்பெற்றுள்ளது. இவ்வடியில் வரும் '***யாயினோரும்***' எனும் பாடத்திற்குப் பதில் சமாஜப் பதிப்பு, மு.காசி.பதிப்பு, மர்ரே எஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் '***யாயின் ஒரூஉம்***' எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது.

'ஓரும், ஒரூஉம்' எனும் இரு பாடங்களுக்கும் 'நீங்கிச் செல்லும்' என்பதே பொருளாகும். இவற்றுள் சங்க இலக்கியத்தில் ஓரும் என்பது 10 இடங்களிலும் (குறுந்.246,நற்.127,183,பரி.19,கலி.44,49,98, அகம்.12,310, புறம்.86) ஒரூஉம் என்பது இப்பாடல் தவிர்ந்து இரண்டு இடங்களிலும் (கலி.114,அகம்.71) பயின்று வந்துள்ளன. இவற்றுள் பயன்பாட்டுப் பெரும்பான்மை அடிப்படையில் 'ஓரும்' என்பதையே பொருத்தமானதாகக் கருதி, '***யாயினோரும்***' என்ற பாடத்தையே சரியானது என்று குறிக்கலாம்.

**331:7 மறுகுதொறு மறுகுஞ் (பிற.)–மறுகுதொறு மறுகுமஞ் (மு.காசி.)**

'மறுகுதொரு மறுகும்' எனும் பாடம் குறிக்கும் ராஜகோபாலார்யன் பதிப்புகள், சமாஜம் பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு, மயிலம்வே.பதிப்பு ஆகியனவற்றுள் மயிலம்வே.பதிப்பில் மட்டும் உரை காணப்பெறுகிறது.

கரடிகளின் கூட்டம் பற்றிக் குறிப்பிடும் இப்பாடலடி 'குன்றின் கண்ணாகிய சீறூரின்கண் தெருக்கள் தோறும் சுழன்று விற்றுத்திரியும் அழகிய சிறிய ஊர்களையுடைய' எனும் குறிப்பைத் தருகிறது. மயிலம்வே.பதிப்பிலும் இவ்வுரைக்கருத்தே காணப்பெறுகிறது. எனவே, அழகிய சிறிய ஊர்களைக் கொண்ட எனும் பொருள்தரும் '***மறுகுதொறு மருகுமஞ்சீறூர்*** எனும் பாடத்தையே சரியானது எனலாம்.

**336:8 பாடிய வீழிணர்க் (ராஜ.மயி.)–பாடி யவிழிணர்க் (பிற.)**

தலைவனின் பரத்தமை ஒழுக்கம் குறித்து மருத நிலப்பெண்கள் காஞ்சிமர நிழலில் குரவையாடும் நிலையை விளக்கும் இப்பாடலில்,

> "மகிழ்நன் பரத்தைமை பாடிய வீழிணர்க்
> காஞ்சி நீழற் குரவை யாடும்" *(336:3–9)*

எனும் அடிகள் காணப்பெறுகின்றன. இவ்வடிகளில் வரும் ***'பாடிய வீழிணர்'*** என்பதற்கு சமாஜப் பதிப்பு, மு.காசி.பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியன ***'பாடி யவிழிணர்'*** என்று பாடம் குறிக்கின்றன.

பரத்தைமை பாடி யவிழிணர் காஞ்சி என்பதற்கு, 'பரத்தமைகளைப் பாடி விரிந்த பூங்கொத்துகளை யுடைய காஞ்சி'[31] என்று ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம்பிள்ளை ஆகியோர் உரை எழுதுகின்றனர்.

'பாடிய வீழிணர்' என்று பாடம் கொள்ளும் பதிப்புகளில் உரை காணப்பெறும் பதிப்பான மயிலம்வே.பதிப்பிலும் 'பாடி யவிழிணர்' என்பதற்குரிய உரையே குறிக்கப்பெற்றுள்ளது. 'பாடிய வீழிணர்' என்பதற்கான எக்கருத்தும் காணப்பெறவில்லை. எனவே, ***'பாடி யவிழிணர்'*** எனும் பாடத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

***348:4 பயிர்புறப் பலவி னெதிர்ச்சுளை (பிற.)–பயிர்ப்புறு பலவின் எதிர்ச்சுளை (மு.காசி.)***

தலைவனின் நாட்டுவளம் பற்றிக் கூறவரும் புலவன்,

"கோடைக் கூழ்த்த கமழ்நறுந் தீங்கனி
பயிர்ப்புறப் பலவி னெதிர்ச்சுளை யளைஇ" *(348:4)*

என்று குறிப்பிடுகிறான்.

இதில் வரும் ***'பயிர்புறப் பலவின்'*** எனும் பாடத்திற்கு "பிசினையற்ற பலவினது" என்று பொருள் கூறப்பெற்றுள்ளது. ***'பயிர்ப்புறு'*** என்பதற்கும் அப்பொருளே குறிக்கப்பெற்றுள்ளது.

பயிர்ப்புறு என்பதற்கு ***'பிசினையுறும்'*** என்பதே பொருத்தமானதாக அமையும். பயிர்ப்பு என்பதற்கே 'பிசின்' எனும் பொருள் பொருந்தும். எனவே, ***'பயிர்ப்புறப் பலவின்'*** எனும் பாடத்தையே பொருத்தமானதாகக் குறிப்பிடலாம்.

***350:4 யலவ நிவப்ப (பிற.)–யலவன் நீப்ப (சமா.,மர்ரே.)***

நண்டு மேலே வெளிப்படுகிறது எனும் கருத்தினை விளக்கும்,

"இருஞ்சேற் றீரளை யலவ நிவப்ப" (350:4)

எனும் அடியில் வரும் '***யலவ நிவப்ப***' எனும் பாடம் '***யலவன் நீப்ப***' என்று சமாஜப் பதிப்பிலும் மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பிலும் குறிக்கப்பெற்றுள்ளது.

இவற்றுள் நிவப்ப என்பதனைக் குறிக்கும் நிவப்பு என்பதற்கு நா.கதிரைவேற் பிள்ளையின் தமிழ்மொழி அகராதி "உயர்ச்சி, எழுச்சி"[32] என்று பொருள் தருகிறது. நீப்ப என்பதனைக் குறிக்கும் நீப்பு என்பதற்கு, "துறவு, பிரிவு"[33] என்று பொருள் குறிக்கிறது. நண்டு வெளியில் வருகிறது என்பதற்கு 'உயர்ச்சி, எழுச்சி' எனும் இரண்டையும் குறிக்கலாம். அதேவேளை துறவு, பிரிவு என்பனவற்றில் எதுவும் பொருந்தவில்லை. எனவே, '***அலவன் நிவப்ப***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

***352:11 நல்லை காணிற் (பிற.)–நல்லை காண்இனி (மர்ரே.)***

தலைவி, தோழியைப் பற்றிக் கூறும்போது,

"நல்லை காணிற் காதலந் தோழீஇ" (352:11)

என்று குறிக்கிறாள். இவ்வடியில் வரும் '***நல்லை காணில்***' எனும் பாடம் மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பில் '***நல்லை காண்இனி***' என்று மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது.

'நல்லை காணில்' எனும்பாடத்திற்கு ந.மு.வே.,கரந்தை. ஆகியோர்,

"ஆராயுமிடத்து நீ மிகவும் நன்மையையுடையை"[34]

என்று உரை கூறுகின்றனர். உரைக்கருத்தில்லாத மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பின் 'நல்லை காண்இனி' எனும் பாடத்திற்கு, 'மிகவும் நன்மையையுடையவளே இனி நான் சொல்வதைக் கேள்' என்று பொருள் குறிக்கலாம். இவ்விருவகைப்பட்ட கருத்துகளும் இப்பாடல் சூழலுக்குப் பொருந்துகின்றன. இருப்பினும் காலப்பழைமை, பெரும்பான்மை இவற்றின் அடிப்படையில் '***நல்லை காணில்***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

**359:8 யசைஇக் கோடியர் (ராஜ.,மயி.)–அசைஇய கோடியர் (பிற.)**

கோடியர் என்பது கூத்தரைக் குறிக்கும். ‘***அசைஇய***’ என்பதற்குத் தங்கிய என்பது பொருளாகும். ‘***அசைஇ***’ என்பதற்குத் தங்கி என்பதனைப் பொருளாகக் குறிக்கலாம்.

“அருஞ்சுரக் கவலை யசைஇக் கோடியர்” (359:8)

எனும் அடிக்கு ‘சுரநெறியில் கூத்தர் தங்கினர்’ என்று பொருள் குறிப்பதே பொருத்தமாகும். எனவே, ‘***அசைஇய கோடியர்***’ எனும் பாடத்தையே சரியானதாகக் குறிப்பிடலாம்.

**364:6 புதறலைக் கொள்ள (ராஜ.)–புதல்தலைக் கொளாஅ (பிற.)**

“சுடர்புரை தோன்றிப் புதறலைக் கொள்ள” (364:4))

எனும் இவ்வடியிலுள்ள ‘***கொள்ள***’ என்பதற்கு ராஜகோபாலார்யன் பதிப்புகள் தவிர்ந்த பிற அனைத்துப் பதிப்புகளிலும் ‘***கொளாஅ***’ என்று பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. மேற்கண்ட அடிக்கு,

“தோன்றிச் செடி விளக்குப் போன்ற பூக்களைத் தன்னிடத்தே கொள்ள”[35]

என்று உரையாசிரியர்கள் பொருள் உரைக்கின்றனர்.

‘புதறலைக் கொளாஅ’ எனும் பாடத்தைக் குறிக்கும் மு.காசி. பதிப்பில் உள்ள உரையே மேலே குறிக்கப்பெற்றதாகும். இவ்வுரை ‘புதறலைக் கொள்ள’ எனும் பாடத்திற்கானதாகவே அமைகிறது. எனவே, ‘***புதறலைக் கொள்ள***’ எனும் பாடத்தையே பொருத்தமானது எனலாம்.

**366:16 மணங்கி னாளே (ராஜ.)–அணங்கன் னாளே (பிற.)**

“கலுழ்ந்த கண்ணளெ மணங்கி னாளே” (366:16)

எனும் அடியில் வரும் ‘***அணங்கினாளே***’ என்பதற்கு ராஜகோபாலார்யன் பதிப்புகள் தவிர்ந்த பிறவற்றில் ‘***அணங்கன் னாளே***’ என்று பாடம் குறிக்கப் பெற்றுள்ளது.

‘அணங்கினாள்’ என்பதற்குப் ‘பொருந்தினாள்’ என்பதும் ‘அணங்கன்னாள்’ என்பதற்குத் ‘தெய்வம் போன்றவள்’ என்பதும்

பொருண்மைகளாகின்றன. தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைக் கண்டு தலைவி வருந்தினாள் / கலங்கினாள்' என்பதனைக் குறிக்கவே மேற்கண்ட பாடங்கள் கையாளப்பெற்றுள்ளன. இங்கு, 'கண்கள் நீர்வடியப் பொருந்தினாள்' என்பதைவிட, 'தெய்வம் போன்றவள் வருந்தினாள்' என்ற கருத்தே பொருத்தமாக அமைகிறது. ஆகையால் '***அணங்கன் னாளே***' என்ற பாடமே பொருத்தமானது என்று குறிப்பிடலாம்.

***369:16 சுவர்முத (ராஜ.)–கவர்முதல் (பிற.)***

"தமர்மணன் அயரவும் ஒல்லான் சுவர்முத
லோமை நீடிய உலவை" *(369:16–17)*

எனும் இவ்வடிகளுக்கு,

"தன் தமராவார் மணம் செய்விக்கவும் மனம் பொருந்தாதவளாகி, கவர்ந்த அடியினையுடைய ஓமை மரங்கள் உயர்ந்துள்ள காடாகிய நீண்ட இடம்"[36]

என்பது பொருளாக அமைகிறது.

'கவர்ந்த அடியினையுடைய ஓமை மரங்கள்' என்பதால் '***கவர்முதல்***' எனும் பாடமே பொருத்தமானது என்று குறிக்கலாம். சுவர்முதல் என்பது அச்சுப்பிழையாக இருக்கலாம்.

***371:8 தேகுறு மாந்தரி (ராஜ.,மயி.)–எஃகுறு மாந்தரின் (பிற.)***

பாலை நிலத்தின் தன்மை பற்றிக் குறிக்கும் போது,

"அம்பு தைக்கப்பெற்ற மக்களைப்போல வருந்திக் கண்ணயர்ந்து கிடக்கும் பசுமையறக் கொதித்த பாழ்பட்ட சுரநெறி"[37]

எனும் பொருள் குறிக்க,

"தேகுறு மாந்திரி னினைந்துகண் படுக்கு
பைதற வெம்பிய" *(371:8–9)*

எனும் அடிகள் பயன்படுத்தப்பெற்றுள்ளன. இவ்வடியில் உள்ள '***ஏகுறு மாந்தரின்***' என்பதற்குச் சமாஜப் பதிப்பு, மு.காசி.பதிப்பு, மர்ரே எஸ்.இராஜம்

பதிப்பு ஆகியனவற்றில் ***‘எஃகுறு மாந்தரின்’*** என்று பொருள் குறிக்கப்பெற்றுள்ளது.

‘ஏகுறு மாந்தரின்’ எனும் பாடம் குறித்திருக்கும் பதிப்புகளில் மயிலம்வே.பதிப்பில் காணப்பெறும் பொழிப்புரையும் மேற்கண்ட உரைக்குறிப்பையே குறிப்பிடுகிறது.

‘ஏகுறு மாந்தரின்’ என்பதற்கு, ‘போகும் மாந்தரின்’ என்று பொருள் குறிக்கலாம். இது பாலை நிலத்தில் செல்வோர் தண்ணீர் பருகாது சென்றனர் எனும் பொருளைத் தருகிறது. இவ்விரு பொருண்மைகளில் ‘அம்புதைத்தல்’ என்பதைவிட, ‘தண்ணீர் இன்றிச் செல்லுதல்’ என்பது இயல்பானதாக அமைகிறது. எனவே, மேற்கண்ட இரு பாடங்களில் ***‘ஏகுறு மாந்தரின்’*** எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

***375:18 ஞாழன் மன்னோ (ராஜ.)–ஆழல மன்னோ (பிற.)***

பிரிவினால் வேறுபட்ட தலைவி, தோழியிடம் தன் நிலைபற்றிக் கூறுகிறாள். அப்போது,

“ஞாழன் மன்னோ தோழியென் கண்ணே” *(375:18)*

எனும் அடி வருகிறது. இவ்வடியில் உள்ள ***‘ஆழன் மன்னோ’*** எனும் பாடம் ராஜகோபாலார்யன் பதிப்புகளில் மட்டும் காணப்பெறுகிறது. பிறபதிப்புகளில் ***‘ஆழல மன்னோ’*** என்ற பாடமே குறிக்கப்பெற்றுள்ளது. ‘என் கண்கள் அழமாட்டாது’ என்பதனைக் குறிக்கவே ஆழன் மன்னோ, ‘ஆழல மன்னோ’ எனும் பாடங்கள் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

‘ஆழன் மன்னோ’ என்பதற்கு எவ்விதப் பொருளும் இல்லாததாலும் கண்கள் அழுதல், கலங்குதல் என்று இப்பாடலின் சூழல் வருவதாலும் ‘ஆழல மன்னோ’ எனும் பாடமே பொருத்தமானதாகும்.

***379:7 போர்துறை யின்றி (ராஜ.)–பொதுமையின்றி (பிற.)***

பொதுமை என்பதற்குப் ‘பொதுவாக, பொதுப்பட’ என்பன பொருண்மைகளாகும்.

"விரிதிரை முந்நீர் மண்டிணி கிடக்கைப்
பரிதியஞ் செல்வம் போர்துறை யின்றி" (379:6-7)

எனும் இவ்வடிகளுக்கு,

"விரிந்த அலைகளையுடைய கடல் சூழ்ந்த மண் திணிந்த
இவ்வுலக முழுவதும் பிறர்க்குப் பொது இல்லையாக"[38]

என்று பொருள் குறிக்கப்பெற்றுள்ளது.

'பொது இல்லையாக' எனும் பொருளைக் குறிக்கும் 'போர்துறையின்றி, பொதுமையின்றி' எனும் இரு பாடங்களில் '***பொதுமையின்றி*** என்ற பாடமே பொருத்தமானது எனலாம்.

***387:10 வரிப்புற வீதலின் (ராஜ.)–வரிப்புற இதலின் (பிற.)***

'புறத்தே வரிகளையுடைய நீலமணி போன்ற கண்கொண்ட எனும் பொருளைக் குறிக்க,'

"வரிப்புற வீதலின் மணுக்கட் பேடை" (387:10)

எனும் அடி குறிக்கப்பெற்றுள்ளது. இவ்வடியில் வரும் '***இதல்***' என்பதற்கு '***ஈதல்***' என்று ராஜகோபாலார்யன் பதிப்புகள் தவிர்ந்த பிற பதிப்புகளில் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது.

'இதல்' என்பதற்கு, "கவுதாரி, காடை, சிவல்"[39] என்றும் ஈதல் என்பதற்கு, "அந்தணன், அரசர், வணிகர்க்குரிய அறுதொழிலினொன்று, கொடுத்தல்"[40] என்றும் நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி பொருள் குறிக்கிறது. மேற்கண்ட கருத்துவழி, காடையின் பெட்டை பற்றி இப்பாடலடி குறிக்க வந்திருக்கும் 'இதல், ஈதல்' என்பனவற்றில் '***வரிப்புற இதலின்*** என்பதே பொருத்தமான பாடம் என்பதனை அறியலாம்.

***392:17 நனவுறு கட்சி (ராஜ.,மயி.)–நனவுறு கட்சியின் (பிற.)***

"நனவுறு கட்சி நன்மயி லால" (392:17)

எனும் பாடத்திற்கு, 'அகன்ற காட்டிலுள்ள அழகிய மயில்' என்பது பொருள் ஆகும். 'கட்சி' என்பதற்குக் காடு என்று இங்குப் பொருள் குறிக்கப் பெற்றுள்ளது.

'கட்சி நன்மயில், கட்சியின் நன்மயில்' என்ற இரு பாடங்களுக்கும் 'காட்டிலுள்ள அழகிய மயில்' என்பதே பொருளாகும். 'காட்டு அழகிய மயில்' எனும் பொருள் தரும் 'கட்சி நன்மயில்' எனும் பாடத்தைவிட 'காட்டிலுள்ள அழகிய மயில்' எனும் பொருள் தரும் '***கட்சியின் நன்மயில்*** எனும் பாடத்தையே இவ்விடத்திற்குப் பொருத்தமுடையதாகக் குறிப்பிடலாம்.

**395:11 டோய்பிணைப் பயிரு (ராஜ.,மயி.)–மேய்பிணைப் பயிரும் (பிற.)**

"புலம்வழிப் பட்ட வுலமர வுள்ளமொடு
ஓய்பிணைப் பயிரும்" (395:11)

எனும் இப்பாடம் கொண்ட ராஜகோபாலார்யன் பதிப்பில் எவ்வித உரையும் இல்லை. இப்பாடம் கொண்ட மயிலம்வே.பதிப்பில் '***மேய்பிணைப் பயிரும்***' எனும் பாடத்திற்கான பொருளே குறிக்கப் பெற்றுள்ளது.

மேய்பிணைப் பயிரும் எனும் பாடத்திற்கு, 'மேயும் தன்பெண்மானை அழைக்கும்' என்பது பொருளாகும். '***ஓய்பிணைப் பயிரும்***' என்ற பாடத்திற்கு 'ஓய்ந்திருக்கும் தன் பெடையை அழைக்கும்' என்பதனைப் பொருளாகக் குறிக்கலாம்.

'நீரை விரும்பியோடி நீர் இன்மையால் தவித்த ஆண்மான் பெண்மானை அழைத்தது' எனும் மேய்ச்சல் சூழல் வருவதால், 'ஓய்ந்திருக்கும் மான்' எனும் பொருள்தரும் 'ஓய்பிணை' எனும் பாடத்தைவிட 'மேயும் பெண்மான்' எனும் பொருள்தரும் '***மேய்பிணைப் பயிரும்***' எனும் பாடமே பொருத்தமானதாக அமைகிறது எனலாம்.

**398:25 நாட்டி னடுவரு வோயே (ராஜ.)–நாட்டின் வரூஉ வோயே (பிற.)**

'தலைவனின் உயர்ந்த மலைநாட்டினின்றும் வருவோய்' எனும் பொருள் குறிக்கவே மேற்கண்ட இரு பாடங்களும் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

'நாட்டி னடுவரு வோயே' என்பதற்கு எவ்விதப் பொருளும் குறிக்க இயலவில்லை. 'நாட்டின் வரூஉவோயே' என்பதற்கு மேற்கண்ட

உரைக்கருத்துப் பொருந்துகிறது. எனவே, '***நாட்டின் வரூஉ வோயே***' எனும் பாடத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

***399:14 பல்கா ணெல்லி (ராஜ.)–பல்கோள் நெல்லி (பிற.)***

மரைக்கூட்டங்கள் விரும்பி உண்ணும் நெல்லியின் தோற்றம் பற்றிக் குறிக்க,

"மைஇல் பளிங்கி னன்ன தோற்றப்
பல்கா ணெல்லிப் பைங்கா யருந்தி
மெல்கிடு மடமரை யோர்க்கும்..." *(399:13–15)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன.

'***பல்கா ணெல்லி, பல்கோள் நெல்லி***' என்ற இரு பாடங்களுக்கும் பலவாகக் காய்த்த நெல்லி என்பதே பொருளாகும். எனவே, பொருள் மாற்றமில்லா இவ்விருபாடங்களில் எப்பாடத்தைக் கொண்டாலும் தவறில்லை. இருப்பினும் காலப்பழைமையைக் கருத்தில் கொண்டு '***பல்கா ணெல்லி***' என்ற பாடத்தைக் குறிப்பதே பொருத்தமாக அமையும் என்று குறிப்பிடலாம்.

***பாயிரம்:23 கெடலருஞ் செல்வத் (பிற.)–கெடலருஞ் சிறப்பின் (மு.காசி.,மர்ரே.)***

இடையள நாட்டின் இயல்பு பற்றிக் குறிக்கும்,

"கெடலருஞ் செல்வத் திடையள நாட்டு" *(பாயிரம்:23)*

எனும் பாயிர அடியில் வரும் '***கெடலருஞ் செல்வத்து***' எனும் பாடம் ராஜ.பதிப்புகள் தவிர்ந்த பிற பதிப்புகளில் '***கெடலருஞ் சிறப்பின்***' என்று குறிக்கப்பெற்றுள்ளது.

'செல்வத்து' என்ற பாடத்தைக் கொள்ளும்போது 'கெடுதல் அல்லாத செல்வம்' என்று பொருள் அமைகிறது. 'சிறப்பின்' எனும் போது 'கெடுதல் அல்லாத பலவகைப்பட்ட சிறப்பின்' என்று பல பொருளைத் தருகிறது. ஒரு நாட்டிற்குச் செல்வம் இன்றியமையாதது எனினும் செல்வத்தை விடச் சிறப்பும் புகழும் பெரியது. இந்நிலையில் பலவகைப்பட்ட புகழ்களை/ சிறப்பினைக் கொண்ட என்று பொருள்தரும் '***கெடலருஞ் சிறப்பின்***' என்ற

பாடத்தைப் பொருத்தமுடையதாகக் கருதலாம். இதில் செல்வமும் அடங்கும் என்பதும் நினைவில் கொள்ளத்தக்கது.

### சொல்நிலை – மூன்று பாடங்கள்

மூன்று பாடங்கள் கொண்டு சொல் நிலையில் முற்றிலும் மாறுபடும் மூலபாட வேறுபாடுகளாக 13 பாடங்கள் காணப்பெறுகின்றன (விவரம்: பின்னிணைப்பு-12). இப்பதிப்பின் மூன்று பாடங்களில் 67:6, 97:18 ஆகிய இரு பாடங்கள் தவிர பிற அனைத்திலும் ராஜ.பதிப்புகளால் திருத்தம் பெற்ற பாடங்களும் காணப்பெறுகின்றன. இப்பாட வேறுபாடுகளில் சரியான பாடத்தை இனங்காண்பதாக இனிவரும் பகுதி அமைகிறது.

### 67:6 விரையங் கொண்மார் (பிற.)–நிரயம் கொண்மார் (மர்ரே.)–நினிரையங் கொண்மார் (மயி.)

அகம்.67 ஆம் பாடலின்,

"விரம்பா நோக்கி விரையங் கொண்மார்" (67:6)

என்ற அடியில் வரும் ***'விரையங் கொண்மார்'*** எனும் பாடத்திற்குமாறாக, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பில் ***'நிரயம் கொண்மார்'*** என்றும் மயிலம்வே. பதிப்பில் ***'நினிரையங் கொண்மார்'*** என்றும் பாடங்கள் குறிக்கப்பெற்றுள்ளன.

மேற்கண்ட பாடவேறுபாடுகளில் மயிலம்வே.பதிப்பில் காணப்பெறும் பாடம் அச்சுப்பிழையுடன் கூடியதாகும். 'நிரையம்' என்பது அச்சுப்பிழை மிகுந்து 'நினிரையம்' என்று வந்துள்ளது. இப்பதிப்பில் காணப்பெறும் உரை, பழைய உரையில் உள்ள உரைக்குறிப்பாக அமைவதன்வழி இதனை அறியமுடிகிறது.

பழைய உரை 'நிரையம் கொண்மார்' என்பதற்கு, "நரகம் புகுவார்; கொள்ளவேண்டி என்றுமாம்"[41] என்று பொருள் குறிக்கிறது. பாலைநில மறவர்கள் ஆநிரைகளுக்காகப் புரியும் போர் பற்றிக் குறிக்கும் இப்பாடலடிக்கு 'நரகம்' என்று பொருள் குறிப்பது பொருந்தாது. இதற்குக் 'கொள்ள வேண்டி' (ஆநிரையை மீட்டுக் கொள்ள வேண்டி) என்ற பொருளையே பொருத்தமுடையதாகக் கொள்ளலாம். இப்பழைய உரைக் கருத்தைக் கொண்டே மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு 'நரகம்–நிரயம்' என்று

பொருள் கொண்டு 'நிரயம்' என்ற பாடத்தைக் குறித்திருக்கலாம். "நிரயம்–நிரையம், நரகம்"[42] என்று தமிழ்மொழி அகராதி பொருள் குறிப்பதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

எனவே, மேற்கண்ட மூன்று பாடங்களில் '***விரையங் கொண்மார்***' என்ற பாடமே பொருத்தமுடையது என்று குறிப்பிடலாம்.

***97:18 லகலியாற் றடைகரை (பிற.)–அகல்யாற் றடைகரை (சமா.,மர்ரே.) –லகிலியாற் றடைகரை (மயி.)***

"லறலவிர் வார்மண லகலியாற் றடைகரை" *(97:18)*

எனும் அடியில் வரும் '***லகலியாற் றடைகரை***' எனும் பாடத்திற்குப் பதில் சமாஜப் பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியன '***அகல்யாற் றடைகரை/ அகல்யாற்று அடைகரை***' என்றும் மயிலம்வே.பதிப்பு '***லகிலியாற் றடைகரை***' என்றும் பாடத்தைக் குறித்துள்ளன. இவற்றுள் '***அகல்யாற்று அடைகரை***' என்ற பாடத்தைக் குறிப்பதே பொருத்தமாக அமையும். அதற்கான காரணங்கள் வருமாறு:

*1.* 'அகல்யாற் றடைகரை, அகல்யாற்று அடைகரை' என்பன சீர்பிரித்து எழுதுவதால் தோன்றியவை.

*2.* 'அகிலியாற்றடைகரை' என்பதில் உள்ள 'கி' என்பது அச்சுப் பிழையாகக் கருதத்தக்கது.

*3.* 'அகிலி' என்பதற்கு எந்தப் பொருளையும் அறிய இயலவில்லை.

***107:9 வால்அவெண்சோறு (ராஜ.1920)–வாஅல்வெண்சோறு (ராஜ.1923,26,33,பிற.)–வாரல் வெண்சோறு (மயி.)***

நெய் கலந்த சோற்றைப் பற்றி விளக்க,

"வானின முருக்கிய வாஅல் வெண்சோறு" *(107:9)*

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் 'வாஅல் வெண்சோறு' எனும் பாடம் மேற்கண்டவாறு வேறுபாடுகளுடன் காணப்பெறுகிறது.

ராஜகோபாலார்யன் பதிப்புகளிலேயே இரண்டுவிதப் பாடங்கள் காணப்பெறுகின்றன. *1920* இல் வந்த பதிப்பில் '***வால் அவெண்சோறு***'

என்றும் 1923, 1926, 1933 ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ள பதிப்பில் 'வாஅல் வெண்சோறு' என்றும் குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் ***'வாஅல் வெண்சோறு'*** எனும் பாடமே பொருத்தமுடையதாகும். 'வ' கர நெடில் அளபெடுத்து வந்து 'வாஅல்' என்று வருவதை எழுதும் போது அச்சுப் பிழையாக வந்து 'வால் அவெண்சோறு' என்று அளபெடுத்து வரும் அகரம் இடம்மாறி அமர்ந்துவிட்டது. இந்நிலையில் முதற்கண் 'வால் அவெண்சோறு' என்று அச்சுப்பிழையாகப் பதிப்பித்த ராஜகோபாலார்யன் 1923 இக்குப்பின் அதனைத் திருத்தி 'வாஅல் வெண்சோறு' என்று சரியாகப் பதிப்பித்துள்ளார் என்பதனை அறியமுடிகிறது.

'வாரல் வெண்சோறு' எனும் பாடத்தைக் குறித்திருக்கும் மயிலம் வே.பதிப்பில் காணப்பெறும் உரைக்கருத்து 'வாஅல் வெண்சோறு' என்பதற்கான, "ஆனின் மிக வெள்ளிய நிணச்சோற்றை"[43] என்ற உரைக் கருத்தை ஒத்தே காணப்பெறுகிறது. 'வாரல்' என்பதற்கான வேறு உரைப் பொருண்மை ஏதும் காணப்பெறவில்லை. 'வாஅல்' என்பதற்கான 'வெள்ளிய' என்ற உரைப் பொருண்மையே அங்குக் குறிக்கப்பெற்றுள்ளது. இவற்றின் வழி ***'வாஅல் வெண்சோறு'*** என்ற பாடமே பொருத்தமுடையதாகக் கொள்ளத்தக்கது என்று குறிக்கலாம்.

**115:14 வயமானஞ்சி (ராஜ.1920,சமா.,மயி.)-வாமான் அஞ்சி (ராஜ.1926,33,மு.காசி.)-வாம்மான் அஞ்சி (மர்ரே.)**

அஞ்சி என்பானின் வீரம் பற்றிக் குறிக்கும் போது,

"சினமிகு முன்பின் வயமா னஞ்சி" (115:14)

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் ***'வயமானஞ்சி'*** எனும் பாடம் ***'வாமான் அஞ்சி, வாம்மான் அஞ்சி'*** என்பனவாக ராஜகோபாலார்யன் பதிப்பு (1926, 1933), மு.காசி. பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் குறிக்கப்பெற்றுள்ளன. இம்மூன்று பாடங்களில் ***'வாமான் அஞ்சி*** எனும் பாடத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 1920 இல் 'வயமான் அஞ்சி' எனும் பாடத்தைக் குறிக்கும் ராஜகோபாலார்யன் 1923, 1926, 1933 ஆம் ஆண்டுகளில் 'வாமான் அஞ்சி' என்று திருத்திப் பாடம் குறிக்கிறார்.

2. 'வாம்மான்' என்று குறிக்கும் மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பின் பாடம் சந்திப்பிரிப்பிற்காகக் கூடுதலாக 'மகர' ஒற்று இடப்பெற்றுள்ளது எனலாம். மேலும் இம்மகரஒற்றால் எந்தப் பொருள் மாற்றமும் ஏற்படவில்லை என்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

3. 'வயமான்' என்பதற்கு எவ்விதப் பொருண்மையும் கிடைக்காத சூழலில் 'வாமான்' என்பதற்குத் 'தாவும் குதிரை' எனும் உரைப்பொருண்மை அகநானூற்றுப் பதிப்புகளில் காணப்பெறுவதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

***146:1 னண்ணல் லேறு(ராஜ.1920)–அண்ணல் லேஎறு (ராஜ.1923, 33, பிற.)–னண்ண னல்வேறு (மயி.)***

எருமைக்கடாவும் பெண்ணெருமையும் இருந்த நிலைபற்றி,

"வலிமிகு முன்பி னண்ணல் லேறு
பனிமலர்ப் பொய்கைப் பகல்செல மறுகி
மடக்க ணெருமை மாணாகு தழீஇ" (146:1–3)

எனும் அடிகள் விளக்குகின்றன. இவ்வடிகளில் வரும் '***னண்ணல் லேறு***' எனும் பாடம் ராஜகோபாலார்யன் பதிப்புகள் (1923, 1933), சமாஜப் பதிப்பு, மு.காசி.பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகிய பதிப்புகளில் '***னண்ணல் லேஎறு***' என்று அளபெடையுடனும் மயிலம்வே.பதிப்பில் '***னண்ண னல்வேறு***' என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. இவற்றுள் அளபெடையுடன் வரும் '***அண்ணல் லேஎறு***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதுகுறித்த விளக்கங்கள் வருமாறு:

1. முதற்கண் (1920, 1923) அளபெடை இன்றி 'அண்ணல் லேறு' என்று பதிப்பித்த ராஜகோபாலார்யனே 1933 ஆம் ஆண்டில் திருத்தி 'அண்ணல் லேஎறு' என்று அளபெடையுடனும் பதிப்பிக்கிறார். அளபெடை இப்பாடத்திற்குத் தேவையானது என்பதனைப் பிற்காலத்தில் பதிப்பாசிரியர் உணர்ந்துள்ளார் என்று குறித்து, அளபெடையுடன் வந்திருக்கும் பாடத்தையே சரியானதாகக் குறிக்கலாம்.

2. 'அண்ண னல்வேறு' என்று பாடம் குறிக்கும் மயிலம்வே. பதிப்பின் உரை 'அண்ணல் லேஎறு' எனும் பாடத்திற்குரிய உரைக்கருத்தான, 'தலைமை பொருந்திய ஏறு' என்பதனையே குறிக்கிறது.

***156:14 நால்செவிக் கடாஅய் (ராஜ.1920)-நால்செவிக்கிடாஅய் (ராஜ.1923,33,பிற.)-நால்செவிக் கிடாஅ (மயி.)***

கடவுளுக்குப் பலியிடும் வெள்ளாட்டுக் கிடாய் பற்றிய,

"நிலைக்கோட்டை வெள்ளை நால்செவிக் கடாஅய்" (156:14)

எனும் அடியில் வரும் ***'கடாஅய்'*** எனும் பாடம் ***'கிடாஅய்'*** என்று ராஜகோபாலார்யன் பதிப்பு (1933), சமாஜப் பதிப்பு, மு.காசி.பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியவற்றிலும் ***'கிடாஅ'*** என்று மயிலம்வே. பதிப்பிலும் குறிக்கப்பெற்றுள்ளன.

'கடாஅய், கிடாஅய், கிடாஅ' என்பன பொருளளவில் வேறுபாடற்றவையெனினும் 1920, 1923களில் 'கடாஅய்' என்று பதிப்பித்த முதல் பதிப்பாசிரியரான ராஜகோபாலார்யன் 1933 இல் 'கிடாஅய்' என்று திருத்திப் பதிப்பித்திருப்பதாலும் 'கிடாஅ' என்பதைவிட 'கிடாஅய்' என்ற பாடமே காலப்பழைமையானது என்பதாலும் ***'நால்செவிக் கிடாஅய்'*** என்ற பாடத்தையே சரியானதாகக் குறிக்கலாம்.

***231:2 குறுமிடத்துலக்கு (ராஜ.1920,மயி.)-குறுமிடத் துவக்கும் (பிற.)-உறுமிடத் துய்க்கும் (மு.காசி.)***

தம்பகைவர் செருக்கினை ஒழித்தல், தம்மைச் சேர்ந்தோர்க்கு ஏற்படும் துன்பத்தை நீக்கல் ஆண்மகனுக்குத் தேவை என்பதனை,

"செறுவோர் செம்மல் வாட்டலுஞ் சேர்ந்தோர்க்
குறுமிடத் துலக்கு முதவி யாண்மையு
மில்லிருந் தமைவோர்க் கில்லென் றெண்ணி" (231:1-3)

எனும் அடிகள் விளக்கும்.

இவ்வடிகளில் வரும் ***'குறுமிடத் துலக்கும்'*** என்ற பாடம் 1933 இல் வெளிவந்த ராஜகோபாலார்யன் பதிப்பு, சமாஜப் பதிப்பு, மர்ரே எஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் ***'உறுமிடத்து உவக்கும்'*** என்று பதிவு செய்யப் பெற்றுள்ளது. மு.காசி.பதிப்பில் 'உறுமிடத்து உய்க்கும்' என்ற பாடம் காணப்பெறுகிறது. மயிலம்வே.பதிப்பு 1920, 1923ஆம் ஆண்டுகளில் ராஜகோபாலார்யனால் குறிக்கப்பெற்ற 'உறுமிடத் துலக்கும்' என்ற பாடத்தையே குறிக்கிறது.

ராஜகோபாலார்யன் முதற்கண் (1920, 1923) ‘குறுமிடத்துலக்கும்’ என்று பதிப்பித்து, அதனைப் பிழையென உணர்ந்து 1933 இல் ‘உறுமிடத்து உவக்கும்’ என்று பதிப்பிக்கிறார். எனவே, ‘உறுமிடத்து உவக்கும்’ என்ற பாடமே ராஜகோபாலார்யன் கொண்டது என்பதனை அறியலாம். 1920 இல் வந்த பதிப்பை முதன்மையாகக் கொண்டதால் மயிலம்வே.பதிப்பிலும் வந்துள்ள ‘உறுமிடத்து உலக்கும்’ என்பதைப் பிழையாகக் கருதலாம். இப்பாடம் தவிர்ந்த ‘உறுமிடத்து உவக்கும், உறுமிடத்து உய்க்கும்’ என்பனவற்றில் பொருத்தமானதைக் கண்டறிவது இன்றியமையாததாகும்.

‘உவத்தல், உய்த்தல்’ என்பனவற்றில் ‘உய்த்தல்’ என்பதே ‘தோன்றுதல்/ஏற்படுதல்’ எனும் பொருளைத் தருகிறது. ‘உவத்தல்’ என்பது ‘மகிழ்தல்’ எனும் பொருளைத் தருகிறது. இது துன்பமுறுதல் என்பதற்கு மாறானது. ‘தம்மைச் சேர்ந்தோர்க்குத் துன்பம் நேரும்போது உதவுதல்’ எனும் பொருள்தரும் இவ்வடியில் ‘துன்பம் தோன்றுதல்/ஏற்படுதல்’ என்ற பொருள்தரும் ‘***உறுமிடத்து உய்க்கும்***’ எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**269:7 பேலு நாடா (ராஜ.1920,23)–போலு நடாஅ (ராஜ.1933,பிற.)–போலுந ரடாஅ (மயி.)**

ஆநிரைப் போரில் ஈடுபட்ட இறந்த வீரர்களுக்கான நடுகல் பற்றி,

“னட்ட போலு நாடா நெடுங்க” (269:7)

என்ற அடி குறிக்கிறது. இவ்வடியில் வரும் ‘***போலு நாடா நெடுங்கல்***’ எனும் பாடம் 1933 இல் வந்த ராஜகோபாலார்யன் பதிப்பு, சமாஜப் பதிப்பு, மு.காசி. பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் ‘***போலு நடாஅ நெடுங்கல்***’ என்றும் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் ‘***போலுந ரடாஅ நெடுங்கல்***’ என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

1920, 1923 ஆம் ஆண்டுகளில் வந்த பதிப்புகளில் ‘போலு நாடா நெடுங்கல்’ என்று பதிப்பித்த ராஜகோபாலார்யன் 1933 ஆம் ஆண்டில் ‘போலு நடாஅ நெடுங்கல்’ என்று பதிப்பிக்கிறார். இதன்வழி முதற்கண் குறித்த பாடம் அச்சுப்பிழையுடன் அமையப் பின்னர் (1933 இல்) அதனைத் திருத்திப் பொருத்தமானதைப் பதிப்பிக்கிறார் என்பதை அறியமுடிகிறது. எனவே, ‘போலு நடாஅ நெடுங்கல்’ என்ற பாடத்தையே

ராஜகோபாலார்யனின் பாடமாகக் குறிக்கலாம். மேலும் 'போலு நடாஅ நெடுங்கல், போலுந ரடாஅ நெடுங்கல்' என்ற இருவேறுபட்ட பாடங்களில் '***போலு நடாஅ நெடுங்கல்***' என்ற பாடத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'போலுநர் அடா' என்பதற்கு எந்தப் பொருளையும் அறிய இயலவில்லை.

2. 'போலுநர் அடா' என்று பாடம் குறிக்கும் பதிப்பு, "நட்டு வைத்தவை போன்ற இயற்கையிலெழுந்த நீண்ட கற்களின்"[44] என்ற 'போலுநடாஅ' என்ற பாடத்திற்கான உரைக்கருத்தைப் பின்பற்றியே உள்ளது.

***285:14 வருதுமென்றனரே(ராஜ.1920,23)-வரூஉமென்றனரே (ராஜ.1933, பிற.)-வரு மென்றனரே (மயி.)***

உடன்போக்கிற்குத் தலைவியை ஒருப்படுத்தும் தோழி, தலைவன், தலைவி மீது கொண்டிருக்கும் நம்பிக்கை குறித்துக் கூறும்போது,

"யாடுசெவி நோக்கு மத்தம் பணைத்தோட்
குவளை யுண்க ணிவளு நம்மொடு
வரூஉ மென்றனரே காதலர்" (285:14)

என்று குறிப்பிடுகிறாள்.

இவ்வடிகளில் வரும் '***வரூஉ மென்றனரே***' என்ற பாடத்திற்கு மாறாக 1933 இல் வெளிவந்துள்ள ராஜகோபாலார்யன் பதிப்பு, சமாஜப் பதிப்பு, மு.காசி.பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் '***வரூஉம் என்றனரே***' என்ற பாடமும் மயிலம்வே.பதிப்பில் '***வருமென்றனரே***' என்ற பாடமும் காணப்பெறுகின்றன.

முந்தைய பாடத்தை ஒத்தே (போலுநாடா-போலுநடாஅ) இப்பாடத்தையும் ராஜகோபாலார்யன் கொண்டுள்ளார். எனவே, முந்தைய பாடத்திற்கான விளக்கம் இதற்கும் பொருந்தும். இதனால், 'வரூஉ மென்றனரே' என்ற பாடத்தையே ராஜகோபாலார்யனின் பாடமாகக் கொள்ளலாம். இவற்றின்வழி '***வரூஉ மென்றனரே, வருமென்றனரே***' என்ற இரு பாடங்களில் சரியானதைக் கண்டறிவது இன்றியமையாததாகும்.

‘வரூஉம், வரும்’ எனும் இரு சொற்களும் ஒரு பொருள் குறிப்பன. இவ்விரு பாடங்களுக்கான உரைக்கருத்துகளும் (வாரா நிற்பான்) ஒன்றாக அமைகின்றன. எனவே, காலப்பழைமையைக் கருத்தில் கொண்டு அளபெடையுடன் கூடிய ‘***வரூஉ மென்றனரே***’ என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***331:11 பல்கல முதவி (ராஜ.1920)–பலகல முதவி (பிற.)–பலகல னுதவி (மயி.)***

*திதியன் என்பான் பாணர்களுக்குப் பலவகையான அணிகலன்களை அளித்தான் என்பது பற்றிக் குறிக்க,*

“மருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாண ரார்ப்பப் பல்கல முதவி
நாளவை யிருந்த நனைமகிழ்த் திதியன்” (331:10–12)

என்ற அடிகள் இடம்பெற்றுள்ளன.

1920 இல் ‘பல்கல முதவி’ எனும் பாடத்தைக் குறிக்கும் ராஜகோபாலார்யன் 1923 தொடங்கி ‘பலகல முதவி’ என்று குறிக்கின்றார். இதனைப் பின்பற்றியே பிற பதிப்புகளும் பாடத்தை அமைத்துள்ளன. எனவே, ராஜகோபாலார்யன் பதிப்புகளின் பாடவேறுபாடு தொடர்பான விளக்கத்திற்கு மேற்கண்ட பாடங்களுக்கான விளக்கங்களையே (115:14,146:1,156:14,269:7, 285:14) எடுத்துக்கூறி ‘***பலகல முதவி***’ என்ற பாடத்தையே ராஜகோபாலார்யன் பதிப்புகளுக்குரியது எனலாம். இந்நிலையில் ‘பலகல முதவி, பலகல னுதவி’ எனும் இரு பாடங்களில் ‘***பலகல முதவி***’ என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. ‘கலம், கலன்’ எனும் இரு சொற்களும் ‘அணிகலன், ஆபரணம்’ (2009:407, 408) எனும் பொருண்மைகளைத் தருகின்றன.

2. பாணர்களுக்கு அணிகலன்கள் வழங்கினான் என்ற நிலையில் எப்பாடத்தைக் குறித்தாலும் தவறில்லை.

3. காலப் பழைமையையும், பெரும்பான்மையையும் கருத்தில் கொண்டு (பலகலம் (1923,1926,1933,1940,1943,1958), பலகலன் (1990)) '***பலகல முதவீ'*** என்ற பாடத்தைக் கொள்ளுதல் பொருத்தமானது எனலாம்.

***337:19 கழிதந்தோடும் (ராஜ.1920,23)–கழிதந்தோயே (ராஜ.1933, பிற.)–கழிதந்தேமே (பிற.)***

பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லும் தலைமகன் முன்னொரு காலத்தில் பொருள்வயிற் பிரிந்தபோது ஏற்பட்ட நிலைபற்றி எண்ணுதல் குறித்த இப்பாடலின் இறுதியில்,

> "மழைகண் மாறிய வெங்காட் டாரிடை
> யெமியங் கழிதந் தோடும்" (337:18–19)

எனும் அடிகள் காணப்பெறுகின்றன. இவ்வடிகளில் வரும் '***கழிதந் தோடும்'*** எனும் பாடம் 1933 இல் வெளிவந்த ராஜகோபாலார்யன் பதிப்பு, சமாஜப் பதிப்பு, மு.காசி.பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் '***கழிதந்தோயே'*** என்றும் மயிலம்வே.பதிப்பில் '***கழிதந்தேமே'*** என்றும் குறிக்கப்பெற்றுள்ளன.

இவற்றுள் முன்னர்க் கூறிய (115:14, 146:1, 156:14, 285:14, 331:11) கருத்துகளின் அடிப்படையில் ராஜகோபாலார்யன் பதிப்புகளின் பாடங்களில் 'கழிதந்தோயே' என்பதனையே சரியானதாகக் குறிப்பிடலாம். எனவே, 'கழிதந்தோயே, கழிதந்தேமே' என்ற இரு பாடங்களில் பொருத்தமானதைக் கண்டறிவது இன்றியமையாததாகும். பொருள்வயிற் பிரிந்த தலைவன்,

> "(முன்பு ஒருகால்) யாம் தமியேமாக நீ மீண்டுவந்தா யன்றே"[45]

என்று தன்நெஞ்சிற்குக் கூறி, நெஞ்சை முன்னிலைப்படுத்துகிறான். இந்நிலையில் 'கழிதந்தேமே' என்ற பாடத்தைக் குறித்தால் தன்னையும் முன்னிலைப்படுத்துவதாக அமையும். எனவே, '***கழிதந்தோயே'*** என்ற பாடத்தைக் குறித்தலே பொருத்தமானதாக அமையும்.

***346:8 பாசமல் பொற்றி (ராஜ.1920,23)–பாசவல் பொத்தி (ராஜ.1933, பிற.)–பாசமல் போற்றி (மயி.)***

மருதநிலத்தில் வயல்வெளியில் நீரைத் தேக்கிப் பாதுகாத்தல் பற்றி,

"பெருஞ்செந் நெல்லின் பாசமல் பொற்றி" *(346:8)*

எனும் அடி காணப்பெறுகிறது. இவ்வடியில் வரும் ***'பாசமல் பொற்றி'*** எனும் பாடம் *1933* இல் வந்த ராஜகோபாலார்யன் பதிப்பு, மு.காசி.பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் ***'பாசவல் பொத்தி'*** என்றும் மயிலம்வே.பதிப்பில் ***'பாசமல் போற்றி'*** என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

ராஜகோபாலார்யன் பதிப்பின் இருவேறுபட்ட பாடங்களில் (பாசமல் பொற்றி, பாசவல் பொத்தி) 'பாசவல் பொத்தி' என்பதே அவர் பதிப்பின் பாடம் எனலாம் (விவரம்:*115:14, 146:1, 156:14*). இந்நிலையில் ***'பாசவல் பொத்தி, பாசமல் போற்றி'*** எனும் இருபாடங்களில் ***'பாசவல் பொத்தி'*** என்ற பாடத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம். அது குறித்த விளக்கங்கள் வருமாறு:

1. 'அவல்' என்பதற்கு, "ஒரு சிற்றுணவு, குளம், சிறுபள்ளம், விளைநிலம்"[46] என்றும் 'அமல்' என்பதற்கு, "அமுல், செறிவு, மிகுதி, விசாரணை"[47] என்றும் தமிழ்மொழி அகராதி பொருள் குறிக்கிறது.

2. 'பொத்துதல்' என்பது, "அடித்தல், புரைதல், மூடுதல்"[48] என்ற பொருண்மைகளையும் 'போற்றுதல்' எனபது "காத்தல், துதித்தல், புகழ்தல், பேணுதல், வணங்கல், வளர்த்தல்"[49] என்ற பொருண்மைகளையும் குறிக்கின்றன.

3. வயல்வெளியில் தண்ணீர் தேக்கி வைத்தல் பற்றிய குறிப்பு வருவதால் அவல் (விளைநிலம்), பொத்துதல் (மூடுதல்–தேக்கிவைத்தல்) ஆகியனவற்றைச் சரியானதாகக் குறித்து 'பாசவல் பொத்தி' என்ற பாடம் பொருத்தமாவதை அறியலாம்.

***378:19 ராயினு முளனே (ராஜ.1920)–ராயினு முளெனே (ராஜ.1923,33, பிற.)–ராயினு முளேனே (மயி.)***

இரவுக்குறியில் சிறைப்புறமாகத் தலைவன் இருக்கத் தலைவி தான் கொண்ட அன்பை வெளிப்படுத்தும் இப்பாடலில்,

"நீங்கா வஞ்சினஞ் செய்துநத் துறந்தோ
ருள்ளா ராயினு முளனே" (378:19)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் 'ராயினு முளேனே' எனும் பாடம் 1923, 1933 ஆம் ஆண்டுகளில் வெளிவந்த ராஜகோபாலார்யன் பதிப்புகள், மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் ராயினு முளெனே என்று குறிக்கப்பெற்றுள்ளது. சமாஜப் பதிப்பில் 'ராயினு முளேனே' என்றும் மு.காசி.பதிப்பு, மயிலம்வே.பதிப்பு ஆகியன 'ராயினு முளனே' என்ற 1920இல் வெளிவந்த பதிப்பின் பாடத்தையும் கொண்டுள்ளன.

இப்பாடங்களில் ராஜகோபாலார்யனின் பாடமாகக் கருதத்தக்கது 'ராயினு முளெனே' எனும் பாடமாகும் (விவரம்:115:14,146:1,156:14). இந்நிலையில் 'ராயினு முளெனே, ராயினு முளேனே, ராயினும் உளனே' எனும் பாடங்களில் '***ராயினும் உளெனே***' என்ற பாடத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 1920 இல் வெளிவந்த ராஜகோபாலார்யன் பதிப்பின் பாடமே மு.காசி.பதிப்பின் பாடம், மயிலம்வே.பதிப்பின் பாடம் ஆகியனவற்றிற்கு முன்னோடியாக அமைகிறது.

2. 'உளேனே' என்பது சீர் பிரித்துப் பதிப்பிக்கையில் மேற்கண்ட பாடமாக மாறியிருக்கின்றது.

3. 'உளெனே' என்பது ஒரே பதிப்பாசிரியரால் திருத்தப் பெற்றிருப்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

மேற்கண்ட மூன்று வேறுபாடுகளைக் கொண்டிருக்கும் சொல்நிலையிலான வேறுபாட்டுத் தன்மைகள் அகநானூற்றுப் பதிப்புகளில் பின்வருமாறு அமைகின்றன.

- 1920 இல் வெளிவந்த பதிப்பும் மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பும் 9 இடங்களில் (109:9,146:1,156:14,269:7,285:14, 331:11,337:19,346:8,378:19) வேறுபடுகின்றன.
- மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பும் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பும் ஓரிடத்தில் (67:6) வேறுபடுகின்றன.

- சமாஜப் பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு, மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியன ஓரிடத்தில் (97:18) வேறுபட்ட பாடத்தைக் குறிக்கின்றன.

- 1920 இல் வெளிவந்த ராஜகோபாலார்யன் பதிப்பு, சமாஜப் பதிப்பு, மர்ரே எஸ்.இராஜம் பதிப்பு, மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகிய பதிப்புகள் அனைத்தும் ஓரிடத்தில் (115:14) மாறுபட்டு அமைகின்றன.

- ராஜகோபாலார்யன் பதிப்புகள் (1920, 1923, 1926, 1933), சமாஜப் பதிப்பு, மர்ரே எஸ்.இராஜம் பதிப்பு, மயிலம் வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியனவும் ஓரிடத்தில் (231:2) மட்டும் வேறுபட்டு அமைகின்றன.

மேற்கண்ட தரவுகள் மு.காசி.பதிப்பு இப்பதின்மூன்று இடங்களில் அனைத்து இடங்களிலும் பொருத்தமான பாடங்களைக் குறித்துள்ளது என்பதனை உணர்த்துகின்றன. 1920இல் வெளிவந்த ராஜகோபாலார்யன் பதிப்பின் பாடத்தை 1923,1926,1933 ஆம் ஆண்டுகளில் ராஜகோபாலார்யனே திருத்தி அமைத்ததாகப் பதினொரு பாடங்கள் (67:6,97:18 இவை தவிரப்பிற) அமைவதையும் அறியமுடிகிறது. இத்திருத்தத்திற்குக் காரணம் உரை முயற்சியே என்பதும் நினைவில் கொள்ளத்தக்தாகும்.

**எழுத்துநிலை வேறுபாடுகள்**

ஒரு பதிப்பிலிருந்து பிறிதோர் பதிப்பின் பாடம் ஓர் எழுத்தால் வேறுபடுதல் ‘எழுத்துநிலை வேறுபாடுகள்’ ஆகும். அகநனூற்றுப் பதிப்புகளில் காணலாகும் இவ்வேறுபாடுகளைப் பின்வருமாறு மூன்றாகப் பகுக்கலாம்.

1. ஓர் எழுத்து மிகுவதால் வேறுபடுதல்
2. குறில், நெடில் வேறுபாடுகள்
3. ஓர் எழுத்திற்குப்பதில் பிறிதோர் எழுத்து வருவதால் வேறுபடுதல்.

**ஓர் எழுத்து மிகுவதால் வேறுபடுதல்**

அகநானூற்றுப் பதிப்புகளின் பாடங்களில் ஏதேனும் ஒரு பதிப்பின் பாடத்தில் ஓர் எழுத்து மிகுந்து வருதல் அல்லது குறைந்து வருதல்

இந்நிலையில் அடங்கும். ஓர் எழுத்து மிகுந்து வரும் பாடங்கள் வெளிப்படையாக எழுத்து மிகுவதைக் குறிக்கும். ஓர் எழுத்துக் குறைந்து வரும் பதிப்பின் பாடம் பிற பதிப்புகளின் பாடத்தில் எழுத்து மிகுவதைக் குறிக்கும். இந்நிலையிலான இதனை 'எழுத்து மிகுவதால் வேறுபடுதல்' என்று குறிக்கலாம். இத்தன்மையைப் பின்வருமாறு பகுத்து விளக்கலாம். அவை:

1. உயிர் எழுத்து மிகுவதால் வேறுபடுதல்
2. மெய்யெழுத்து மிகுவதால் வேறுபடுதல்
3. உயிர்மெய் எழுத்து மிகுவதால் வேறுபடுதல்.

**உயிர் எழுத்து மிகுவதால் வேறுபடுதல்**

உயிர் எழுத்து மிகுவதால் பாடம் வேறுபடும் நிலை அகநானூற்றுப் பதிப்புகளில் ஓரிடத்தில் காணப்பெறுகிறது. அது அச்சுப் பிழையுடன் கூடியதாகும். அதுகுறித்த விளக்கம் வருமாறு:

**38:17 கூஉங்க ணஃதெம் (பிற)-கூங்க ணஃதெம்**

இவ்விரு பாடங்களுக்கும் எவ்விதப் பொருள் மாற்றமும் இல்லை. மயிலம்வே.பதிப்பில் காணலாகும் பாடத்தில் அளபெடை மட்டும் காணப்பெறவில்லை. இந்நிலையில் அளபெடையுடன் கூடிய பாடத்தையே காலப்பழைமையுடைய பாடமாகக் குறிக்கலாம். பெரும்பாலான பதிப்புகளில் அளபெடையுடன் கூடிய பாடம் காணப்பெறுவதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கதாகும்.

எனவே, அளபெடையுடன் கூடிய பாடமான 'கூஉங்கணஃதெம்' என்பதையே பொருத்தமானது எனலாம். சங்க இலக்கியத்தில் விளிச்சொல்லும் அளபெடையும் பரவலாகக் கையாளப்பெற்றுள்ளன என்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

மேற்கண்ட கருத்துகளின் வழி 'உயிர் எழுத்து மிகுவதால் வேறுபடுதல்' என்பது அளபெடை மிகுந்து வருவதால் ஏற்பட்டது என்பதனை அறியலாம்.

**மெய்யெழுத்து மிகுவதால் வேறுபடுதல்**

அகநானூற்றுப் பதிப்பின் பாடங்களில் ஏதேனும் ஒன்றில் பிற பதிப்புகளிலிருந்து வேறுபட்டு மெய்யெழுத்து மிகுந்து / குறைந்து வருதல்

இந்நிலையில் அடங்கும். இத்தன்மையில் அமைந்து வேறுபட்ட பாடங்களாக அகநானூற்றுப் பதிப்புகளில் 16 பாடங்கள் காணப்பெறுகின்றன (விவரம்: பின்னிணைப்பு-13). அவை குறித்து விளக்கிச் சரியான பாடத்தை இனங்காண்பதாக இனிவரும் பகுதி அமைகிறது.

**3:8 யுவறியுண் டருந்துபு (பிற.)-உவற்றி உண்டு அருந்துபு (மர்ரே.)**

'மரையாவை வலப்பக்தில் வீழ்த்திக் கொன்றபுலி அதன் இரத்தத்தை ஊற்றி உண்டு / அருந்திச் சென்றது' என்பதனைக் குறிக்க,

"துளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி
யொண்செங் குருதி யுவறியுண் டருந்துபு
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை" (3:8)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன.

இவ்வடிகளில் வரும் '***யுவறியுண் டருந்துபு***' எனும் பாடம் மர்ரே எஸ்.இராஜம் பதிப்பில் '***உவற்றி உண்டு அருந்துபு***' என்று குறிக்கப் பெற்றுள்ளது. 'உவற்றி' என்பதற்கு எவ்விதப் பொருளையும் அறிய இயலவில்லை. 'உவறி' என்பதற்கு 'ஊற்றி' என்ற பொருளை அகநானூற்று உரைகள் வழி அறியமுடிகிறது. எனவே, '***யுவறியுண்டு அருந்துபு***' என்ற பாடத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

**40:2 நீனிறப் பெருங்கடல் (பிற.)-நீர்னிறப் பெருங்கடல் (மயி.)**

கடலின் நிறத்தைக் குறிக்கும்,

"நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப" (40:2)

என்ற அடியில் வரும் '***நீனிறப் பெருங்கடல்***' என்ற பாடத்திற்குப் பதில் மயிலம்வே.பதிப்பில் '***நீர்னிறப் பெருங்கடல்***' என்ற பாடம் பயின்று வந்துள்ளது. இவற்றுள் '***நீனிறப் பெருங்கடல்***' என்ற பாடமே பொருத்தமுடையதாகும். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. கடல் நீலநிறமாக இருக்கும்; அது நீர் மட்டுமான நிறமல்ல. நீருக்கு எந்த நிறமும் கிடையாது.

2. நீனிறப் பெருங்கடல் என்ற பாடத்திற்குரிய உரைக் கருத்தான, "நீல நிறத்தையுடைய பெரிய கடல் ஒலிமிக்கு ஒலிக்கவும்"[50] என்ற உரைக்கருத்தே 'நீர்னிறப் பெருங்கடல்' என்ற பாடம் குறிக்கும் பதிப்பிலும் காணப்பெறுகிறது.

3. 'நீனிறம்' என்று வருவதற்குப் பதில் 'நீர்னிறம்' என்று 'ர' கர ஒற்று மிகுந்து அச்சுப்பிழையாக அமைந்துள்ளது என்று கருதலாம்.

மேற்கண்ட தன்மையிலேயே யன்பிலை யாகுதல் (பிற.)–யன்பிலை யாதல் (மயி.) (172:14), யானின் கொடுமை (பிற.)–யானிவன் கொடுமை (மயி.) (298:19) ஆகிய வேறுபாடுகளும் அமைகின்றன. மேற்கண்ட கருத்துகள், விளக்கங்கள் அடிப்படையிலே இப்பாடவேறுபாடுகளிலும் ***'யன்பிலையாதல், யானின் கொடுமை'*** என்பனவற்றைப் பொருத்தமானவைகளாகக் குறிக்கலாம்.

**120:13 சேர்ந்தனை செலினே (பிற.)–சேந்தனை செலினே (சமா.)**

பகற்குறிக்கண் நெய்தல் நிலத்தில் தலைவியைச் சந்திக்க வந்த தலைவனிடம் 'நீ இங்குத் தங்கிச் செல்வதினால் ஏதேனும் பழி வருமோ?' என்று வினவுவதைக் குறிப்பதாக,

> "வல்வில் லிளையரொ டெல்லிச் செல்லாது
> சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ" (120:12–13)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன.

இவ்வடிகளில் வரும் ***'சேர்ந்தனை செலினே'*** எனும் பாடம் சமாஜப் பதிப்பில் ***'சேந்தனை செலினே'*** என்று மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது. 'சேர்ந்தனை, சேந்தனை' என்பனவற்றில் எவ்விதப் பொருள் மாறுபாடும் இல்லையெனினும் காலப்பழைமை, மிகுதியான பயன்பாடு இவற்றின் அடிப்படையில் ***'சேர்ந்தனை செலினே'*** என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

இந்நிலையிலேயே சேர்ந்தனிர்–சேந்தனிர் (200:12), சேர்ந்தனை சென்மோ–சேந்தனை சென்மோ (350:9), சேர்ந்தனை செலினே–சேந்தனை செலினே (398:21) ஆகிய பாடவேறுபாடுகளும் அமைகின்றன. இப்பாடவேறுபாடுகள் சமாஜப் பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு

ஆகியனவற்றில் காணப்பெறுவனவாகும். சமாஜப் பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகிய இருபதிப்பு முயற்சிகளிலும் எஸ்.வையாபுரிப்பிள்ளை இருந்ததால் இத்தகைய ஒத்த நிலையிலான வேறுபாடுகள் ஏற்பட்டிருக்கக்கூடும் எனலாம்.

**212:12 மின்னுவசிப்(பு) (பிற.)–மின்னுவசிபு (மு.காசி.)**

குட்டுவன் பகைவருடன் போரிட்டு எழும் திறமானது 'மின்னலால் வானைப்பிளந்து எழும் மழைமேகம் போல் உள்ளது' என்று குறிப்பதாகப் பின்வரும் அடிகள் அமைகின்றன.

> "...................... மின்னுவசிப்
> புரவுக்கார் கடுப்ப மறலி மைந்துற்று
> விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇப்
> படைநிலா விலங்குங் கடன்மரு டானை
> மட்டவிழ் தெரியன் மறப்போர்க் குட்டுவன்" (212:12–16)

இவ்வடிகளின் முதலில் காணலாகும் '***மின்னுவசிப்பு***' எனும் பாடம் மு.காசி.பதிப்பில் 'மின்னுவசிபு' என்று குறிக்கப்பெற்றுள்ளது. இவ்விரு பாடங்களுக்கும் இடையில் எவ்விதப் பொருள் மாறுபாடும் இல்லை. இருப்பினும் காலப்பழைமையையும் மிகுதியான பயன்பாட்டையும் முன்வைத்து '***மின்னுவசிப்பு***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிப்பிடலாம்.

இத்தன்மையை ஒத்ததாகவே களிறொடு–களிற்றொடு (249:8), காதலுண்டெனி–காதல் உண்டென்னி (268:6), தறுகணாளர்–தறுகண்ணாளர் (269:5) வாச்செலவணக்கிய–வாய்ச்செல் வணக்கிய (314:10), பைப்பய–பைபய (341:1), வாமான் றிண்டேர்க்–வாம்மான் திண்தேர்க் (400:13) ஆகிய பாடங்களும் அமைகின்றன (பதிப்புகளின் பயன்பாட்டிற்குப் பின்னிணைப்பு–13). இவற்றுள் காலப்பழைமை, மிகுதியான பயன்பாடு இவற்றின் அடிப்படையில், '***களிற்றொரு, காதலுண்டெனி, தறுகணாளர், வாச்செல வணக்கிய, பைப்பய, வாமான் றிண்டேர்க்***' என்பனவற்றைப் பொருத்தமான பாடங்களாகக் குறிக்கலாம்.

***399:7 வுடைக்கணீண்டமை (ராஜ.)–உடைக்கணீடமை (பிற.)***

*தாழத் தோன்றிய ஊற்று நீர் பற்றிய பதிவினைக் குறிக்க,*

*“கடற்றடை மருங்கிற் கணிச்சியிற் குழித்த*
*வுடைக்க ணீண்டமை யூற லுண்ட” (399:6–7)*

*என்ற அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் ‘**வுடைக்க ணீண்டமை**’ எனும் பாடம் ராஜகோபாலார்யன் பதிப்புகள் தவிர்ந்த பிறவற்றில் ‘**உடைக்கணீடமை**’ என்று குறிக்கப் பெற்றுள்ளது. இவ்விரு பாடங்களில் ‘**உடைக்கணீடமை**’ எனும் பாடமே பொருத்தமானதாகும். அதற்கான காரணங்கள் வருமாறு:*

*1. ‘உடைக்க ணீண்டமை’ என்ற பாடத்திற்கு எவ்விதப் பொருண்மையையும் அறிய இயலவில்லை.*

*2. ஊற்றுக் குழியின் ஆழம் பற்றிய இப்பதிவில் ‘நீண்டது’ (மிகுந்த ஆழம்) என்ற பொருளைக் குறித்தல், ஆநிரைகள் குடித்தல் என்பது பொருந்தாது. ‘தாழ்த்தல்’ என்பது சிறிது ஆழமாக இருத்தலைக் குறிக்கும்.*

*3. ‘தாழ்த்தல்’ எனும் பொருள் தரும் ‘உடைக்கணீடமை’ என்ற பாடமே பொருத்தமானதாகும்.*

*மேற்கண்ட விளக்கங்கள் வழி அறியப்பெற்ற கருத்துகளாகப் பின்வருவனவற்றைக் குறிக்கலாம். ராஜகோபாலார்யன் பதிப்பின் பாடங்கள் மிகுதியாகப் பொருந்துகின்றன. சமாஜப் பதிப்பு, மர்ரே எஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றின் பாடங்களே ராஜகோபாலார்யன் பதிப்பின் பாடங்களுடன் மிகுதியாக வேறுபடுகின்றன. மு.காசி. பதிப்பு, மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியவற்றின் பாடங்கள் ராஜகோபாலார்யன் பதிப்புகளின் பாடங்களிலிருந்து 4 இடங்களில் வேறுபடுகின்றன.*

***உயிர்மெய்யெழுத்து வேறுபாடுகள்***

*ஒரு பதிப்பின் பாடத்திலிருந்து பிறிதொரு பதிப்பின் பாடம் ஓர் உயிர்மெய்யெழுத்து மிகுந்து / குறைந்து வருவதன்வழி வேறுபடுதல் ‘உயிர்மெய்யெழுத்து வேறுபாடுகள்’ ஆகும். இத்தன்மையில் அகநானூற்றுப் பதிப்புகளில் 15 பாடங்கள் காணப்பெறுகின்றன*

(விவரம்:பின்னிணைப்பு-14). அவற்றில் சரியான பாடங்களைப் பின்வரும் தன்மையில் இனங்கண்டறியலாம்.

**6:22 யினிமையெவன் (பிற.)–இனியெவன் (சமா.,மயி.)**

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம் தலைவி 'உன் பொய்ம்மொழி என்ன செய்யும்?' என்று கூறி இடித்துரைக்கும் நிலை பற்றியதாகப் பின்வரும் அடிகள் பயின்று வந்துள்ளன. அவ்வடிகள் வருமாறு:

"மிளமை சென்று தவத்தொல் லஃதே
யினிமையெவன் செய்வது பொய்ம்மொழி யெமக்கே" (6:21–22)

இவ்வடிகளில் வரும், ***'இனிமையெவன்'*** எனும் பாடம் சமாஜப் பதிப்பு, மயிலம்வே.பதிப்பு ஆகியனவற்றில் ***'இனியெவன்'*** என்று மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது. இவ்விரு பாடங்களில் '***இனியெவன்***' எனும் பாடமே பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'இனிமையெவன்' எனும் பாடத்தைக் கொள்ளும் பதிப்புகள் "நின் பொய்ம்மொழி எங்களுக்கு இனிமை செய்வது எவனென்றாள்"[51] என்று பொருள் குறிக்கின்றன. 'இனியெவன்' எனும் பாடத்தைக் கொள்ளும் பதிப்புகளில் உரையுடன் கூடிய பதிப்பான மயிலம்வே.பதிப்பு "நின் பொய்ம்மொழி எமக்கு இனிச் செய்வதென்னோ?"[52] என்று குறிப்பிடுகிறது.

2. இனிமை செய்வது எவன்? என்பதைவிட இனிச்செய்வது என்ன? என்பது பொருத்தமுடையதாக அமைகிறது.

3. தலைவனின் புறத்தொழுக்கத்தால் மனம்வருந்தும் தலைவிக்கு அவன் பொய்ம்மொழி இனிமையைத் தராது; இந்நிலையில் அவனின் பொய் தெரிந்தவுடன் 'என்னசெய்ய முடியும்' என்பதையே பொருத்தமானதாகக் கருதலாம்.

**11:2 வுருப்பவி ரங்காட் (பிற.)–வுருப்பவிர் அரங்காட் (மயி.)**

பாலைநிலம் பற்றிய,

"வான மூர்ந்த வயங்கொளி மண்டில
நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட்
டிலையில மலர்ந்த முகையி லிலவங்" (11:1–3)

எனும் அடிகளில் வரும் '***வுருப்பவி ரங்காட்(டு)***' எனும் பாடம் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் '***வுருப்பவிர் அரங்காட்(டு)***' என்று குறிக்கப்பெற்றுள்ளது.

மேற்கண்ட இரண்டு பாடங்களைக் குறிக்கும் வெவ்வேறு பதிப்புகளும் ஒரே பொருளையே குறிக்கின்றன. "தீயெனச் சினந்தெரிந்த வெப்பம் விளங்கும் காட்டகத்தே"[53] என்பதே அப்பதிப்புகள் தரும் உரைக்கருத்தாகும். இந்நிலையில் 'உருப்பவிர் அரங்காட்(டு)' என்பதில் வரும் 'அ'கரத்தை அச்சுப்பிழையாகக் கருதி, காலப்பழைமையைக் கருத்தில் கொண்டு '***வுருப்பவிர் அங்காட்(டு)***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

மேற்கண்டவாறு அச்சுப்பிழை தொடர்பான கவனக்குறைவால் உயிர்மெய் எழுத்து மிகுந்து / குறைந்து பாடம் வேறுபட்டனவாகப் பின்வருவன அமைகின்றன. நாயுடை–நாயுடைய (16:1), வெரீஇய–வெரீஇ (40:14), வம்மு ணெடுங்கொடி–வம்பமு ணெடுங்கொடி (96:4), வள்புவலித் தூரி–வள்வலித்தூரி (104:4), யன்பிலையாகுதல்–யன்பிலையாதல் (172:14) புல்லென் மாமலை–புல்லென் மாலை (203:15), யானின் கொடுமை–யானிவன் கொடுமை (298:19), வேலியெஞ் சிறுநல்லூரே–வேலிருயெஞ் சிறுநல்லூரே (310:17), னினிதினியைந்த–னினிதினி னியைந்த (328:7) (பதிப்பு விவரங்களுக்குப் பின்னிணைப்பு-14).

இவற்றுள் அச்சுப்பிழை நீங்கிய, பொருள் மாறுபாடற்ற, காலப்பழைமையான சரியான பாடங்களாக, '***நாயுடை, வெரீஇ, வம்மு ணொடுங்கொடி, வள்புவலித்தூரி(ன்), யன்பிலை யாகுத(ல்), புல்லென் மாமலை, யானின் கொடுமை, வேலியெஞ் சிறுநல்லூரே, னினிதினியைந்த்***' ஆகியனவற்றைக் குறிப்பிடலாம். இப்பாடவேறுபாடுகளில் வேறுபட்ட பாடங்களைக் குறிக்கும் உரைப்பகுதியில் பொருத்தமான பாடங்களுக்கான உரைக்கருத்துகள் அமைந்ததினால் இத்தகு தன்மையினை எளிதாகக் கண்டறிய, விளக்க இயன்றது. இத்தன்மையிலான பிழைகள் மூலபாடப் பதிப்புகளில் தவிர்க்கப்பட வேண்டியனவாகும்.

***28:3 கொய்யா முன்னுகுங் (ராஜ.,சமா.)–கெய்யா முன்னும் (பிற.)***

*தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லும் தோழி தினைக்கதிர் பற்றி,*

*"கொய்யா முன்னுகுங் குரல்வார்பு தினையே" (28:3)*

*என்று குறிப்பிடுகிறாள். இவ்வடியில் வரும் '**கொய்யா முன்னுகுங்**' எனும் பாடம் ராஜகோபாலார்யன் பதிப்புகள், சமாஜப்பதிப்பு ஆகியன தவிர்ந்த பிறவற்றில் '**கொய்யா முன்னும்**' என்று குறிக்கப்பெற்றுள்ளது.*

*'கொய்யா முன்னுகுங், கொய்யா முன்னும்' இரண்டும் பொருள்நிலையில் மாற்றம் அற்றவை; யாப்பியல் நிலையில் மாற்றமுடையவை. அத்தன்மை விளக்கம் வருமாறு:*




*'முன்னுகும்' என்று பாடம் கொள்ளும்போது, 'நிரையொன்றா சிரியத்தளையும் 'முன்னும்' என்று பாடம் கொள்ளும்போது 'கலித்தளையும்' வருகின்றன. எனவே, ஆசிரியத்தளை வரும் '**கெய்யாமுன்னுகும்**' எனும் பாடமே பொருத்தமானது என்று குறிக்கலாம்.*

*இதேபோல் பொருள் மாற்றமின்றி யாப்பியல் நிலையில் மாற்றம் பெறும் பாடவேறுபாடாக, நெகிழ்ந்த தோளே–நெகிழ்ந்தன தோளே (270:4) (பதிப்புகள் விவரம்: அட்டவணை–14) என்பது அமைகிறது. இதுகுறித்த விளக்கம் வருமாறு:*

நி    நே    நே  நே

நெகிழ்ந்/த    தோ/ளே

↓

நேரொன்றாசிரியத்தளை

நி    நி    நே

நெகிழ்ந்/தன    தோ/ளே

↓

இயற்சீர் வெண்டளை

மேற்கண்ட விளக்கங்கள் வழி ஆசிரியப்பாவிற்குரிய தளைவரும் '***நெகிழ்ந்த தோளே***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***29:8 மேவறண்டா (பிற.)–மேல்தண்டா (மயி.)***

தலைவியின் கண்கள் பற்றிய இப்பாடம் மயிலம்வே.பதிப்பில் மட்டும் '***மேல்தண்டா***' என்று குறிக்கப் பெற்றுள்ளது. அப்பாடத்திற்கு அப்பதிப்பின் உரை, "பொருந்துதல் அமையாத மகிழ்ந்து நோக்குமையுண்ட கண்"[54] என்று பொருள் குறிக்கிறது. 'மேவல் தண்டா' எனும் பாடம் குறிக்கும் பதிப்புகளில் ந.மு.வே., கரந்தை.உரையே தெளிவாகக் காணப்படுகிறது. அவ்வுரை, "களிப்பு மேவுதல் குறையாத பார்வையினையுடைய மையுண்ட கண்களை"[55] என்று பொருள் குறிக்கிறது.

'பொருந்துதல்' என்பதைவிடக் 'களிப்பு மேவுதல்' என்ற பொருளைப் பொருத்தமுடையதாகக் கூறலாம். அதற்கான காரணங்களாவன:

1. தலைவி, தலைவனைக் காணும்போது மகிழ்வுடன் இருப்பாள். அதனால் அவன், அவளை அவ்வாறு பாராட்டியிருக்க வாய்ப்புண்டு.

2. 'பொருந்துதல்' என்பது இவ்விடத்திற்குப் பொருத்தமாக அமையவில்லை. இதனால் '***மேவல் தண்டா***' எனும் பாடத்தைப் பொருத்தமானது எனலாம்.

***122:9 மரவவாய் (பிற.)–அரவாய் (மர்ரே.)***

இரவுக்குறியின் ஏதம் பற்றிக் குறிக்கும் தலைவி, தோழியிடம் நாயின் தன்மை பற்றிப் பின்வருமாறு கூறுகிறாள்.

"மரவவாய் ஞமலி மகிழாது மடியிற்
பகலுரு வுறழ்நிலாக் கான்று விசும்பி
னகல்வாய் மண்டில நின்றுவிரி யும்மே" (122:9–11)

இவ்வடிகளில் வரும் '***அரவவாய் ஞமலி***' எனும் பாடம் மர்ரே எஸ்.இராஜம் பதிப்பில் '***அரவாய் ஞமலி***' என்று குறிக்கப்பெற்றுள்ளது. 'அரவவாய்' என்பதற்கு, "ஒலிமிக்க வாயினையுடைய நாய்"[56] என்ற பொருள் காணப்பெறுகிறது. 'அரவாய்' என்பதற்கு எந்தப்பொருளையும் அறிய இயலவில்லை. 'அரவவாய்' என்பதில் வரும் 'வ'கரம் அச்சுப் பிழையால் விடுபட்டிருக்குமோ என்று எண்ணத்தோன்றுகிறது. எனவே, '***அரவவாய்***' எனும் பாடத்தினையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

ஓர் எழுத்து மிகுவதால் வேறுபடுதல் எனும் தன்மையில் உள்ள மூன்று பகுதிகளிலுமான (உயிர், மெய்,உயிர்மெய் மிகுதல்) 33 வேறுபாடுகளில் 6:22,23:3,29:8 ஆகிய பாடல்களுக்கான பாடவேறுபாடுகள் மட்டும் பொருள் மாற்றமுடையனவாக அமைகின்றன. பிற 30 வேறுபாடுகளிலும் எவ்விதப் பொருள் மாற்றமும் இல்லை; எழுத்து நிலையால் மட்டுமே வேறுபடுகின்றன. இவற்றை அச்சுப்பிழை என்றே குறிக்கலாம். இவற்றை முற்றிலுமான வேறுபாடுகள் என்று கருதுதல் இயலாது.

**குறில், நெடில் வேறுபாடுகள்**

அகநானூற்றுப் பதிப்புகளில் ஒரு பதிப்பில் குறில் எழுத்தாக வந்து அமையும் பாடம் பிறிதோர் பதிப்பில் நெடில் எழுத்தாக அமைந்தும் ஒரு பதிப்பில் நெடில் எழுத்தாக அமையும் பாடம் பிறிதோர் பதிப்பில் குறில் எழுத்தாக அமைந்தும் பாடம் வேறுபடுவது 'குறில், நெடில் வேறுபாடுகள்' ஆகும். இத்தன்மையிலான வேறுபாடுகளில் பொருள் மாற்றமின்றி எழுத்து மட்டுமான வேறுபாடுகளே பெரும்பான்மை உள்ளன. இக்குறில், நெடில் வேறுபாடுகள் அகநானூற்றுப் பதிப்புகளிடையே 44 இடங்களில் காணப்பெறுகின்றன (விவரம்:பின்னிணைப்பு–15). அவை பின்வருமாறு விளக்கப்பெறுகின்றன.

**7:10 நவ்வி (பிற.)–நவ்வீ (மயி.)**

இளைய மான்பற்றிய இவ்வருணனையில் வரும்,

"யேறுடை யினத்த நாறுயிர் நவ்வி" (7:10)

என்ற அடிக்கான ***'நவ்வி'*** எனும் பாடம் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் ***'நவ்வீ'*** என்று விளித்துக் கூறப்பெற்றுள்ளது.

'நவ்வி' என்பதற்கு உரை கூறும் பழைய உரை, "நவ்வி–விளி, நவ்வீ"[57] என்று குறிக்கிறது. ந.மு.வே., கரந்தை. உரை, "உயிர்ப்புத் தோன்றும் இளைய மானே"[58] என்று விளித்தே பொருள் குறிக்கின்றனர். எனவே, ***'நவ்வீ'*** என்ற விளியுடன் கூடிய பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிப்பிடலாம்.

***8:8 வழையொடு (பிற.)–வாழையொடு (சமா.)***

குறிஞ்சி நிலத்தின் வளமை பற்றிக்கூறும்,

"கழைநரல் சிலம்பி னங்கண் வழையொடு" (8:8–9)

எனும் அடிகளில் வரும் ***'வழையொடு'*** எனும் பாடம் சமாஜப் பதிப்பில் ***'வாழையொடு'*** என்று குறிக்கப்பெற்றுள்ளது.

மேற்கண்ட அடிகளுக்கான உரைக்கருத்தாக ந.மு.வே.,கரந்தை. உரை, "சுரபுன்னையோடு வாழை ஓங்கி வளர்ந்த தாழ்ந்த இடத்தையுடைய நீர்அறாக் குழியில்"[58அ] என்று பொருள் குறிக்கிறது. இதன்வழி 'வழை' என்பதற்குச் 'சுரபுன்னை' என்ற பொருளையும் 'வாழை' என்பதற்கு 'வாழைமரம்' என்ற பொருளையும் இவ்விடத்தில் அறிய முடிகிறது. எனவே, 'சுரபுன்னை, வாழை' இரண்டு பொருளையும் குறிக்கும் ***'வழையொடு வாழை'*** என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம். 'வாழையொடு' எனும் பாடத்தை அச்சுப்பிழையாகக் குறிக்கலாம்.

***13:19 கழனி நெல்லின் (பிற.)–கழனி நெல்ஈன் (சமா.,மர்ரே.)***

வயல்வெளியின் செழிப்பு பற்றி விளக்குவதாக,

"லழனுதி யன்ன தோகை யீன்ற
கழனி நெல்லின் கவைமுத லலங்க" (17:18–19)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் ***'கழனி நெல்லின்'*** என்ற பாடத்திற்குப் பதில் சமாஜப் பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் ***'கழனி நெல்ஈன்'*** எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது.

நெற்கதிர் பற்றிக்கூறும் இவ்வடிகளுக்கு வரும் இருவேறுபட்ட பாடங்களில் '***கழனி நெல்லின்***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'தோகையீன்ற கழனி நெல்லின் முதல்' என்பது பொருத்தமாக அமைகிறது. இது, 'கழனி நெல்லின்' எனும் பாடம் தரும் கருத்தாகும்.

2. 'தோகையீன்ற கழனி நெல் ஈன்ற முதல்' என்பது 'கழனிநெல்ஈன்' எனும் பாடம் தரும் கருத்தாகும்.

3. 'கழனி நெல்ஈன்' எனும் பாடம் தரும் இரு பதிப்புகளும் மூலம் மட்டுமான பதிப்புகளாக அமைவதால் அதன் நேரடியான உரைப் பொருண்மையையும் அறிய முடியவில்லை.

4. உரையுடன் கூடிய பெரும்பான்மையான பதிப்புகள் 'கழனி நெல்லின்' எனும் பாடத்தையே குறித்துள்ளன.

**16:17 பேணினெ(ன்) (பிற.)-பேணினேன் (மயி.)**

தலைவனின் புதல்வனைத் தெருவில் கண்ட பரத்தை அவனை எடுத்து மார்பில் அணைத்தபோது தலைவியைக் கண்டு அச்சமுற்றாள். ஆனால், தலைவி 'அவன் உனக்கும் மகன் என்று கூறி' அவள் அச்சத்தைப் போக்கிய நிலையைக் கூறி அவளைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறாள்.

"களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா
நாணி நின்றோ ணிலைகண் டியானும்
பேணினெ னல்லனோ மகிழ்ந வானத்
தணங்கருங் கடவுளன் னோணின்
மகன்றா யாதல் புரைவதாங் கெனவே" (16:15-19)

இவ்வடிகளில் வரும் '***பேணினென்***' எனும் பாடம் மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பில் '***பேணினேன்***' என்று குறிக்கப்பெற்றுள்ளது. இவ்விரு பாடங்களில் '***பேணினென்***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'பேணினென்' என்பதையே பெரும்பான்மையான பதிப்புகள் குறிக்கின்றன.

2. சங்க இலக்கியப் பதிப்புகள் பெரும்பாலானவற்றிலும் பெரும்பாலான நூல்களிலும் இத்தன்மையிலான பாடங்கள் குறில் எழுத்தைக் கொண்டே அமையும்; நெடில் எழுத்தாக்கிக் குறிப்பது பிற்காலப்பதிப்புகளே ஆகும். இது படிப்பதற்கு எளிமையாக்கி அமைக்கப்பெற்றதாகும்.

3. பழங்காலப் பாடமாகக் குறில் எழுத்தைக் கொண்ட பாடத்தைக் குறித்தலே பொருந்தும்.

மேற்கண்ட நிலையில் வாசிப்புத் தன்மையினை நினைவில் கொண்டு நெடில் எழுத்தாக்கப்பெற்ற பாடங்களாகப் பின்வருவன அமைகின்றன. அவை: *மெய்யிற்றீரா–மெய்யிற்றிரா (28:1), யுப்போ யுமண(ர்)–உப்பொயுமணர் (30:5), உழல்வென் கொல்லோ–உழல்வேன் கொல்லோ (45:15), தழீஇயினே னாக–தழீஇயி னெனாக (49:7), நின்னொடி யானு(ம்)–நின்னோடியானும் (73:8), வுயக்கமொ(டு)–உயக்கமோடு (85:2), கழறலிர்–கழறலீர் (130:2), காதலந்தோழி–காதலந்தோழீ (135:6), குருகொ டாலுந்–குருகோ டாலுந் (145:15) மொழிவென்–மொழிவேன் (222:3), களிறொடொன்று–களிறோடொன்று (238:12), வெம்மொ டொராறு–எம்மோடு ஓராறு (257:4), மாயினேம்–மாயினெம் (262:13), றொராஅ வுருட்டுங்–ஒராஅ வுருட்டுங் (265:19), நீடலராகி வருவர்–நீடலராகி வருவார் (298:21), ணுப்பொய் யுமணர்–ணுப்போயுமணர் (310:14), கருங்கட் காளையொடு–கருங்கட் காளையோடு (321:12) யானுமறிவென்–யானு மறிவேன் (335:4), துறைகே ழூரன்–துறைகெ ழூரன் (336:10), பயங்கே ழூர–பயங்கெ ழூர (346:11), நினைவிலென்–நினைவிலேன் (369:9), கடுவனொடுகளுங்–கடுவனோடுகளுங் (378:21), தொடுத்தென் மகிழ்ந–தொடுத்தேன் மகிழ்ந (396:1), னல்லென் மந்தி–னல்லேன் மந்தி (396:11).*

மேற்கண்ட கருத்துகளின் அடிப்படையில் இந்த 24 பாடவேறுபாடுகளில் குறில் எழுத்துகளுடன் கூடிய பாடங்களே பொருத்தமுடையன என்று குறிப்பிடலாம். அப்பொருத்தமான பாடங்கள் வருமாறு:

*மெய்யிற்றிரா (28:1), உப்பொயுமணர் (30:5), உழல்வென் கொல்லோ (45:15), தழீஇயினெனாக (49:7), நின்னொடியானு(ம்) (73:8), வுயக்கமொ(டு) (85:2), கழறலிர் (130:2), காதலந் தோழி (135:6), குருகொ*

*டாலுந் (145:15) மொழிவென் (222:3), களிறொடொன்று (238:12), வெம்மொடொராறு (257:4), மாயினெம் (262:13), றொராஅ வுருட்டுங் (265:19), நீடலராகி வருவர் (298:21), ணுப்பொய் யுமண(ர்) (310:14), கருங்கட் காளையொ(டு) (321:12), யானுமறிவென் (335:4), துறைகெ ழூரன் (336:10), பயங்கெழூர (346:11), நினைவிலென் (369:9), கடுவனொடுகளுங் (378:21), தொடுத்தென் மகிழ்ந (396:1), னல்லென் மந்தி (396:11).*

**175:3 விடுதொறும் (பிற.)–வீடுதொறும் (சமா.)**

பாலைநிலத்தின் கொடுமையையும் அங்குள்ள மறவர்களின் செயல்களையும் பற்றிக் குறிப்பதாகப் பின்வரும் அடிகள் பயின்று வருகின்றன.

> "வீங்குவிளிம் புரீஇய விசையமை நோன்சிலை
> வாங்குதொடை பிழையா வன்க ணாடவர்
> விடுதொறும் விளிக்கும் வெவ்வாய் வாளி
> யாறுசெல் வம்பல ருயிர்செலப் பெயர்ப்பிற்
> பாறுகிளை பயிர்ந்து படுமுடை கவரும்
> வெஞ்சுர மிறந்த காதலர்" *(175:1–6)*

இவ்வடிகளில் வரும் '***விடுதொறும்***' எனும் பாடம் சமாஜப் பதிப்பில் '***வீடுதொறும்***' என்று பயின்று வந்துள்ளது. 'அம்பை இழுத்து மறவர்கள் வழிப்போவாரைத் தாக்கும்' நிலைபற்றிய இப்பதிவிற்கு '***விடுதொறும்***' எனும் பாடமே பொருத்தமுடையதாகும். இங்கு 'வீடுதொறும்' எனும் பாடத்தை அச்சுப்பிழையாகக் கருதலாம்.

**215:15 வல்வாய்ப் பேடைக்கு (பிற.)–வல்வாய்ப் பெடைக்கு (மயி.)**

பாலைநிலத்தில் மறவர்களால் கொல்லப்பெற்று இறந்து கிடக்கும் வழிச்செல்வோரின் கண்மணிகளைப் பிடுங்கிப் பருந்து தன் பெட்டைக்குக் கொடுத்த காட்சியினை,

> "கூர்நுதிச் செவ்வா யெருவைச் சேவல்
> படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ
> மல்லன் மொசிவிர லொற்றி மணிகொண்டு
> வல்வாய்ப் பேடைக்குச் சொரியு" *(215:12–15)*

எனும் அடிகள் விளக்கும். இவ்வடிகளில் வரும் '***வல்வாய்ப்பேடைக்கு***' எனும் பாடம் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில், '***வல்வாய்ப் பெடைக்கு***' என்று குறிக்கப்பெற்றுள்ளது.

பேடை, பெடை எனும் இரு சொற்களும் பறவைகளின் பெண்பாலான பெட்டையைக் குறிக்கும் என்றாலும் 'பேடைக்கு' எனும் பாடமே பெரும்பாலான பதிப்புகளில் குறிக்கப்பெற்றுள்ளது. 'பெடைக்கு' எனும் பாடம் பிற்காலப் பதிப்பான மயிலம்வே.பதிப்பில் மட்டுமே காணப்பெறுகிறது. இப்பதிப்பில் காணலாகும் உரை முற்காலப் பதிப்பின் உரையான (மு.காசி.பதிப்பு), "வலிய வாயினையுடைய தன் பேடைகட்கு"[59] எனும் உரைக்கருத்தையே குறிக்கிறது. இவற்றின்வழி, '***வல்வாய்ப் பேடைக்கு***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

மேற்கண்ட குறில், நெடில் வேறுபாட்டுத் தன்மையின்வழிப் பெறப்பெற்ற கருத்துகளாகப் பின்வருவனவற்றைக் குறிக்கலாம்.

- குறில், நெடில் வேறுபாடுகளில் 29 இடங்கள் மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பில் காணப்பெறுகின்றன.
- குறில், நெடில் வேறுபாடுகளாக அமையும் 29 வேறுபாடுகளில் அகம்.13:19 ஆம் வேறுபாடு மட்டுமே பொருள் மாற்றம் உடையதாக அமைகிறது. பிற எழுத்து மாற்றமுடையனவாகவே அமைகின்றன.
- 328 ஆம் பாடல் 8 ஆம் அடியில் வரும் 'றேற்றாகுதனற்' எனும் பாடத்தை 1933 இல் ராஜகோபாலார்யன் 'றெற்றா குதனற்' என்று திருத்தி அமைக்கிறார். இது 'றிற்றாகுதனற்' என்று பாடற்பகுதியில் அச்சாகியுள்ளது. இவைபோன்ற அச்சுப்பிழைகள் தவிர்க்கப்பெற வேண்டியனவாகும்.

### ஓரெழுத்திற்குப் பதில் பிறிதோர் எழுத்து வருதல்

அகநானூற்றுப் பதிப்புகளில் ஓரெழுத்திற்குப் பதில் பிறிதோர் எழுத்து வந்து பாடம் வேறுபடுவனவாக 166 பாடவேறுபாடுகள் காணப்பெறுகின்றன. அவற்றைக் கீழ்வரும் இரண்டு நிலைகளில் பகுத்து விளக்கலாம்.

1. அச்சுப்பிழையாக வருவன

2. பொருள்நிலை வேறுபாடுகளாக வருவன.

**அச்சுப்பிழை–பாடவேறுபாடுகள்**

ஓரெழுத்திற்குப் பதில் பிறிதோர் எழுத்து வந்து பாடம் வேறுபடும் தன்மையில் அச்சுப்பிழையால் வரும் பாடவேறுபாடுகள் அகநானூற்றுப் பதிப்புகளில் 154 இடங்களில் (விவரம்:பின்னிணைப்பு-16) காணப்பெறுகின்றன. இத்தன்மையிலான பாடவேறுபாடுகள் மிகுதியாக மயிலம்வே.பதிப்பில் (111 இடங்கள்) காணப்பெறுகின்றன. இப்பாடவேறுபாடுகள் அச்சுப்பிழையால் நேர்ந்தவை என்பதனைப் பின்வரும் கருத்துகளின் வழிக் கண்டறியப்பெற்றன. அவை:

1. அச்சுப்பிழையாகக் கருதப்பெறும் பாடங்கள் இடம்பெறும் பதிப்புகளுக்கு முன்னர்த் தோன்றிய பதிப்புகள் பொருத்தமான பாடத்தைக் குறித்து அச்சுப் பிழையுடனான பாடத்தைக் கொண்டிருக்கும் பதிப்புகளிலிருந்து மாறுபட்டிருப்பதைக் கண்டு அதன்வழித் தெளிதல்.

2. அச்சுப்பிழையிலான பாடம் உள்ள பதிப்பில் உரை காணப்பெறும்போது, அவ்வுரை அதற்கு முன் வந்த பதிப்புகளில் காணப்பெறும் சரியான பாடத்திற்கான உரைக்கருத்தைக் கொண்டிருப்பதன் வழித் தெளிதல்.

மேற்கண்ட கருத்துகள் வழிப் பெறப்பட்ட அச்சுப்பிழையற்ற, பொருத்தமான பாடங்களாகப் பின்வருவனவற்றைக் குறிக்கலாம். *குரங்குளைப் பொலிந்த (4:8), நிரைநிலை (5:14), புதல்வன் (5:22), முடிவுமுதிர் புன்னை (10:13), கான்யாற்று (11:8), மூறில் வழிகளும் (18:11), இகுழுநரிகழா (25:12), விடாஅலிவையென (26:9), கடிய வென்னார் (27:3), வென்றனிர் (30:15), இலையில (31:5), ஞெகிழ்பஞுருற்றவென் (32:10), மாசின்றாதலும் (32:19), அகன்தலை சிவப்ப (36:14), மறப்பனோ (39:5), முளிபுனமீமிசை (39:8), ஏற்றேக் கற்ற வுலமரல் (39:24), மடமையோரே (40:15), துறைவன் (40:16), வலனேர் பிரங்கி (43:2), பாஅய்த் (43:7), விலங்கெழுந்து (47:4), பரிமுடுகு (48:20), கடியுடை வியனகர்ச் (49:14), வில்லிட (53:10), கோபச் செந்நிலம் (54:4), நெஞ்சினோன் (56:16), தானே (57:10), கொற்றச் சோழர் (60:13), சேட்புலம் படர்ந்தோர் (61:3), நோயுழந்(து) (61:4), புணர்வுபிரிந்*

*திசைப்பக் (62:7), அழுங்கினன் (66:26), கறைத்தோல் நிரைகண்டன்ன (67:13), மாமலர்த் (69:1), வகையில (69:2), கழனிமாநீர் (70:10), கொல்லெனத் (72:6), கல்லடார்ச் சிறுநெறி (72:17), நின்வலித் தமைகுவன் (74:14), வானவன் மறவன் (77:15), வயக்களிற் றொருத்த லிரும்பிணர்த் (78:4–5), வன்புலந் (79:5), கோட்சுரம் படர (79:14), கானத் தலறக் (83:3), யெரிபுரை (84:11), வீங்குசிலை மறவர் (89:10), மந்தியு மறியா (92:8), விரைஇ (94:5), சூருறை வெற்பன் (98:5), யாங்கு வல்லுநள்கொ றானே (105:4), கல்காய் கானத்து (105:120), ஞெமையத்து (111:5), பரித்திடூஉப் பழிச்சிய (115:9), தகைவெங் காதலன் (117:12), மறுகிற் றூங்குஞ் (118:14), இகல்கொள (118:6).*

*சோறுபொதி (121:12), நிரைபுடன் (123:3), பொருடருதலும் (123:3), நிலம் வருத்துறாஅ (124:4), தமியோர் (125:12), நின்வாய் (126:1), காவிரிப்பேரியாற் (126:5), பரத்தலினன்பல (134:14), மிகுகரைப் பேர்யாற் (137:7), வெண்புறக்குடைய (139:10), மதர்கயன் (140:10), நாஞ்சி றுஞ்சி (141:5), உவக்குநள் 144:11), கலங்கிய பொறிவரி (151:6), னுண்கோ லகவுநர்ப் (152:4), வொதுங்குவன (155:12), கணவ னோம்புங் (160:8), யேத்தொழினவின்ற (160:11), தொல்லென வொலிக்கும் (160:16), சில்வளை நெகிழ (163:4), வடவயின் (177:16), இயம்பச் (184:18), போஓரன்னவென் (186:16), யுடைத்தலோ விலனே (186:17), தருமணன் ஞெமிரிய (187:9), யணற்றாழ் பன்ன (187:14), மழைக்கணமர்ந்து (190:5), குடச்சூல் (198:9), மடிவாய்த் தண்ணுமை (204:10), நாப்பட் பெரும்பெயர்க் (205:11), குருகி யாஅங்கு (206;15), வேண்டின் (208:3), நண்பகலுற்ற (208:8), செருவிற் புண்கூர்ந்து (208:8), துருவினை நன்னருளான் (208:14), வானிணப் புகவின் (213:8), கால்புகு (213:13), கொல்லிக்குடவரை (213:15), அமிழ்தொடு பெறினுஞ் (213:18), செவ்வழிவகுப்ப (214;13), டொழிந்திவ ணுறைதல் (215:17), உணர்குவெ னல்லென் (226:1), வஞ்சி சாஅய (226:9), யினையல் (227:5), கடாத்தொடு (227:6), வோங்குபெரு (227:16), செல்சமங் கடந்த (231:11), லன்னநின் னாடுவண்டு (231:13–14) மகளிருயர்பிறை தொழூஉம் (239:9), கைதொழுதேத்தி (240:8), பெறாஅராகி (245:10), பசலை பாயவென் (253:1), மிசைமரஞ் சேர்த்திய (257:14), வலியா யின்னுந் (259:18), மென்மெல வியலிநின் (261:6), கோடுகொ ளருஞ்சருங் (263:8), இமயச் (265:3), செருமிகு (266:21), சிறுவிரல் வரித்த (275:18), தவலி லுள்ளமொடு (277:4),*

*போர்புரியெருத்தம் (277:16), னயவருசீறியாழ் (279:11), வெம்மை நீங்கப் (283:11), வெம்மைய பயில்வரின் (285:7) வந்துவினை வலித்த (289:5), நிறைவன விமைக்கும் (291:9), கிலங்குவளை நெகிழ்ந்த (292:7), பணைத்தோள் (295:5), துறையு மான்றின்று (300:16).*

*மருவினமாலை (301:26), யீர்ம்புறம் வரிப்பப் (304:15), பழைமையிற் (307:13), கலுழ நின்மாட் (310:5), மாத ராகலிற் (310:8), நுனிகொள் பருவர (314:17), பரத்தைமை (316:10), ளிளைய ணனிபே ரன்பினள் (319:14), நடுங்கயிர் போழ்ந்த (320:11), வேறுவேறியல வாகி (327:3), மைதூங் கிறும்பிற் (329:12), னேரிறை முன்கை (336:23), னவணதாக (337:5), மான்றின்று பொழுதென (340:11), கிளைஞ ளல்லனோ (342:3), கள்வர் பெருமகன் (342:6), பசப்புறு (344:12), மண்ணார் முழவின் (346:14), ஞெமன்ன் (349:3), புகன்மலி நெஞ்சமொடு (351:3), மலர்பிணைத் தன்ன (361:2), தொடுதோற் கானவன் (368:1), ருள்ளா ராயினு முளனே (378:19), வுயக்கத்தன்ன (392:3), சிதைவுநன் கறீஇப் (392;4), கான்மடி யிரவிற் (392:12), னலந்தருவேனே (392:28), வாய்படு மருங்கின் (399:18).*

**வேறுபாடுகளாக அமைதல்**

ஓர் எழுத்திற்கு மாறாக பிறிதோர் எழுத்து வந்து, ஓரெழுத்தால் பாடம் மாறுபட்டுச் சொல்நிலையிலான வேறுபாடாக அமைவதாக அகநானூற்றுப் பதிப்புகளில் 12 இடங்கள் (விவரம்: பின்னிணைப்பு-17) காணப்பெறுகின்றன. அவை குறித்து விளக்குவதாக இனிவரும் பகுதி அமைகின்றது.

**30:20 னொன்று நினைந்தொற்றி (பிற.)–ஒன்றுநினைந் தேற்றி (மு.காசி.)**

பொருள்வயிற்பிரியக் கருதிய தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியதாக வரும் இப்பாடலில், ***'ஒற்றி, ஏற்றி'*** எனும் இரு பாடங்களுக்கும்

"போக்கு உடன்படாமையை நினைத்துத் துணிந்து"[60]

என்ற பொருண்மையே உரைக்கருத்தாகப் பதிவு செய்யப்பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் 'ஒற்றி' என்பது 39 இடங்களிலும் (குறுந்.213:2,நற்.28:1, 322:6,370:8,பரி.16:23,கலி.55:17,83:2,84:26,106:11,35,அகம்.2:14,5:20,

*18:4,54:18,58:13,59:8,215:14,227:4,252:3,263:7,267:3,292:9,388:25, புறம்.44:3,368:15,369:21,370:18,372:1,374:6,378:8,381:13,383:3,390:8, 393:20,394:7,397:10,பெரு.106,முல்.75,மது.642)* 'ஏற்றி' எனும் சொல் *10* இடங்களிலும் *(பரி.19:87,பரி.தி.1:65,கலி.95:27,106:16,அகம்.393:14, புறம்.159:11,168:10,பொரு.167,பெரு.99,233)* காணப்பெறுகின்றன. இவ்விரு சொற்களுக்கான பொருண்மைகளில் துணிந்து என்ற தன்மை காணப்பெறவில்லை. மேலும் அகராதிப் பொருண்மைகளிலும் இத்தன்மையை அறிய இயலவில்லை. எனவே, சமகால இலக்கியப் பயன்பாடு, காலப்பழைமை, பெரும்பான்மை இவற்றைக் கருத்தில் கொண்டு ***'ஒன்று நினைந்து ஒற்றி'*** என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். இவ்வகையிலேயே ***யென்மக னொற்றி(பிற.)-யென்மக னேற்றி(மயி.)***(56:18) என்ற பாடவேறுபாடும் அமைகிறது. இப்பாட வேறுபாட்டிலும் மேற்கண்ட தன்மை அடிப்படையில் ***'யென்மக னொற்றி'*** என்பதே பொருத்தமாக அமைகிறது என்று குறிக்கலாம்.

**40:3 மென்பறைத் தொழுதி (பிற.)-மென்சிறைத் தொழுதி (மயி.)**

நெய்தல் நிலம் பற்றிக் குறிக்கும் இப்பாடலில் பின்வரும் அடிகள் பயின்று வந்துள்ளன.

> "கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப
> நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
> மீனார் குருகின் மென்பறைத் தொழுதி" (40:1-3)

இவ்வடிகளின் இறுதியில் வரும் ***'மென்பறைத் தொழுதி'*** எனும் பாடம் மயிலம்வே.பதிப்பில் ***'மென்சிறைத் தொழுதி'*** என்று மாற்றிக் குறிக்கப்பெற்றுள்ளது. இம்மாறுபட்ட இரு பாடங்களில் ***'மென்பறைத் தொழுதி'*** என்ற பாடமே பொருத்தமானதாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'மென்பறை' என்ற பாடம் இடம்பெறும்பதிப்புகளில் காணலாகும் உரைக்கருத்தே 'மென்சிறை' என்ற பாடம் காணலாகும் பதிப்பிலும் காணப்பெறுகிறது.

2. ‘மென்சிறை’ என்ற பாடம் காணலாகும் பதிப்பின் பதவுரைப் பகுதியில் ‘மென்பறைத் தொழுதி’ என்ற பாடமே குறிக்கப்பெற்று உரைப்பகுதி இடம்பெறுகிறது.

3. ‘மென்சிறை’ என்ற பாடம் குறித்திருக்கும் பதிப்பின் ஒப்புமைப் பகுதி ‘மென்பறை’ என்பதற்கானதாகவே அமைகிறது. இதன்வழி ‘மென்சிறை’ என்பதனை அச்சுப்பிழை என்று கருத வாய்ப்புண்டு.

4. பறை[61], சிறை[62] எனும் இருசொற்களும் ‘இறகு’ எனும் பொருள் தருவதால் இம்மாற்றம் ஏற்பட்டிருக்கலாம் என்று கருதலாம்.

**83:6 பெரும்பொழி வெண்ணார் (ராஜ.,சமா.)–பெரும்பொளி வெண்ணார் (பிற.)**

பாலை நிலத்தில் உள்ள கடம்ப மரத்தின் அடியில் பிளந்து நார் உரித்தல் பற்றி விளக்குவதாக,

“பெரும்பொழி வெண்ணா ரழுந்துபடப் பூட்டி” (83:6)

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் ‘**பெரும்பொழி**’ என்பது ராஜகோபாலார்யன் பதிப்புகள் (1920, 1923, 1926, 1933), சமாஜப் பதிப்பு (1940) ஆகியன தவிர்ந்த பிறவற்றில் ‘**பெரும்பொளி**’ என்று மாற்றிக் குறிக்கப் பெற்றுள்ளது. மாறுபட்ட இவ்விரு பாடங்களுக்கும் இருவேறுபட்ட பதிப்புகளிலும் ஒரே பொருளே குறிக்கப்பெற்றுள்ளது.

“பெரும்பொழி–பெரிதாக உரித்த உரி”[63]

“பெரும்பொளி வெண்ணார்–பெரிதாக உரித்த
வெள்ளிய நார்க்கயிற்றால்”[64]

என்பன அவ்வுரைக் கருத்துகள். அகநானூற்றில் ‘பொழி’ என்பது நான்கு இடங்களிலும் (24:14,146:10,223:7,366:7) ‘பொளி’ என்பது இவ்விடம் தவிர்ந்து 2 இடங்களிலும் (335:7,397:12) பயின்று வந்துள்ளன. இவ்விரு வகைப்பட்ட பதிவுகளில் ‘பொழி’ என்பது கேடகத்துப் பொழியும் அம்புகள் (24:14), மழை பெய்யப்பட்ட மலரைப்போல (146:10), அழலால் மூடப்பெற்ற யானை போன்று (223:7), இனிமை மிக்க வெள்ளுப்பு (336:7) என்ற பொருண்மைகளைத் தருவதாக அமைகின்றது. ‘பொளி’ என்பது

பட்டையைக் கிழித்து ஊட்ட (335:7), பெரிய பட்டையை யுரிந்த (397:12) என்ற பொருண்மைகளைத் தருகின்றன.

இவற்றின் வழிக் கிழிந்த, பிளந்த என்ற பொருளைத் தருவனவாகப் 'பொளி' என்ற பாடமே அமைகிறது என்பதனை அறியலாம். 335:7, 397:12 ஆகிய பாடல்களில் காணப்பெறும் கிழித்து, பிளந்த என்ற பொருள்தரும் பாடங்கள் ராஜகோபாலார்யன் பதிப்புகளிலும் மாற்றமின்றிக் குறிக்கப் பெற்றுள்ளன. எனவே, 'பெரும்பொழி, பெரும்பொளி' எனும் இருவேறுபட்ட பாடங்களில் ***'பெரும்பொளி'*** என்ற பாடமே பொருத்தமானதாகும் என்று குறிப்பிடலாம்.

இதே பொருண்மையிலேயே ***வீர்வரப் பொழித்து (ராஜ.)- நீர்வரப் பொளித்து (பிற.) (257:15)*** எனும் பாடவேறுபாடும் அமைகின்றது. 'நீர்வரும்படி உரித்து' எனும் பொருள்தரும் இப்பாடவேறுபாட்டிலும் மேற்கண்ட விளக்கங்களின் அடிப்படையில் ***'நீர்வரப் பொளித்து'*** என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**103:1 யெழிலேறு குறித்த (ராஜ.மயி.)-யெழாலேறு குறித்த (பிற.)**

பாலை நிலத்தில் உள்ள குறும்பூழ்ச் சேவல் பற்றிக் குறிப்பதாக,

"நிழலறு நனந்தலை யெழிலேறு குறித்த" (103:1)

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் ***'யெழிலேறு'*** என்ற பாடம் மு.காசி.பதிப்பு, சமாஜப்பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் ***'யெழாலேறு'*** என்று மாற்றிக் குறிக்கப் பெற்றுள்ளது.

இப்பாடவேறுபாடுகளையுடைய பதிப்புகளில் ராஜகோபாலார்யன் பதிப்புகள் (1926, 1933), மு.காசி.பதிப்பு (1943), மயிலம்வே.பதிப்பு (1990) ஆகியன உரையுடன் கூடியனவாக அமைகின்றன. இம்மூன்று பதிப்புகளிலும் காணப்பெறும் உரைகள் வெவ்வேறுபட்ட பொருண்மைகளைத் தருகின்றன. அவை வருமாறு:

> "நிழலற்ற அகன்ற விடத்திலே அழகிய ஏறு என்பதனைக் குறியா நின்ற"[65]

> "நிழலற்ற அகன்ற பாலை நிலத்தே புல்லூற்றினால் ஏற்றுதல் குறிக்கப்பெற்ற"[66]

"நிழலற்ற அகன்ற இடத்தையுடைய காட்டின் கண்ணே
எழுகின்ற உருமேற்றினைக் குறிக்குமொலியுடைய"[67]

இம்மூன்று உரைக்கருத்துகளும் மூன்றுவிதமான பொருண்மைகளைத் தருகின்றன. அதேவேளை ராஜகோபாலார்யன் பதிப்புகள், மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியனவற்றில் பாடம் ஒன்றாகக் குறிக்கப் பெற்றிருந்தாலும் உரைக்கருத்துகளில் மாறுபடுவதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

இங்குள்ள உரைக்கருத்துகளில் 'புல்லூறு' என்பதற்கு எவ்விதப் பொருளையும் அறிய இயலவில்லை. உருமேறு (இடி) பற்றிய குறிப்பேதும் இப்பாடலில் இல்லை. 'அழகிய ஏறு' என்பது குறும்பூழ்ச் சேவலைக் (ஆண் பறவை) குறித்திருக்கலாம். எனவே, முதல் உரைக் கருத்தைப் பொருத்தமுடையதாகக் கருதி, அக்கருத்தைத் தரவல்ல '***யெழிலேறு குறித்த***' என்ற பாடத்தைச் சரியானதாகக் குறிக்கலாம்.

**275:5 வெண்ணீ றாகென (பிற.)–பெண்ணீ றாகென (மு.காசி.,மயி.)**

மகட்போக்கிய தாய், தலைவியைக் கடிந்து கூறுதல் பற்றிக் குறிக்கும்,

"பிதிர்வை நீரை வெண்ணீ றாகென" (275:5)

என்ற அடியில் வரும் '***வெண்ணீறாகென***' எனும் பாடம் மு.காசி. பதிப்பிலும் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பிலும் '***பெண்ணீறாகென***' என்று குறிக்கப்பெற்றுள்ளது. இவ்விருவேறுபட்ட பாடங்களில் '***பெண்ணீ றாகென***' எனும் பாடமே பொருத்தமானதாகும். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'வெண்ணீறு' என்பது பிடிசாம்பலைக் குறிக்கும். அப்பொருள் பொருந்தும் தன்மை இப்பாடலில் இல்லை.

2. 'பெண்ணீறு' என்பதற்கு, 'பெண்ணின் தன்மை' என்ற பொருண்மையை உரைக்கருத்துகள் வழி அறியமுடிகிறது. மகட்போக்கிய தாய், தன் மகளைக் கண்டித்த போது இவ்வாறு கூறியதாக எண்ணுகின்ற இந்நிலைக்குப் பொருந்துவதாக அமைகிறது.

3. ‘பெண்ணீறு’ என்பது ‘வெண்ணீறு’ என்று அச்சுப்பிழையுடன் பதிவு செய்யப் பெற்றிருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது.

***278:6 முற்றின வாயின (ராஜ.,மயி.)–முற்றின வாயின் (பிற.)***

மேகம் சூழ்ந்த மழைபெய்யும் நிலைபற்றி விளக்குவதாகப் பின்வரும் அடிகள் பயின்று வந்துள்ளன.

> “குணகடன் முகந்த கொள்ளை வானம்
> பணைகெழு வேந்தர் பல்படைத் தானைத்
> தோனிரைத் தனைய வாகி வலனேர்பு
> கோணிமிர் கொடியின் வசிபட மின்னி
> யுருமுர றதிர்குர றலைஇப் பானாட்
> பெருமலை மீமிசை முற்றின வாயின” (278:1–6)

இவ்வடிகளின் இறுதியில் வந்துள்ள ***‘முற்றின வாயின’*** எனும் பாடம் ராஜகோபாலார்யன் பதிப்புகள் (1920, 1923, 1926, 1933) மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு (1990) ஆகியன தவிர்ந்த பிறவற்றில் ***‘முற்றின வாயின்’*** என்று குறிக்கப்பெற்றுள்ளது.

இவ்வடிகள் ஒரு நிகழ்வைக் கூறி நிறைவு செய்து அடுத்த நிகழ்வைத் தொடங்கும் நிலையில் அமைகின்றன. ‘கீழ்க்கடலில் நீரை முகந்த மேகங்கள், வலமாக எழுந்து இடி இடித்து மின்னிப் பானாள் இரவில் மழை பெய்தது, அதனால் அருவி பெருக்கெடுத்தது’ என்பதனைக் குறிப்பதாக இவ்வடிகள் காணப்பெறுகின்றன. ‘மேகம் மழைபெய்ததனால், அருவி பெருக்கெடுத்தது’ எனும் இருநிலைப்பட்ட கருத்துகளையும் இணைக்கும் இணைப்புச் சொல்லாக ‘ஆயின/ஆயின்’ எனும் வேறுபட்ட பாடங்கள் குறிக்கப் பெற்றுள்ளன. இவற்றுள் ‘ஆயின’ என்பதற்கு எவ்விதப் பொருளும் அறிய இயலவில்லை. ‘ஆயின்’ என்பது இணைப்புப் பொருண்மையைத் தருவது கண்கூடு. எனவே, ***‘முற்றினவாயின்’*** என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். ஓலைச்சுவடிகளில் ஒற்றெழுத்து குறிக்கப்பெறாதிருக்கும் என்பதனால் ‘ஆயின’ என்று இருந்திருக்க வேண்டும். அதனையே ராஜகோபாலார்யன் பதிப்புகளும் மயிலம்வே.பதிப்பும் பதிவு செய்திருக்கலாம் என்று குறிக்கலாம். இருப்பினும் ‘முற்றின ஆயின்’ என்பதே பொருத்தமுடையது என்பது இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

***340:10 வள்ளெயிற் றரவொடு (பிற.)–வள்ளெயிற் றரவாடு (சமா.)–வல்லெயிற் றிறவொடு (மயி.)***

உப்பங்கழியில் பாம்போடு மீன்களும் திரியும் எனும் கருத்தைக் குறிக்கும்,

"வள்ளெயிற் றரவொடு வயமீன் கொட்குஞ்" *(340:10)*

என்ற அடியில் வரும் ***'வள்ளெயிற் றரவொடு'*** எனும் பாடம் சமாஜப் பதிப்பில் ***'வள்ளெயிற் றரவாடு'*** என்றும் மயிலம்வே.பதிப்பில் ***'வல்லெயிற் றிறவொடு'*** என்றும் மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் ***'வள்ளெயிற் றரவொடு'*** எனும் பாடமே பொருத்தமானதாகும். அதுகுறித்த விளக்கங்கள் வருமாறு:

*1.* 'உப்பங்கழியில் வலிமையான பற்களைக் கொண்ட பாம்பினோடு மீன்களும் திரிகின்றன' என்பது இவ்வடியின் பொருளாகும். இங்கு பாம்பினோடு என்பதற்கு 'அரவொடு' என்பதே பொருந்தும். எனவே, 'அரவாடு' என்பது அச்சுப்பிழையாக இருக்கலாம்.

*2.* 'வல்லெயிற் றிறவொடு' என்று பாடம் குறிக்கும் பதிப்பும் 'வலிமையான பற்களைக் கொண்ட பாம்பினோடு மீன்களும் திரியும்' எனும் உரைக்கருத்தையே குறிக்கிறது.

*3.* பாடத்தில் மாறுபட்டாலும் உரைக்கருத்தில் மாறுதல் இல்லை. எனவே, மாறுபட்ட பாடங்களை அச்சுப்பிழை என்று கருதலாம்.

***346:9 வருத்திக் கொண்ட (பிற.)–வருந்திக் கொண்ட (மு.காசி.,மயி.)***

உழவர்கள் வயலில் நீர் பாய்ச்சும் பொருட்டு அமைத்த அணையிலிருந்து நீர் வழிவது பற்றியதாக,

"வருத்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை<br>மீதழி கடுநீர்" *(346:9–10)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் ***'வருத்திக் கொண்ட'*** எனும் பாடம் மு.காசி.பதிப்பு, மயிலம்வே.பதிப்பு ஆகியனவற்றில் ***'வருந்திக் கொண்ட'*** என்று மாற்றிக் குறிக்கப்பெற்றுள்ளது. இவ்விரு வேறுபட்ட பாடங்களில் ***'வருத்திக் கொண்ட'*** என்பதே பொருத்தமானது எனலாம். அதுகுறித்த விளக்கங்கள் வருமாறு:

*1.* வயல்வெளியில் நீரைப் பாய்ச்சுவதற்காக நீர்தேக்கும் உழவன் வருந்திக் கொண்டு (வருத்தத்துடன்) நீரைத் தேக்குவதில்லை. ஆனால், தன் உடலை வருத்திக் கொண்டு நீரைத் தேக்குகிறான்.

*2.* உடலை வருத்துதல் என்பதே உடலை 'வருந்துதல்' என்பதாக மாற்றிப் பதிவு செய்யப்பெற்றிருக்க வேண்டும். இது அச்சுப்பிழையாக இருக்கலாம்.

*3.* 'வருத்திக் கொண்ட' என்ற பாடத்தைக் குறிக்கும் பதிப்புகளின் உரைப்பகுதியில் 'உழவன் தன்னை வருத்திக் கொண்டு நீரைத் தேக்கி வைத்தநிலை' மெல்லிதாக இழையோடுகிறது.

***369:16 சுவர்முதல் (ராஜ.)–கவர்முதல் (பிற.)***

ஓமை மரம் பற்றியதாக வரும்,

"............................ சுவர்முத
லோமை நீடிய வுலவை நீளிடை" *(369:16–17)*

என்ற அடிகளில் உள்ள '***சுவர்முதல்***' எனும் பாடம் ராஜகோபாலார்யன் பதிப்புகள் தவிர்ந்த பிறவற்றில் '***கவர்முதல்***' என்று மாற்றிப் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

ஓமை மரம் பற்றிக் கூறும் இவ்வடிகளில் உள்ள 'சுவர்முதல்' என்பதற்கு, அதனோடு (ஓமை மரத்தோடு) தொடர்புடைய எப்பொருளையும் அறிய இயலவில்லை. அதேவேளை 'கவர்முதல் ஓமை' என்று வரும்போது 'கவர்த்த (பரந்த) அடிகளையுடைய ஓமை' எனும் பொருளை அறிய முடிகிறது. எனவே, 'சுவர்முதல், கவர்முதல்' என்பனவற்றில் '***கவர்முதல்***' என்ற பாடமே பொருத்தமானது என்று குறிப்பிடலாம்.

***399:2 யிமயக் கான நாறுங் (பிற.)–இமையக் கானம் நாறுங் (மு.காசி., மர்ரே.)***

தலைவியின் கூந்தலைப் பற்றிக் குறிக்கும்போது, அவள் கூந்தல் நலத்திற்கு உவமை கூறும் விதமாக,

"சிமையக் குரல சாந்தருந்தி யிருளி
யிமயக் கான நாறுங் கூந்த
னன்னுத லறிவை .........." *(399:1–2)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் '***யிமயக் கான நாறுங்***' எனும் பாடம் '***இமையக் கான நாறுங்***' என்று மாறுபட்டு, மு.காசி.பதிப்பு, மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் குறிக்கப்பெற்றுள்ளன.

'இமயம், இமையம்' எனும் இரண்டும் ஒரு பொருளைக் குறிப்பனவாகவே அமைகின்றன. முதல் அடியில் 'சிமையக்குரல' என்று வந்திருப்பதால் அடித்த அடி அதற்கு எதுகையாக வரும் பொருட்டு 'இமையம்' என்று அமைவதே சரி என்று பிற்காலப் பதிப்பாளர்கள் கருதியிருக்க வேண்டும். அதனாலேயே 'இமையக் கான நாறுங்' என்ற பாடத்தைக் குறித்திருக்கலாம். இருப்பினும் காலப்பழைமையைக் கருத்தில் கொண்டு '***இமயக் கான நாறுங்***' என்ற பாடத்தையே இங்குப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

மேற்கண்ட வேறுபாடுகளில் பொருத்தமற்ற/வேறுபட்ட பாடத்தை ராஜ.பதிப்புகள், மு.காசி.பதிப்பு ஆகியன முறையே ஐந்தைந்து இடங்களிலும் *(83:6,257:15,275:5,278:6,369:16,30:20,56:18,103:11,346:9,399:2)* சமாஜப் பதிப்பு, மயிலம்வே.பதிப்பு ஆகியன முறையே நன்நான்கு இடங்களிலும் *(83:6,103:1,275:5,340:10,40:3,278:6,340:10, 346:9)* குறிக்கின்றன. மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு மட்டும் இரு இடங்களில் *(103:1,275:5)* வேறுபடுகின்றது. இதன்வழி இப்பகுதியில் மிகுதியான அளவில் பொருத்தமான பாடத்தைக் கொண்ட பதிப்பாக மர்ரேஎஸ்.இராஜம் பதிப்புத் திகழ்வதை அறியலாம்.

**அடிக்குறிப்புகளுடன் கூடிய வேறுபாடுகள்**

அகநானூற்றுப் பதிப்புகளிடையே காணலாகும் பாடம் வேறுபடுதல் மட்டுமின்றிப் பதிப்பாசிரியரால் குறிக்கப்பெறும் பிறிதோர் பாடமும் இடம்பெறும் தன்மை இவ்வகையில் அடங்கும். இத்தன்மை சொல்நிலையில் அடிக்குறிப்பு வருதல் எனும் நிலையினதாகும். அடிநிலையில் அடிக்குறிப்பு வரும் பகுதிகளும் உண்டு. அது முன்னர் விளக்கப்பெற்றுள்ளது. அடிக்குறிப்புகளுடன் கூடிய சொல்நிலையில் பாடவேறுபாடு கொண்ட இத்தன்மையை மூன்று நிலைகளில் பகுத்து விளக்கலாம். அவை:

1. ஒரு பதிப்பில் மட்டும் அடிக்குறிப்புக் காணப்பெறுதல்

2. இரண்டு பதிப்புகளில் அடிக்குறிப்புகள் காணப்பெறுதல்

3. மூன்று பதிப்புகளில் அடிக்குறிப்புகள் காணப்பெறுதல்.

**ஒரு பதிப்பு-அடிக்குறிப்புக் காணப்பெறுதல்**

அகநானூற்றிற்கான 5 பதிப்புகளில் சமாஜப் பதிப்பு (1940), மர்ரே எஸ். இராஜம் பதிப்பு (1958) ஆகியன தவிர்ந்த பிற மூன்று பதிப்புகளும் (ராஜகோபாலார்யன் பதிப்புகள் 1920,1923,1926,1933, மு.காசி.பதிப்பு 1943,1944, மயிலம்வே.பதி.1990) அடிக்குறிப்புகளுடன் காணப்பெறுகின்றன. அகநானூற்றுப் பதிப்புகளிடையே (5 பதிப்புகளிலும்) ஏதேனும் ஒரு பாடம் வேறுபட்டு அப்பாடத்திற்கு ஏதேனும் ஒரு பதிப்பில் மட்டும் அடிக்குறிப்பும் கொடுக்கப் பெற்றிருக்குமாயின் அதனை, ‘ஒரு பதிப்பில் மட்டும் அடிக்குறிப்புக் காணப்பெறுதல்’ எனும் வகையில் அடக்கலாம். இத்தன்மை அகநானூற்றுப் பதிப்புகளில் 117 இடங்களில் (விவரம்: பின்னிணைப்பு-18) காணப்பெறுகின்றது. அது குறித்த விளக்கங்கள் பின்வருமாறு அமைகின்றன.

**1:7 தோழி சிறந்த (பிற.)-தோழீஇ சிறந்த (தோழி சிறந்தநின்) (மயி.)**

‘தலைவன் முன்பு சொன்ன சொல்லை மறந்துவிட்டானே’ எனும் கருத்தைத் தோழியிடம் தெரிவிக்கும் வகையில்,

“மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த” (1:7)

என்ற அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் ‘தோழி’ எனும் பாடம் மயிலம்வே.பதிப்பில் ‘தோழீஇ’ என்று குறிக்கப்பெற்றுள்ளது. அதேவேளை அப்பதிப்பின் அடிக்குறிப்பில் அடுத்த சீரையும் சேர்த்து, ‘தோழி சிறந்தநின்’ என்ற பாடம் காணப்பெறுகிறது.

இவ்வகையில் ‘தோழி சிறந்த’ எனும் பாடம் ‘தோழீஇ சிறந்த, தோழி சிறந்த நின்’ எனும் இருநிலையில் வேறுபட்டு மூன்று பாடங்களாகக் காணப்பெறுகின்றன. இவற்றுள் ‘**தோழி சிறந்த**’ எனும் படத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. பாடலின் கருத்து, ‘பிரியமாட்டேன் என்று சொன்ன தலைவன் என் தோள் நெகிழும்படி வருத்திவிட்டுப் பிரிந்துவிட்டான்’ என்பதாக

அமைகிறது. இவ்விடத்தில் இயல்பாக வரும்போது பொருள் உணர்த்தி விடுகிறது; அளபெடை தேவையில்லை.

2. தலைவி தன்நிலையைத் தோழியிடம் கூறும்போது 'நின் பணைத்தோள் நெகிழும்படிப் பிரிந்துவிட்டான்' என்று சொல்வது பொருத்தமற்றது. 'நின்' என்பது தோழியாகிய முன்னிலையைக் குறித்துவருவதாக அமையும். எனவே, தன் பணைத்தோள் நெகிழும் தன்மையைக் குறிப்பதான, 'பணைத்தோள் நெகிழ' என்பதனையே பொருளாகக் குறிக்க வேண்டும்.

3. பிற்காலத்து வந்த பதிப்பான 'மயிலம்வே.பதிப்பில்' மட்டுமே 'தோழீஇ, சிறந்தநின்' எனும் பாடங்கள் குறிக்கப் பெற்றுள்ளன. அதற்கு முந்தைய பதிப்புகளில் இத்தன்மை அடிக்குறிப்பில் கூடக் காணப்பெறவில்லை. எனவே, காலப்பழமையையும் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

இத்தன்மையிலேயே *தோழீஇ-தோழி (தோழீஇ) (352:11)* பாடவேறுபாடும் அமைகிறது. அப்பாடவேறுபாட்டிலும் 'தோழி' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

***3:9 கடுமுடை (பிற.)-கடிமுடை (கடுமுடை) (மயி.)***

பாலை நிலத்தில் எருவையானது, 'புலி கொன்று வீழ்த்தி உண்டுவிட்டுச் சென்ற மரையாவின் புலால் நாற்றமுடைய கடிய தசையைக் கவர்ந்து கொண்டது' என்னும் நிகழ்வை விளக்குவதாகப் பின்வரும் அடிகள் அமைகின்றன.

> "மான்றுவேட் டெழுந்த செஞ்செவி யெருவை
> வான்றோய் சிமைய விரல்வரைக் கவாஅற்
> றுளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி
> யொண்செங் குருதி யுவறியுண் டருந்துபு
> புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
> கொள்ளை மாந்தரி னானாது கவரும்" (3:5-10).

இவ்வடிகளில் வரும் 'கடுமுடை' எனும் பாடத்திற்குப் பதில் மயிலம்வே.பதிப்பில் 'கடிமுடை' எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது.

‘கடுமுடை’ என்பது அப்பதிப்பின் அடிக்குறிப்பில் இடம்பெறுகிறது. எனவே, ***‘கடுமுடை, கடிமுடை’*** எனும் இருபாடங்களில் பொருத்தமானதைக் கண்டறிவது இன்றியமையாததாகிறது.

‘முடை’ என்பது புலாலைக் குறிக்கும்[68]. இது கடிய தசையைக் கொண்டதாக அமைகிறது என்பதனைக் குறிப்பதாகக் ‘கடுமுடை’ எனும் பாடம் அமைகிறது. அதேவேளை ‘கடிமுடை’ என்பது ‘கடிபட்ட புலால் (தசை)’ எனும் பொருளைத் தருவதாக அமைகிறது. இவ்விரு பொருண்மைகளும் இப்பாடலின் சூழலுக்குப் பொருந்துகின்றன. எனினும் ‘கடிமுடை’ எனும் பாடத்தை முதன்மையாகக் குறித்து ‘கடுமுடை’ எனும் பாடத்தை அடிக்குறிப்பில் குறிக்கும் பதிப்பான மயிலம்வே. பதிப்பின் உரை,

> “மூட்டுவாய் கழிந்த கடிய தசையைக் கொள்ளை
> கொள்ளும் மாந்தர் போல”[69]

என்று ‘கடுமுடை’ என்ற பாடத்திற்கான உரைக்கருத்தையே குறிக்கிறது. ‘கடிமுடை’ என்பதற்கான உரை அப்பதிப்பில் இல்லை.

அப்பதிப்பின் உரையாசிரியர் ‘கடுமுடை’ என்பதையே பொருத்தமுடையதாகக் கொள்கிறார் என்பதனை இதன்வழி அறியலாம். இதற்கு முந்தைய பதிப்புகளிலும் ‘கடுமுடை’ என்ற பாடம் இடம் பெறுவதும் இங்குக் குறிக்கத்தக்கது. இவற்றின் அடிப்படையில் ‘***கடுமுடை***’ எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம். இவ்வகையில் கடிமுடை என்பதனை அச்சுப் பிழையாகக் கருதலாம்.

இவ்வகையில் அச்சுப்பிழையாகக் கருதத்தகுந்த அடிக் குறிப்புகளுடன் கூடிய பாடவேறுபாடுகளாக அகநானூற்றில் 81 (விவரம்: பின்னிணைப்பு-19) பாடங்கள் காணப்பெறுகின்றன.

பாடலின் சூழல், உரைத்தன்மை, காலப்பழைமை, பெரும்பான்மை ஆகியனவற்றைக் கொண்டு எழுத்துப் பிழையுடன் கூடிய பாடங்களும் பொருத்தமான பாடங்களும் இனங்கண்டறியப்பெற்றன. அவ்வகையில் மேற்கண்ட 81 பாடவேறுபாடுகளில் இனங்கண்டறியப்பெற்ற பொருத்தமான பாடங்கள் வருமாறு:

கோட்டுமீன் கொண்டி (10:11), மராஅயானை (13:7), றுளுநாட்டன்ன (14:5), பரக்கக் (15:4) விரைவனென் கவைஇக் (16:14), லூழுறுபுதிர்ந்த (18:1), கலிழ்ந்துவீழ் (19:13), வின்னுயிர் குழைய (22:18), கூன்முள் (26:1), யல்லதை (29:12), முள்ளினை யுளிவாய் (33:10), யெமியமாக (33:12) பசைகொள் மெல்விரல் (34:11) றுணையொடு திளைக்குங் (34:13), வெயில்வெரி நிறுத்த (37:10), கோல்வரைந் தன்ன (37:13), றேதில் பொருட்பிணி (43:14), கொற்றச்செழியன் (46:13), மூசி போகிய (48:9), யல்குபத மிகுத்த (49:14), யீரணிப் பொலிந்த (59:13), வயர்ந்ததன் (66:26), பறைபுடன் (67:3), தேரு நெஞ்சமொடு (71:1), வளங்கெழு மாமலை (91:2), பெண்டிரின்னா கூறுவ (95:12), வியன்மனை (103:8) தன்பி னெஞ்சத் (107:2).

மடப்பிடிக் கயந்தலை (121:5), சொரிபுற முரிஞிய (121:8), றமியோர் (125:12), முன்னிலைச் செல்லார் (125:18), வீயிலையமன்ற (137:10), பெண்டிரல்குற் (157:1), மன்ற மராஅத்த கூகை (158:13), கவலை காதலர் (159:11), துறைஞரல்லர் (159:20), காழ்கோத் தொழிந்ததை (169:4), பெருந்தோ ணெகிழ்ந்த (169:13), யெரியிதழலரியொடிடைபட (191:2), சீரினிரங்க (194:8), கொடுங்கோ (195:13), கழங்கின் றிட்ப (195:15), மறா வருபனி (195:16),நிறைசுனை (198:16), வலம்படு கொற்றந் (199:21), கடவுளாக்கிய (209:16), கேளாயெல்ல (211:1), நெறிந்த கூந்தல் (213:23), வவ்வலர்ப் (216:6), தேக்கமல் சோலைக் (225:9), மழைதுளி (225:13), மிளைஇய (228:9), செம்முகை முருக்கினப் (229:16), பொங்குபு துளிப்ப (235:6), முகிழ்த்துவர விளமுலை (242:16), கன்னெடுங் கவலைய (245:19), டரும்பட ரெவ்வமொடு (250:10), முரவுவாய் (260:12), வன்பிலாள னறிவுநயந் (260:15), மழுவர்த் தாங்கிய (269:4), புனறெளி காலையு (279:13), கோதைய டிணிமண லடைகரை (280:2), வேங்கைக் கண்ணிய னிழிதரு (282:10), பாவிரிந்தன்ன (293:4).

சிறுநனி யான்றிக மென்றி (301:3), தோருயிர் மாக்களும் (305:8), மலிர்சுனைக் குவளை (308:11), நற்போர் வானவன் (309:10), மெய்யை யழிவுமுந் துறுத்துப் (310:3), குவிகட் பசுங்கா (315:11), செல்லினங் கடுப்ப (323:9), கடுங்குர லேற்றொ (323:11), வாளையொ டுழப்பத்துறை (336:5) செங்கோ லுடனமர் (338:3), வீங்குவிசைப் பிணித்த (339:1), கூட்டுபு நிகழ்த்திய (340:17), லெல்லுத்தொழின் மடுத்த (340:19), கொடிஞ்சி யொலிய (344:10), வாய்க்கதில் வாழி (347:9), கழியு நிற்றந்து (398:14).

மேற்கண்ட பொருத்தமான பாடங்களுக்கு எதிராக அமையும் அச்சுப்பிழையாகக் கருதத்தகும் பாடவேறுபாட்டுத் தன்மைகளைக் கீழ்வரும் 4 நிலைகளில் பகுத்துக் குறிப்பிடலாம். அவை:

1. ராஜகோபாலார்யன் பதிப்புகளில் முதன்மையாகக் குறிக்கப்பெற்ற பாடங்கள் பிறபதிப்புகளின் (மு.காசி. பதிப்பு 19:13,228:9, மயிலம்வே.பதிப்பு 19:15 உட்படப் பிற.) அடிக்குறிப்பில் இடம்பெறுதல் (13:7,18:1,19:13,22:18,26:1,29:12,33:10,33:12,34:13,37:10,37:13, 42:8,46:13,48:9,49:14,59:13,66:26,71:1,95:12,107:2,125:12,125:18,137:10, 158:13,159:11,169:4,169:13,191:2,194:8,195:13,195:15,195:16,199:21, 209:16,211:1,213:23,216:6,225:9,225:13,228:9,229:16,245:19,250:10, 260:12,269:4,280:2,282:10,293:4,301:3,305:8,308:11,309:10,310:3,315:11, 323:9,323:11,338:3,339:1,340:17,340:19,344:10,347:9,398:14).

2. ராஜகோபாலார்யன் பதிப்புகளின் அடிக்குறிப்பில் இடம்பெறும் பாடங்கள் பிற பதிப்புகளில் (மு.காசி.103:8, மயிலம்வே.பதி.-பிற) முதன்மைப் பாடங்களாகக் குறிக்கப்பெறுதல் (43:14,67:3,103:8,121:5, 121:8,159:20,198:16,223:5,242:16,260:15,279:13).

3. மயிலம்வே.பதிப்பிற்கு(1990) முன்வந்த எந்தப் பதிப்புகளிலும் இடம்பெறாத பாடங்கள், மயிலம்வே.பதிப்பில் இடம்பெறுதல் (10:11, 14:5,15:14,16:14,34:11,91:2,235:6,336:5,398:14).

4. ராஜகோபாலார்யன் பதிப்புகளில் அச்சுப்பிழையுடன் குறிக்கப்பெற்று அப்பதிப்புகளின் அடிக்குறிப்பில் பொருத்தமாகக் குறிக்கப்பெற்றிருக்கும் பாடம் மு.காசி.பதிப்பில் முதன்மையாகக் குறிக்கப்பெற்றிருத்தல் (அகம்.157:1).

**4:9 நரம்பார்ப் பன்ன(ராஜ.)-நரம்பார்த்தன்ன(பிற.)-நரம்பார்த்தன்ன (நரம்பார்ப்பன்ன)(மு.காசி.)**

தேரில்வரும் தலைவன், வண்டுகள் தேனருந்தும்போது குதிரையில் உள்ள மணிகள் ஒலித்தால் அவை களைந்து ஓடும் என்பதனைக் கருத்தில் கொண்டு அம்மணிகளை ஒலிக்கவிடாது செய்தான் என்னும் கருத்தை விளக்குவதாகப் பின்வரும் அடிகள் அமைகின்றன.

"குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேர்" (4:8–12)

இவ்வடிகளில் வரும் ***'நரம்பார்ப்பன்ன'*** எனும் பாடம் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்புத் தவிர்ந்த பிறவற்றில் ***'நரம்பார்த்தன்ன'*** என்று குறிக்கப்பெற்றுள்ளது. மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பில் 'நரம்பார்ப்பன்ன' என்பது அடிக்குறிப்பில் காணப்பெறுகிறது. இவ்விரு பாடங்களில் பொருத்தமானதைக் கண்டறிவது இன்றியமையாததாகிறது.

தலைவன் தேரில் வரும்போது 'தேனை உண்ணும் வண்டுகளின் ஒலி யாழின் நரம்பொலி போல் ஒலிக்க' என்னும் செய்தி நிகழ்காலத் தன்மையினதாகும். இந்நிகழ்காலத் தன்மையினை விளக்குவதாக 'நரம்பார்ப்பன்ன' எனும் பாடமே அமைகிறது. 'ஆர்த்தன்ன' என்பது 'ஒலித்ததுபோல' என்று கடந்தகாலத் தன்மையை உணர்த்துகிறது. எனவே, இவ்விரு பாடங்களில் ***'நரம்பார்ப்பன்ன'*** எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***8:7 புலர வீர்க்கும்(ராஜ. சமா.)–புலவ ஈர்க்கும்(மு.காசி.)–புலாவ ஈர்க்கும்(மர்ரே.)–புலர ஈர்க்கும்(புலாவ வீர்க்கும்)(மயி.)***

'பெரிய ஆண் பன்றியினைக் கொன்ற ஆண் புலி பலாமரங்கள் நிறைந்த மலைப்பகுதியில் புலால் நாற்றமுற அதனை இழுத்துச் சென்றது' என்பதனைக் குறிக்க,

"கேழ லட்ட பேழ்வா யேற்றை
பலாவம லடுக்கம் புலர வீர்க்குங்" (8:6–7)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் ***'புலர வீர்க்கும்'*** எனும் பாடம் மு.காசி.பதிப்பில் ***'புலவ ஈர்க்கும்'*** என்றும் மர்ரே எஸ்.இராஜம் பதிப்பில் 'புலாவ ஈர்க்கும்' என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. மயிலம்வே.பதி. அடிக்குறிப்பிலும் ***'புலாவ ஈர்க்கும்'*** என்பதே இடம்பெறுகிறது.

'புலர' என்பதனைப் 'புலவ' என்று குறிக்கும் மு.காசி பதிப்பில் காணப்பெறும் உரை அதற்கு,

"புலால் நாற அதனை இழுத்துச் செல்லும்"[70]

என்று பொருள் குறிக்கிறது. 'புலர ஈர்க்கும்' எனும் பாடத்தைக் குறிக்கும் பதிப்புகளில் இப்பாடத்திற்கான உரைக்குறிப்புகள் ஏதும் காணப்பெறவில்லை. 'புலர ஈர்க்கும்' என்பதற்கு 'புலரும்படி (காய்ந்துபோகும்படி) ஈர்த்துச் செல்லும்' என்று குறிக்கலாம். ஆண் பன்றியினைப் புலி கொன்று இரத்தம் சொட்டச் சொட்ட இழுத்துச் செல்வதால் அது காய்வதற்கு (புலர்வதற்கு) வாய்ப்பில்லை. எனவே, 'புலவ–புலாவ' ஈர்த்தலே பொருத்தமானதாக அமையும். 'புலவ–புலாவ' என்பன 'புலால் நாற்றமுற' எனும் பொருள் தருவன. இவற்றிலும் 'புலாவ' என்பதே ஒலிப்பு நிலையிலும் பொருத்தமாக அமைகிறது. எனவே, '***புலாவ ஈர்க்கும்***' எனும் பாடத்தையே இங்குப் பொருத்தமுடையதாகக் கருதலாம்.

### 12:8 பழுப்பயங்(பழூஉப்பயம்)(ராஜ.)–பழுப்பயங்(பிற.)–பழூப்பயன் (மயி.)

குறிஞ்சி நிலத்தில் உள்ள பலாப்பழங்களின் பயனைக் குறவர்பெறுவர் என்பதனைக் குறிக்க,

"கிளிவிளி பயிற்றும் வெளிலாடு பெருஞ்சினை
விழுக்கோட் பலவின் பழுப்பயங் கொண்மார்" (12:7–8)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் 'பழுப்பயம்' எனும் பாடத்திற்குப் பதில் மயிலம்வே.பதிப்பில் 'பழூப்பயன்' எனும் பாடம் இடம்பெறுகிறது. ராஜ.பதிப்புகளின் அடிக்குறிப்பிலும் 'பழூப்பயன்' எனும் பாடம் காணப்பெறுகிறது. எனவே, இப்பாடமானது '***பழுப்பயம், பழூப்பயன், பழூஉப்பயம்***' என்ற மூன்று நிலைகளில் காணப்பெறுவதை அறியலாம்.

இம்மூன்று பாடங்களும் பொருள் நிலையில் எவ்வித மாற்றமுமின்றி அமைகின்றன. எனவே, காலப்பழைமை, பெரும்பான்மை இவற்றைக் கருத்தில் கொண்டு '***பழுப்பயங் கொண்மார்***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

### 17:17 கவலைய(கவலையதர்)(ராஜ.)–கவலைய(பிற.)–கவலை(மயி.)

பாலைநிலத்தின் வழிகள் பற்றிக் குறிப்பிடுவதாக,

"தருஞ்சுரக் கவலைய வதர்படு மருங்கி" (17:17)

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் ***'கவலைய'*** எனும் பாடம் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் ***'கவலை'*** என்று குறிக்கப்பெற்றுள்ளது. பிற பதிப்புகளில் 'கவலைய' என்றே காணப்பெறுகிறது. ராஜ.பதிப்புகளின் அடிக்குறிப்பில் ***'கவலையதர்'*** என்றே காணப்பெறுகிறது.

'கவலைய வதர்' என்பதே 'கவலையதர்' என்று ராஜ.பதிப்புகளின் அடிக்குறிப்பிலும் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பிலும் காணப்பெறுகிறது. அருஞ்சுரக் கவலைய என்பதற்கு "அரிய சுரத்தே"[71] என்று ந.மு.வே., கரந்தை.உரை பொருள் குறிக்கிறது. 'கவலையதர்' என்ற பாடம் காணப்பெறும் மயிலம்வே.பதி. பொழிப்புரையிலும் இவ்வுரைக் கருத்தே காணப்பெறுகிறது. எனவே, பொருள் மாற்றமின்மை, காலப்பழைமை, பெரும்பான்மை இவற்றினடிப்படையில் ***'கவலைய'*** எனும் பாடத்தையே பொருத்தமானதாகக் கருதலாம்.

***18:6 னடுங்காது துறந்து(துணிந்து)(ராஜ.)–னடுங்காது துணிந்து (சமா.,மர்ரே.)–நடுங்காது துறந்து (மு.காசி.)–நடுங்காது துரந்து(மயி.)***

இரவுக்குறியில் வரும் தலைவனைப் பார்த்துத் தோழி கூறுவதாக,

"கடுங்கட் பன்றியி னடுங்காது துறந்து
நாம வருந்துறைப் பேர்தந் தியாமத்
தீங்கும் வருபவோ வோங்கல் வெற்ப" *(18:6–8)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் 'னடுங்காது துறந்து' எனும் பாடம் ராஜகோபாலார்யன் பதிப்பின் அடிக்குறிப்பில் 'துணிந்து' என்று குறிக்கப்பெற்றுள்ளது. இப்பாடமே சமாஜப் பதிப்பு, மர்ரே எஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றிலும் காணப்பெறுகிறது. மயிலம்வே. பதிப்பில் 'நடுங்காது துறந்து' என்ற பாடம் காணப்பெறுகிறது. இவற்றின்வழி ***'னடுங்காது துறந்து–னடுங்காது துணிந்து–நடுங்காது துரந்து'*** எனும் மூன்று பாடங்கள் இங்குக் காணப்பெறுவதை அறியலாம். இவற்றுள் ***'னடுங்காது துணிந்து'*** என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிப்பிடலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'தலைவன் அச்சமின்றி இரவுக் காலத்தில் பல இடங்களைக் கடந்து துணிந்து வருகிறான்' எனும் செய்தியினை இப்பாடலடிகளின் வழித் தெளிவாக அறியமுடிகிறது.

2. ‘துறந்து, போர்தந்து’ எனும் இரு சொற்களும் ‘கடந்து, தாண்டி’ என்று ஒரே பொருண்மையைத் தரவல்லன. இவ்விடத்தில் வரும் ‘துறந்து’ என்பதைவிட இதனைத் தொடர்ந்து வரும் ‘போர்தந்து’ என்பதே பொருத்தமாக அமைகிறது. ‘துறந்து’ என்பதற்கான கடந்து என்ற பொருள் இயல்பாக இவ்விடத்தில் வெளிப்படவில்லை.

3. ‘துரந்து’ என்பது இங்கு அச்சுப்பிழையாகக் கருதத்தக்கதாக அமைகிறது.

**45:4 நிவப்பன களிறட்(பிற.)–நிலைப்பன களிறட் (நிவப்பருங் களிறு, நிறுப்பன களிறு)(மயி.)**

பொருள்வயிற் பிரியும் தலைவன் பாலை நிலத்தில் உள்ள யானையைக் கொன்றுவிட்டுச் சென்றான் என்பதனைத் தலைவி கூறுவதாகப் பின்வரும் அடிகள் பயின்று வருகின்றன.

> “நீரிலா ராற்று நிவப்பன களிறட்
> டாளி லத்தத் துழுவை யுகளுங்
> காடிறந் தனரே காதலர்” (45:4–6)

இவ்வடிகளில் வரும் ‘நிவப்பன களிறட்’ எனும் பாடம் மயிலம் வே.பதிப்பில் ‘நிலைப்பன களிறட்’ என்று குறிக்கப்பெற்றுள்ளது. இதுமட்டுமின்றி அப்பதிப்பின் அடிக்குறிப்பில் ‘நிவப்பருங்களிறு, நிறுப்பன களிறு’ எனும் மேலும் இரு பாடங்களும் குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றின் வழி இப்பாடமானது *‘நிவப்பன களிறட்–நிலைப்பன களிறட்–நிவப்பருங் களிறு–நிறுப்பன களிறு’* எனும் நான்கு நிலைகளில் மாறுபட்டமைவதைக் காணலாம்.

இந்நான்கு மாறுபாடுகளில் ‘நிவப்பன களிறட்டு’ என்பதற்கு,

> “ஓங்கின களிற்றினைக் கொன்று”[72]

எனும் உரைக்கருத்தைக் காணமுடிகிறது. ‘நிலைப்பன களிறட், நிவப்பருங்களிறு, நிறுப்பன களிறு’ என்பனவற்றிற்கு எவ்விதப் பொருண்மையையும் அறிய இயலவில்லை. அப்பாடங்களைக் குறித்திருக்கும் மயிலம்வே.பதிப்பிலும் இவை குறித்த கருத்துகள் எதனையும் பெற இயலவில்லை. மயிலம்வே.பதிப்பில் மட்டுமே இப்பாடவேறுபாடும்

அடிக்குறிப்புகளும் காணப்பெறுகின்றன என்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கதாகும். இவற்றின் வழி, '***நிவப்பன களிறட்***' என்ற பாடத்தையே பொருத்தமுடைய பாடமாகக் கருதலாம்.

***48:26 னதனள வுண்டுகோண்(இதனள வுண்டுகொல்)(ராஜ.)–அதனள வுண்டுகோண்(பிற.)–அதனள வுண்டுகொன் (மயி.)***

தலைவியின் மேனி வாட்டம் கண்டு தாயார் வினவ, தோழி தினைப்புனத்தில் நடந்த நிகழ்வுகள் சிலவற்றைக் கூறி அதன் இறுதியில்,

"னதனள வுண்டுகோண் மதிவல் லோர்க்கே" *(48:26)*

என்று குறிப்பிடுகிறாள். இவ்வடியில் வரும் 'னதனள வுண்டுகோள்' எனும் பாடத்திற்கான ராஜ.பதிப்பின் அடிக்குறிப்பில் 'இதனள வுண்டுகொல்' என்று குறிக்கப்பெற்றுள்ளது. மயிலம்வே.பதிப்பில் 'அதனள வுண்டுகொன்' என்ற பாடம் காணப்பெறுகிறது. எனவே, '***அதனள வுண்டுகோள்–இதனள வுண்டுகொல்–அதனள வுண்டுகொல்***' எனும் மூன்று வேறுபாடுகள் இப்பாடம் குறித்தனவாக அமைவதனை அறியலாம். இவற்றுள் '***அதனள வுண்டுகோள்***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'அதனள வுண்டுகோள்' என்பது 'அதுவரை எனக்குத் தெரியும்; அதில் ஓர் கோட்பாடு உண்டு' என்று பொருள் குறிப்பதாக அமைகிறது.

2. 'இதனள வுண்டுகொல்' என்பது 'இதுவரை எனக்குத் தெரியும்' எனும் பொருண்மையை உணர்த்துவதாக அமைகிறது. ஒரு நிகழ்வைக் கூறி 'அதுவரை எனக்குத் தெரியும்' என்று கூறுவதே பொருத்தமுடையதாக அமையும் எனலாம்.

3. இந்நிலையிலான 'அதனளவு' என்பதனை எடுத்துக்கொண்டு 'உண்டுகொல்' எனும் அடிக்குறிப்புப் பாடத்தை எடுத்து மயிலம்வே.பதி. பாடம் அமைத்துள்ளது. இப்பாடம் எப்பதிப்பிலும் எப்பதிப்பின் அடிக்குறிப்பிலும் காணாதது. அதற்கான உரை 'அதனளவு உண்டுகோள்' என்பதற்கானதாகவே அமைகிறது.

**63:12 கடுங்கான் மறவர்(பிற.)-கடுங்கான் மறவர்(கடுங்கண் மறவர்) (மு.காசி.)-கடுங்கண் மறவர் (மயி.)**

தலைவனுடன் உடன்போக்குச் சென்ற தலைவியை நினைத்து வருந்தும் செவிலி பாலைநிலை மறவரின் சீறூர் பற்றிக் குறிக்கும்போது,

> "கன்றுகா ணாதுபுன் கண்ண செவிசாய்த்து
> மன்றுநிறை பைதல் கூரப் பலவுடன்
> கறவை தந்த கடுங்கான் மறவர்
> கல்லென் சீறூ ரெல்லியி னசைஇ" (63:10–13)

என்று குறிப்பிடுகிறாள். இவ்வடிகளில் வரும் '***கடுங்கால் மறவர்***' எனும் பாடம் மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பிலும் மயிலம்வே.பதிப்பிலும் '***கடுங்கண் மறவர்***' என்று குறிக்கப்பெற்றுள்ளது.

வெட்சி வீரர் விரைந்த கால்களின் துணையுடன் ஆக்களைக் கவர்ந்து வரும் நிலை பற்றிய இப்பாடலுக்குக் '***கடுங்கால் மறவர்***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். 'கடுங்கண் மறவர்' எனும் பாடத்தை முதன்மைப் பாடமாகக் குறிக்கும் மயிலம்வே.பதிப்பில் இது குறித்த எவ்வித உரைக்கருத்து இல்லாமையும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

இவ்வகையிலேயே கருங்கட்(பிற.)-கடுங்கண்(கருங்கண்) (மு.காசி.)(90:12) ஆகிய பாடவேறுபாடுகளையும் கருத வேண்டியுள்ளது. பாடலின் பொருண்மை அடிப்படையிலும் உரைக்கருத்து நிலையிலும் '***கடுங்கண்***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருத இயலுகிறது.

**94:9 பெருநிரை கடிய(கூடிய, கடியு)(ராஜ.)-பெருநிரை கடிய(பிற.)-பெருநிரை கூடிய(மயி.)**

தினைப்புனத்திற்கு வரும் பன்றிக் கூட்டங்களை விரட்டத் தினைப்புனங் காப்போர் கொம்பினை ஊதுவர் என்பதனைக் குறிப்பதாக,

> "சிறுகட் பன்றிப் பெருநிரை கடிய
> முதைப்புனங் காவலர் நினைத்திருந் தூதுங்
> கருங்கோட் டோசையொ டொருங்குவந் திசைக்கும்" (94:9–11)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் 'பெருநிரை கடிய' எனும் பாடத்திற்கு ராஜ.பதிப்பின் அடிக்குறிப்பில் 'கூடிய, கடியு' எனும்

இருபாடவேறுபாடுகள் குறிக்கப்பெற்றுள்ளன. இப்பாட வேறுபாடுகளில் 'கூடிய' என்பதனைக் கொண்டு மயிலம்வே.பதி. 'பெருநிரை கூடிய' என்று பாடம் அமைத்துள்ளது. இதன்வழி, ***'பெருநிரை கடிய-பெருநிரை கூடிய, பெருநிரை கடியு'*** எனும் மூன்று பாடவேறுபாடுகள் இவ்விடத்தில் உள்ளதை அறியமுடிகிறது.

இவ்வேறுபாடுகளின் பொருண்மைகளைப் பின்வருமாறு குறிப்பிடலாம். அவை:

கடிய - விரட்ட

கூடிய - பெருகிய

கடியும் - விரட்டும்

இப்பொருண்மைகளில் 'கடிய' என்பதனையே இவ்விடத்திற்குப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். 'கூடிய' என்பது பொருத்தமின்றி அமைந்தாலும் 'கடியும்' என்பதும் இங்குப் பொருந்தக்கூடியது. இருப்பினும் 'பன்றிக் கூட்டங்களை விரட்ட முதைப்புனங் காவலர் கொம்பை ஊதினர்' என்று கூறுவதே இங்கு மிகப்பொருத்தமாக அமைகிறது. எனவே, ***'பெருநிரை கடிய'*** எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிப்பிடலாம்.

**98:7 நெகிழ்ந்தமை நோக்கி(நெகிழ்த னோக்கி)(ராஜ.)-நெகிழ்ந்தமை நோக்கி(பிற.)-நெகிழ்ப நோக்கி(மயி.)**

தலைவனின் பிரிவால் தலைவிக்கு ஏற்படும் நிலையில் ஒன்றாகிய வளை கழன்று விழுதல் பற்றிய,

"செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கி" (98:7)

எனும் அடியில் வரும் ***'நெகிழ்ந்தமை நோக்கி'*** எனும் பாடத்திற்குப் பதில் ராஜ.பதிப்பின் அடிக்குறிப்பில் ***'நெகிழ்த னோக்கி'*** எனும் பாடமும் மயிலம்வே.பதிப்பில் ***'நெகிழ்ப நோக்கி'*** எனும் பாடமும் குறிக்கப்பெற்றுள்ளன.

'நெகிழ்ந்தமை-நெகிழ்த-நெகிழ்ப' எனும் இம்மூன்று பாடங்களும் 'நெகிழ்ந்து/கழன்று விழுதல்' எனும் பொருளை எவ்வித மாற்றமுமின்றித் தருகின்றன. எனவே, இம்மூன்று சொற்களுள் சரியானவற்றைக் கண்டறிய பிற சங்க இலக்கியப் பயன்பாடு தேவைப்படுகிறது. இம்மூன்று சொற்களில்

'நெகிழ்ந்தமை' எனும் சொல் மட்டுமே சங்க இலக்கியத்தில் பிறிதோர் இடத்தில் பயின்று வந்துள்ளது. அவ்விடம் *26:17* ஆகும். பிற சொற்கள் பிற இடங்களில் பயின்று வரவில்லை.

தலைவனின் கை நெகிழ்ந்ததைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப் பெற்றுள்ளது. அவ்வடி வருமாறு:

"கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி மதவுநடை" (26:17)

இந்நிலையில் நெகிழ்தல் பற்றி நெகிழ்ந்தமை எனும் சொல் வர 'நெகிழ்த, நெகிழ்ப' என்பன சங்க இலக்கியத்தில் எவ்விடத்தும் பதிவு செய்யப்பெறவில்லை. எனவே, இம்மூன்று பாடங்களில் '***நெகிழ்ந்தமை***' என்பதனையே பொருத்தமானதாகக் குறிக்கலாம். இப்பாடமே மிகுதியான பதிப்புகளில் (ராஜ.,சமா.,மு.காசி.,மர்ரே.) குறிக்கப்பெற்றுள்ளது என்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கதாகும்.

***121:3 வறுமை கூறிய(பிற.)–வறுமை கூரிய(மு.காசி.)–வறுமை கூரிய (வறுமை கூறி, கூறிய)(மயி.)***

பாலை நிலத்தில் கோடை காலத்தில் நீர் வற்றியிருக்கும் குளம் பற்றிக் குறிப்பதாக,

"வேனில் நீடிய வானுயர் வழிநாள்
வறுமை கூறிய மண்ணீர்ச் சிறுகுளத்" (121:2–3)

என்ற அடிகள் பயின்று வருகின்றன. இவ்வடிகளில் வரும் 'வறுமை கூறிய' எனும் பாடம் மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியனவற்றில் 'வறுமை கூரிய' என்றும் மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பின் அடிக்குறிப்பில் 'வறுமை கூறி, வறுமை கூறிய' என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. இதன்வழி '***வறுமை கூறிய–வறுமை கூரிய–வறுமை கூறி***' என்ற மூன்று பாடங்கள் இப்பாடம் குறித்துக் காணப்பெறுவதை அறியலாம். இம்மூன்று பாடங்களில் '***வறுமை கூரிய***' என்பதே பொருத்தமாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'கூரிய' என்பதற்கு 'வற்றிய/வற்றியுள்ள' எனும் பொருண்மை அகநானூற்று உரைகள்வழி அறிய முடிகிறது. 'கூறிய, கூறி' என்பனவற்றிற்கு 'சொல்லிய, சொல்லி' என்பன பொருண்மைகளாகும்.

2. பாலைநில வழியில் உள்ள குளத்தில் நீர் வறண்டு காணப்பெறுகிறது என்பதனைக் குறிப்பதாக வரும் இச்சூழலுக்கு 'வற்றிய' என்ற பொருளே பொருத்தமாகும். எனவே, 'வறுமை கூரிய' என்பதே பொருந்தக் கூடியதாகும்.

***148:6 வவ்வு நாட (வவ்வு நாட்டுக்)(ராஜ.)-வவ்வும் நாட(பிற.)-வவ்வு நாட(மயி.)***

குறிஞ்சி நிலத்தில் யானையானது பக்கமலையிலுள்ள மரத்தை ஒடித்துத்தள்ளி, புலியினைக் குத்தித் தினைக்கதிர்களைக் கவர்ந்துண்ணும் என்பதனைக் குறிப்பதாகப் பின்வரும் அடிகள் பயின்று வந்துள்ளன. அவை:

"வண்டுபடு கடாஅத் துயர்மருப் பியானை
தண்கமழ் சிலம்பின் மரம்படத் தொலைச்சி
யுறுபுலி யுரறக் குத்தி விறல்கடிந்து
சிறுதினைப் பெரும்புனம் வவ்வு நாட" (148:3-6).

இவ்வடிகளின் இறுதியில் வரும் 'வவ்வு நாட' என்பது 'வவ்வும் நாட' என்று ராஜகோபாலார்யன் பதிப்புகள், மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியன தவிர்ந்த பிறவற்றில் குறிக்கப்பெற்றுள்ளது. 'வவ்வு நாட்டு' என்று ராஜகோபாலார்யன் பதிப்புகளின் அடிக்குறிப்பில் காணப்பெறுகிறது. இதன்வழி ***'வவ்வு(ம்) நாட-வவ்வு நாட்டு'*** எனும் இரு பாடங்கள் இவ்விடத்திற்கு அகநானூற்றுப் பதிப்புகளில் காணப்பெறுவதை அறியலாம்.

பகற்குறி வரும் தலைவனை இரவுக்குறியில் வரக்கூறும் தலைவி குறிஞ்சி நிலத்தைப் பற்றியும் அதன் ஏதம் பற்றியும் தலைவனிடம் கூறுவதாக இப்பாடலின் சூழல் அமைகிறது. இவ்விடத்தில் 'வவ்வும் நாட' எனும் பாடத்தைக் கொள்ளும் போது தலைவனை முன்னிலையாக்கி விளிப்பதாக அமைகிறது. 'வவ்வுநாட்டு' எனும் பாடத்தைக் கொள்ளும்போது 'வவ்வுகின்ற நாட்டில்' என்று பொருளைத் தருகிறது.

'பகற்குறியில் துன்பம் மிகுதி. அதனால் இரவுக்குறியில் வா' என்று தலைவனிடம் குறிப்பதாக அமையும் இப்பாடல் சூழலுக்கு முன்னிலையாக வரும் '***வவ்வும் நாட***' என்ற பாடமே பொருத்தமாக அமையும். இவற்றுள் 'வவ்வு-வவ்வும்' என்று ஒற்று குறைந்தும் மிகுந்தும் காணப்பெறும் பாடவேறுபாட்டுத் தன்மைகளும் உண்டு. இவற்றுள் பொருள்

மாற்றமின்மையால் எப்பாடத்தைக் கொள்ளினும் தவறில்லை. இருப்பினும் இக்காலத்தன்மைக்கேற்ப ஒற்று மிகுந்து வரும் 'வவ்வும் நாட' என்ற பாடத்தைப் பொருத்தமுடையதாகக் கொள்ளலாம்.

***187:12 கலைசேர் பிருந்த(ராஜ.)–கல்சேர் பிருந்த(கலைசேர் பிருந்த) (மு.காசி)–கல்சேர் பிருந்த(பிற.)***

பாலைநிலச் சூழலை விளக்குவதாக,

"............................ சேணோங்
கலந்தலை ஞெமையத் தாளி லாங்கட்
கலைசேர் பிருந்த சில்குடிப் பாக்கத்" *(187:10–12)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் 'கலைசேர்பிருந்த' என்ற பாடம் ராஜகோபாலார்யன் பதிப்புகள் தவிர்ந்த பிறவற்றில் 'கல்சேர்பிருந்த' என்று மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது. இதுதவிர மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பின் அடிக்குறிப்பில் ராஜ. பதிப்புகளில் முதன்மையாகக் குறிக்கப்பெற்றிருக்கும் 'கலைசேர் பிருந்த' எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. இதன்வழி ***'கலைசேர்பிருந்த–கல்சேர்பிருந்த'*** என்ற இருபாடங்கள் காணப்பெறுவதை அறியலாம். இவ்விரு பாடங்களில் ***'கல்சேர் பிருந்த'*** என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம். அதற்கான காரணங்களாவன:

1. பாலைநிலத்தின் சிறுகுடிகள் இருக்கும் பகுதி பற்றி விளக்கும் இப்பாடல் சூழலுக்கு, 'கலைசேர்பிருந்த' என்ற பாடம் பொருத்தமான பொருளைத் தரவில்லை.

2. 'கல்சேர் பிருந்த' என்னும் பாடம் கல்சேர்ந்த மலைப்பக்கத்தில் இருக்கும் சிறுகுடிகள் என்ற பொருளைத் தருகிறது.

3. பாலைநிலத்தில் பக்கமலைகள் (கல்மலைகள்) இருக்கும் என்பதனைச் சங்க இலக்கியப் பாலைப் பாடல்களின் வழி அறியமுடிகிறது.

***221:5 செயலை(ராஜ.,சமா.)–சேயிலை(செயலை வெள்வேல்) (மு.காசி.) –சேயிலை(மயி.)***

தலைவன் கையில் வேலைக் கொண்டவனாகத் திகழ்வதை,

"புதுவது புனைந்த செயலை வெள்வேன்" *(221:5)*

என்ற அடி விளக்கும். இவ்வடியில் வரும் ***'செயலை வெள்வேல்'*** எனும் பாடம் மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு, மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியனவற்றில் ***'சேயிலை வெள்வேல்'*** என்று மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது. மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பின் அடிக்குறிப்பில் 'செயலை வெள்வேல்' எனும் பாடம் காணப்பெறுகிறது.

தலைவன் வைத்திருக்கும் வேலானது 'செவ்விய இலை பொருந்திய வெள்ளிய வேல்' என்பதனைக் குறிக்கவே பாடலில் இவ்வடி பயின்று வந்துள்ளது. 'செயலை வெள்வேல்' எனும் பாடம் மேற்கண்ட பொருளைத் தருவதாக அமையவில்லை; 'சேயிலை வெள்வேல்' எனும் பாடம் இப்பொருளைத் தெளிவாகத் தருகிறது. எனவே, பாடலின் பொருண்மையைக் கருத்தில் கொண்டு ***'சேயிலை வெள்வேல்*** என்பதனையே பொருத்தமான பாடமாகக் குறிக்கலாம்.

**234:5 மூழ்கிய(ராஜ.,மயி.)–முள்கிய(சமா.,மர்ரே.)–முள்கிய(மூழ்கிய) (மு.காசி.)**

தலைவன் வரும் தேரின் சக்கரம் பூமியில் பதிந்தவாறு விரைந்து வந்தது என்பதனை விளக்குவதாக,

> "வள்பொருங் கமையப் பற்றி மூழ்கிய
> பல்கதி ராழி மெல்வழி யறுப்ப" (234:5–6)

என்ற அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் ***'மூழ்கிய'*** எனும் பாடம் சமாஜப் பதிப்பு, மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு ஆகியனவற்றில் ***'முள்கிய'*** என்று மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது. மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பின் அடிக்குறிப்பில் 'மூழ்கிய' என்ற பாடமும் குறிக்கப்பெற்றுள்ளது. மேற்கண்ட இருவேறுபட்ட பாடங்களில் ***'மூழ்கிய'*** என்பதே பொருத்தமானதாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. தேர்க்கால் பதிவதை 'முள்கிய' என்பதைவிட 'மூழ்கிய' என்பதே தெளிவாக வெளிப்படுத்துகிறது.

2. 'முள்கிய' என்பதற்கு எப்பொருளையும் அறிய இயலவில்லை.

3. 'முள்கிய' எனும் பாடத்தைக் குறிக்கும் பதிப்புகளில் ஒன்றான மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பில் காணலாகும் உரை 'பதிந்த' என்ற பொருளையே தருகிறது.

**234:6 மெல்வழி யறுப்ப(பிற.)–செல்வழி யறுப்ப(மெல்வழி, தனப்ப) (மயி.)**

தேர்க்கால் பதிந்து ஓடுவது பற்றிய,

"பல்கதி ராழி மெல்வழி யறுப்ப" (234:6)

எனும் அடியில் வரும் 'மெல்வழி யறுப்ப' எனும் பாடம் மயிலம் வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் 'செல்வழி யறுப்ப' என்று மாறுபட்டுக் குறிக்கப் பெற்றுள்ளது. இப்பதிப்பின் அடிக்குறிப்பில் 'மெல்வழி, தனிப்ப' எனும் இரு பாடங்களும் குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றின் வழி '***மெல்வழி யறுப்ப–செல்வழி யறுப்ப–செல்வழி தனிப்ப***' எனும் மூன்று பாடங்கள் இருப்பதை அறியமுடிகிறது. இவற்றுள் '***மெல்வழி யறுப்ப***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம். அதற்கான காரணங்கள் பின்வருமாறு:

1. 'செல்வழி யறுப்ப' எனும் பாடம் பிற்காலத்து (1990) வந்த பதிப்பான மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் மட்டுமே காணப்பெறுகிறது. முற்காலப் பதிப்புகளின் அடிக்குறிப்பில் கூட இப்பாடம் காணப்பெறவில்லை.

2. 'தனிப்ப' எனும் பாடவேறுபாடும் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் மட்டுமே காணப்பெறுகிறது. பிற பதிப்புகளில் காணப்பெறவில்லை.

3. இத்தகைய வேறுபட்ட பாடங்களைக் குறிக்கும் பதிப்பின் உரை இதற்கு முந்தைய உரையில் காணலாகும் உரைக்கருத்தையே கொண்டமைகிறது. அவ்வுரைக்கருத்தானது 'மெல்வழி யறுப்ப' என்பதற்கானதாக அமைகிறது.

4. காலப்பழைமை, பாடல் சூழல், பாடல் கருத்து இவற்றின் அடிப்படையில் 'மெல்வழி யறுப்ப' என்பதே பொருந்துகிறது.

**243:9 நில்லா தேங்கி(பிற.)–நில்லா தேகி(நில்லா தேங்கி) (மு.காசி.)**

'வாடைக்காற்றானது விரைந்து தலைவனிடம் சென்று நம் நிலை பற்றிக் கூறும்' என்று தலைவி குறிப்பிடுவதை விளக்குவதாக,

"கடிதுவந் திறுத்த கண்ணில் வாடை
நெடிதுவந் தனையென நில்லா தேங்கி" (243:8–9)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளின் இறுதியில் காணலாகும் '***நில்லா தேங்கி***' எனும் பாடம் மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பில் '***நில்லா தேகி***' என்று குறிக்கப்பெற்றுள்ளது. மேலும் அப்பதிப்பின் அடிக்குறிப்பில் 'நில்லா தேங்கி' எனும் பாடமும் காணப்பெறுகிறது.

'வாடைக்காற்று காலம் தாழ்த்தாது தலைவனிடம் விரைந்து சென்று நம்நிலைகூறும்' என்னும் இப்பாடலின் கருத்திற்கு 'நில்லாது ஏகி' என்ற பாடமே பொருத்தமானதாக அமைகிறது. 'நில்லாது ஏங்கி' என்று பாடம் கொண்டால் 'காற்று நில்லாமல் வருந்துகிறது' என்ற பொருளைத்தரும். 'நில்லாது ஏகி' என்பதே 'விரைந்து சென்று' எனும் பொருளைத் தரும். 'நில்லாதேங்கி' என்ற பாடத்தைக் குறிக்கும் பதிப்புகளில் உரையுடன் கூடிய பதிப்பான மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பின் உரையில் 'காற்று விரைந்து சென்று' என்ற பொருளே காணப்பெறுகிறது. எனவே, '***நில்லாதேகி***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கொள்ளலாம்.

**243:12 யறியுந மாயின்(பிற.)–அறியுமாயின்(அறியுநமாயின்)(மு.காசி.)**

பொருள்வயிற் பிரிவை மேற்கொண்ட தலைவனின் நிலையை எண்ணி வருந்தும் தலைவி தலைவனின் நிலைபற்றி அறிந்தால் நன்றாக இருக்கும் என்று எண்ணும் தன்மையினை வெளிப்படுத்துவதாக,

"யறியுந மாயி னன்றுமற் றில்லா" (243:12)

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் '***அறியுநமாயின்***' எனும் பாடம் மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பில் '***அறியுமாயின்***' என்று பதிவு செய்யப்பெற்றுள்ளது. இப்பதிப்பின் அடிக்குறிப்பில் பிற பதிப்புகளில் காணலாகும் 'அறியுநமாயின்' எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. இவற்றுள் '***அறியுநமாயின்***' எனும் பாடத்தைப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணம் வருமாறு:

தலைவி, தோழியிடம் தலைவனின் நிலையை நாம் அறிந்தால் நன்றாக இருக்கும் என்று கூறுவதாக இவ்வடி பயின்று வந்துள்ளது. இவ்விடத்தில் ‘அறியுநம் ஆயின் நன்றாம்’ என்பதே பொருத்தமாக அமையும். ‘அறியுமாயின் நன்றாம்’ என்பதில் ‘நாம்’ எனும் பொருண்மை இங்கு வரவில்லை. அதேவேளை ‘அறியுநம் ஆயின்’ என்பதில் ‘நாம்’ எனும் பொருண்மை வெளிப்படுகிறது. இதன்வழி ‘அறியுநம் ஆயின்’ எனும் பாடம் பொருத்தமாவதை அறியலாம்.

***248:3 மடக்கிளையோடு(பிற.)-மடக்கிக் கிளையொடு(மடக்கிளையோடு) (மு.காசி.)-மடக்கிக் கிளையொடு(மயி.)***

தன் கூட்டத்துடன் பன்றியானது சென்றது என்பதனை விளக்குவதாக,

“வயநா யெறிந்து வன்பறழ் தழீஇ
யிளைய ரெய்துதன் மடக்கிளை யோடு
நான்முலைப் பிணவல் சொலியக் காணொழிந்” (248:2-4)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் பயின்று வந்துள்ள ‘மடக்கிளையோடு’ எனும் பாடத்திற்கு மாறாக மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு, மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியனவற்றில் ‘மடக்கிக்கிளையொடு’ என்று குறிக்கப்பெற்றுள்ளது. இவ்விரு பதிப்புகளில் மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பின் அடிக்குறிப்பில் ‘மடக்கிளையோடு’ எனும் பாடமும் காணப்பெறுகிறது.

அப்பன்றிக் கூட்டத்தைக் கானவன் வளைத்து வேட்டையாடுதலை,

“தறுகட் பன்றி நோக்கிக் கானவன்
குறுகினன்” (248:6-7)

எனும் அடிகள் விளக்கும். கானவன் பன்றிக் கூட்டத்தை வளைத்து வேட்டையாடினான் என்பதனை விளக்குவதாக வரும் இவ்வடிகளுக்கு ‘***மடக்கிக் கிளையொடு***’ வேட்டையாடினான் என்று பொருள் கொண்டு பாடம் கொள்ளுதலையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***254:6 பயிற்றி மேற்செல(பிற.)-பயிற்றி மென்மெல(மேற்செல)(மயி.)***

மனையில் தங்கியிருக்கும் புறாவின் சேவல் மேல்நோக்கிப் பறத்தலைக் குறிப்பதாகப் பின்வரும் அடிகள் பயின்று வந்துள்ளன.

"மனையுறை புறவின் செங்காற் சேவ
றுணையொடு குறும்பறை பயிற்றி மேற்செல" (254:5-6).

இவ்வடிகளில் வரும் ***'பயிற்றி மேற்செல'*** எனும் பாடம் மயிலம் வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் ***'பயிற்றி மென்மெல'*** என்றும் இதன் அடிக்குறிப்பில் 'பயிற்றி மேற்செல' என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. இவ்விரு பாடங்களில் ***'பயிற்றி மேற்செல'*** எனும் பாடமே பொருத்தமுடையதாக அமைகிறது. அதற்கான காரணங்களாவன:

*1.* புறாக்கள் மேல்நோக்கிப் பறத்தலைச் செய்கின்றன எனும் பொருள் தரும் இப்பாடல் கருத்து 'மேற்செல' என்பதனைப் பொருத்தமுடையதாகக் காட்டுகிறது.

2. 'மென்மெல' எனும் பாடத்தைக் குறிக்கும் மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பில் காணலாகும் பொழிப்புரையில் 'மேற்செல' என்பதற்கான உரைக்கருத்தே காணப்பெறுகிறது.

பாடலுக்கான உரை/பொருள் பொருத்தமாக அமையப் பாடத்தை வேறுபடுத்தி முந்தைய பதிப்புகளில் முதன்மையாகக் குறிக்கப்பெற்ற பாடங்கள் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பின் அடிக்குறிப்பில் குறிக்கப்பெற்றதாக இன்னும் 3 பாடங்கள் காணப்பெறுகின்றன. அவை: *மறமிகு தானை(மாமிகு தானை) – மாமிகு தானை(மறமிகு)(303:4), தாண்குரல் விளிக்குஞ் – தாண்குர விளிக்குஞ் (தாண்குரல்) (321:6), கால்வீழ்த்து – கால்வீழ்ந்(கால்வீழ்த்) (334:5).*

பாடலின் பொருண்மை, சூழல், இவற்றின் பொருத்தப்பாடு, காலப்பழைமை இவற்றின் அடிப்படையில் மேற்கண்ட மூன்று பாடவேறுபாடுகளில் ***'மறமிகு தானை(304:4), தாண்குரல் விளிக்கும் (321:6), கால்வீழ்த்து(334:5)'*** என்பனவே பொருத்தமுடையனவையாக அமைவதனை அறியமுடிகிறது.

**262:3 நிரம்பி யாகுவினை(பிற.)–நிரம்பிய வரகுவினை(சமா.)–நிரம்பி ஆகுவினை(யாடுவினை)(மயி.)**

புஞ்செய் நிலத்தில் கொடிகள் தழைத்ததைப் பசு உண்டது பற்றிக் குறிக்க,

"முதைபடு பசுங்காட் டரிற்பவர் மயக்கிப்
பகடுபல பூண்ட வுழவுறு செஞ்செ
யிடுமுறை நிரம்பி யாகுவினைக் கலித்துப்
பாசிலை யமன்ற பயறா புக்கென" (262:1–4)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் '***யாகுவினைக் கலித்து***' என்ற பாடம் சமாஜப் பதிப்பில் '***வரகுவினை***' என்றும் மயிலம் வே.சிவசுப்பிரமணியன் பதிப்பின் அடிக்குறிப்பில் '***யாடுவினை***' என்றும் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

'ஆகுவினை' என்பதற்குப் பொருந்திய வினை என்ற பொருளை அகநானூற்று உரைகள் வழி அறியமுடிகிறது. ஆடுவினை என்பதற்கு எந்தப் பொருளையும் அறிய இயலவில்லை. 'வரகுவினை கலித்து' என்பது 'வரகு வினையால் தழைத்தது' எனும் பொருளைத் தருகிறது. பயிற்றுடன் களை நிறைந்து தழைத்ததால் ஆ புகுந்தது என்பதனை விளக்கவே 'நிரம்பி ஆகுவினை கலித்து' எனும் பாடம் பயின்று வந்துள்ளது என்பதனை ந.மு.வே., கரந்தைக் கவியரசு. ஆகியோரின் விளக்கவுரை வழி அறியமுடிகிறது. அக்கருத்து வருமாறு:

"பசுங்காடு என்றமையால் மழைபெய்து புல் முதலாயின தழைத்த காடு என்றபடியாம். அரிற்பவர் மயக்கி என்றது கொடி முதலாயின மண்ணிற் புதைந்து மடியுமாறு செய்து என்றபடி.... ஆகுவினை–களைகட்டடல்"[73]

இவற்றின் வழிப் பயற்றுடன் களைநிறைந்ததையும் அதனால் ஆ புஞ்செய்க்குள் நுழைந்ததையும் அறியலாம். பயறு என்று மூலத்தில் இடம்பெற அப்பயறு வரகாக இருந்திருக்க வேண்டும் என்பதைக் கருதிச் சமாஜப் பதிப்பின் பதிப்பாசிரியர்கள் 'வரகுவினை' என்று பதிவு செய்திருந்திருக்கலாம். இது 'புன்செய்' என்று குறிக்கப்பெற்றிருப்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது. ஆனால், வரகுடன் தொடர்புடைய எப்பொருளும் இப்பாடலில் வராமையாலும் தழைத்தல் எனும் பொருளை 'ஆகுவினை' எனும் பாடம் தருவதாலும் 'ஆகுவினை' என்பதே பொருந்துவதனை அறியமுடிகிறது. 'பயிறுடன் களை தழைத்தது' எனும் நேரடிப் பொருளை 'ஆகுவினை கலித்த' எனும் பாடம் தருகிறது. எனவே,

‘**நிரம்பி யாகுவினை**’ என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கொள்ளலாம்.

“ ‘நிரம்பியாகு’ என்பது ‘நிரம்பிய வரகு’ என்றிருக்க வேண்டும் என ஒரு சாரார் கூறியது பொருந்துவதன்றென்க”[73அ] என்னும் ந.மு.வே., கரந்தை. ஆகியோரின் விளக்கவுரைக் கருத்தும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

**262:17 கொண்டகன்(ராஜ.,மயி.)-கொண்டல்(பிற.)-கொண்டல் (கொண்டகன்)(மு.காசி.)**

பேகன் என்பவனின் நாட்டு வளம் பற்றிக் குறிக்கும்போது,

“கொண்டகன் மாமலை நாறி” (262:17)

என்ற அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் ‘***கொண்டகல்***’ என்பது பிற பதிப்புகளில் ‘***கொண்டல்***’ என்று மாறுபட்டுப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பின் அடிக்குறிப்பில் ‘கொண்டகல்’ என்ற பாடவேறுபாடும் காணப்பெறுகிறது. ‘கொண்டகல்-கொண்டல்’ எனும் இரு பாடங்களில் ‘***கொண்டல்***’ எனும் பாடமே பொருத்தமாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. ‘கொண்டகல் மாமலை’ என்று பாடம் கொள்ளும்போது ‘கொண்டு அகல்கின்ற பெரிய மலை’ என்ற பொருளைத் தருகிறது. ‘கொண்டல் மாமலை’ என்று பாடம் கொள்ளும்போது ‘மேகம் தவழ்கின்ற மலை’ என்ற பொருளைத் தருகிறது.

2. ‘கொண்டு அகல்கின்ற மலை’ எனும் பொருள் இப்பாடலின் சூழலுக்குப் பொருந்தவில்லை. ‘மேகம் தவழ்கின்ற மலை’ என்பது பொருந்துகிறது.

3. ‘கொண்டகல் மாமலை’ எனும் பாடத்தைக் குறிக்கும் பதிப்புகளில் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு உரையுடன் காணப்பெறுகிறது. இப்பதிப்பின் உரை ‘கொண்டல் மாமலை’ என்ற பாடத்திற்கானதாகவே உள்ளது.

**263:7 மேலா ளொற்றி(பிற.)-மேலான் ஒற்றி(மேலாள் ஒற்றி)(மு.காசி.)**

ஆறலைப்போர் மரத்தின் மேலிடத்தே மறைந்து ஆறலைத்தலை மேற்கொள்வர் என்பதனை வெளிப்படுத்துவதாக,

"வில்வ லாடவர் மேலா ளொற்றி" (263:7)

என்ற அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் 'மேலா ளொற்றி' எனும் பாடம் மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பில் 'மேலான் ஒற்றி' என்று மாறுபட்டுப் பதிவு செய்யப்பெற்றுள்ளது. இவற்றுள் '**மேலான் ஒற்றி** என்ற பாடமே பொருத்தமாக அமைகிறது. அது குறித்த விளக்கங்கள் வருமாறு:

1. 'மேலாள் ஒற்றி' எனும் பாடத்திற்கு, 'ஆள் மரத்தின்மேல் மறைந்து' என்று பொருள் குறிக்கலாம். 'மேலான் ஒற்றி' என்பதற்கு "மேலிடத்தே மறைந்து"[74] என்ற பொருள் குறிக்கப்பெற்றுள்ளது.

2. 'வில்வலாடவர்' எனும் பாடம் முதற்கண் வந்து மனிதர்களைக் (ஆளை) குறிக்கிறது. இந்நிலையில் 'மேலே ஆள் மறைந்திருந்தனர்' என்ற பொருள்தரும் 'மேலாள்' என்ற பாடம் வரவாய்ப்பில்லை. 'வில்வல் ஆடவர் மேலிடத்தே மறைந்திருந்தனர்' என்பதே பொருத்தமாக அமைகிறது.

3. 'மேலாள் ஒற்றி' என்ற பாடம் கொள்ளும் பதிப்புகளில் மயிலம் வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் மட்டுமே உரை காணப்பெறுகிறது. அது 'மேலான் ஒற்றி' என்ற பாடத்திற்கான உரைக்கருத்தாகவே அமைகிறது.

இத்தன்மையில், நாரில் பெருமரம்-நாணில் பெருமரம் (நாரில் பெருமரம்)(273:15), உப்புட னுழுதும்-உப்புடன் உழந்தும் (உப்புடனுழுதும்) (280:8), கடவுட் காக்குதும்-கடவுட் கோக்குதும் (கடவுட்காக்குதும்)(282:18), முழவுசேர்-முழவுச்சேர்(முழவுசேர்)(318:6), உளர்பெயல் வளர்த்த-வார்பெயல் வளர்த்த(உளர்பெயல்)(324:5), மராஅத்து-யாஅத்து (மராஅத்து)(335:7), வெம்மை நீங்க-வெம்மை நீங்கி (நீங்க)-வெம்மை நீங்க (நீங்கி)(345:1) என்ற பாடவேறுபாடுகளுக்கு உரை எழுத முயற்சித்துப் பின்வரும் பொருத்தமான பாடங்கள் இனங்கண்டறியப் பெற்றுள்ளன. அவை வருமாறு:

**நாணில் பெருமரம்(273:15), உப்புடன் உழந்தும்(280:8), கடவுட் கோக்குதும்(282:18), முழவுச்சேர்(318:6), வார்பெயல் வளர்த்த (324:5), யாஅத்து(335:7), வெம்மை நீங்கி(345:1).**

ஒரு பதிப்பில் மட்டும் அடிக்குறிப்புக் காணப்பெறும் அடிக்குறிப்புகளுடன் கூடிய வேறுபாடுகள் குறித்த மேற்கண்ட விளக்கங்கள் வழிப் பின்வரும் கருத்துகள் பெறப்படுகின்றன.

1. அச்சுப்பிழையால் நேர்ந்த பாடவேறுபாடுகளாக 82 பாடவேறுபாடுகள் காணப்பெறுகின்றன. இவற்றுள் மிகுதியான அச்சுப்பிழை (80 இடங்கள்) மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் காணப்பெறுகிறது.

2. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக்கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை ஆகியோரின் உரை முயற்சியால் கண்டறியப் பெற்ற பொருத்தமான பாடங்களாக 10 பாடங்கள் அமைகின்றன.

3. அச்சுப்பிழையால் வேறுபடுதல் மட்டுமின்றிப் பொருத்தமற்ற பாடங்களைக் கொண்டு மிகுதியாக வேறுபடுவதாக மயிலம் வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு அமைகிறது. வேறுபாட்டு எண்ணிக்கை 11 (1:7,3:9,45:4,63:2,94:9,98:7,234:6,254:6,303:4,321:6,334:5) ஆகும்.

4. ராஜகோபாலார்யன் பதிப்பு வேறுபடுவதாக 3 பாடங்கள் (187:12, 248:13, 352:11) அமைகின்றன.

5. மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு 2 இடங்களிலும் (90:12, 243:12) சமாஜப் பதிப்பு ஓரிடத்திலும் (262:3) வேறுபடுகின்றன.

6. ராஜகோபாலார்யன் பதிப்புகள், சமாஜப் பதிப்பு ஆகியன பிற பதிப்புகளின் பாடங்களிலிருந்து வேறுபடுவனவாக ஒரு பாடமும் (234:5) ராஜகோபலார்யன் பதிப்புகள், மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியன வேறுபடுவனவாக 5 பாடங்களும் (12:8,17:17,48:26, 148:6,262:17) அமைகின்றன. சமாஜம், மர்ரே. தவிர்ந்த பிற வேறுபடுவனவாக ஒரு பாடமும் (18:6) காணப்பெறுகிறது.

8. மர்ரே. தவிர்ந்த பிற பதிப்புகள் வேறுபடுவனவாக ஒரு பாடமும் (8:7) மு.காசி., மயிலம்வே.பதி. வேறுபடுவனவாக ஒரு பாடமும் (121:3) அமைகின்றன.

## இரண்டு பதிப்புகளில் அடிக்குறிப்புக் காணப்பெறுதல்

அகநானூற்றுப் பதிப்புகளிடையே பாடம் வேறுபட்டு ஏதேனும் இரண்டு பதிப்புகளில் அடிக்குறிப்புக் காணப்பெறுதலை இவ்வகையில் அடக்கலாம். இவ்வகையிலான இரண்டு பதிப்புகளில் அடிக்குறிப்புக் காணப்பெறும் பாடவேறுபாடுகளாக 104 பாடவேறுபாடுகள் (விவரம்: பின்னிணைப்பு-20) காணப்பெறுகின்றன. அவற்றைப் பின்வருமாறு பகுத்து விளக்கலாம். அவை:

1. ஏதேனும் ஒரு பதிப்பில் முதன்மையாகக் காணப்பெறும் பாடங்கள் பிற பதிப்புகளில் (ஏதேனும் ஒன்று அல்லது அனைத்திலும்) அடிக்குறிப்பில் காணப்பெற்று, அடிக்குறிப்புப் பாடம் முதன்மையாக மாற்றம் பெற்றிருத்தல்.

2. ராஜகோபாலார்யன் பதிப்பின் முதன்மைப்பாடம் பிற பதிப்புகளில் இடம்பெறாது, அடிக்குறிப்புப் பாடம் பிற பதிப்புகளில் (எதேனும் ஒன்று அல்லது அனைத்திலும்) முதன்மைப் பாடமாக இடம் பெற்றிருத்தல்.

3. ராஜகோபாலார்யன் பதிப்பில் அடிக்குறிப்பு இல்லாத சூழலில், அப்பதிப்பின் முதன்மைப் பாடங்கள் பிற பதிப்புகளின் அடிக்குறிப்பில் இடம் பெற்றிருத்தல்.

4. அகநானூற்றுப் பதிப்புகளிடையே அடிக்குறிப்புகளுடன் கூடிய பாடவேறுபாடுகளாக அமைவன.

### முதல் வகை

ஏதேனும் ஒரு பதிப்பில் முதன்மையாகக் காணப்பெறும் பாடங்கள் பிற பதிப்புகளில் (ஏதேனும் ஒன்று அல்லது அனைத்திலும்) அடிக்குறிப்பில் காணப்பெற்று, அடிக்குறிப்புப் பாடம் முதன்மையாக மாற்றம் பெற்றிருக்கும் இம்முதல் வகை வேறுபாடுகளாக அகநானூற்றுப் பதிப்புகளிடையே 53 வேறுபாடுகள் (விவரம்: பின்னிணைப்பு-21) காணப்பெறுகின்றன. அவற்றைப் பதிப்புகளின் பயன்பாட்டு அடிப்படையில் பின்வருமாறு பகுத்து விளக்கலாம். அவை:

1. ராஜ.பதிப்பிற்கும் மு.காசி.பதிப்பிற்குமான வேறுபாடுகள்

2. ராஜ.பதிப்பிற்கும் மயிலம்வே.பதிப்பிற்குமான வேறுபாடுகள்

3. மு.காசி.பதிப்பிற்கும் மயிலம்வே.பதிப்பிற்குமான வேறுபாடுகள்.

ராஜ.பதிப்பிற்கும் மு.காசி.பதிப்பிற்குமான வேறுபாட்டுத் தன்மையில் நான்கு பாடவேறுபாடுகள் அமைகின்றன. அவை: *லறியலங் கொல்லென (அறிவியேங்கொல்)–அறிவியேங்கொல்லென (அறியலங்கொல்) (52:10), கூடனீடிய(கூடலாடிய)–கூடல் ஆடிய(கூடனீடிய)(296:12), ணகலிலை கவித்த(குவித்த)–அகலிலை குவித்த(கவித்த)(315:16).*

மேற்கண்ட மூன்று பாடவேறுபாடுகளில் ராஜகோபாலார்யன் பதிப்பின் முதன்மைப் பாடமே பொருத்தமாக அமைகிறது.

பாடல் கருத்து, சூழல், உரைத்தன்மை ஆகியவற்றின் அடிப்படையில் '***அறியலங் கொல்லென (52:10), கூடனீடிய (296:12)' அகலிலை கவித்த (315:16)*** எனும் ராஜ.பதிப்புகளின் முதன்மைப் பாடங்கள் பொருந்துவனவாக அமைகின்றன.

ராஜ.பதிப்பிற்கும் மயிலம்வே.பதிப்பிற்குமான வேறுபாடுகளே மிகுதியானவையாக அமைகின்றன. அவ்வேறுபாடுகளின் எண்ணிக்கை 44 (விவரம்:பின்னிணைப்பு–21) ஆகும். இவ்வேறுபாடுகளில் ராஜ.பதிப்பின் முதன்மைப் பாடங்களே பொருத்தமாக அமைகின்றன. அதற்கான காரணங்களாவன:

1. ஒவ்வொரு பாடலுக்குமான சூழல், கருத்து, உரைக்கருத்துகள் ராஜ.பதிப்பின் முதன்மைப் பாடங்களுக்கே பொருந்துகின்றன.

2. மயிலம்வே.பதிப்பின் உரைகள் ராஜ.பதிப்பின் முதன்மைப் பாடங்களுக்கான உரைகளாகவே அமைகின்றன.

3. மயிலம்வே.பதிப்பிற்கு முன்னர் வந்த பதிப்புகள் அனைத்தும் ராஜ.பதிப்பின் முதன்மைப் பாடங்களையே பொருத்தமுடையனவாகக் குறிக்கின்றன.

4. மயிலம்வே.பதிப்பில் அச்சுப்பிழைகள் மிகுதியாகக் காணப்பெறுகின்றன.

இக்காரணங்களின் அடிப்படையில் இனங்கண்டறியப்பெற்ற பொருத்தமான பாடங்கள் பின்வருமாறு:

*மணமுகை (42:12), லறியலங் கொல்லென (52:10) நிவப்பிற் றூங்குங் (57:8), பளிங்கு சொரிவது போல் (108:5), முயக்கநீயும் (112:10), காண்வரும் குறும்பல் கூந்தல் (116:7), பூங்கலுழ் சுமந்த (133:10), ஈன்றுநா ளுலந்த (139:6), வரியே ருண்கணீரு (144:2), வானமீனின் (144:17), கண்ணென மலருங் (150:11), நின்னகாப் பிழைத்த தவறோ (156:12), மற்றே தன்முகத் (176:21), செருவிற்குடைஇ (181:5), கோடுடைக்கையர் (184:13), வசையினோன்றாட் (191:6), பன்மாண் டங்கிய (193:12), வல்லிலைக் குருந்தின் (194:14), னழுந்தைக் கொடுங்குழை (196:11), கல்லதர்ச் சிறுநெறி (202:13), துச்சிலிருக்க (203:16), வென்றம ருழந்த (204:3), விலங்குசினஞ் சிறந்த (212:17), பெய்து புலந்திறந்த (217:1), நளிர்சிமை (218:5), வெரிமரு டோன்றியோடு (218:20), கில்லென்றெண்ணி (231:3), ணீயரம்ம (241:2), காய்சின மொய்ம்பிற் (246:8), கங்குல் வீசித் (255:16), வந்தமாறே (262:18), நீடுநிலை யாஅத்துக் (263:8), யுகிர்நெறி யோசையிற் (267:12), தண்டு காலூன்றிய (274:8), கடியிலன் புகூஉம் (276:4), வணிக்கவின் கவான்வர முயங்கி (313:2), விலையெனப் பகருங் (320:4), விருந்தும் பெறுகுநள் (324:1), பகடசாக் கொள்ளும் (329:7), யிமிரப் பிடிபுணர்ந்து (332:8), வான்கேழ் வட்டங் (340:16), வருவீராகுத லுரைமின் (387:3), வினவி னெவனா (388:22), பாவையன்ன தேயன் (392:6).*

மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பிற்கும் மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பிற்குமான வேறுபாடுகளாக 6 பாடவேறுபாடுகள் அமைகின்றன. அவை: *மென்றோள் பெறநசைஇ(மென்றோள் நசைஇ)-மென்றோள் நசைஇ(மென்றோள் பெறநசைஇ)(9:26), கொளீஇய(கொளீஇ)-கொளீஇ(கொளீஇய)(234:4), தவிர்விலர்(தவிரலர்)-தவிரலர்(தவிர்விலர்) (237:15), யுறீஇ (உறீஇய)-யுறீஇய (யுறீஇ) (325:15), நினைதலுஞ் செய்தியோ (நினைதலுந் நினைதியோ)-நினைதலு நினைதியோ(நினைதலுஞ் செய்தியோ) (327:8), இடைமுலை பொருந்தித்(இடைமுலை முயங்கி)-மிடைமுலை முயங்கி(இடைமுலை பொருந்தித்) (328:5).*

மேற்கண்ட 6 பாடவேறுபாடுகளில் ***மென்றோள் பெற நசைஇ (9:26), கொளீஇய (234:4), தவிர்விலர் (237:15), யுறீஇ (325:15),***

***நினைதலு நினைதியோ (327:8), இடைமுலை பொருந்தி (328:5)*** ஆகியனவே பொருத்தமானவையாக அமைகின்றன. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. பாடலின் கருத்து, சூழல், உரை ஆகியன மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பின் பாடங்களுக்கே பொருந்துகின்றன.

2. பிற பதிப்புகளிலிருந்து வேறுபட்ட பாடங்களை மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்புக் கொண்டிருந்தாலும் அப்பதிப்பின் பொழிப்புரை, குறிப்புரைகள் பிற பதிப்புகளின் பாடத்திற்கான மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பில் காணலாகும் உரைக் கருத்துகளையே கொண்டமைகின்றன.

3. மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பின் பாடங்களே மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்புத் தவிர்ந்த பிற அனைத்திலும் காணப்பெறுகின்றன.

**இரண்டாம் வகை**

ராஜகோபாலார்யன் பதிப்பின் முதன்மைப்பாடம் பிற பதிப்புகளில் இடம்பெறாது, அடிக்குறிப்புப் பாடம் பிற பதிப்புகளில் முதன்மைப்பாடமாக இடம்பெற்றிருக்கும் இத்தன்மை அகநானூற்றுப் பதிப்புகளில் 6 இடங்களில் காணப்பெறுகிறது. அத்தன்மை வருமாறு:

சேக்கல்லா(சேர்கல்லா)–சேர்கல்லா(42:8), விண்பொரு நெடுவரை (நெடுங்குடை)–விண்பொரு நெடுங்குடை(69:10), காம்பம லிறும்பிற் (காம்புபயி)–காம்புபயில் இறும்பிற்(88:13), கொழுமுகை யவிழ (கொழுமுகையுடைய)–கொழுமுகையுடைய (217:1), தான்புனலடைகரைப் (தண்புன)–தண்புன லடைகரைப் (216:2), கழிந்தனையாகி (கழிந்தனையவாகி) –கழிந்தனையவாகி (353:3).

மேற்கண்ட வேறுபாடுகளில் 69:10, 353:3 ஆம் பாடல்களின் வேறுபாடுகள் அனைத்துப் பதிப்புகளுக்கும் உரியனவாகவும் 88:13 ஆம் பாடலின் வேறுபாடு சமாஜப் பதிப்பிற்கு உரியனவாகவும் அமைகின்றன. பிற வேறுபாடுகள் அனைத்தும் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பிற்கு உரியனவாக அமைகின்றன.

இவற்றுள் பாடலின் கருத்து, சூழல், உரைத்தன்மை, பதிப்புகளின் பயன்பாட்டுப் பெரும்பான்மை, காலப்பழைமை இவற்றின் அடிப்படையில் ***சேக்கல்லா (42:8), விண்பொரு நெருவரை (69:10), காம்பம விறும்பிற் (88:13), கொழுமுகை யவிழ (217:1), தான்புன லடைகரை (216:2), கழிந்தனை யாகி (353:3)*** ஆகிய பாடங்களைப் பொருத்தமான பாடங்களாக இனங்கண்டறிய முடிகிறது.

**மூன்றாம் வகை**

ராஜகோபாலார்யன் பதிப்பில் அடிக்குறிப்பு இல்லாத சூழலில், அப்பதிப்பின் முதன்மைப்பாடம் பிற பதிப்புகளின் அடிக்குறிப்பில் காணப்பெறுவனவாக அகநானூற்றுப் பதிப்புகளிடையே 3 பாட வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. அவை, *வுறழ்நிலாக் கான்று- நிலவுக்கான்று (உறழ்நிலாக்கன்று)(122:10), பெருந்தோணீவி-பெருந்தோள் நீவிய(நீவி)(283:1), வணங்கமர்-அணங்கயர்(அணங்கமர்) (382:6).*

முதலிரு வகைகளில் சொல்லப்பெற்ற கருத்துகளின் அடிப்படையில் இப்பாடங்களிலும் பொருத்தமுடையனவாக, ***உறழ்நிலாக்கான்று(122:10), பெருந்தோ ணீவி(283:1), அணங்கமர்(382:6)*** என்பனவற்றைக் குறிப்பிடலாம்.

**நான்காம் வகை**

இரண்டு பதிப்புகளில் அடிக்குறிப்புகளுடன் கூடிய பாட வேறுபாடுகளாகத் தனித்த நிலையில் ஆய்விற்கு உட்படுத்தக்கூடியனவாக 45 வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. அவை குறித்து விளக்கிப் பொருத்தமான பாடங்களை இனங்காண்பதாக இனிவரும் பகுதி அமைகிறது.

***10:9 குரூஉத்திரைப் புணரி(குரூஉக்கிளை)(ராஜ.)-குரூஉத்திரைப் புணரி (பிற.)-குழூஉத்திரைப் புணரி(குழூஉக்கிளைப் புணரி) (மயி.)***

நெய்தல் நிலத்தில் கடலின் அலைகள் மோதுகின்ற கடற்கரையைப் பற்றிக் குறிக்கும்போது,

> "............................ கொண்டலொடு
> குரூஉத்திரைப் புணரி யுடைதரு மெக்கர்" (10:8-9)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் 'குரூஉத்திரைப் புணரி' எனும் பாடத்திற்கு ராஜ.பதிப்பின் அடிக்குறிப்பில் 'குரூஉக்கிளை புணரி' என்ற பாடம் காணப்பெறுகிறது. மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் 'குழூஉத்திரைப் புணரி' என்ற பாடமும் அப்பதிப்பின் அடிக்குறிப்பில் ராஜ.பதிப்பின் அடிக்குறிப்பில் காணலாகும் 'குரூஉக்கிளை புணரி' என்ற பாடமே காணப்பெறுகிறது. இதன்வழி '***குரூஉத்திரைப் புணரி, குழூஉத்திரைப் புணரி, குரூஉக்கிளை புணரி*** எனும் மூன்று பாடங்கள் இருப்பதை அறியமுடிகிறது.

இம்மூன்று பாடங்களில் '***குரூஉத்திரைப் புணரி*** என்ற பாடமே பொருத்தமானதாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'கடலின் அலை மோதும் கரை' என்ற கருத்திற்கு, 'குரூஉத்திரைப் புணரி' என்ற பாடமே பொருந்துகிறது. 'திரை' என்பது கடலின் அலையைக் குறிக்கும் என்பது நினைவில் கொள்ளத்தக்கது.

2. 'குழூஉத்திரை' என்ற பாடம் கொள்ளும் மயிலம்வே.பதிப்பின் பொழிப்புரை, 'குழூஉத்திரைப் புணரி' என்ற பாடத்திற்கான பிற பதிப்புகளின் உரைக்கருத்தையே குறிப்பிடுகிறது.

3. 'குரூஉக்கிளை' என்பதற்கு இவ்விடத்திற்குப் பொருத்தமான எந்த உரைக்கருத்தையும் அறிய இயலவில்லை.

இத்தன்மையில் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் மட்டும் பாடம் வேறுபட்டு பிற பதிப்புகளில் ஒரே பாடம் அமைந்து, அதேவேளை உரைக்கருத்தில் பிற பதிப்புகளின் உரைக்கருத்தைக் கொண்டு விளங்கும் பாடவேறுபாடுகளாக இன்னும் 24 பாடவேறுபாடுகள் (விவரம்: பின்னிணைப்பு–22) காணப்பெறுகின்றன. அவற்றுள் மேற்கண்ட கருத்துகளின் அடிப்படையிலான பாடல் சூழல், உரைத்தன்மை, காலப்பழைமை, பெரும்பான்மையான பதிப்புகளின் பயன்பாடு இவற்றின் அடிப்படையில் பொருத்தமான பாடங்களாகப் பின்வருவனவற்றைக் குறிக்கலாம்.

*சொல்ல வல்லிற்று (32:15), ணமையா ராயினுங் (37:1), தன்பினெஞ்சத் (107:2), கைபூண் பகட்டின் (140:14), நிலைத்துறைக் கடவுட் (156:15), யுருகெழு (175:16), வீளையம்பி (182:4), துணிவில் (205:5), விணிறுபுடையும் (217:18), வல்லிய ரிதுநத் (223:1), ததர்தழை முனைஇய*

*(234:10), டுவலையி னுருழை (243:4), பொலியவந் திறுக்குந் (266:19), கொள்ளை வான்பூ (267:7), தண்டுகாலூன்றிய (274:8), யவ்வார் விளிம்பிற் கமைந்த (281:6), மகளிர் மாங்காட் டற்றே (288:15), பளிங்கின் றுளைக்காசு (315:12), வுதுவ காணவ ரூர்ந்த (330:11), நன்ன னாஅய்பிரம் பன்ன (356:19), ளாகித் தற்றகக் (369:12), நணிநணி யொதுங்கி (380:2), கார்வாய்த் தொழிந்த (394:4), தாங்குறுகந் தழீஇப் (400:10).*

**47:5 கடுவளி புருத்திய(யருத்திய)(ராஜ.)–கடுவளியுருத்திய(பிற.)–கடுவளி யுருந்திய(கடுவழி யருத்திய)(மயி.)**

பாலை நிலத்தின் கொடுமையைப் பற்றி விளக்கப்புகும் புலவர்,

"கடுவளி புருத்திய கொடுவிடு கூரெரி" (47:5)

என்று குறிப்பிடுகிறார். இவ்வடியில் வரும் 'கடுவளி புருத்திய' எனும் பாடம் சமாஜம், மு.காசி., மர்ரே.பதிப்புகளில் 'கடுவளி யுருத்திய' என்றும் மயிலம் வே.பதிப்பில் 'கடுவளி யுருந்திய' என்றும் மாற்றிக் குறிக்கப்பெற்றுள்ளது. இவை தவிர ராஜ.பதிப்புகள், மயிலம்வே.பதிப்பின் அடிக்குறிப்பு ஆகியனவற்றில் முறையே 'யருத்திய, கடுவழி யருத்திய' என்ற பாடங்கள் காணப்பெறுகின்றன. இதன்வழி '***கடுவளி புருத்திய, கடுவளி யுருத்திய, கடுவளி யுருந்திய, கடுவளி யருத்திய, கடுவழி யருத்திய***' எனும் ஐந்து பாடங்கள் இவ்விடத்தில் அகநானூற்றுப் பதிப்பாளர்களால் குறிக்கப் பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

'சூறைக்காற்று வெப்பமுறச் செய்து கொழுந்துவிட்டு எரியும் தீ' என்னும் பொருளைக் குறிக்க வரும் இவ்விடத்திற்கு, நேரடிப் பொருள் தருவதாக அமைவது 'கடுவளியுருத்திய' எனும் பாடமாகும். 'கடுவளி' எனும் சொல்லுக்கு 'சூறைக்காற்று' எனும் பொருளையும் 'உருத்திய' என்பதற்கு 'வெப்பமுறச்செய்த' எனும் பொருளையும் அகநானூற்று உரைகள்வழி அறியமுடிகிறது.

இந்நிலையில் 'வளிபு, யருத்திய, யுருந்திய' என்பதற்கு இக்கருத்துடன் தொடர்புடைய எந்தப் பொருளையும் அறிய இயலவில்லை. மேலும் 'கடுவழி' எனும் சொல் 'கொடிய/கடிய வழி (பாதை)' எனும் பொருளைத் தருகின்றதேயன்றி சூறைக்காற்று எனும் பொருளைத் தரவில்லை.

எனவே, மேற்கண்ட கருத்துகளின் அடிப்படையில் '*கடுவளி யுருத்திய*' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**62:10 மண்ணுநீர் போல(மண்ணுநள்)(ராஜ.)–மண்ணுநள் போல (பிற.)– மண்ணுநீர் போல(மண்ணுநர், மண்ணுநள்) (மயி.)**

*தலைவி, தலைவனின் மார்பில் ஒடுங்கியிருந்த நிலை பற்றிக் குறிக்க,*

*"கடும்புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று*
*நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநீர் போல" (62:910)*

என்னும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் பயின்று வந்துள்ள 'மண்ணுநீர் போல' எனும் பாடத்திற்கு மாறாக சமாஜம், மு.காசி., மர்ரே. பதிப்புகளில் 'மண்ணுநள் போல' எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. இப்பாடம் ராஜ.பதிப்புகளின் அடிக்குறிப்பில் குறிக்கப்பெற்ற பாடமாகும். இப்பாடங்கள் தவிர, 'மண்ணுநர், மண்ணுநள்' எனும் பாடங்களும் மயிலம் வே.பதிப்பின் அடிக்குறிப்பில் காணப்பெறுகின்றன. இதன்வழி, '*மண்ணுநீர் போல, மண்ணுநள் போல, மண்ணுநர் போல*' எனும் மூன்று பாடங்கள் அகநானூற்றுப் பதிப்புகளின் வழிக் காணப்பெறுவதை அறியமுடிகிறது.

மேற்கண்ட மூன்று பாடங்களில் 'மண்ணுநீர் போல' என்பதற்கு, "நீத்தத்திற் குளிக்குமிடத்துக் குளிருமாறு போல"[75] என்றும் மண்ணுநள் போல என்பதற்கு, "வெள்ளத்திற் படிந்து குளிப்பவள் போல"[76] என்றும் உரைக்கருத்துகள் காணப்பெறுகின்றன. 'மண்ணுநர்' என்பதற்கு எந்த உரைக்கருத்தும் இல்லை. இருப்பினும் மேற்கண்ட உரைக்கருத்துகளைக் கொண்டு, 'வெள்ளத்திற் படிந்து குளிப்பவர் போல' என்று குறிப்பிடலாம்.

மேற்கண்ட உரைக்கருத்துகளில் 'மண்ணுநர்' என்பது தலை மக்கள் இருவரையும் குறிப்பதாக அமைகிறது. இங்குத் தலைவி மட்டுமே முயங்கித் தலைவனின் தோள்மீது சாய்கிறாள் என்பதால் இது பொருந்தாது. மற்ற இரு உரைக்கருத்துகளில்,

"வெள்ளத்தில் படிந்து குளிப்பவள் போல" என்பதைவிட,

"நீத்தத்திற் குளிக்குமிடத்துக் குளிருமாறு போல" என்பது பொருந்துகிறது. குளிப்பவளின் நிலையைப் பழைய உரைக்கருத்தே தெளிவாகப் புலப்படுத்துகிறது. எனவே, இவ்வுரைக் கருத்தைத் தரும்

‘***மண்ணுநீர் போல***’ என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***95:1 பசந்தது(ராஜ.)–பசந்த(ராஜ.1926,33)–பசந்தன்று (பசந்த, பசந்தது) (மு.காசி.)–பசந்தன்று(பசந்தது)(மயி.)***

தலைவனின் பிரிவைத் தாங்க இயலாத தலைவியின் நிலை பற்றிக் குறிப்பதாகப் பின்வரும் அடிகள் பயின்று வந்துள்ளன.

> “பைப்பயப் பசந்தது நதலுஞ் சாஅ
> யைதா கின்றென் றளிர்புரை மேனியும்
> பலரு மறியத் திகழ்தரு மவலமு
> முயிர்கொடு கழியி னல்லதை நினையி
> னெவனோ வாழி தோழி” *(15:1–5)*

இவ்வடிகளில் வரும் ‘பசந்தது’ என்ற பாடத்திற்கு மாறாக *1926, 1933* ஆம் ஆண்டுகளில் வந்த ராஜகோபாலார்யன் பதிப்புகளில் ‘பசந்த’ என்ற பாடமும் ராஜ.பதிப்புகள் தவிர்ந்த பிறவற்றில் ‘பசந்தன்று’ என்ற பாடமும் குறிக்கப் பெற்றுள்ளன. இவை தவிர்ந்து, ‘பசந்த, பசந்தது’ எனும் இரு பாடங்கள் மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பிலும் ‘பசந்தது’ என்பது மயிலம் வே.பதி.அடிக்குறிப்பிலும் இடம்பெற்றுள்ளன. இதன்வழி, ‘***பசந்தது, பசந்த, பசந்தன்று***’ எனும் மூன்று பாடங்கள் இருப்பதை அகநானூற்றுப் பதிப்புகளின்வழி அறியமுடிகிறது. இவற்றுள் ‘***பசந்தன்று***’ எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

*1.* நுதல் பசத்தல், மேனி ஐதாகியது என்பதனை விளக்கும் இச்சூழலில் ஒவ்வொரு செயலும் முற்றுப்பெற்ற நிலையில் உள்ளது. ‘பசந்த’ என்பது முற்றுப்பெறாத சூழலைக் கொண்டதாக அமைகிறது.

*2.* ‘பசந்தது, பசந்தன்று’ எனும் இரண்டும் முற்றுப்பெற்ற நிலையைக் குறித்தாலும் ‘ஐதாகின்று’ எனும் இரண்டாம் அடியின் எதுகைக்கு நிகராகப் ‘பசந்தன்று’ என்பதே பொருந்துகிறது.

*3.* பெரும்பாலான பதிப்புகளில் ‘பசந்தன்று’ எனும் பாடமே முதன்மையானதாகக் குறிக்கப் பெற்றிருப்பதும் நினைவில் கொள்ளத்தக்கது.

***122:1 இரும்பிழி மகாஅரிவ்(பிற.)–இரும்பிழி மாரி(இரும்பிழி மகா அரிவ்(மு.காசி.)–இரும்பிழி மகாஅரிவ்(இரும்பிழி மாரி)(மயி.)***

தலைவியின் ஊரைப் பற்றிக் குறிப்பதாக,

"இரும்பிழி மகாஅரிவ் வழுங்கன் மூதூர்
விழவின் றாயினுந் துஞ்சா தாகு" *(122:1–2)*

என்னும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் பயின்று வந்துள்ள 'இரும்பிழி மகாஅரிவ்' எனும் பாடத்திற்கு மாறாக மு.காசி.பதிப்பில் 'இரும்பிழி மாரி' எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பில் 'இரும்பிழி மகாஅரிவ்' எனும் பாடமும் மயிலம்வே. பதிப்பின் அடிக்குறிப்பில் 'இரும்பிழி மாரி' என்னும் பாடமும் குறிக்கப் பெற்றுள்ளன. இந்நிலையில் '***இரும்பிழி மகாஅரிவ், இரும்பிழி மாரி*** எனும் இரு பாடங்கள் இருப்பதை அறியமுடிகிறது.

இவ்விரு பாடங்களின் உரைக்கருத்துகள் வருமாறு:

"இரும்பிழி மகாஅரிவ் – மிக்க தேனுண்டு களிக்கும் மாக்களையுடைமையால் ஆரவார மிக்க இம்மூதூர்தான் விழவினையுடையதின்றாயினும் துஞ்சாதாகும்"[77]

"இடும்பிழி மாரி – மழையை ஒத்த மிக்க கள்ளினையும் ஆரவாரத்தினையுமுடைய இந்த முதிய ஊரானது விழா இல்லையாயினும் துயிலப் பெறாதாகும்"[78]

மேற்கண்ட உரைக்கருத்துகளின் வழி ஆராவாரத்திற்கும் கள் உண்ணும் மாக்களுக்(தேனீ)கும் தொடர்பு இருப்பதையும் ஆரவாரத்திற்குக் கள்ளிற்கும் எந்தத் தொடர்பும் இல்லாதிருப்பதையும் அறியமுடிகிறது. கள்ளுண்டு களிக்கும் தேனீக்களின் ஒலி தலைமகனின் வரவிற்கு இடையூறாக இருந்து மூதூர் துஞ்சாததை உணர்த்த மேற்கண்ட அடிகள் இப்பாடலில் குறிக்கப்பெற்றுள்ளன. தலைவனின் வரவிற்கு இடையூறாக இருப்பதை 'இரும்பிழி மகாஅரிவ்' உணர்த்துகிறது. அதேவேளை மழையை ஒத்த கள்ளுக்கும் தலைவன் வரவு தடைபதலுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. எனவே, தலைவன் வரவு தடைபடுதலை வெளிப்படுத்தும் '***இரும்பிழி மகாஅரிவ்*** என்ற பாடத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

***123:9 லெஃகினிமைக்கு(லெஃகிலையிமைக்கும்)(ராஜ.)–லெஃகிலையிமைக்கும் (பிற.)–எஃகின் இமைக்கு(எஃகிலை)(மயி.)***

சோழர்களின் படை வலிமையையும் படைக்கலன்களையும் குறிக்கும் வகையில்,

"நெய்கனி நெடுவே லெஃகி னிமைக்கு
மழைமருள் பஃறோன் மாவண் சோழர்" (123:9–10)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வந்துள்ள 'எஃகி னிமைக்கும்' எனும் பாடம் சமாஜம், மு.காசி.பதிப்புகளில் 'எஃகிலை இமைக்கும்' என்று மாற்றிப் பதிவு செய்யப் பெற்றுள்ளது. இதுமட்டுமின்றி ராஜ.பதிப்புகள், மயிலம்வே.பதி. ஆகியனவற்றின் அடிக்குறிப்புகளில் 'எஃகிலை இமைக்கும்' எனும் பாடம் காணப்பெறுகிறது. இதன்வழி '***எஃகின் இமைக்கும், எஃகிலை இமைக்கும்***' எனும் இரு பாடங்கள் இருப்பதை அறியமுடிகிறது. இவ்விரு பாடங்களில் '***எஃகி னிமைக்கும்***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'எஃகு இலை இமைக்கும்' என்பதற்கு, 'கூரிய இலை விளங்கும்' என்றும் 'எஃகினிமைக்கும்' என்பதற்கு, 'நெய்யாற்கனிந்த நெடிய வேற் படையினையும்' என்றும் பொருண்மைகள் காணப்பெறுகின்றன.

2. சோழனின் படைக்கலன்கள் பற்றிக் குறிக்கும் இப்பாடலில் 'இலை' என்பதைவிட 'வேற்படை' என்பதே பொருத்தமானதாக அமையும். இலை என்பதற்கு அணிகலன் முதலான பல பொருண்மைகள் காணப்பெறுகின்றன.

3. மறைமுகப் பொருளைவிட, நேரடிப் பொருளைத் தரும் 'எஃகினிமைக்கும்' என்பதே பொருத்தம் எனலாம்.

***128:3 யாமங் கொளவரிற்(கொள்வரிற்)(ராஜ.)–யாமங் கொள்வரிற் (சமா.)–யாமங் கொள்வரிற்(கோள்வரின்)(மு.காசி.)–யாமங் கொளவரிற் (பிற).***

நடுயாமத்தில் தலைமக்களின் சந்திப்பில் காமத்தின் மிகுதி பெருக்கெடுப்பதை,

"மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே
கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே
யாமங் கொளவரிற் கனைஇக் காமங்
கடலினு முரைஇக் கரைபொழி யும்மே" *(128:1-4)*

எனும் அடிகள் உணர்த்துகின்றன. இவ்வடிகளில் வரும் 'யாமங் கொளவரின்' எனும் பாடம் சமாஜப் பதிப்பில் 'யாமங் கொள்வரிற்' என்று குறிக்கப் பெற்றுள்ளது. இப்பாடம் ராஜ.பதிப்பின் அடிக்குறிப்பிலும் காணப்பெறுகிறது. இப்பாடங்கள் மட்டுமின்றி 'கோள்வரின்' எனும் பாடமும் மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பில் குறிக்கப்பெற்றுள்ளது. இந்நிலையில், '***யாமங் கொளவரின், யாமங் கொள்வரின், யாமங் கோள்வரின்***' எனும் மூன்று பாடங்கள் அகநானூற்றுப் பதிப்பாசிரியர்களால் குறிக்கப்பெற்றுள்ளதை அறியமுடிகிறது. இம்மூன்று பாடங்களில் '***யாமங் கொளவரின்***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'யாமங் கோள்வரின்' எனும் பாடத்திற்கு எந்த உரைப் பொருண்மையையும் அறிய இயலவில்லை.

2. 'யாமங் கொள்வரின், யாமங் கொளவரின்' எனும் இரு பாடங்களும் 'நடுயாமப்பொழுது வரும்பொழுது/வருமாயின்' என்ற பொருள் தருவன.

3. காலப்பழைமை, பெரும்பான்மை இவற்றினடிப்படையில் 'யாமங் கொளவரின்' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் கொள்ள இயலுகிறது.

**165:13 மருமகளே யென(பிற.)-அருமகளே யென(மருமகள்)(மு.காசி.)-மருமகளே யென(யெனருமக)(மயி.)**

மகட்போக்கிய தாயின் நிலையைக் கூறும் புலவர், அவள் பாவையை எடுத்துத் தன் மகள் என்று எண்ணி வருந்துவதை,

"மருமக ளேயென முயங்கின ளழுமே" *(165:13)*

என்ற அடி மூலம் வெளிப்படுத்துகிறார். இவ்வடியில் வரும் 'மருமகளேயென' எனும் பாடம் மு.காசி.பதிப்பில் 'அருமகளேயென' என்று மாற்றிக் குறிக்கப்பெற்று, அப்பதிப்பின் அடிக்குறிப்பில் 'மருமகளேயென' எனும்

பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. மயிலம்வே.பதிப்பின் அடிக்குறிப்பில் 'னருமகளேயென' என்ற பாடம் காணப்பெறுகிறது. இதன்வழி இவ்விடத்திற்கு, '***மருமகளேயென, அருமகளேயென***' எனும் இரு பாடங்கள் அகநானூற்றுப் பதிப்பாளர்களால் குறிக்கப் பெற்றுள்ளதை அறியலாம்.

'மருமகள்' என்பது மகனின் மனைவியைக் குறிக்கும், 'அருமகள்' என்பது 'அரியமகள்' எனும் பொருளைத் தரும். தலைவியைப் பிரிந்த தாய் வருத்தமுற்றுப் பாவையைக் கையிலெடுத்து அதனைத் தன் மகளாக எண்ணி வருந்தும் இச்சூழலுக்கு 'மருமகள்' என்பது பொருந்தாது; மேலும் அக்காலத்தில் 'மருமகள்' எனும் சொல் வழக்கில் இருந்ததாகச் சங்கப் பாடல்களில் எந்தப்பதிவும் இல்லை. தாய் முதலானோரை விட்டுப்பிரிந்து தலைவி சென்றதனால் அவள் தாய் முதலானோர்க்கு அரியவளானாள். எனவே, '***அருமகளேயென***' என்ற பாடமே பொருத்தமாக அமைகிறது என்று குறிப்பிடலாம்.

***191:3 வண்டோட்டு(வெண்டோட்டு)(ராஜ.)–வண்டோட்டு(பிற.)–வெண்டோட்டு(விண்டோட்டு)(மு.காசி.)–வெண்டோட்டு(மயி.)***

உமணர்களின் தோற்றம் பற்றிக் குறிப்பதாகப் பின்வரும் அடிகள் பயின்று வந்துள்ளன. அவ்வடிகள் வருமாறு:

"அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ
யெரியித ழலரியொ டிடைபட விரைஇ
வண்டோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணித்
தோல்புதை சிரற்றடிக் கோலுடை யுமண" (.191:1–4)

இவ்வடிகளில் வரும் 'வண்டோட்டு' எனும் பாடம் மு.காசி., மயிலம்வே.பதிப்பு ஆகியனவற்றில் 'வெண்டோட்டு' என்று குறிக்கப் பெற்றுள்ளது. 'வெண்டோட்டு' என்பது ராஜ.பதிப்பின் அடிக்குறிப்பில் குறிக்கப்பெற்ற பாடமாகும். 'வண்டோட்டு' என்பது மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பில் குறிக்கப்பெற்றுள்ளது. இதன்வழி, '***வண்டோட்டு, வெண்டோட்டு***' எனும் இருபாடங்கள் இவ்விடத்திற்கு அகநானூற்றுப் பதிப்பாசிரியர்களால் குறிக்கப்பெற்றுள்ளன என்பதை அறியமுடிகிறது.

உமணர்கள், 'பாதிரிப்பூவை அலரிப்பூவுடன் கலந்து வெண்மை பொருந்திய தாழம்பூவின் தோட்டில் வைத்துக் கட்டி அணிந்து கொண்டமை'

பற்றி விளக்கவரும் மேற்கண்ட சூழலுக்கு, 'வண்டோட்டு' என்பது பொருத்தமான பொருளைத் தரவில்லை. 'வெண்டோட்டு' என்பதே பொருத்தமுடன் அமைகிறது. இதன்வழி, '***வெண்டோட்டு***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் கொள்ளலாம்.

***207:15 மொழிமை(ராஜ.,சமா.)-மோழைமை(மொழிமை)(பிற.)-மோழைமை(மர்ரே.)***

மகட்போக்கிய தாய், தன் இல்லத்தில் செல்வாக்காக வளர்ந்த மகள் உடன்போக்கினை மேற்கொண்ட நிலைபற்றிக் கூறிப் புலம்புவதை,

> "தேங்கலந் தளைஇய தீம்பா லேந்திக்
> கூழை யுளர்ந்து மொழிமை கூறவும்" *(207:14-15)*

என்ற அடிகள் வழி அறியலாம். இவ்வடிகளில் பயின்று வந்துள்ள 'மொழிமை கூறவும்' எனும் பாடம் ராஜ.பதிப்புகள் தவிர்ந்த பிற பதிப்புகளில் 'மோழைமை கூறவும்' என்று மாற்றிப் பதிவு செய்யப்பெற்றுள்ளது. மு.காசி. பதிப்பின் அடிக்குறிப்பில் 'மொழிமை' எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. இந்நிலையில், '***மொழிமை, மோழைமை***' எனும் இருபாடங்கள் இவ்விடத்தில் இருப்பதை அறியலாம்.

இவ்விரு பாடங்களில் '***மோழைமை கூறவும்***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதுகுறித்த விளக்கங்கள் வருமாறு:

*1.* 'மோழைமை கூறவும்' என்பதற்கு, 'கூந்தலைக் கோதி நயமொழிகளைக் கூறவும்'[78] எனும் பொருள் காணப்பெறுகிறது.

*2.* 'மொழிமை கூறவும்' என்பதற்கு எப்பொருளும் குறிக்கப் பெறவில்லை. அதேவேளை, 'மொழிதல், கூறுதல்' எனும் இரண்டும் ஒரு பொருள் தருவன என்பது இங்குக் குறிக்கத்தக்கது.

*3.* 'மொழிமை' என்பதை இங்குப் பாடமாகக் கொள்ளும்போது 'கூறுதல்' எனும் பொருள் குறித்து மீண்டும் 'கூறவும்' என்ற பாடம் வந்திருக்க வாய்ப்பில்லை.

*4.* தலைவிக்கு நற்றாய், செவிலி முதலானோர் நயமொழிகளைக் கூறி உணவு முதலானவை கொடுப்பர் எனும் செய்தியினைச் சங்கப் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

5. 'நயமொழிகளைக் கூறுதல்' எனும் பொருளை 'மோழைமை கூறவும்' எனும் பாடமே தருகிறது.

**222:2 நோய்க்கென்(பிற.)–நோய்க்குன்(நோய்க்கன்)(மு.காசி.)–நோய்க்கென்(நோய்க்குநின்)(மயி.)**

தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவிக்குச் சொல்லும் தோழி பின்வருமாறு உரைக்கிறாள்.

"வானுற நிவந்த நீனிறப் பெருமலைக்
கான நாடன் உறீஇய நோய்க்கென்
மேனி யாய்நலந் தொலைதலின் மொழிவென்" (222:1–3)

இவ்வடிகளின் இரண்டாம் அடியில் வந்துள்ள 'நோய்க்கென்' எனும் பாடம் மு.காசி.பதிப்பில் 'நோய்க்குன்' என்று மாற்றிப் பதிவு செய்யப் பெற்றுள்ளது. மயிலம்வே.பதிப்பின் அடிக்குறிப்பில் 'நோய்க்குநின்' எனும் பாடம் காணப்பெறுகிறது. எனவே, இவ்விடத்திற்கு, '***நோய்க்கென், நோய்க்குன், நோய்க்குநின்***' எனும் மூன்று பாடங்கள் அகநானூற்றுப் பதிப்பாசிரியர்களால் குறிக்கப்பெற்றுள்ளதை அறியலாம்.

தோழி கூற்றாக வரும் இப்பாடலில், 'நோய்க்கென் மேனி யாய்நலந் தொலைதலின்' என்று பாடம் கொண்டால் தலைவி மேனி வாடுதலைக் குறிக்காது தோழியின் மேனி வாடுதலைக் குறித்துவிடும்; இது பொருத்தமான பொருளும் அல்ல. தலைவியின் மேனி வாட்டத்தைக் குறிக்கும் தோழி 'உன்மேனியின் நலம் தொலைகிறது' என்றே குறித்திருக்க வேண்டும். எனவே, 'நோய்க்குன், நோய்க்குநின்' எனும் இருபாடங்களில் ஒன்றே பொருத்தமானதாக அமையமுடியும். 'உன், நின்' எனும் இவ்விரு சொற்களில் 'உன்' என்பது தற்கால வழக்குச் சொல்லாகும். 'நின்' என்பதே பழங்கால வழக்குச் சொல்லாக அமைகிறது. எனவே, '***நோய்க்குநின்***' எனும் பாடத்தையே மிகப் பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

**262:4 பயறா புக்கென(பயரூழ்புக்)(ராஜ.மயி.)–பயிரூழ் புக்கென (சமா.)–பயறா புக்கென(பிற.)**

புஞ்செய் நிலத்தில் முற்றிய பயிற்றில் ஆ புகுந்து மேய்வதைப் பற்றி விளக்க,

"முதைபடு பசுங்காட் டரிற்பவர் மயக்கிப்
பகடுபல பூண்ட வுழவுறு செஞ்செய்
யிடுமுறை நிரம்பி யாகுவினைக் கலித்துப்
பாசிலை யமன்ற பயறா புக்கென" (262:1-4)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் பயின்று வந்துள்ள 'பயறா புக்கென' எனும் பாடம் சமாஜப் பதிப்பில் 'பயிரூழ்புக்கென' என்றும் ராஜ.பதிப்பின் அடிக்குறிப்பில் 'பயரூழ்புக்கென' என்றும் குறிக்கப் பெற்றுள்ளன. '***பயறா புக்கென, பயிரூழ் புக்கென, பயரூழ் புக்கென***' எனும் வேறுபட்ட மூன்று பாடங்களில் '***பயறா புக்கென***' எனும் பாடமே பொருத்தமானதாகும். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'பயரூழ், பயிரூழ்' எனும் இரு பாடங்கள் பயிறு முற்றுவதை விளக்குகின்றன. ஆனால், பசு உட்புகுந்து மேய்வது பற்றிய குறிப்பேதும் அதில் இல்லை.

2. 'பயறாபுக்கென' எனும் பாடம் ஆ புகுந்து பயிறு மேய்வதைக் குறிக்கின்றது.

3. பயிற்றில் ஆ புகுந்து மேய்கிறது எனும் சூழலே இப்பாடலில் காணப்பெறுகிறது.

**273:12 துயவுத்திர ணீடி(உயவுத் திறனீடி)(ராஜ.மயி.)-துயவுத்திறனீடி (சமா.)-துயவுத்திரள் நீடி(பிற.)**

தலைமக்களின் காதல் நிலை ஊராரால் அம்பல் தூற்றுதல் பற்றிக் குறிக்கும் புலவர் அதனை ஒரு மரமாக உருவகித்துக் கூறுகிறார். அவ்வடிகள் வருமாறு:

"...................................... வீங்குபு
தலைவரம் பறியாத் தகைவரல் வாடையொடு
முலையிடைத் தோன்றிய நோய்வள ரிளமுலை
அசைவுடை நெஞ்சத் துயவுத்திர ணீடி
ஊரோர் எடுத்த அம்பல் ....." (273:9-13)

இவ்வடிகளில் வந்துள்ள '***உயவுத்திரள் நீடி***' எனும் பாடம் சமாஜப் பதிப்பு, ராஜ.பதிப்பின் அடிக்குறிப்பு ஆகியனவற்றில் '***உயவுத்திறள் நீடி***' என்று குறிக்கப்பெற்றுள்ளது.

'உயவுத்திரள்' என்பது பருத்த அடியினைக் குறிக்கும் 'உயவுத்திறள்' என்பதற்கு மரத்துடன் கூடிய எப்பொருளையும் குறிக்க இயலவில்லை. இப்பாடத்தைக் குறிக்கும் பதிப்பிலும் எந்த உரைக்கருத்தும் இல்லை. இதன்வழி ஊராரால் பேசப்படும் அம்பல் பருத்த அடியினைக் கொண்ட மரம்போல வளர்ந்துவிட்டது என்பதைக் குறிக்கும் இச்சூழலுக்கு '***உயவுத்திரள்நீடி***' எனும் பாடத்தையே பொருத்தமானதாகக் குறிப்பிடலாம்.

***276:3 பைப்பயக்(பையென)(ராஜ.,மயி.)-பைபயக்(பிற.)-பைப்பயக் (மு.காசி.)***

வாளைப்போத்தினை (வாளைமீன்) உண்ணும் பொருட்டுப் பொய்கைக் கரையில் நடக்கும் நாரையைப் பற்றிக் குறிப்பதாக,

"நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரைதன்
அடியறி வுறுத லஞ்சிப் பைப்பயக்
கடியிலம் புகூஉங் கள்வன் போலச்
சாஅய் யொதுங்குந் துறைகே ழூரனொடு" *(276:1-5)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் '***பைப்பய***' எனும் பாடம் சமாஜம், மர்ரேஎஸ்.இராஜம் பதிப்புகளில் '***பைபய***' என்றும் ராஜ., மயிலம்வே.பதிப்புகளின் அடிக்குறிப்பில் '***பையென***' என்றும் குறிக்கப் பெற்றுள்ளன.

மெதுவாக நடந்து வந்தது எனும் பாடத்தை 'பைப்பய, பைபய, பையென' எனும் மூன்று பாடங்களும் குறிக்கின்றன. இருப்பினும் காலப்பழைமை, பெரும்பான்மை இவற்றின் அடிப்படையில் ஒற்றுடன் கூடிய '***பைப்பய***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***293:5 வேல்வெங் களரி(ராஜ.)-வெவ்வெங் களரி(பிற.)-வெவ்வெங் களரிக்(வேல்வெங் களரி)(மு.காசி.)-வேல்வெங் களரிக் (வெவ்வெங் களரி)(மயி.)***

பாலைநிலத்தின் கொடுமை பற்றிக் குறிக்க,

"வெயிலவிர்பு நுடங்கு வேல்வெங் களரி" *(293:5)*

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும், ‘வேல்வெங்களரி’ என்ற பாடம் சமாஜம்,மர்ரே.,மு.காசி.பதிப்புகளில் ‘வெவ்வெங்களரி’ என்றும் மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பில் ‘வேல்வெங்களரி’ என்றும் மயிலம்வே. பதி. அடிக்குறிப்பில் ‘வெவ்வெங்களரி’ என்றும் குறிக்கப்பெற்றுள்ளன. இதன்வழி, ‘***வேல்வெங்களரி, வெவ்வெங்களரி*** எனும் இரு பாடங்கள் அகநானூற்றுப் பதிப்பாளர்களால் குறிக்கப்பெற்றுள்ளதை அறியலாம்.

இவ்விரு பாடங்களில் ‘வெவ்வெங்களரி’ எனும் பாடமே பொருத்தமானதாக அமைகிறது. அதுகுறித்த விளக்கங்கள் வருமாறு:

1. பாலை நிலத்தின் வெம்மையை ‘வெவ்வெங்களரி’ எனும் பாடம் தெளிவாக உணர்த்துகிறது.

2. ‘வேல்வெங்களரி’ என்பதற்கு ‘வேலுடன் கூடிய பாலைநிலம்’ என்று பொருள் குறிக்கலாம். ஆனால், இப்பொருள் இச்சூழலுக்குப் பொருந்தவில்லை.

3. ‘வெம்மை பொருந்திய பாலை நிலம்’ என்ற பொருள் தரும் ‘வெவ்வெங்களரி’ எனும் பாடம் பொருத்தமுடையதாகும். இப்பாடமே மிகுதியான பதிப்புகளில் குறிக்கப்பெற்றுள்ளது என்பதும் நினைவில் கொள்ளத்தக்கது.

**318:4 விரவழங்கு சிறுநெறி(பிற.)–இரவுச் சிறுநெறி(இரவழங்கு சிறுநெறி)(மு.காசி.)–விரவழங்கு சிறுநெறி (வரவழங்,விரவுவழங்கு)(மயி.)**

இரவுக்குறியில் இருளில் தலைவன் வரும் துன்பமான நிலை பற்றிக் கூறி வரைவுகடாவும் தோழி பின்வருமாறு கூறுகிறாள்.

> “கான மானதர் யானையு வழங்கு
> வான மீமிசை வுருமுநனி வுரறு
> மரவும் புலியு வஞ்சுதக வுடைய
> விரவழங்கு சிறுநெறி தமியை வருதி” (318:1–4)

என்பன அக்கருத்தைக் கூறும் அடிகளாகும். இவ்வடிகளின் இறுதியில் வரும் ‘இரவழங்கு சிறுநெறி’ எனும் பாடம் மு.காசி.பதிப்பில் ‘இரவுச் சிறுநெறி’ என்று மாற்றிக் குறிக்கப்பெற்றுள்ளது. இதுமட்டுமின்றி மயிலம்வே.பதிப்பின் அடிக்குறிப்பில் ‘வரவழங், விரவுவழங்கு’ எனும் இருபாடங்களும் குறிக்கப்

பெற்றுள்ளன. இதன்வழி இவ்விடத்தில், '***இரவழங்கு, இரவு, வரவழங்கு, விரவு வழங்கு***' எனும் நான்கு பாடங்கள் அகநானூற்றுப் பதிப்பாளர்களால் குறிக்கப்பெற்றுள்ளதை அறியலாம்.

'இரவுக்காலத்தில் வரும் கொடுமையான வழி' எனும் பொருளை 'இரவுச் சிறுநெறி' எனும் பாடமே தெளிவாக உணர்த்துகிறது. 'இரவழங்கு சிறுநெறி' எனும் பாடங்களைத் தரும் பதிப்புகளில் மயிலம்வே.பதிப்பு மட்டுமே உரையுடன் உள்ளது. இவ்வுரையும் 'இரவுச்சிறுநெறி' எனும் பாடத்திற்கான உரையையே கொண்டுள்ளது. இதன்வழி, '***இரவுச் சிறுநெறி***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***333:14 நாளிடைப் படாமை(நாளிடைப் படாஅது)(ராஜ.,மயி.)–நாளிடைப் படாமை(பிற.)–நாளிடைப் படாது(மு.காசி.)***

பொருள்வயிற் பிரிந்து சென்ற தலைவன் காலம் கடக்காமல் விரைந்து வருவான் என்பதனைக் குறிப்பதாக,

"மலைச்சே ணிகந்தன ராயினு நிலைபெயர்ந்து
நாளிடைப் படாமை வருவர் நமரென" *(333:13–14)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வந்துள்ள '***நாளிடைப் படாமை***' எனும் பாடம் மு.காசி.பதிப்பில் '***நாளிடைப் படாது***' என்று மாற்றிக் குறிக்கப்பெற்றுள்ளது. இப்பாடம் ராஜ., மயிலம்வே.பதிப்புகளின் அடிக்குறிப்பில் இடம்பெறுகிறது.

'தலைவன் காலம் தாழ்க்காது வருவான்'[79] எனும் பொருளை 'நாளிடைப் படாது' எனும் பாடமே நேரடியாகத் தருகிறது. 'நாளிடைப்படாமை' எனும் பாடம் 'காலம் தாழ்க்காமை வருவான்' என்பதாகவே அமையும். இது பொருத்தமாக அமையவில்லை. 'காலம் தாழ்க்காது வருவான்' என்பதே பொருத்தமாக அமையும். 'நாளிடைப் படாமை' எனும் பாடம் குறிக்கும் பதிப்புகளில் மயிலம்வே.பதிப்பு மட்டுமே உரையுடன் காணப்பெறுகிறது. இப்பதிப்பின் உரையும் 'நாளிடைப் படாது' என்பதற்கானதாகவே அமைகிறது. இதன்வழி, '***நாளிடைப்படாது***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***356:15 கதவ முயறலு(பிற.)–கதுவ முயறலும்(கதவம்)(மு.காசி.,மயி.)***

சோழர்களின் வழி வந்தோனாகிய வல்லத்தின் தலைவனைப் பகைவர் பற்ற முயல்வதும் முயல்வர் எனும் பொருண்மையைக் குறிப்பதாக,

> "நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன்
> நல்லடி யுள்ளா னாகவும் ஒன்னார்
> கதவ முயறலும் முயல்ப..." *(356:13–15)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் '***கதவ முயறலும்***' எனும் பாடம் மு.காசி., மயிலம்வே.பதிப்புகளில் '***கதுவ முயறலும்***' என்றும் அப்பதிப்புகளின் அடிக்குறிப்பில் 'கதவமுயறலும்' என்றும் குறிக்கப் பெற்றுள்ளன.

'கதவமுயறல்' என்பதற்கு எப்பொருளும் இல்லாத சூழலில் 'கதுவமுயறல்' என்பதற்கு 'பற்றமுயல்தல்' எனும் பொருளை அகநானூற்று உரைகள்வழி அறியமுடிகிறது. 'கதவமுயறல்' என்பதற்கு இச்சூழலுடன் பொருந்தும் பொருள் எதனையும் குறிக்க இயலவில்லை. இப்பாடத்தினைக் குறிக்கும் எந்தப் பதிப்புகளிலும் உரை எதுவும் இடம்பெறவில்லை. 'கதுவமுயறல்' எனும் பாடத்தினைக் குறிக்கும் இரு பதிப்புகளிலும் உரை காணப்பெறுகிறது. இதன்வழி இது உரை முயற்சியால் திருத்தம் பெற்ற பாடம் என்பதனை அறிமுடிகிறது. அவ்வகையில் திருத்தம் பெற்ற '***கதுவ முயறலும்***' என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

இந்நிலையில் உரை முயற்சியால் பாடலின் பொருளுக்கேற்பத் திருத்தம் பெற்ற பாடவேறுபாடுகளாக, *பகடுதலை மாற்றி–பகடுதளை மாற்றி (தலைமாற்றி) (366:3), தாழ்கை பூட்டிய(தாள்கை பூட்டிய)–தாள்கை பூட்டிய (373:8), முதைச்சுவற் கலித்த–இதைச்சுவற் கலித்த (முதை)–வதைச்சுவற்கலித்த (393:4)* ஆகியன அமைகின்றன. இவற்றுள் உரைக்கருத்துகள் வழித் திருத்தம் பெற்ற, பொருத்தமான பாடங்களாகப் பின்வருவன அமைகின்றன. ***பகடுதளை மாற்றி (366:3), தாள்கை பூட்டிய (373:8), இதைச்சுவற் கலித்த (393:3).***

***377:5 பல்லூர் புக்குப்(ராஜ.)–பல்லூழ் புக்குப்(பிற.)–பல்லூழ் புக்குப் (பல்லூர்)(மு.காசி.)–பல்லூர் புக்குப்(பல்லூழ்)(மயி.)***

பாலைநிலத்தின் ஊர்கள் பற்றிக் குறிக்கும்போது,

"பல்லூர் புக்குப் பயனிரை கவர" (377:5)

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் 'பல்லூர்புக்கு' எனும் பாடம் சமாஜம்., மு.காசி., மர்ரேஎஸ்.இராஜம் பதிப்புகளில் 'பல்லூழ்புக்கு' என்று மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது. இப்பாடம் மயிலம்வே.பதிப்பின் அடிக்குறிப்பிலும் காணப்பெறுகிறது. மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பில் 'பல்லூர்புக்கு' எனும் பாடம் காணப்பெறுகிறது. இதன்வழி, '***பல்லூர்புக்கு, பல்லூழ்புக்கு***' என்ற இரு பாடங்கள் இருப்பதை அறியமுடிகிறது.

மேற்கண்ட இருபாடவேறுபாடுகளுள் '***பல்லூழ் புக்கு***' என்பதே பொருத்தமானதாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'பல்லூர் புக்கு' என்பது பல ஊர்களுக்குள் புகுந்து ஆநிரை கவர்தலைக் குறிக்கிறது.

2. 'பல்லூழ் புக்கு' என்பது பலமுறை ஓர் ஊருக்குள் புகுந்து ஆநிரை கவர்தலைக் குறிக்கிறது.

3. பாலை நிலத்தின் ஒரு ஊரைப் பற்றிக் குறிக்கவரும் இப்பாடலின் சூழலுக்கு, 'பல ஊர்களுக்குள் புகுந்து' எனும் பொருள்தரும் 'பல்லூர் புக்கு' என்பது பொருந்தவில்லை; ஓர் ஊருக்குள் பலமுறை புகுந்து ஆநிரை கவர்தலைக் குறிக்கும் 'பல்லூழ் புக்கு' என்பது பொருந்துகிறது.

மேற்கண்ட வேறுபாடுகள் பாடலின் சூழல், கருத்து, உரை ஆகியவற்றின் அடிப்படையில் விளக்கப் பெற்றனவாகும். இவற்றுள் மிகுதியாகப் பொருந்தாத தன்மை உடைய பாடங்களைக் (105) கொண்டதாக மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு அமைவதை அறியமுடிகிறது.

## மூன்று பதிப்புகளில் அடிக்குறிப்புக் காணப்பெறுதல்

அகநானூற்றிற்கான ஐந்து பதிப்புகளில் உரை, அடிக்குறிப்புகளுடன் கூடிய பதிப்புகள் மூன்று பதிப்புகள் ஆகும். ஐந்து பதிப்புகளில் ஏதேனும்

ஒரு பதிப்பில் பாடம் வேறுபட்டு அடிக்குறிப்புகளுடன் கூடிய மூன்று பதிப்புகளிலும் அடிக்குறிப்புக் காணப்பெறும் பாடங்களை இவ்வகையில் அடக்கலாம். இத்தன்மை அகநானூற்றுப் பதிப்புகளில் 82 இடங்களில் (விவரம்:பின்னிணைப்பு-23) காணப்பெறுகின்றது. மூன்று பதிப்புகளிலும் அடிக்குறிப்புக் காணப்பெறும் இத்தன்மையினைப் பின்வரும் இரு நிலைகளில் பகுத்து விளக்கலாம்.

1. ராஜ.பதிப்பின் முதன்மைப்பாடம் பிற பதிப்புகளின் அடிக்குறிப்பிலும் ராஜ.பதிப்பின் அடிக்குறிப்புப்பாடம் பிற பதிப்புகளின் முதன்மைப் பாடமாகவும் குறிக்கப்பெற்றிருத்தல்.

2. பாடவேறுபாடுகளாக அமைபவை.

**ராஜ.முதன்மை பிற அடிக்குறிப்பு-ராஜ.அடிக்குறிப்பு பிற முதன்மை**

ராஜ.பதிப்பின் முதன்மைப்பாடம் பிற பதிப்புகளின் அடிக்குறிப்பிலும் ராஜ.பதிப்பின் அடிக்குறிப்புப்பாடம் பிற பதிப்புகளில் முதன்மையாகவும் காணப்பெறும் இத்தன்மை அகநானூற்றுப் பதிப்புகளிடையே 51 இடங்களில் (விவரம்:பின்னிணைப்பு-24) காணப்பெறுகிறது. இதனைப் பின்வருமாறு பகுக்கலாம். அவை:

1. ராஜ.பதிப்பிற்கும் மு.காசி.பதிப்பிற்குமான வேறுபாடுகள்
2. ராஜ.பதிப்பிற்கும் மயிலம்வே.பதிப்பிற்குமான வேறுபாடுகள்
3. ராஜ. பதிப்பிற்கும் மு.காசி., மயிலம்வே.பதிப்புகளுக்குமான வேறுபாடுகள்.

மேற்கண்ட மூன்று பாகுபாடுகளில் ராஜ.பதிப்பிற்கும் மு.காசி. பதிப்பிற்குமான வேறுபாடுகளாக நான்கு பாடவேறுபாடுகள் காணப்பெறுகின்றன. அவை, *மரனேமுற்ற(மானேமுற்ற)-மானேமுற்ற (மரனேமுற்ற)(317:14), நல்குவர்(நல்குவர)-நல்குவர(நல்குவர்) (357:12), பரூவுப்புற முரிஞ்சிச் (பரூஉப்புற முரிஞ்சச்)-பரூஉப்புற முரிஞ்சச் (முரிஞ்சிச்) (373:3) நலியவுஞற்றி (நலிய நீமற்று)-நலிய நீமற்று (நலிய உஞற்றி) (378:16).*

இந்நான்கு பாடவேறுபாடுகளுள் 317:14, 357:12 ஆகிய இரு பாட வேறுபாடுகளுக்குரிய மு.காசி.பதிப்பின் முதன்மைப் பாடங்களான 'மானேமுற்ற, நல்குவர', என்பன சமாஜப் பதிப்பிலும் காணப்பெறுகின்றன.

*373:3* ஆம் பாடலுக்கான ‘பரூஉப்புற முரிஞ்சச்’, *378:16* ஆம் பாடலுக்கான ‘நலியநீமற்று’ என்பன மு.காசி.பதிப்பின் முதன்மைப் பாடங்களாக அப்பதிப்பில் மட்டுமே காணப்பெறுகின்றன.

‘மரனேமுற்ற–மானேமுற்ற’ எனும் இரு வேறுபட்ட பாடங்களைக் குறிக்கும் பதிப்புகளில் ‘மரனேமுற்ற’ என்பதற்கு,

“மரங்கள் இன்பமாய் உற்ற அழகிய வேனிலில்”[80]

என்ற உரைக்கருத்தும் ‘மானேமுற்ற’ என்பதற்கு,

“மானினங்கள் இன்பமுற்ற அழகிய வேனிலில்”[81]

என்ற உரைக்கருத்தும் அகநானூற்று உரைகளில் காணப்பெறுகின்றன. இவ்விரு உரைக்கருத்துகளில் ‘வேனிலில் மான்கள் இன்பமுறுதல்’ என்பதே பொருத்தமானதாக அமைகிறது. எனவே, ‘***மானேமுற்ற***’ என்ற பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

‘***நல்குவர்–நல்குவர***’ எனும் இருபாடங்களில் நல்குவர் என்பதனைப் பாடமாகக் கொண்டால் அதில் ஏற்படும் சிக்கல் பற்றி,

“நல்குவர–அருள் உண்டாதல் பொருந்த, நல்குவர் என்பது
பாடமாயின், அருள்வர் என முற்றாக்குக”[82]

என்று ந.மு.வே.,கரந்தை. ஆகியோர் குறிப்பிடுகின்றனர். ‘நல்குவர’ எனும் பாடத்தைக் குறித்து அதற்கு, ‘அருளுண்டாக’ என்பதைப் பொருளாகக் குறிக்கும் இவர்களின் உரைக்கருத்தே ‘நல்குவர்’ என்ற பாடத்திற்கும் குறிக்கப் பெற்றுள்ளது. இதன்வழி, ‘***நல்குவர***’ என்பதையே பொருத்தமான பாடமாகக் குறிக்கலாம். இதேபோன்றே, ‘***நலிய வுஞற்றி–நலிய நீமற்று***’ ‘***பரூஉப்புற முரிஞ்சி–பரூஉப்புற முரிஞ்சச்***’ என்ற பாடவேறுபாடுகளிலும் ‘நலிய நீமற்று’ என்பதற்கான உரைக்கருத்தே ‘நலிய வுஞற்றி’ எனும் பாடத்திற்கும் உரையாகக் குறிக்கப்பெற்றுள்ளது. எனவே, ‘***நலிய நீமற்று பரூஉப்புற முரிஞ்ச***’ என்பதையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

ராஜ.பதிப்பிற்கும் மயிலம்வே.பதிப்புகளுக்குமான வேறுபாடுகளே மிகுதியாகக் (43 வேறுபாடுகள்) காணப்பெறுகின்றன. அவ்வேறுபாடுகளின் உரைக்கருத்துகள் அனைத்தும் மு.காசி.பதிப்பின் உரைக்கருத்துகளைக்

கொண்டு மயிலம்வே.பதிப்பின் பாடங்கள் தவிர்ந்த பிற பதிப்புகளின் பாடங்களுக்குப் பொருந்தும் வகையில் அமைந்துள்ளன. பாடலின் சூழல், கருத்து ஆகியனவும் மயிலம்வே.பதி.பாடங்கள் தவிர்ந்த பிற பதிப்புகளின் பாடங்களுக்கே பொருந்தும் வகையில் அமைகின்றன. அவ்வகையில் இனங்கண்டறியப்பெற்ற பொருத்தமான பாடங்களாகப் பின்வருவன அமைகின்றன.

*னவணுறை முனைஇ (40:11), புன்காழ் நெல்லிப் (54:15), கடுங்கான் மறவர்(63:12), திண்டோண் மலிர (89:11), நாணகை (121:1), கவர்நடைப் புரவிக் (130:10), பிறைநுதற் பொறிவிய (136:21), யதிகற் (142:13), காடுகவி னொழியக் (143:2), வெம்மலை யருஞ்சுர (143:8), யருஞ்சமங்கடந்து (149:12), கழுநீராம்பன் (156:9), பகுவாய் பாளைக் குவிகுலை (157:2), கழறொடி யதிகன் (162:18), செல்கதிர் மழுகிய (169:10), முழவுறழ் பலவிற் (172:11), பசலை பாவின்று (172:18), தட்டை யோப்பிய (188:11), முரைத்திசின் (191:13), முன்னுவ ரோட்டிய (197:6), கார்விரை கமழுங் (198:5), பூளையி னொய்யென் றலறிய (199:10), பொருதுகளத் தொழிய (199:20), நம்மறிவு தெளிந்த (214:9), நிலையினை வருந்தினை (220:11), கலிமா னள்ளி (238:14), நெருநலுந் (239:14), நளிர்முகைச் சிலம்பிற் (242:18), நம்வலத் தன்மை (243:11), காய்சின மொய்ம்பிற் (246:8), குத்திப் புகலொடு (251:17), வாழிய நெஞ்சே (258:8), மலர்பாய்ந் தூத மீமிசைக் (260:2), நீடுநிலை யாஅத்துக் (263:8), தண்ணிலம் வரிப்ப (283:15), செல்ப வென்ப (293:10), மருங்கு னுணுகிய (297:7), தாயுடைநெடுநகர்த் (310:7), பயந்தலை பெயர்ந்து (311:8), வறுநிலத் துதிரு (315:13), யாயறி வுறுத லஞ்சி (321:6), நறுஞ்சாந் தணிகுவந் திண்டிமி (340:18), யுதுக்காண் டோன்றுங் (380:9).*

ராஜ.பதிப்பிற்கும் மு.காசி., மயிலம்வே.பதிப்புகளுக்குமான வேறுபாடுகளாக நான்கு பாடவேறுபாடுகள் காணப்பெறுகின்றன. அவை, *நாணகை(நானகை)–நாநகை(நாணகை, நாளசை)(121:1), புழுக்கி நெய்க்கனி (புழுக்கி னெய்க்கனி)–புழுக்கி னெய்க்கனி (புழுக்கி நெய்க்கனி) (136:1), பருவ மன்றவர் (இரீஇப் பருவ மன்னவர்)–பருவ மன்னவர் (மன்றவர்) (136:19), விசைத்தெழுந்த (விசைத்தெறிந்த)–விசைத்தெறிந்த (விசைத்தெழுந்த) (273;1).*

மேற்கண்ட நான்கு பாடவேறுபாடுகளில் *நாணகை–நாநகை (121:1), புழுக்கி நெய்க்கனி–புழுக்கி நெய்க்கனி–புழுக்கி னெய்க்கனி (136:1)* ஆகிய இரு பாடவேறுபாடுகளில் எப்பாடங்களைக் கொண்டாலும் பொருள் மாற்றமில்லை. எனவே, இவற்றுள் காலப்பழைமையான '***நாணகை, புழுக்கி னெய்க்கனி*** என்பனவற்றையே பொருத்தமுடையதாகக் கொள்ளலாம். ஆனால், *பருவமன்றவர்–பருவ மன்னவர்(139:19), விசைத்தெழுந்த–விசைத்தெறிந்த (273:1)* ஆகிய பாடவேறுபாடுகளில் '***பருவ மன்னவர், விசைத்தெறிந்த***' எனும் பாடங்களையே பொருத்தமுடையதாகக் கொள்ளலாம்.

'பருவ மன்றவர், விசைத்தெழுந்த' எனும் பாடங்களை முதன்மைப் பாடங்களாகக் குறிக்கும் ராஜ.பதிப்புகளில் எந்த உரைக்கருத்தும் இல்லை. ஆனால், 'பருவ மன்னவர், விசைத்தெறிந்த' எனும் பாடங்களைக் குறிக்கும் மு.காசி., மயிலம்வே.பதிப்புகளில் உரைக்கருத்துகள் காணப்பெறுகின்றன. அவ்வுரைக் கருத்துக்களாவன:

'அவர் வருவதாகச் சொன்ன பருவம்மன்றோ இது'

'வானில் வேகங் கொண்டு எறிந்த கூதாளி மாலை போலக் குருகிப் பறந்தது'

இவ்வுரைக்கருத்துகள் 'பருவமன்னவர், விசைத்தெறிந்த' என்பனவற்றிற்கு உரியனவாகும். 'பருவம் அன்றவர்' என்பதைப் பாடமாகக் கொள்ளும்போது, 'தலைவன் வருவதாகச் சொன்ன பருவம் அன்று' என்ற மாற்றுப் பொருளைத் தரும் என்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கதாகும்.

**வேறுபட்டு அமையும் பாடங்கள்**

அகநானூற்றுப் பதிப்புகளிடையே மூன்று பதிப்புகளிலும் அடிக்குறிப்புகளைக் கொண்டு வேறுபட்டு அமையும் பாடங்களாக **34** பாடங்கள் காணப்பெறுகின்றன. அவற்றுள் பொருத்தமான பாடங்களை இனங்கண்டறிந்து விளக்குவதாக இனிவரும் பகுதி அமைகிறது.

***7:16 செய்யே னித்தலை(செல்லேன்)(பிற.)–செல்லேனித்தலை (சமா.,மர்ரே.)–செய்யேனித்தலை(செம்மெனித்தலை)(மயி.)***

மகட்போக்கிய செவிலித்தாய் பல இடங்களில் தலைவியைத் தேடியும் அவள் மேனியை அணுகப்பெற இயலவில்லை என்பதனைக் குறிக்க,

"மெய்த்தலைப் படுதல் செய்யே னித்தலை" (7:16)

எனும் அடி பயன்படுத்தப் பெற்றுள்ளது. இவ்வடியில் வரும் '***செய்யேனித்தலை***' எனும் பாடம் சமாஜம், மர்ரே. பதிப்புகளில் '***செல்லேனித்தலை***' என்று குறிக்கப்பெற்றுள்ளது. இப்பாடம் ராஜ., மு.காசி. பதிப்புகளின் அடிக்குறிப்புகளில் காணலாகும் பாடமாகும். இவை தவிர '***செம்மெனித்தலை***' எனும் பாடம் ஒன்றும் மயிலம்வே.பதிப்பின் அடிக்குறிப்பில் காணப்பெறுகிறது. இம்மூன்று பாடங்களில் '***செய்யேனித்தலை***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்களாவன:

1. 'செய்யேனித்தலை' என்பது 'அணுகப்பெற்றிலேன்' எனும் பொருளைத் தருவதாக அமைகிறது. 'செல்லேனித்தலை' என்பதற்குச் 'செல்ல இயலவில்லை' எனும் பொருளைக் குறிக்கலாம். 'செம்மெனித்தலை' என்பதற்கு எப்பொருளையும் குறிக்க இயலவில்லை.

2. இதற்கு முந்தைய அடியில் செவிலி பல இடங்களில் சென்று தேடுவதைக் குறிக்கும் பொருட்டு 'வழிவழியோடி' எனும் பாடம் பயின்று வந்துள்ளது. இது செல்லுதலைக் (சென்று தேடுதலை) குறிப்பதாக அமைகிறது. அவ்வாறிருக்கச் 'செல்லேனித்தலை' என்று மீண்டும் வந்திருக்க வாய்ப்பில்லை.

3. உரைகள் காணப்பெறும் மூன்று பதிப்புகளிலும் (ராஜ.,மு.காசி., மயிலம்வே.பதிப்புகள்) 'செய்யேனித்தலை' எனும் பாடமே முதன்மையாகக் குறிக்கப் பெற்றிருப்பதால் இது உரையால் தெளிவுபடுத்தப்பெற்ற பாடம் என்பதனை அறியலாம்.

4. பாடலின் சூழல், கருத்து ஆகியனவும் 'செய்யேன்' எனும் 'அணுகப்பெற்றிலேன்' என்பதற்கே பொருத்தமுடையதாக அமைகிறது.

இதேபோல் உரை முயற்சியால், உரைக்கருத்தால் தெளிவுபடுத்தப் பெற்று உரையுடன் கூடிய பதிப்புகளில் ஒரு பாடமும் மூலம் மட்டும் காணலாகும் பதிப்புகளில் (பெரும்பான்மை, சமாஜம், மர்ரே. சிறுபான்மை : ராஜ.பதிப்புகள்) ஒரு பாடமுமாக இருப்பதாகப் பின்வரும் பாடங்கள் அமைகின்றன.

*துணையொ டேமுற (துணையோ டமர்துயில்)-துணையோ டேமுற (துணையோ டமர்துயில்) (139:12), ளேரா வுய்யப் (ளோராயு)-ஏரா ஒய்யப் (ஏராஉய்ய)-ஓரா வுய்யப் (ளோராயு) (253:10), னுகுவா ரருந்து (னுகர்வாரருந்)-நுகர்வா ரருந்து-உகுவார் கடுந்த (னுகர்வாருந்து) (256:5), யங்காகு வள்கொ றானே (யங்காகுவன் கொல்யானே)-யாங்காகு வல்கொல்யானே (260:11), முசுவினம் (முசுக்கலை)-முசுக்கலை (முசுவினம்) (267:9), யெண்கி னீரினங் கவரும் (யெண்கினிருங்கிளை)-யெண்கி னிருங்கிளை கவரும்-யெண் இருங்கிளை கவரும் (னீரினங்) (275:2), வல்லுந மாயினு (வல்லின மாயினும்)-வல்லின மாயினும் (299:3), போர்செறி (போர்ச்செறி)-போர்ச்செறி (போர்செறி) (316:7) கறவைப் புல்லினம் (கறவைப் பல்லினம்)-கறவைப் பல்லினம் (கறவைப் புல்லினம்) (354:4), காடுங் கானமு (காடுங்காவு)-காடுங்காவும் (காடுங்கானமும்) (383:3),*

மேற்கண்ட பத்துப் பாடங்களில் *139:12,253:10,267:9, 316:7,354:4,383:3* ஆகிய ஆறு பாடங்கள் ராஜ.பதிப்புகளில் காணப்பெறுவனவாகும். ராஜ. பதிப்புகளின் இவ்ஆறு பாடங்களும் உரைக் கருத்திற்குப் பொருந்துமாறில்லை (மேலும் பதிப்பு விவரங்களுக்கு பின்னிணைப்பு-23). இப்பாடங்கள் மட்டுமின்றி 253:10,256:5,275:2 ஆகிய மூன்று பாடங்களில் கூடுதலாக ஒரு பாடம் பிற பதிப்புகளிலிருந்து மாறுபடுவதாக மயிலம்வே.பதிப்பில் காணப்பெறுகிறது. இவை அச்சுப் பிழையாகக் கருதத்தகுந்த பாடங்களாக அமைகின்றன. இவ்வொன்பது இடங்களிலும் மு.காசி.பதிப்பில் குறிக்கப்பெற்றிருக்கும் முதன்மைப் பாடங்கள் பொருந்துகின்றன. இவை உரையால் திருத்தம் பெற்ற தன்மையினை வெளிப்படுத்துவதாக அமைகின்றன. அவ்வகையில் திருத்தம் பெற்ற பொருத்தமான பாடங்கள் வருமாறு:

*துணையோ டேமுற (139:12), ஏரா ஒய்யப் (253:10), உகுவா ரருந்து (256:5), யாங்கா குவள்கொல் தானே (260:11), முசுக்கலை (267:9), யெண்கி னீரினங் கவரும் (275:2), வல்லுந மாயினும் (299:3), போர்ச்செறி (316:7) கறவைப் பல்லினம் (354:4), காடுங்காவும் (383:3).*

**28:9 நுடங்க வெழுந்தெழுந்து(வெழுந்து)(பிற.)-நுடங்க வெழுந்தெழுந்து (சமா.,மர்ரே.)-நுடங்க வேர்த்தெழுந்து (வெழுந்து) (மயி.)**

தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவிக்குச் சொல்லும் தோழி, அவள் தினைப்புனத்தில் இருக்கும் நிலையைப் பற்றி,

"பூக்கெழு தொடலை நுடங்க வெழுந்தெழுந்து" (28:9)

என்று குறிப்பிடுகிறாள். இவ்வடியில் வரும் '***வெழுந்தெழுந்து***' எனும் பாடத்திற்கு மாறாக மயிலம்வே.பதிப்பில் '***வேர்த்தெழுந்து***' எனும் பாடமும் ராஜ., மு.காசி.பதிப்புகளின் அடிக்குறிப்பில் '***வெழுந்து***' எனும் பாடமும் குறிக்கப்பெற்றுள்ளன.

'வேர்த்தெழுந்து' எனும் பாடத்தைக் குறிக்கும் மயிலம்வே. பதிப்பில் அப்பாடத்திற்கான எந்த உரைக்கருத்தும் விளக்கமும் இடம்பெறவில்லை. 'எழுந்து எழுந்து' என்பதற்கு, 'தலைவி பலமுறை எழுந்து சென்று தினையில் உள்ள குருவிகளை ஓட்டினாள்' எனும் உரைக்கருத்து பிற பதிப்புகளில் காணப்பெறுகிறது. 'எழுந்து' என்பதற்கு 'ஒருமுறை எழுந்து' எனும் பொருளைக் குறிக்கலாம்.

தலைவி தினைப்புனத்தில் காவல் இருக்கும் போது ஒருமுறை மட்டும் எழுந்து குருவிகளை ஓட்டுதல் என்பது இல்லை. பலமுறை எழுந்து ஓட்டுவாள். இந்நிலையில் '***எழுந்தெழுந்து***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். 'வேர்த்தெழுந்து' என்பதற்கு எவ்விதப் பொருளும் இல்லை என்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

'வேர்த்தெழுந்து' எனும் பாடத்தைக் குறிக்கும் மயிலம்வே. பதிப்பில் எந்த உரைக்கருத்தும் இல்லாதது மட்டுமின்றி பிற பதிப்புகளிலிருந்து வேறுபட்ட பாடத்தைக் குறிக்கும் இப்பதிப்பின் உரை பிற பதிப்புகளின் உரைக்கருத்தைக் கொடுக்கும் நிலையில் சில பாடங்கள் உள்ளன. அவ்வகையிலான பாடவேறுபாடுகள் வருமாறு (அடிக்குறிப்புப் பாடங்கள் தவிர்த்து, பாடவிரிவிற்குப் பின்னிணைப்பு-23):

*பல்லான் குன்றிற்-பல்லரண் குன்றிற் (168:4), வல்வதாக நுஞ் செய்வினை-வலவதாக நுஞ் செய்வினை (271:11), வெளிப்படத் தவறி நந்துய-வெளிப்படத் தவறீஇ நந்துயர் (330:4), பரீஇயின னும்மொ-பரீஇயின*

*ஞும்மோ (306:13), முடவுமுதிர் பலவின்–முடமுதிர் பலவின் (352:1), ஏமுயல் கிடக்கை–எமுயம் கிடக்கை (365:7).*

மேற்கண்ட ஆறு பாடவேறுபாடுகளில் இரண்டாவதாகக் குறிக்கப் பெற்றிருக்கும் பாடங்கள் மயிலம்வே.பதிப்பின் பாடங்களாகும். இப்பாடங்களில் அச்சுப்பிழை, உரைமாற்றம் ஆகியன காணப்பெறுகின்றன. இவற்றைக் கருத்தில் கொண்டு பிற பதிப்புகளின் பாடங்களையே பொருத்தமானவையாகக் குறிக்கலாம். அத்தகைய பொருத்தமான பாடங்கள் வருமாறு:

***பல்லான் குன்றிற் (168:4) வல்வதாக நுஞ் செய்வினை (271:11), வெளிப்படத் தவறி நந்துயர் (330:4), பரீஇயின ஞும்மொடு (306:13), முடவுமுதிர் பலவின் (352:1), ஏமுயல் கிடக்கை (365:7).***

**82:10 நனவுப்புகு விறலியிற்(விழவுக்கள விறலி)(பிற.)–விழவுக்கள விறலியில்(சமா.)–நனவுப்புகு விறலியின்(மர்ரே.)**

குறிஞ்சி நிலத்தில் மயில் தோகைவிரித்தாடும் தன்மைக்கு விறலியின் ஆட்டத்தை உவமைப்படுத்தும் புலவர்,

"நனவுப்புகு விறலியிற் றோன்று நாட" *(82:10)*

என்று குறிப்பிடுகிறார். இவ்வடியில் வரும் '***நனவுப்புகு விறலியிற்***' எனும் பாடம் சமாஜப் பதிப்பில் '***விழவுக்கள விறலியிற்***' என்று மாற்றிக் குறிக்கப் பெற்றுள்ளது. இப்பாடம் ராஜ.,மு.காசி.,மயிலம்வே.பதிப்புகளின் அடிக்குறிப்புகளில் காணலாகும் பாடமாகும். இவ்விரு வேறுபட்ட பாடங்களில் '***நனவுப்புகு விறலியிற்***' என்பதையே பொருத்தமான பாடமாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'நனவுப்புகு விறலி' என்பதற்கு 'களத்தில் புகுந்தாகும் விறலி' எனும் பொருண்மையை அகநானூற்று உரைகள் வழி அறியமுடிகிறது.

2. 'விழவுக்களவிறலி' என்பதற்கு எவ்வித உரைக்கருத்தும் இல்லையாயினும் 'விழாக்காலத்தில் களத்தில் புகுந்தாடும் விறலி' என்று உரை குறிக்கலாம்.

3. விழாக்காலத்தில் மட்டும் விறலி ஆடுவதில்லை; அதேவேளை களம் அமைத்து விறலி நாட்டியம் பார்க்கும் பழக்கம் உண்டு.

4. உரையுடன் கூடிய, பெரும்பாலான பதிப்புகள் 'நனவுப்புகு விறலியிற்' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறித்துள்ளன.

இதேபோல் சமாஜப் பதிப்பில் மட்டும் காணப்பெறும் பாடவேறுபாடுகளாக வரம்புகொள் (விரும்புகொள்) – விரும்புகொள் (179:9) பணியலை(பனியலை)–பனியலை (272:6) என்பன அமைகின்றன. மேற்கண்ட விளக்கங்கள் அடிப்படையில் இவ்விரு பாடங்களில் '***அரம்புகொள், பணியலை*** என்பனவற்றைப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**110:25 மென்றுமென் மகட்கே(மின்றுமென்கட்கே)(ராஜ.)–இன்றுமென் கட்கே(சமா.)–இன்றுமென் கட்கே(என்றுமென் மகட்கே) (மு.காசி.)–என்றும் என் மகட்கே (மர்ரே.)–மென்றுமென் மகட்கே (மின்று)(மயி.)**

செவிலித்தாய்க்கு அறத்தொடு நிற்கும் தோழி,

"நின்றோன் போலு மென்றுமென் மகட்கே" (110:25)

என்று குறிப்பிடுகிறாள். முதற்சந்திப்பில் தலைவனைக் கண்ணுற்ற தலைவியும் தோழியும் 'செல்க' எனச் சொன்னபோதும் செல்லாது தேரின் கொடிஞ்சியைப் பற்றி நின்ற காட்சியைப் பற்றித் தாயிடம் கூறும்போது மேற்கண்டவாறு குறிப்பிடுகிறாள். இக்கருத்தினைக் கொண்ட மேற்கண்ட அடியில் உள்ள 'மென்றுமென் மகட்கே' எனும் பாடம் சமாஜம், மு.காசி. பதிப்புகளில் 'இன்றுமென் கட்கே' என்றும் பிற பதிப்புகளில் 'என்றும் என் மகட்கே' என்றும் மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது. ராஜ.பதிப்புகளின் அடிக்குறிப்பில் 'மின்றுமென்கட்கே' எனும் பாடமும் மு.காசி.பதிப்பின் அடிக்குறிப்பில் 'என்றுமென் மகட்கே' எனும் பாடமும் மயிலம்வே. பதிப்பின் அடிக்குறிப்பில் 'மின்று' என்னும் பாடமும் குறிக்கப்பெற்றுள்ளன. இதன்வழி, '***மென்றுமென் மகட்கே, இன்றுமென் கட்கே, மின்றுமென் மகட்கே*** எனும் மூன்று பாடங்கள் அகநானூற்றுப் பதிப்புகளில் குறிக்கப் பெற்றுள்ளதை அறியலாம். இவற்றுள் '***இன்றுமென் கட்கே***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். இதற்கான காரணங்கள் வருமாறு:

1. தலைவன் அன்று நின்ற காட்சியைப்பற்றி இன்று செவிலிக்கு உணர்த்தும் சூழலில் இப்பாடல் அமைந்துள்ளது.

2. ‘மென்றுமென் மகட்கே’ எனும் பாடத்திற்கான உரைக்கருத்தாக, “இன்றுநின் மகட்கு அமைந்தனன் போலுமெனக் குறிப்பானுணர்த்தினாள்”[83] என்பது காணப்பெறுகிறது. இப்பாடல் செவிலி கூற்றாக வரும்போது ‘என் மகட்கு’ என்று தோழி கூறுவது பொருத்தமின்றிக் காணப்பெறுவதையும் அதற்கானஉரை ‘நின் மகட்கு’ என்று மாறுபட்டிருப்பதையும் அறியலாம்.

3. ‘இன்றுமென் கட்கே’ எனும் பாடத்திற்கான உரைக்கருத்தாக, “இன்றும் என் கண் முன் நிற்பது அந்நிலையே போலும்”[84] என்பது அமைகிறது. அன்றைய சூழலை இன்று நினைவுகூர்ந்து கூறுவதாகச் சொல்லும் தலைவியின் நிலைக்கு இது பொருத்தமாக அமைகிறது.

4. ‘மின்றுமென் மகட்கே’ என்பதற்கு எவ்வித உரைக்கருத்தும் இல்லை எனினும் ‘இன்றும் என் மகட்குப் பொருத்தமாக நின்றான்’ என்று குறிக்கலாம். இங்கும் ‘என் மகன்’ என்று தோழி கூறுவது பொருத்தமின்றி அமைவதை அறியலாம்.

***152:10 னுண்முர ணுடையக்(முனை முரணுடைய)(ராஜ.)–முனை முரணுடையக்(பிற.)–முனைமுர ணுடையக்(பிண்ட–னுண்முரன்) (மு.காசி.)–முனைமுரணுடையக் (னுண்முரணுடைப்பக்)(மயி.)***

நன்னன் என்பானின் படைத்தின்மை பற்றிக் குறிக்கும்போது பிண்டன் என்பானின் போர்ப்படையைத் தகர்த்தான் என்பது பற்றிக் குறிப்பதாக,

> “வுறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்ட
> னுண்முர ணுடையக் கடந்த வெண்வே
> லிசைநல் லீகைக் களிறுவீசு வண்மகிழ்ப்
> பாரத்துத் தலைவ னார நன்ன
> னேழி னெடுவரைப் பாழிச் சிலம்பிற்” *(152:9–13)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் ‘னுண்முரணுடைய’ எனும் பாடத்திற்கு மாறாக, ராஜ.பதிப்புகள் தவிர்ந்த பிறவற்றில் ‘முனைமுர ணுடைய’ எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. ராஜ. பதிப்புகளின் முதன்மைப்பாடமான ‘னுண்முரணுடைய’ என்பது மு.காசி., மயிலம்வே.பதிப்புகளின் அடிக்குறிப்பில் குறிக்கப்பெற்றுள்ளது.

‘***னுண்முர ணுடைய, முனைமுரணுடைய***’ எனும் இரு பதிப்புகளில் பொருத்தமான பாடத்தைப் பின்வருமாறு இனங்கண்டறிந்து விளக்கலாம்.

‘னுண்முரணுடைய’ எனும் பாடத்தைக் குறிக்கும் ராஜ.பதிப்புகளில் தெளிவான உரைக்கருத்து இல்லை. ஆனால், ‘முனைமுரணுடைய’ எனும் பாடத்தைக் குறிக்கும் பதிப்புகளில் “போர் செய்யும் மாறுபாடு சிதைய”[85] வெற்றி பெறும் தன்மையுடையவன் நன்னன் எனும் உரைக்கருத்தினை அறியமுடிகிறது. அதுவே, பொருத்தமாகவும் அமைகிறது. இப்பாடமே ராஜ.பதிப்புகள் தவிர பிற அனைத்திலும் காணப்பெறுவதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது. இதன்வழி ‘***முனைமுரணுடைய***’ எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

இதே தன்மையில் ராஜ.பதிப்புகளில் மட்டும் ஒரு பாடம் காணப்பெற்று பிற பதிப்புகளில் அப்பாடம் திருத்தம் பெற்றுக் காணப்பெறும் தன்மை இப்பகுதியில் இன்னும் 7 இடங்களில் காணப்பெறுகிறது. அவ்வேறுபாடுகள் வருமாறு (பதிப்பு விவரங்களுக்கு அட்டவணை–23)

*னீவெய் யோள்வயின் (நீகடுத்தோள்)–நீ கடுத்தோள் வயின் (நீவெய்யோள்) (166:8), வண்மை யெயினன் (ஆஅ யெயினன்)–ஆஅய் எயினன் (வண்மை யெயினன்) (181:7), காடுமழ வொழித்த (சூழ்நில லொழித்த)–சூழ்நிழல் ஒழித்த(காடுமழ வொழித்த)(194:13), ரசைவின ரிருக்கு (ரசையுந ரிருக்கும்)–அசையுந ரிருக்கும் (அசைவின ரிருக்கும்)(277:11), மொருங்குடன் சாற்றி(மொருங்குடன் கொண்டு)–ஒருங்குடன் கொண்டு (ஒருங்குடன் சாற்றி) (281:2), கொண்டணி யெயிலிற் (கொண்டணி பெய்விலிற்)–கோண்டனி எயிலிற் (கொண்டணி யெய்விலிற், யெய்விலிற்) (372:15), தலைஇக் கானத்து (தலைஇய கான)–தலைஇய கானத்து (தலைஇக் கானம்) (392:1).*

இவற்றுள் *181:7, 372:15, 392:1* ஆகிய பாடங்களைப் பொறுத்தவரையில் ராஜ.பதிப்புகளின் பாடங்களே மயிலம்வே.பதிப்பிலும் காணப்பெறுகின்றன என்பதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

இப்பாடங்களில் மேற்கண்ட தன்மைகளான உரைகளால் திருத்தம் பெறுதல், பெரும்பான்மையான பதிப்புகளில் குறிக்கப்பெற்றிருத்தல், பாடல் சூழலுக்குப் பொருந்துதல் இவற்றின் அடிப்படையில் பின்வரும் பாடங்களைப் பொருத்தமானவையாகக் குறிக்கலாம். அவை:

*நீ கடுத்தோள்வயின் (166:8), ஆஅய் எயினன் (181:7), கூழ்நிழல் ஒழித்த (194:13), அசையுநரிருக்கும் (277:11), ஒருங்குடன் கொண்டு (281:2), கோண்டனி எயிலிற் (372:15), தலைஇய கானத்து (392:1).*

**181:22 பகாஅர்(பகர்வர்)(ராஜ.)–பகாஅர்(பிற.)–புகாஅர்(பகர்வர்)(மு.காசி.)–பகர்வர்(பகாஅர்)(மயி.)**

புகார் நகரிலுள்ள விற்பனை செய்யும் வணிகர்களைப் பற்றிக் கூறுவதாக,

"புகாஅர் நன்னாட் டதுவே பகாஅர்
பண்ட நாறும் வண்டட ரைம்பாற்" *(181:22–23)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் '***பகாஅர்***' எனும் பாடம் மயிலம்வே.பதிப்பில் '***பகர்வர்***' என்று மாற்றிக் குறிக்கப்பெற்றுள்ளது.

இவ்விடத்தில் வரும் 'பகாஅர், பகர்வர்' எனும் இரு பாடங்களும் விற்பனை செய்யும் தன்மையை விளக்கவல்லன. இருப்பினும் காலப்பழைமை, பெரும்பான்மை இவற்றைக் கருத்தில் கொண்டு '***பகாஅர்***' என்பதையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**281:2 மகலு ளாண்மை(மகலுநாண்மை)(ராஜ.,மயி.)–அகலு நாண்மை(பிற.)–அகலுள் ஆங்கண் (அகலுள்ஆண்மை)(மு.காசி.)**

தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவியின் நிலைபற்றிக் குறித்து, அவள் வருத்தத்தை நீக்க முயலும் தோழிக்குத் தலைவி கூறும்போது தலைவன் நாள்தோறும் நம்மிடம் இருப்பான் என்பதை,

"செய்வது தெரிந்துசிற் றோழி யல்கலு
மகலு ளாண்மை யச்சறக் கூறிய
சொற்பழு தாகு மென்று மஞ்சா" *(281:1–3)*

என்ற அடிகள் வழி வெளிப்படுத்துகிறாள். இவ்வடிகளில் வரும் '***மகலுளாண்மை***' எனும் பாடம் சமா.,மர்ரே.பதிப்புகளில் '***அகலு நாண்மை***' என்றும், மு.காசி.பதிப்பில் '***அகலுள் ஆங்கண்***' என்றும் மாறுபட்டுக் குறிக்கப்பெற்றுள்ளது. 'அகலுளாண்மை, அகலு நாண்மை'

எனும் இருபாடங்கள் ஒரு பொருள் பற்றியன; ஒருநிலைப் பாடங்கள் ஆவன. 'அகலுள் ஆங்கண்' என்பது இவற்றிலிருந்து வேறுபட்டமைவதாகும்.

'அகலுளாண்மை' எனும் பாடத்தைக் குறிக்கும் ராஜ.பதிப்புகளில் எவ்வித உரைக்கருத்தும் இல்லாத சூழலில் 'அகலுள் ஆங்கண்' என்பதற்கு, "ஊரின்கண்ணே யிருந்து"[86] எனும் உரைக்கருத்துக் காணப்பெறுகிறது. 'அகலுளாண்மை/அகலுநாண்மை' எனும் பாடத்தைக் குறிக்கும் பதிப்புகளில் உரையுடன் கூடிய பதிப்பான மயிலம்வே.பதி.பொழிப்புரையும் இவ்வுரைக் கருத்தையே குறிப்பிடுகிறது. இக்கருத்தே இப்பாடல் சூழலுக்கும் பொருந்துகிறது. இந்நிலையில் உரை முயற்சியால் தெளிவுபடுத்தப்பெற்ற பாடமான '***அகலுள் ஆங்கண்***' எனும் பாடத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

இதேபோல் உரை முயற்சியால் தெளிவுபடுத்தப்பெற்ற பாடவேறுபாடாக ***கூடினீடிய (கூடலாடிய)-கூடல் ஆடிய (கூடனீடிய)*** ***(296:12)*** என்பதும் அமைகிறது. பாண்டியன் நெடுஞ்செழியனின் போர் வெற்றி பற்றிய அப்பாடலில் 'மதுரைக்கண் வெற்றிக் களிப்பால் அவன் ஆடிய' நிலைபற்றிய சூழலுக்கு, '***கூடலாடிய***' எனும் பாடமே பொருந்துகிறது. 'கூடனீடிய' எனும் பாடத்தைக் குறிக்கும் பதிப்புகளில் உரையுடன் கூடிய பதிப்பான மயிலம்வே.பதிப்பின் உரையும் 'கூடலாடிய' எனும் பாடத்திற்கான மேற்கண்ட உரைக்கருத்தாக அமைகிறது என்பதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

மேற்கண்ட *109* பாட வேறுபாடுகளில் மிகுதியான வேறுபாடுகளைக் கொண்ட பதிப்பாக மயிலம் வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு அமைகிறது. அப்பதிப்பில் காணலாகும் வேறுபாட்டு எண்ணிக்கை ***72 (40:11,54:15,63:12,89:11,121:1,130:10,136:21,142:13,143:2,143:8,149:12, 156:9,157:2,162:18,169:10,172:11,172:18,188:11,191:13,197:6,198:5,199:10, 199:20,214:9,220:11,238:14,239:14,242:18,243:11,246:8,251:17,258:8,260:2, 263:8,283:15,293:10,297:7,310:7,311:8,315:13,321:6,340:18,380:9,121:1, 136:1,139:19,273:1,112:11,113:4,124:6,136:5,157:14,393:7,396:2,7:16, 253:10,256:5,275:2,28:9,168:4,271:11,330:4,306:13,352:1,365:7,110:25, 181:7,372:15,392:1,181:22,281:2,296:12)*** ஆகும். பிற பதிப்புகளின் வேறுபாட்டுத் தன்மை *59*ஆக அமைகிறது. *1920*இல் வெளிவந்த ராஜ.பதிப்பின் பாடங்கள் சில மயிலம்வே. பதிப்பில் இடம்பெறுவனவாக

7 இடங்கள் காணப்பெறுகின்றன. இவ்வேழு இடங்களும் முன்னர் உள்ள 72 என்ற எண்ணிக்கையில் சேர்க்கப்பெற்றுள்ளன.

**பொருத்தமான பாடங்களும் பொருந்தாத பாடங்களும்**

அகநானூற்றுப் பதிப்புகளிடையே பலவகைப்பட்ட வேறுபாட்டுத் தன்மைகள், வேறுபாடுகள் இருந்தாலும் பெரும்பாலும் பொருத்தமான பாடங்களைக் கொண்ட பதிப்பாகத் திகழ்வது மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு என்பதை இவ்வியல்வழி அறிய முடிகிறது. 400 பாடல்களுக்கும் உரை இருப்பதால் இத்தகைய தெளிவான பாடத்தை இப்பதிப்பால் தேர்ந்தெடுக்க முடிந்தது என்று குறிக்கலாம்.

இக்கருத்துடன் ராஜகோபாலார்யன் பதிப்பின் பாடங்களும் இணைத்து எண்ணத்தக்கது. 1920, 1923 ஆம் ஆண்டுகளில் தாம் குறித்திருக்கும் சில பாடங்களை 1926, 1933 ஆம் ஆண்டுகளில் சோதித்துப் பொருத்தமான பாடங்களைக் கொண்டு பதிப்பிக்கிறார் ராஜகோபாலார்யன். இதற்குப் பதிப்பு அனுபவமும் உரை முயற்சியுமே காரணமாகும். இவ்வகையில் 242 பாடங்கள் (விவரம்: பின்னிணைப்பு-2) திருத்தமடைந்துள்ளன என்பது நினைவில் கொள்ளத்தக்கது. இது உரைமுயற்சியின் வலிமையைக் காட்டுவது எனலாம்.

இதேபோல் அகநானூறு நூல் முழுமைக்கும் ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை ஆகியோர் உரையெழுதிப் பதிப்பிக்கப்பெற்றதாக மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு அமைவதால் அப்பதிப்பின் பாடங்கள் பெரும்பாலான இடங்களில் பொருந்துகின்றன என்பது இங்குக் குறிக்கத்தக்கது.

இவ்வாறு மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு பெரும்பாலான இடங்களில் பொருத்தமான பாடங்களைக் கொண்டிருக்க மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு பெரும்பாலான இடங்களில் பொருந்தாத பாடங்களைக் கொண்டமைகிறது. அதற்குரிய காரணங்களாகப் பின்வரவனவற்றைக் குறிக்கலாம்.

சங்க இலக்யப் பதிப்புகள் பல இன்றுவரை வெளிவந்து கொண்டிருந்தாலும் உ.வே.சா. பதிப்புகளுக்கு நிகராக எந்த நூலுக்குமுரிய எந்தப் பதிப்புகளையும் குறிக்க இயலவில்லை. அவ்வகையில் அகநனூறறிற்குச்

சிறந்த பதிப்பொன்றைக் கொண்டுவர முயற்சிக்கும் உ.வே.சா. காலம் கடக்கிறார். இதனால் 1990 இல் உ.வே.சா. சேகரித்து வைத்திருந்த குறிப்புகளைப் பயன்படுத்தி மயிலம்வே.சிவசுப்பிரமணியன் அகநானூற்றைப் பதிப்பித்து வெளியிடுகிறார்.

உ.வே.சா. பதிப்பின் பாடங்கள் பிற பதிப்புகளின் பாடங்களிலிருந்து பெரும்பாலும் வேறுபட்டு அமையும்; அதேவேளை பொருத்தமான பாடங்களாகவும் இருக்கும். ஆனால், மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பிறபதிப்புகளிலிருந்து வேறுபடுதல் என்பதை மட்டும் நினைவில் கொண்டு 'தம் பதிப்பின் பாடங்கள் பிற பதிப்புகளிலிருந்து மாறுபட வேண்டும் என்பதற்காகப் பெரும்பாலான பாடங்களை வலிந்து குறித்துள்ளார்' என்று எண்ணத்தோன்றுகிறது. அதன்வழி அப்பதிப்பு சிறந்த பதிப்பாக அடையாளப் படுத்தப்பெறும் என்பது அவரின் எண்ணமாக அமைந்திருக்கலாம்.

ஆனால், அப்பாடங்கள் பெரும்பாலும் பொருத்தமின்றி அமைகின்றன. மேலும் பெரும்பாலான அச்சுப்பிழைகளும் காணப்பெறுகின்றன. இதனாலேயே மயிலம்வே. பதிப்பின் பாடங்கள் பெரும்பாலும் பொருந்தாமல் அமைகின்றன என்பது நினைவில் கொள்ளத்தக்கதாகும்.

**தொகுப்புரை**

இவ்வியல்வழி அறியலாகும் கருத்துகள் வருமாறு:

• அகநானூற்றுப் பதிப்புகளிடையே 2367 பாடவேறுபாடுகள் இருப்பதை அறியமுடிகிறது. இவற்றுள் 182 வேறுபாடுகள் பொருள் மாற்றமுடையனவாகவும் 2185 வேறுபாடுகள் அச்சுப்பிழை முதலான காரணங்களால் ஏற்பட்டனவாகவும் அமைகின்றன.

• அடிக்குறிப்பு மட்டுமான வேறுபாடுகளாக அமையும் 1191 பாடவேறுபாடுகள் தனித்து ஆராயப்பெறும் சூழலில் பொருள் மாற்றமுடைய பாடவேறுபாடுகளின் எண்ணிக்கை மிகுவதற்கு வாய்ப்புண்டு.

• 1918, 1920 ஆம் ஆண்டுகளில் அகநானூற்றைப் பதிப்பிக்கும் ராஜகோபாலார்யன் 1923இல் ரா.இரா.வின் உதவிவழியும் 1926, 1933 ஆம் ஆண்டுகளில் தம் உரைமுயற்சி, பதிப்பு அனுபவம் ஆகியவற்றின் வழியும் 241 பாடங்களைத் திருத்திப் பதிப்பிக்கிறார். இப்பாடங்களே பொருத்தமானவையாக அமைகின்றன.

• பொருத்தமான பாடங்களைத் தேர்ந்தெடுப்பதில் பாடலின் சூழல், பாடலின் கருத்தமைவு, உரை, விளக்கம், சமகால (சங்க) இலக்கியப் பதிவுகள், அகராதிப் பொருண்மைகள், யாப்பியல் நிலையைக் கருத்தில் கொள்ளுதல் ஆகிய நிலைகள் பின்பற்றப்பெற்று, அவற்றின்வழிப் பொருத்தமான பாடங்கள் இனங்கண்டறியப் பெற்றுள்ளன.

• பாடவேறுபாட்டு விளக்கங்கள் அடிநிலை, சொல்நிலை, எழுத்துநிலை, அடிக்குறிப்புகளுடன் கூடியவை, அடிக்குறிப்புகள் மட்டுமானவை, ஒற்றெழுத்து, உடம்படுமெய், ஆய்த எழுத்து வேறுபாடுகள் என்று பகுத்து விளக்கப்பெற்றுள்ளன.

• பாடவேறுபாடுகளை விளக்கும் சூழலில் முதலில் அச்சுப்பிழை முதலானவற்றால் ஏற்படும் வேறுபாடுகளும் அதனைத் தொடர்ந்து பொருள் மாற்றமுடைய வேறுபாடுகளுமாக வகைப்படுத்தி விளக்கப்பெற்றுள்ளன.

• பாடவேறுபாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பே மிகுதியான அளவில் வேறுபடுகிறது. மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பின் பாடங்கள் மிகுதியான அளவில் பொருந்துகின்றன.

• மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு மிகுதியான அச்சுப் பிழையுடனும் வலிந்து கூறப்பெறும் பாடங்களுடனும் அமைகின்றன. அதனால் மிகுந்தளவில் வேறுபட்டு அமைகிறது. மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு அகநானூறு முழுமைக்குமான ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம்பிள்ளை ஆகியோர் உரையுடன் வெளிவந்துள்ளது. இப்பதிப்பு நூல் முழுமைக்கும் உரைகளைப் பெற்றுள்ளதால் உரை அடிப்படையில் பொருத்தமான பாடங்கள் தேர்வு செய்யப் பெற்றுள்ளன.

• மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் மிகுதியான அச்சுப் பிழைகள் இருப்பதும் இங்குக் குறிக்கத்தக்கது. நன்கு தட்டச்சுத்துறை வளர்ந்த காலத்தில் இத்தகைய மிகுதியான பிழைகள் ஏற்படுவதும் அதைக் கவனிக்காது பதிப்பாசிரியர் பதிப்பித்து வெளியிட்டிருப்பதும் வருத்தத்தைத் தருவதாக அமைகின்றது.

**சான்றெண் விளக்கம்**

1. செல்லையா பிள்ளை சு., "பாடவேறுபாடும் மூலபாட ஆய்வும்", கு.பகவதி, ஜீன்லாரன்ஸ் (பதி.), ***தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்,*** ப.160
2. மேலது, ப.160
3. மேலது, ப.160
4. மேலது, பக்.163–164
5. இராமகிருட்டிணன், மூ., ***பிரதிபேத ஆராய்ச்சி,*** அணிந்துரை, ப.10
6. செல்லையா பிள்ளை சு., "பாடவேறுபாடும் மூலபாட ஆய்வும்" கு.பகவதி, ஜீன்லாரன்ஸ் (பதி.), ***தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்,*** ப.164
7. பழநியப்பன் வெ., ***தமிழ் நூல்களில் பாடவேறுபாடுகள்,*** ப.389
8. கடவுள் வாழ்த்து, பாயிரம் உட்பட 402 பாடல்களிலும் வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. இவற்றுள் 58,147,382 ஆகிய பாடல்களில் உள்ள வேறுபாடுகள் ஒற்றெழுத்து வேறுபாடுகளாகவும் 397ஆம் பாடலில் உள்ள வேறுபாடு உடம்படுமெய் வேறுபாடாகவும் அமைகின்றன. 153,391ஆம் பாடல்களுக்கான வேறுபாடுகள் ராஜ.பதிப்புகளிடையே வேறுபட்டு அவரால் திருத்தம் பெற்றவையாகும். இவ்வகையிலான வேறுபாடுகள் மட்டும் மேற்கண்ட பாடல்களில் காணப்பெறுகின்றன என்பது இங்குக் குறிக்கத்தக்கது. பிற பாடல்களில் சொல்நிலை, அடிநிலை முதலான தன்மைகளில் வேறுபாடுடைய பாடங்கள் காணப்பெறுகின்றன.
9. விநாயகமூர்த்தி அ., ***புத்தகக்கலை,*** ப.93
10. வேங்கடசாமி நாட்டார் ந.மு.,வேங்கடாசலம் பிள்ளை கரந்தைக் கவியரசு.(உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.21
11. சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.21
12. ***ஸ்ரீ:அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும்,*** பா.எ.5
13. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.5

14. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு.(உரை.), ***அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும்,*** சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), ***அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும்,*** பா.எ.377

15. குறுந்.159:3,389:7,274:8,280:3,நற்.46:5,52:4,55:4,93:9,229:7,234:4, 236:10,240:4,308:8,344:6,358:2,374:7,ஐங்.106:4,127:3,197:4, பதி.58:11,68:4,பரி.10:31,12:74,கலி:2:14,18,4:17,14:5,20:9,39:4, 40:33,60:30,64:27,98:16,அகம்.5:22,6:10,43:12,44:19,48:11,49:8, 61:18,62:3,12,69:20,75:12,93:15,97:14,146:11,150:2,159:21,161:12, 174:12, 177:18, 198:6,206:9,220:9,240:11,247:2,299:15,343:3,399:3, புறம்.25:10,68:5,350:11,திரு.32,139,பொரு.35,மது.569,நெடு.136, குறி.186,249,மலை.31.

16. ராஜகோபாலார்யன் (பதி.,உரை.), ***ஸ்ரீ:எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் முதற்றொண்ணூறு பாட்டிற்குப் பழைய உரையும் இறுதி முப்பது பாடல்களுக்கு ராஜகோபாலார்யன் எழுதிய குறிப்புரையும்,*** பா.எ.97

17. சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), ***அகநானூறு களிற்றியானை நிரை மூலமும் உரையும்,*** பா.எ.97

18. நற்.197:5,309:4,391:1,அகம்.61:5,69:4,85:5,97:15,209:7,223:3,253:9, புறம்.152:5

19. நற்.372:4

20. அகம்.375:18

21. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு. (உரை.), ***அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும்,*** பா.எ.125

22. மேலது

23. ***ஸ்ரீ:அகநானூறு, மூலமும் உரையும், முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும்,*** பா.எ.127

24. சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), ***அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும்,*** பா.எ.136

25. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு. (உரை.), ***அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும்,*** பா.எ.139

26. குறுந்.262:6,353:2,396:5,நற்.32:1,43:2,53:4,92:4,171:2,257:4, 326:1,357:4.ஐங்.299:1,அகம்.3:6,5:11,72:11,98:1,118:1,137:14, 143:13,162:24,173:17,179:1,189:6,198:15,201:15,202:1,338:6,349:9, 385:8,புறம்.151:2,சிறு.84,பட்.138.

27. ராஜகோபாலார்யன் (பதி.உரை.), மு.நூ.பா.எ.142

28. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு. (உரை.), ***அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும்,*** பா.எ.290

29. மேலது, பா.எ.293

30. மேலது, பா.எ.295

31. மேலது, ***அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும்,*** பா.எ.336

32. கௌமாரீஸ்வரி எஸ்.(பதி.), ***நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி,*** ப.896

33. மேலது, ப.90

34. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு. (உரை.), ***அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும்,*** பா.எ.352

35. மேலது, பா.எ.364

36. மேலது, பா.எ.369

37. மேலது, பா.எ.371

38. மேலது, பா.எ.379

39. கௌமாரீஸ்வரி எஸ்.(பதி.), ***நா.கதிரைவேற்பிற்ளையின் தமிழ்மொழி அகராதி,*** ப.213

40. மேலது, ப.253

41. ***ஸ்ரீ:அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதியும், இரண்டாம் பகுதியும்,*** பா.எ.67

42. கௌமாரீஸ்வரி எஸ். (பதி.), ***நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி,*** ப.906

43. ராஜகோபாலார்யன் (பதி.உரை.), மு.நூ.பா.எ.107

44. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு, (உரை.), ***அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும்,*** பா.எ.269

45. மேலது, பா.எ.337

46. கௌமாரீஸ்வரி எஸ்.(பதி.), ***நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி,*** ப.142

47. மேலது, ப.102

48. மேலது, ப.1096

49. மேலது, ப.1109

50. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு. (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.40

51. ***ஸ்ரீ:அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும்,*** பா.எ.6

52. சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), ***அகநானூறு களிற்றியானை நிரை மூலமும் உரையும்,*** பா.எ.6

53. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம் பிள்ளை கரந்தைக் கவியரசு (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.13

54. சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), ***அகநானூறு களிற்றியானை நிரை மூலமும் உரையும்,*** பா.எ.29

55. வேங்கடசாமி நாட்டார் ந.மு.,வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.29

56. மேலது, பா.எ.122

57. ***ஸ்ரீ:அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும்,*** பா.எ.7

58. வேங்கடசாமி நட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.7

58அ. மேலது, பா.எ.8

59. மேலது, பா.எ.215

60. ***ஸ்ரீ:அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும்,*** பா.எ.30

61. கௌமாரீஸ்வரி எஸ். (பதி.), ***நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி,*** ப.989

62. மேலது, ப.664

63. ***ஸ்ரீ:அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும்,*** பா.எ.83

64. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.83

65. ராஜகோபாலார்யன் (பதி.,உரை.), மு.நூ., பா.எ.103

66. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு. (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.103

67. சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), ***அகநானூறு களிற்றியானை நிரை மூலமும் உரையும்,*** பா.எ.103

68. கௌமாரீஸ்வரி எஸ்.(பதி.), ***ஆ.சிங்காரவேலு முதலியாரின் அபிதான சிந்தாமணி,*** ப.1184

69. சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), ***அகநானூறு களிற்றியானை நிரை மூலமும் உரையும்,*** பா.எ.3

70. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.8

71. மேலது, பா.எ.17

72. மேலது, பா.எ.45

73. மேலது, பா.எ.262

73அ. மேலது

74. மேலது, பா.எ.263

75. ராஜகோபாலார்யன் (பதி.,உரை.), மு.நூ. பா.எ.62

76. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.62

77. ராஜகோபாலார்யன் (பதி.,உரை.), ஸ்ரீ: எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் ***அகநானூறு மூலமும் பழைய உரையும்,*** பா.எ.122

78. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம் பிள்ளை கரந்தைக் கவியரசு (உரை.), ***அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும்,*** பா.எ.207

79. மேலது, பா.எ.333

80. சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), ***அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும்,*** பா.எ.317

81. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு (உரை.), ***அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும்,*** பா.எ.317

82. மேலது, பா.எ.357

83. சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), ***அகநானூறு களிற்றியானை நிரை மூலமும் உரையும்,*** பா.எ.110

84. வேங்கடசாமி நாட்டார் ந.மு., வேங்கடாசலம்பிள்ளை கரந்தைக் கவியரசு (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,*** பா.எ.110

85. மேலது, பா.எ.152

86. மேலது, ***அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும்,*** பா.எ.281

# இயல் மூன்று

## அகநானூறு : உரைவேறுபாடுகள்

### முன்னுரை

ஒரு பாடலில் காணப்பெறும் ஒரு பாடம் மாறுபடும்போது, அதற்காக உரைமாறுபடுதல் என்பது உண்டு. இதனைப் பாடவேறுபாடு என்று குறிக்கலாம். ஆனால், பாடம் மாறுபடாது உரை மட்டும் மாறுபடும் தன்மையினை உரைவேறுபாடு என்று குறிப்பிடலாம். இவ்வகையில் அகநானூற்றுப் பதிப்புகளில் காணலாகும் உரைவேறுபாடுகள் குறித்து விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

அகநானூற்றுப் பதிப்புகள்வழி அறியலாகும் உரைகளை 1–90, 91–160, 161–400 என்று உரைகிடைக்கும் தன்மையை அடிப்படையாகக் கொண்டு பகுத்தாலும் உரைவேறுபாட்டுத் தன்மைகளின் அடிப்படையில் பின்வரும் இருநிலைகளில் பகுக்கலாம்.

1. இரண்டு வேறுபாடுகள் காணப்பெறுதல்
2. மூன்று வேறுபாடுகள் காணப்பெறுதல்.

### இரண்டு வேறுபாடுகள் காணப்பெறுதல்

ராஜகோபாலார்யன் பதிப்புகளில் 1–160 பாடல்களுக்கு மட்டுமே உரை காணப்பெறுகிறது. அகநானூறு நூல் முழுமைக்குமான உரை பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு, மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியனவற்றில் காணப்பெறுகிறது. இவற்றுள் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பில் காணப்பெறும் உரைத்தன்மைகள் பெரும்பாலும் பொழிப்புரை, குறிப்புரைகளாகவே அமைகின்றன. இந்நிலையில் ஒவ்வொரு சொல்லுக்குமான உரைத்தன்மையை இப்பதிப்பில் காண இயலவில்லை.

ஒரு பாடலுக்கு/பாடத்திற்கு மூன்று பதிப்புகளிலும் உரைகள் காணுமிடத்து ஏதேனும் இரு பதிப்புகளின் உரைக்கருத்துகள் ஒன்றுபட்டும் ஒரு பதிப்பின் உரை மாறுபட்டும் அமையும் தன்மை அகநானூற்று உரைகளில் காணப்பெறுகிறது. 161–400 பாடல்களுக்கு இரண்டு உரைகள் மட்டுமே காணப்பெறுகின்றன. அவற்றிலும் சில பாடல்களில் உரைவேறுபாடுகள் காணப்பெறுகின்றன. இத்தகைய இரண்டு உரைவேறுபாடுகள் அகநானூற்றில்

89 இடங்களில் காணப்பெறுகின்றன (விவரம்: பின்னிணைப்பு-29). அவ்வேறுபாடுகளில் பொருத்தமானவற்றைக் கண்டறிவதாக இனிவரும் பகுதி அமைகிறது.

**க.வா.:11 முதிராத் திங்களொடு**

கடவுள் வாழ்த்தின் இவ்வடிக்குப் பழைய உரை, ***"திங்களொடு சுடருஞ் சென்னி"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே., கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பதவுரை ஆகியன முறையே, ***"இளம்பிறை சுடருஞ் சென்னி, முதிராத இளம்பிறையோடு"*** என்று பொருள் குறிக்கின்றன.

'திங்கள்' என்பது 'முழுநிலவை'க் குறிக்கும். அகநானூற்றின் கடவுள் வாழ்த்துப்பாடல் சிவன் பற்றியதாகும். சிவன் தன்தலையில் முழுமதியைச் சூடியதாகத் தொன்மப்பதிவுகள் இல்லை; இளம்பிறை சூடியதான பதிவுகளே உண்டு. மேலும் 'முதிராத் திங்கள்' என்பதும் இளம்பிறையைக் குறிப்பதாகும். எனவே, இப்பாடத்திற்கு, ***"இளம்பிறைசுடருஞ்சென்னி, முதிராத இளம்பிறையோடு"*** என்ற உரைக்கருத்துகளே பொருத்தமாவை எனலாம்.

**க.வா.:15 யாழ்கெழு மணிமிடறு**

இப்பாடத்திற்குப் பழைய உரை, ***"சாமவேதம் பாடின மணிபோலும் நிறத்தையுடைய மிடறு"*** என்றும் ந.மு.வே.,கரந்தை.உரை, ***"மறையிசை பொருந்திய நீலமணிபோலும் திருமிடற்றினையுடைய"*** என்றும் பொருள் குறிக்கின்றன.

ந.மு.வே.,கரந்தை. ஆகியோரின் விளக்கவுரையில்,

> "யாழ் என்றது ஆகுபெயரால் மறையிசையைக் குறிக்கும்; அன்றி யாழிசையுடன் பாடும் மிடற்றினையுடையன் என்னலுமாம்; "எம்மிறை நல் வீணை வாசிக்குமே" என்றார் திருநாவுக்கரையரும்"[1]

எனும் கருத்தும் காணப்பெறுகிறது. இவ்விளக்கவுரைக் கருத்துடன் சேர்க்க இப்பாடத்திற்கு, ***'சாமவேதம் பாடின மணிமிடறு, மறையிசை பொருந்திய மணிமிடறு, யாழிசையுடன் பாடும் மிடறு'*** எனும் மூன்று உரைக்கருத்துகளை அறியமுடிகிறது.

‘சாமவேதம்’ எனும் வடமொழிச் சொல்லுக்கு நிகரானதாக ‘மறையிசை’ எனும் சொல்லைக் குறிக்கலாம். எனவே, ‘சாமவேதம், மறையிசை’ எனும் இரண்டும் ஒரு பொருள் குறிப்பன என்பதும் இங்குக் குறிக்கத்தக்கது. ‘யாழ்கெழு’ என்பதற்கும் ‘மறை’ என்பதற்கும் அபிதான சிந்தாமணி ‘இசைக்கருவி’ என்று பொருள் கூறி ஒரு பக்க அளவில் விளக்கம் தருகிறது. நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி யாழ் என்பதற்கு,

> *“அசுபதி, ஆந்தை, திருவாதிரை, நீர்ச்சுழியின் திரை, மிதுனவிராசி, வீணை”*[2]

என்று பொருள் குறிக்கிறது. இவ்விளக்கம் மேற்குறித்த கருத்திற்கு வலுச்சேர்ப்பதாக அமைகிறது. இவற்றின்வழி, ***“யாழிசையுடன் பாடும் மிடறு”*** எனும் உரைக்கருத்தையே இங்குப் பொருத்தமானதாகக் குறிப்பிடலாம்.

**1:9 வெறுக்கை தருமார்**

இப்பாடத்தில் வரும் ‘தருமார்’ என்பதற்கு, ***“தரவேண்டி”*** என்று பழைய உரையும் ***“ஈட்டி வரவேண்டி”*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் பொருள் உரைக்கின்றன.

பொருள்வயிற்பிரியும் தலைவன் நிலைபற்றிய இப்பாடலில், ‘தலைவியை வருந்தும்படி விட்டுப்பிரியும் தலைவன் பொருள்தேடி வருதல் பொருட்டுப் பிரிகிறான்’ எனும் கருத்தை உணர்த்த மேற்கண்ட இரு உரைவேறுபாடுகள் காணப்பெறுகின்றன. ஈட்டித்தருதல், ஈட்டிவருதல் எனும் இரு சொற்களும் அடிப்படையில் மாற்றம் உடையன.

பொருள் ஈட்டி ஒருவருக்குக் கொடுத்தல் ‘ஈட்டித் தருதல்’ என்றும் பொருள் கொண்டு வருதல் ‘ஈட்டி வருதல்’ என்றும் இச்சொற்கள் பொருள் தருகின்றன. தலைவனின் இந்நிலைக்கு இவ்விரு பொருண்மைகளும் பொருந்தும் எனினும் மூலபாடத்தில் ‘தருமார்’ எனும் தன்மை காணப்பெறுவதால் ***“ஈட்டித் தரவேண்டி”*** எனும் உரையையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**5:13 பாத்தி யன்ன**

‘பாத்தி யன்ன’ எனும் இப்பாடத்திற்குப் பழைய உரையும் மயிலம் வே.பதி.பொழிப்புரையும் ***“பதித்து வைத்தாலொத்த”*** என்று உரை கூறுகின்றன. ந.மு.வே.,கரந்தை.உரையில், ***“பகுத்து வைத்தாலொத்த”*** எனும்

உரைக்கருத்துக் காணப்பெறுகிறது.

'பாலை நிலத்தில் கூர்மையான கற்கள் மண்ணுக்குள் புதைந்து, அதன் நுனியை மட்டும் மேல்நீட்டி வெயிலில் சூடேறி இருக்கின்றன. அப்போது அவ்வழியில் வருவோர் கால்களின் விரல்களைச் சிதைக்கின்றன' எனும் கருத்தை விளக்க,

"மாய்த்த போல மழுகுநுனை தோற்றிப்
பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்
விரனுதி சிதைக்கும் நிறைநிலை அதர்" (5:12–14)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன.

இங்கு, 'கற்கள் மண்ணுக்குள் புதைந்து அதன் நுனியை மட்டும் வெளியில் நீட்டி உள்ளன' எனும் பொருண்மை வருவதால் 'பாத்தியன்ன' எனும் பாடத்திற்கு, ***"பதித்து வைத்தாலொத்த"*** எனும் உரையே பொருந்துகிறது எனலாம்.

**5:17 அன்றெனக் கூரிய தொன்றுபடு கிளவி**

இப்பாடத்திற்குப் பழைய உரை, ***"இயற்கைப் புணர்ச்சிக் காலத்துச் சொன்ன வார்த்தை"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே., கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன முறையே, ***"அன்றெனக் கூறிய பழைமை பொருந்திய சொல், அனறெனக் கூறிய பழமைபட்ட வார்த்தை"*** என்று பொருள் உரைக்கின்றன.

ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியனவற்றில் குறிக்கப்பெற்றிருக்கும் 'அன்றென' என்ற உரைக்கருத்திற்கான விளக்கமாக, "இயற்கைப் புணர்ச்சிக் காலத்து" என்று பொருள் குறிக்கும் பழைய உரைக்கருத்து ஏற்கத்தக்கது. எனினும் பழைய உரையில் 'தொன்றுபடு' என்ற சொல்லுக்கான பொருள் காணப்பெறவில்லை. ஓர் உரையில் அன்று என்பதற்கான பொருள் காணப்பெற்று 'தொன்று' என்பதற்கான பொருள் குறிக்கப்பெறவில்லை. இரண்டு உரைகளில் 'அன்று' என்பதற்கு 'இயற்கைப் புணர்ச்சிக் காலத்து' என்ற பொருள் காணாது 'தொன்று (பழைமை)' என்பதற்கான பொருள் காணப்பெறுகிறது. எனவே, இவ்விரு உரைத்தன்மைகளையும் பொருத்தி மேற்கண்ட அடிக்கு, ***"இயற்கைப்***

***புணர்ச்சிக் காலத்துச் சொன்ன பழைமைபட்ட வார்த்தை"*** என்று பொருள் குறிப்பது பொருத்தமானதாக அமையும்.

**7:1 முலை முகஞ்செய்தன**

மக்கட்போக்கிய செவிலித்தாய் வருந்திக் கூறும் இப்பாடலில் தலைவியின் நிலைபற்றியதாக,

"முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின
தலைமுடி சான்ற தண்தழை யுடையை" (7:1-2)

எனும் அடிகள் பயின்று வருகின்றன.

இவ்வடிகளில் வரும் 'முலைமுகஞ் செய்தல்' என்பதற்கு, ***"நிரம்புதல்"*** என்று பழைய உரையும் மயிலம்வே.பதி.பொழிப்புரையும் பொருள் கூறுகின்றன. ந.மு.வே.,கரந்தை.உரை ***"நினக்கு முலைகள் அரும்பின"*** என்று பொருள் குறிக்கின்றது. 'நிரம்புதல்' என்பதற்கு 'நிறைந்திருத்தல்' என்பது பொருளாகும். 'அரும்புதல்' என்பதற்குத் 'தோன்றுதல்' என்பது பொருளாகும். 'முகம்செய்தல்' என்பது தோன்றுதலையே குறிக்கும். எனவே, 'தலைவிக்கு மார்பகம் தோன்றுகிறது' எனும் பொருள்தருகின்ற, ***"நினக்கு முலைகள் அரும்பின"*** என்னும் ந.மு.வே.,கரந்தை.உரைக்கருத்தே இங்கு ஏற்கத்தக்கதாக அமைகின்றது.

**7:14 அத்தக் கள்வர் ஆதொழு அறுத்தென**

பாலைநிலத்தில் ஆநிரைப்போர் நிகழும் சூழலை விளக்குவதாக மேற்கண்ட அடி பயன்படுத்தப் பெற்றுள்ளது. இவ்வடிக்கு, ***"ஆவைத் தொழுவினின்றும் நேராகக் கொண்டு வந்தார்கள்"*** என்று பழையஉரை பொருள் குறிக்கிறது. ந.மு.வே., கரந்தை. உரை, மயிலம் வே.பதி.பொழிப்புரை ஆகியன முறையே, ***"ஆக்களைத் தொழுவினின்றும் கொண்டகன்றனராக, ஆவைத் தொழுவினின்றும் நேராகக் கொண்டு சென்றார்களென்று"*** எனப் பொருள் உரைக்கின்றன.

இவற்றுள் 'கொண்டு வந்தார்கள்' என்பது தம்மை நோக்கி வருதலைக் குறிக்கும். கொண்டகன்றனர்/சென்றார்கள் என்பது வேறு திசை நோக்கிச் செல்வதைக் குறிக்கும்.

இங்கு ஆக்களைக் கவர்ந்து வருபவரைப் பின் தொடர்ந்து கரந்தை வீரர்கள் போரிட்டனர் என்பதைவிட, கவர்ந்து சென்றவரைப் பின் தொடர்ந்து போரிட்டனர் என்று குறிப்பிடுவதே பொருத்தமானதாக அமையும். எனவே இவ்வடிக்கு, ***'ஆக்களைத் தொழுவினின்றும் கொண்டகன்றனர்/ சென்றார்கள்'*** என்ற உரைக்கருத்தே பொருத்தமுடையது எனலாம்.

### *8:18 என்னுநர்ப் பெறினே*

தலைமகன் இரவுக்குறியில் வந்து சிறைப்புறமாக இருக்கத் தலைவி அவன் வரும்வழி பற்றித் தோழிக்குச் சொல்லுவாளாய்,

"துளிதலைத் தலைஇய மணியே ரைம்பால்
சிறுபுறம் புதைய வாரிக் குரல்பிழியூஉ
நெறிகெட விலங்கிய நீயிர்இச்சுரம்
அறிதலும்அறிதிரோ என்னுநர்ப் பெறினே" *(8:15–18)*

என்று குறிப்பிடுகிறாள். இவ்வடிகளின் இறுதியடியில் வரும் 'என்னுநர்' என்பதற்கு, ***"என்று சொல்லுவாரை"*** என்று பழைய உரையும் ***"வினவுவாரை"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் பொருள் உரைக்கின்றன.

"வழிகள் செல்ல முடியாதபடி பின்னிக்கிடக்கும் இச்சுரத்தின்
நெறியினை நீவிர் முன்பு அறிதலும் செய்வீரோ"[3]

என்று பிறர் கேட்பதாக இச்சூழல் அமைக்கப்பெற்றுள்ளது. என்னுநர் என்பதற்கு, "என்று சொல்லுவாரை" என்பது பொருத்தமானதாக அமைந்தாலும் சூழல் விளக்கத்தினடிப்படையில் ***"என்று வினவுவாரை"*** என்று பொருள் குறிப்பதே மிகப் பொருத்தமானதாக அமையும்.

### *9:5 தீம்புழல் துய்வாய்*

இப்பாடத்தில் வரும் 'துய்' என்பதற்குப் பழையஉரை, ***"பஞ்சு"*** எனப் பொருள் குறிக்கின்றது. ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி. பொழிப்புரை ஆகியன, ***"துளையுள்ள பூக்கள், துளையுள்ள இனிய பூக்கள்"*** என்று உரை குறித்துள்ளன.

"இழுதின் அன்ன தீம்புழல் துய்வாய்" *(9:5)*

என்று இழுப்பையின் 'பூ' பற்றி இப்பாடல் குறிக்கிறது.

'துய்' எனும் சொல் சங்க இலக்கியத்தில் 29 இடங்களில் (குறுந்.110:6,380:6,நற்.57:3,95:4,97:6,111:2,118:8,193:2,206:1,300:8,326:4, 358:8,பதி.32:4,43:23,44:18,66;15,அகம்.7:21,9:5,191:1,217:2,241:14, 252:10,294:6,306:3,333:10,376:16,புறம்.158:24,குறி.37,மலை.178) காணப்பெறுகிறது.

இவற்றுள் 18 இடங்கள் பஞ்சு, மென்மை, தூய்மை (குறுந்.110:6, 380:6,நற்.57:3,95:4,97:6,111:2,118:8,193:2,206:1,300:8,326:4,358:8, அகம்.191:1,217:2,241:14,294:6,306:3,376:16) என்ற பொருண்மைகளைத் தருகின்றன. ஓரிடம் மட்டும் துளை (அகம்.333:10) எனும் பொருளைத் தருகிறது. துளை எனும் பொருள் தரும் இடம் 'தூம்பு' எனும் இசைக்கருவி பற்றியதாகும். பிற அனைத்தும் பூக்கள், குரங்கின் தலை அமைப்பு போன்றவை பற்றி வருவனவாகும். எனவே, இங்குப் பூவின் தன்மை பற்றி வருவதால் ***'பஞ்சு போன்ற துளையுள்ள பூ'*** என்பதே பொருத்தமான பொருள் என்று குறிக்கலாம்.

**9:11 மகளிர் ஒக்கிய**

பெண்கள் உலக்கையை எடுத்து உரலில் குற்றும் ஒலி பற்றிக் குறிக்க,

"கெளிநுண் ஓதி மகளிர் ஒக்கிய
தொடிமாண் உலக்கைத் தூண்டுரற் பாணி" (9:11–12)

எனும் அடிகள் பயன்படுத்தப்பெற்றுள்ளன. இவ்வடிகளில் வந்துள்ள 'ஒக்கிய' என்பதற்கு, ***"எடுத்த"*** என்ற பொருளைப் பழைய உரை, மயிலம்வே.பதி. பொழிப்புரை ஆகியன குறிப்பிடுகின்றன. ***"உயர்த்த"*** என்பதனை ந.மு.வே., கரந்தை.உரை பொருளாகக் குறிக்கிறது.

'மகளிர் உலக்கையை எடுத்தனர்' என்பதற்கும் 'உலக்கையை உயர்த்தினர்' என்பதற்கும் வேறுபாடு உண்டு. உலக்கையை எடுத்தல் என்பது சாதாரணமாகக் கீழிருந்து எடுத்தலைக் குறிக்கும். 'உயர்த்தல்' என்பது உரலில் உள்ளதை இடிப்பதற்கு ஓங்குவதைக் குறிக்கும். இங்கு உரலில் உள்ளதை இடிப்பதற்காக ஓங்குதல் பற்றிய குறிப்புக் காணப்பெறுவதால் இவ்வுரை வேறுபாடுகளில் 'உயர்த்த' என்பதனையே பொருத்தமுடையதாகக் கொள்ளலாம்.

### *11:4 கலிகொள் ஆயம்*

இப்பாடத்தில் வரும் ஆயம் என்பதற்கு, ***"மக்கள் தொகுதி, மக்களின் கூட்டம்"*** எனும் பொருண்மையினைப் பழைய உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன குறிக்கின்றன. ஆனால், ந.மு.வே., கரந்தை.உரை ***"மகளிர் கூட்டம்"*** என்று பொருள் குறிக்கிறது.

இலவம் பூக்கள் பற்றிக் குறிப்பிடும் இப்பாடல், அது கார்த்திகை விளக்குப்போல இருந்தது என்பதனைக் குறிக்க,

"டிலையில மலர்ந்த முகையி லிலவங்
கலிகொ ளாய மலிபுதொகு பெடுத்த
வஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி" *(11:3–5)*

என்ற அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளுக்கான உரைவேறுபாடுகள் மேற்கண்டவாறு அமைவதற்கு அக்கால நடைமுறையே அடிப்படைக் காரணம் எனலாம்.

'இலவ மலர்கள் ஆயத்தாரால் ஏற்றப்பெற்று கார்த்திகை விளக்குப் போல இருந்தது' என்பதைக் குறிப்பதாக இவ்வடிகளில் வரும் 'ஆயம்' என்பது மக்கள் என்றே நேரடியாகப் பொருள் கொள்ளப்பெற்றுள்ளது. அதனால், 'மக்களால் ஏற்றப்படும் கார்த்திகை விளக்கு' என்று பழைய உரை, மயிலம்வே.பதி. பொழிப்புரை ஆகியன பொருள் உரைக்கின்றன. ஆனால், ந.மு.வே., கரந்தை. ஆகியோர் 'ஆயம்' என்பதனை மகளிருக்கு ஆகுபெயராக்கி 'மகளிரால் ஏற்றப்படும் கார்த்திகை விளக்கு' என்று பொருள் குறிக்கின்றனர்.

இங்குக் 'கார்த்திகை விளக்குப் பெண்களால் ஏற்றப்படும்' என்ற நடைமுறையை மனதிற்கொண்டே 'மகளிர் கூட்டம்' எனும் உரை எழுதப் பெற்றுள்ளதை அறியமுடிகிறது. 141 ஆம் பாடலிலும் கார்த்திகை விளக்கு, பெண்களுடன் தொடர்புபடுத்தப் பெற்றிருப்பது இங்குக் குறிக்கத்தக்கது. இவற்றின் வழி 'ஆயம்' என்பது பொதுவாக 'மக்கள் கூட்டத்தைக் குறிக்கும் என்றாலும் இவ்விடத்தில் 'மகளிர்க்கு' ஆகு பெயராய் வந்துள்ளது என்பதனைக் கருத்தில் கொண்டுள்ள ***"மகளிர் கூட்டம்"*** எனும் உரைக்கருத்தே இங்குப் பொருத்தமுடையது என்று குறிப்பிடலாம்.

***11:9 படுசினை தாழ்ந்த***

காட்டாற்றின் மணல் மேட்டில் பூக்கள் நிறைந்தனவாக மரத்தின் ஒரு பகுதி இருந்தது என்பதனை விளக்க,

"வம்பு விரித்தன்ன பொங்குமணற் கான்யாற்றுப்
படுசினை தாழ்ந்த பயிலிணர் எக்கர்" (11:8–9)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வரும் 'படுசினை' என்பதற்கு, ***"பெரிய கொம்புகள்"*** என்று பழைய உரையும் ***"பெரிய கிளைகள்"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியனவும் பொருள் உரைக்கின்றன.

'சினை' என்பதற்கு, 'கொம்பு' என்பதனைப் பொருளாகக் கொண்டால் அதில் மிகுதியான பூக்கள் இருக்க வாய்ப்பில்லை. மணல்மேட்டில் அது தாழவும் வாய்ப்பில்லை. 'கிளை' என்றபோது மட்டுமே 'மிகுதியான பூக்கள் இருக்கவும் மணல்மேட்டில் தாழவும்' வாய்ப்பாக அமையும். எனவே, 'படுசினை' என்பதற்கு ***"படும் கிளைகள்"*** என்று பொருள் குறிப்பதே பொருந்தும்.

***13:3 தெறலரும் மரபின் கடவுட் பேணி***

இவ்வடிக்குப் பழைய உரை, ***"பிறராற் றெறுதலரிய கடவுள்"*** என்றும் மயிலம்வே.பதி.பொழிப்புரை ***"தெறுதலரிய மரபினையுடைய கடவுளைப் பூசித்து"*** என்றும் பொருள் உரைக்கின்றன. ஆனால், ந.மு.வே., கரந்தை.உரை இதிலிருந்து மாறுபட்டு, ***"துன்புறுத்தலில்லாத முருகவேளை வழிபட்டு"*** என்று பொருள் குறிப்பிடுகிறது.

பாண்டியன் பற்றிக் குறிப்பிடும் இப்பாடல் 'பொதிய மலையில் உள்ள, அடியவர்களைத் துன்புறுத்தாத தன் கடவுளை வழிபட்டான்' என்று குறிப்பிடுகிறது. இவ்விடத்தில் முருகன் என்பது பொருந்தாது; பொது நிலையிலான கடவுள் என்பதே பொருந்தும். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. இப்பாடல் குறிஞ்சிப் பின்புலத்தில் அமையவில்லை; பாலைப் பின்புலத்தில் அமைகிறது.

2. தென்னாடு, பொதியமலை என்பதால் இங்கு முருகன் குறிக்கப் பெற்றாலும், பொதியமலை அகத்தியர் வாழ்ந்து சிவபூசை செய்த இடம் என்பது தொன்மக்கதைகளால் அறியவரும் கருத்தாகும். பாண்டியர்கள் சிவபூசையில் ஈடுபாடுடையவர்கள் என்பதும் வரலாற்றுச் செய்தியாகும்.

### *13:10 கோடைப் பொருநன்*

இப்பாடத்தில் வரும் கோடை என்பதற்கு, "***கோட்டூர்***" என்று பழையஉரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன பொருள் உரைக்கின்றன. ந.மு.வே.,கரந்தை.உரை இதற்கு, "***கோடைக்குத் தலைவனுமாகிய***" என்று பொருள் உரைக்கிறது.

அபிதான சிந்தாமணி கோடை என்பதற்கு,

"இது கடிய நெடுவேட்டுவன் மலை"[4]

என்று பொருள் குறிக்கிறது. இது புறம்.205 ஆம் பாடல்வழிக் குறிக்கப்பெற்ற பொருளாகும்.

"வெள்வீ வேலிக் கோடைப் பொருந" (புறம்.205:6)

என்ற அடிக்கு,

"வெள்ளிய பூவையுடைத்தாகிய முல்லை வேலியையுடைய
கோடையென்னும் மலைக்குத் தலைவ!"[5]

என்ற உரை காணப்பெறுகிறது. இதற்குக் குறிப்புரை எழுதும் உ.வே.சா.,

"கோடை - கோடைமலை, கோடைமலை என்பது
இக்காலத்தில் கோடைக்கானல் என வழங்குகிறது"[6]

என்று குறிப்பிடுகிறார்.

இந்நிலையில் பாண்டியனின் படைத்தலைவனான கடியநெடுவேட்டுவனின் மலை பற்றிய கோடை என்பதற்கான பொருண்மைகளில், "***கோடைக்குத் தலைவனுமாகிய***" என்ற பொருளே சரியானது எனலாம். இப்பொருள் தொடர்பாகவரும் அபிதான சிந்தாமணி, புறநானூற்றுக் குறிப்புகளை விளக்கவுரையில் அளிக்கலாம்.

**16:5 யாவரும் விழையும்**

தலைமக்களின் புதல்வனைக் கண்ட பரத்தையின் நிலைபற்றித் தலைவனிடம் கூறும் தலைவி தன் மகனைப்பற்றி,

"நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனை" (16:4–5)

என்று குறிப்பிடுகிறாள். இங்கு இடம்பெற்றுள்ள 'யாவரும்' என்பதற்கு '***பகைவரும்***' என்று பழைய உரையும் மயிலம்வே.பதி.பொழிப்புரையும் பொருள் குறிக்கின்றன. "***அனைவரும்***" என்று ந.மு.வே.,கரந்தை.உரை பொருள் குறிக்கிறது. இவ்விரு உரைகளில் 'பகைவரும்' என்பது சிறப்பாகவும் 'அனைவரும்' என்பது இயல்பாகவும் அமைந்த பொருண்மைகளாகும்.

இப்பாடலில் பகைவர் குறித்த தன்மை எதுவும் காணப்பெறவில்லை. பரத்தையைத் தலைவி தன் சகோதரியாகவே பாவித்துக் கூறுகிறாள். எனவே, "***கண்டார் அனைவரும்***" விரும்பும் புதல்வன் எனும் இயல்புநிலை உரைக்கருத்தே இங்குப் பொருத்தமுடையதாக அமைகிறது.

**22:4 இதுவென அறியா மறுவரற் பொழுதில்**

இவ்வடியில் வரும் 'மறுவரற்' என்பதற்கு, "***சுழற்சி***" என்று பழைய உரையும் "***சுழலும் பொழுதையிற்***" என்று மயிலம்வே.பதி.பொழிப்புரையும் பொருள் உரைக்கின்றன. ந.மு.வே.,கரந்தை.உரை "***கலக்கமுற்ற காலத்தே***" எனப் பொருள் கூறுகிறது.

களவுக்காலத்தில் தலைவன் மார்பை வணங்கிய தலைவி, தலைவனைக் காணாது ஏற்பட்ட வருத்தத்தினால் வருந்தி உடல்மெலிகின்றாள். அப்போது அவளுக்கு ஏற்பட்டுள்ள நோய் பற்றி அறியாத நற்றாய் முதலியோர் வெறியாட்டு எடுக்க முயலும் சூழலில்,

"இதுவென அறியா மறுவரற் பொழுதில்" (22:4)

எனும் பாடம் பயின்று வந்துள்ளது. தலைவிக்கு ஏற்பட்டுள்ள நோய் இதனால் ஏற்பட்டது என்பதனை அறியாது பிறர் வருந்துகின்றனர். இந்நிலையில் 'மறுவரற்' என்பதற்கு "***கலக்கமுற்ற***" எனும் பொருளே பொருந்தும். "சுழற்சி" என்பது பொருந்தாது. சுழற்சி என்பதற்கான சூழலும் இங்குக் காணப்பெறவில்லை என்பதும் இங்குக் குறிக்கத்தக்கது.

***22:5 படியோர்த் தேய்த்த பல்புகழ்***

இவ்வடியில் வரும் "பல்புகழ்" என்பதற்குப் பழைய உரை, ***"வென்றியுந் தியாக முதலாயினவற்றாய புகழ்"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன முறையே, ***"பலவகைப் புகழ்களை, பலவாகிய புகழையும்"*** என்று பொருள் உரைக்கின்றன.

'பலவகை' என்று வரும்போது அவற்றின் விரியை உரையில் சொல்லுதல் என்பது இயலாத ஒன்று. விளக்கவுரையில் வேண்டுமானால் அவற்றைக் குறிக்கலாம். எனவே, பழைய உரைக்கருத்தைவிட, ந.மு.வே., கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியவற்றின் ***"பலவகைப் புகழ்களை/பலவாகிய புகழையும்"*** எனும் உரைக்கருத்துகளே பொருத்தமானதாகவும் இயல்பானதாகவும் அமைகிறது எனலாம்.

***26:12 பாலொடு தடைஇ***

தடைஇ எனும் பாடத்திற்குப் பழைய உரை, மயிலம்வே.பதி. பொழிப்புரை ஆகியன ***"வளைந்து"*** எனப்பொருள் குறிக்கின்றன. ந.மு.வே., கரந்தை.உரை ***"சரிந்து"*** என்று பொருள் கூறுகிறது. புதல்வன் பாலருந்தும் தலைவியின் மார்பகங்கள் குறித்து விளக்கும் இப்பாடத்திற்கு "வளைந்து" என்று பொருள் குறிப்பதைவிடச் ***"சரிந்து"*** என்று பொருள் குறிப்பதே பொருத்தமானதாக அமையும்.

***26:13 தேங்கொள் மென்முலை***

புதல்வன் பாலருந்தும் தலைவியின் மார்பகங்கள் குறித்த இப்பாடத்திற்கு, ***"இடங்கொள்"*** என்று பழைய உரையும் ***"இடங்கொண்ட"*** என்று மயிலம்வே.பதி.பொழிப்புரையும் பொருள் உரைக்கின்றன. ஆனால், ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.குறிப்புரை ஆகியனவற்றில் முறையே, ***"இனிமை கொண்ட, இனிமையுமாம்"*** என்ற கருத்துகள் காணப்பெறுகின்றன.

இங்கு, புதல்வன் பாலருந்துதல் குறித்து வருவதால் ***"இனிமை கொண்ட"*** மென்முலை என்று பொருள் குறித்தலே பொருத்தமாக அமையும் எனலாம்.

***27:14 சிதைத்தும் அமையா***

தலைவியின் கண்கள் பற்றிக் கூறும் இப்புலவர்,

"தெண்ணீர்க் கேற்ற திரள்காற் குவளைப்
பெருந்தகை சிதைத்தும் அமையாப் பருந்துபட
வேத்தமர்க் கடந்த வென்றி நல்வேல்
குருதியொடு துயல்வந் தன்னநின்
அரிவே யுண்கண் அமர்த்த நோக்கே" (27:13-17)

என்று குறிப்பிடுகிறார். 'தலைவியின் கண்கள் குவளைமலரின் அழகைவிட மேம்பட்டு நிற்பதன்றி, பருந்துகள் சூழ நடந்த போரில் உள்ள இரத்தம் தோய்ந்த வேல் போன்று உள்ளது' என்பது இதன் கருத்தாகும்.

இவ்வடிகளில் வரும் 'அமையா' என்பதற்கு, ***"அதனொடு விடாவாய்"*** என்று பழைய உரை பொருள் உரைக்கின்றது. ந.மு.வே., கரந்தை. உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன, ***"கெடுத்தும் அமையாமல், கெடுத்தும் அமையாத"*** என்று பொருள் உரைக்கின்றன.

'குவளை மலரின் அழகை மிஞ்சிப் போரில் உள்ள வேல் போன்று உள்ளது' என்ற கண் பற்றிய இக்கருத்துப்பதிவிற்கு, 'அமையாமல்/ அமையாத' என்ற மூலச் சொல்லையே உரையாகக் குறிப்பதை விட, ***"அதனொடு விடாவாய்"*** என்ற உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

***31:4 மன்னுயிர் மடிந்த***

இப்பாடத்தில் வரும் 'மன்னுயிர்' என்பதற்கு, ***"ஆண்டு வாழும் மக்கள்"*** என்று பழைய உரையும் மயிலம்வே.பதி.பொழிப்புரையும் பொருள் குறிக்கின்றன. ***"நிலைபெறும் உயிர்கள்"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரை பொருள் கூறுகின்றது.

இந்நிலத்தில் வாழும் உயிரினங்கள் பற்றிக் கூறும் இப்பாடத்திற்கு 'மக்கள்' என்று மட்டும் பொருள் கூறுவது பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. எனவே, ***"நிலைபெறும் உயிர்கள்"*** என்ற உரைக்கருத்தே பொருத்தமுடையது எனலாம். இப்பதிவு தவிரச் சங்க இலக்கியத்தில் திரு.278, பெரு.32 ஆகிய இரு இடங்களில் 'மன்னுயிர்' எனும் சொல்

காணப்படுகிறது. இவ்விரு பதிவுகளிலும் நிலைபெறும் உயிர்கள் என்று நச்சினார்க்கினியரால் பொருள் குறிக்கப்பெற்றிருப்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

**31:7 கல்லுடைக் குறும்பின் வயவர்**

பாலைநில மக்கள் பற்றிக் கூறும் இப்பாடத்தில் வரும் குறும்பு என்பற்குப் பழைய உரை, ***"குறும்பர்"*** என்று பொருள் உரைக்கிறது. ***"கற்களையுடைய சீறூரில் உள்ள மறவர்கள்"*** என்று ந.மு.வே.,கரந்தை. உரை பொருள் குறிக்க, மயிலம்வே.பதி.பொழிப்புரை, ***"குறும்ப வீரம்"*** என்று பொருள் குறிக்கிறது.

குறும்பு என்பதை மட்டும் எடுத்து அதற்குக் 'குறும்பர்' என்று பொருள் குறிப்பது பொருந்தாது. குறும்பு என்பது மலை; குறும்பர் என்பது மக்கட்பெயர். எனவே, ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி. பொழிப்புரை ஆகியனவற்றின் உரைகளில் ஒன்றைப் பொருத்தமானதாகக் குறிக்கலாம். இவற்றுள் "மறவர்கள்" என்பதைவிட, ***"குறும்ப வீரர்"*** என்பதே மிகப்பொருத்தமாக அமைகிறது என்றும் குறிப்பிடலாம்.

**32:3 புரவலன் போலுந் தோற்றம்**

இயற்கைப் புணர்ச்சியில் தலைவனைச் சந்திக்க நேர்ந்தமையும் அவன் தோற்றம் பற்றியும் கூறும் தலைவி,

"நெருநல் எல்லை யேனல் தோன்றித்
திருமணி ஒளிர்வரும் பூணன் வந்து
புரவலன் போலுந் தோற்றம் உறழ்கொள" *(32:1–3)*

என்று குறிப்பிடுகிறாள். இவ்வடிகளில் வந்துள்ள 'புரவலன்' என்பதற்குப் பழைய உரையும் மயிலம்வே.பதி.பொழிப்புரையும் ***"புரப்பவன்"*** என்று பொருள் குறிக்கின்றன. ந.மு.வே.,கரந்தை.உரை ***"அரசன்"*** என்று பொருள் குறிக்கிறது.

'புரவலன்' என்பது சிறுகுடி மன்னன், குறுநில மன்னன், சீறூர் தலைவன், வள்ளல் முதலான அனைவருக்கும் பொருந்தக்கூடியது. சாதாரண நிலையில் உள்ள மக்களும் பொருள் கொடுத்து உதவி செய்தால் 'புரவலன்' ஆவர். ஒரு மன்னனே வள்ளல் தன்மை கொண்ட மன்னன் என்பவனைப்

பாராட்டிய நிலை புறநானூற்றில் (173:1) உண்டு. இதன்வழிப் 'புரவலன்' என்பது வள்ளல் தன்மையுடைய அனைவருக்கும் பொருந்தக்கூடியது என்பதனை அறியலாம்.

அதேவேளை புரவலர்கள் அனைவரும் வளமையுடனும், செழிப்புடனும், அழகுமிக்க தோற்றத்துடனும் இருப்பதில்லை. ஆனால், அரசனுக்கு இத்தன்மைகள் முழுமையும் பொருந்தும். இங்குத் தலைவனை முதற்கண் கண்ட தலைவி அவன் அழகு முதலானவற்றை முன் நிறுத்திப் 'புரவலன் போலும் தோற்றமுடையவன்' என்று கூறுவதால், 'புரவலன்' என்பது அரசனுக்கு ஆகுபெயராக மாறிவந்திருப்பதனை அறியலாம். எனவே, ***"அரசன்"*** என்ற பொருளையே பொருத்தமுடையதாகக் குறித்து, 'அரசன் போலுந் தோற்றம் கொண்ட தலைவன்' என்று குறிப்பிடலாம்.

**32:8 அணங்கியோய் உண்கென**

இயற்கைப் புணர்ச்சியில் தலைவியைக் கண்ட தலைவன் கூறுவதாக மேற்கண்ட பாடம் பயின்று வந்துள்ளது. இப்பாடத்திற்கு, ***"உண்பேனெனச் சொல்லி"*** என்று பழைய உரையும் ***"நின்னை நுகர்வேன் என்று கூறி"*** என ந.மு.வே., கரந்தை.உரையும் பொருளுரைக்கின்றன. மயிலம்வே.பதி. பொழிப்புரை இதிலிருந்து மாறுபட்டு, ***"நின்னால் இடுமுணவை உண்பேன்"*** என்று பொருள் குறிக்கிறது. தலைவியின் அழகைக் கண்டு வியந்த தலைவன்,

> "சூரர மகளிரின் நின்ற நீமற்
> றியாரை யோவெம் அணங்கியோய் உண்கென
> சிறுபுறங் கவையின னாக" (32:7–9)

என்று கூறுகிறான்.

எனவே, இங்கு 'உண்ணுதல்' என்பது 'தலைவியை நுகர்தலைக் குறிக்கிறது' என்பது வெளிப்படை. இதனைத் தொடர்ந்து வரும் 'கூந்தலைக் கோதிவிடுதல்' (சிறுபுறங் கவையினன்) என்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது. எனவே, 'அணங்கியோய் உண்கென' என்பதற்கு, ***"நின்னை நுகர்வேன் என்று கூறி"*** என்ற உரைக்குறிப்பே பொருத்தமானது எனலாம்.

***37:8 கிளைத்துணர் வடித்து***

இப்பாடத்தில் வரும் வடித்து என்பதற்குப் பழைய உரை, ***"உறந்திடுதல்"*** என்று பொருள் குறிக்கின்றது. ந.மு.வே.,கரந்தை.உரை, ***"அவற்றைக் கிள்ளியெடுத்து"*** என்ற பொருளைத் தருகிறது. இவற்றுள் 'உறந்திடுதல்' என்பதற்கு எவ்விதப் பொருண்மையையும் அறிய இயலவில்லை. எனவே, ***"அவற்றைக் கிள்ளியெடுத்து"*** என்ற பொருளையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***37:9 புளிப்பத னமைத்த***

இங்குக் குறிக்கப்பெற்றுள்ள 'புளிப்பதன்' எனும் பாடத்திற்குப் பழைய உரை, ***"மாதுளங்காய் முதலாகிய சில்பதம்"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை ***"புளிக்கும் பதனைச் சேர்த்தாக்கிய"*** என்று பொருள் தருகிறது.

மாதுளங்காய் மட்டும் புளிப்பதில்லை; புளிப்புப் பொருட்கள் பல உள்ளன. 'மாதுளங்காய் முதலாகிய' எனும் குறிப்பும் இதனை விளக்கும். எனவே, ***"புளிக்கும் பதனைச் சேர்த்தாக்கிய"*** என்ற உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் குறித்து, மாதுளங்காய் முதலான புளிக்கும் உணவுப் பொருட்களை விளக்கவுரைப் பகுதியில் கொடுப்பது நலம் பயக்கும்.

***37:10 பயிலிதழ்ப் பசுங்குடை***

இப்பாடத்திற்கு, "செவ்வியிலாக்கின பசுங்குடை" எனும் பொருளைப் பழைய உரை குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, "மிக்க இதழ்களையுடைய பசிய குடைகளால்" எனும் பொருளைத் தருகிறது. இப்பாடலில் வெயிலைத்தாங்கும் குடை பற்றிய குறிப்பு வருவதால் 'பல இதழ்களையுடைய' எனும் பொருள் தரும் ***"மிக்க இதழ்களையுடைய பசிய குடைகளால்"*** எனும் பொருளைச் சரியானதாகக் குறிப்பிடலாம்.

***43:10 மையிருங் கானம்***

இப்பாடத்தில் வரும் 'மை' என்பதற்குப் பழைய உரை, ***"பசுமை"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை 'மை' என்பதற்குக் 'கருமை' என்ற பொருளில், ***"கரிய பெரிய காடு"*** என்று உரை குறித்துள்ளது.

'மை' என்பதற்கு நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி,

"அஞ்சனம், இருள், எழுதுமை, ஓரெழுத்து, கறுப்பு, குற்றம், செம்மறியாடு, நீர், மலடி, மலட்டெருமை, மேகம், மேடவிராசி, மையென்னேவல், வெள்ளாடு"[7]

ஆகிய பொருண்மைகளைக் குறிக்கிறது. இதில் 'பசுமை' என்ற பொருளும் அதனோடு தொடர்புடைய எப்பொருள் தன்மையும் காணப்பெறவில்லை. இதன்வழி 'மையிருங்கானம்' என்பதற்கான மேற்கண்ட உரை வேறுபாடுகளில் ***"கரிய பெரியகாடு"*** என்பதே பொருந்தும் என்று குறிப்பிடலாம்.

### 48:11 செஞ்சாந்து நீவி

'செஞ்சாந்து' என்பது சந்தனத்தைக் குறிக்கும். தலைவன் தன் மார்பில் சந்தனத்தைப் பூசியவனாகக் காணப்பெறுகிறான் என்பதனைக் குறிக்க, 'செஞ்சாந்து நீவி' எனும் பாடம் இப்பாடலில் குறிக்கப்பெற்றுள்ளது. இவற்றுள் 'நீவி' என்பதற்குப் பழைய உரை, ***"பூசி உதிர்த்து"*** எனப் பொருள் குறிக்கிறது. ந.மு.வே., கரந்தை. உரையில் ***"சந்தனத்தைப் பூசி"*** என்ற பொருள் காணப்பெறுகிறது.

தலைவனின் தோற்றப் பொலிவைக் கண்ட தலைவி அவள் மார்பில் சந்தனம் பூசியிருத்தலைக் கண்டாள்; அதனால் இவ்வாறு கூறுகிறாள். எனவே, "சந்தனத்தைப் பூசி உதிர்த்து" என்ற உரைக்கருத்தைவிடச் ***"சந்தனத்தைப் பூசி"*** எனும் உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம். மேலும் சங்கப் பாடல்களில் தலைவன் மார்பில் சந்தனம் பூசியுள்ளவனாகப் பதிவு செய்யப்பெற்றிருப்பதும் (கலி.67:11) இங்குக் குறிக்கத்தக்கது.

### 49:4 கொடுந்தொடைக் குழவியொடு

பசுக்கூட்டங்கள் தன் கன்றுடன் இருக்கும் நிலைபற்றிக் கூற,

"கொடுந்தொடைக் குழவியொடு வயின்மரத் தியாத்த
கடுங்கட் கறவையிற் சிறுபுறம் நோக்கி" (49:4-5)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் பயின்று வந்துள்ள 'கொடுந்தொடை' என்பதற்குப் பழைய உரை, ***"வளைந்தகால்"*** என்றும்

ந.மு.வே.,கரந்தை.உரை, ***"வளைந்த தொடையினையுடைய"*** என்றும் பொருள் குறிக்கின்றன.

'தொடை' என்பது காலின் ஒரு பகுதி; 'கால்' என்பது உடலின் ஒரு பகுதி. மூலபாடலில் 'கொடுந்தொடை' எனும் சொல் வெளிப்படையாக வருவதால், ***"வளைந்த தொடையினையுடைய"*** எனும் ந.மு.வே.,கரந்தை. ஆகியோரின் உரைக்கருத்தைப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**54:12 நனைநகு மாலை**

'நனைநகு மாலை' எனும் இப்பாடத்திற்குப் பழையஉரை, ந.மு.வே.,கரந்தை.உரை ஆகியன முறையே, ***"மொட்டு மலரும் மாலைக்கண்ணே, அரும்புகள் மலரும் மாலைக்கண்ணே"*** என்று பொருள் உரைக்கின்றன.

மாலைக்காலத்தில் மலர்கள் மலரும் நிலைபற்றிக் கூறும் இவ்உரை வேறுபாடுகளில் பழையஉரையின் கருத்தான, ***"மொட்டு மலரும் மாலைக்கண்ணே"*** என்பதனையே பொருத்தமானது எனலாம். அரும்பு, மொட்டு, மலர் என்பன மலரின் வளர்ச்சிப்படிநிலைகள். எனவே, அரும்பிற்குப் பின் மலர் வருவதில்லை; அரும்பிற்குப் பின் மொட்டும் மொட்டிற்குப்பின்னர் மலரும் வரும். இதன்வழிப் பழைய உரைக்கருத்தைப் பொருத்தமுடையதாகக் கூறலாம்.

**55:4 விளிமுறை அறியா**

பாலை நிலத்தின் கொடுமைபற்றிக் கூறும்போது,

"விளிமுறை அறியா வேய்கரி கானம்" (55:4)

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் 'விளிமுறை அறியா' எனும் பாடத்திற்குப் பழைய உரை ***"இன்னவிடத்தில் இன்ன கேடுவருமென்று அறியாத"*** என்றும் ந.மு.வே.,கரந்தை.உரை ***"இறக்கும் இடம் இன்னது என்று அறியலாகாத"*** என்றும் பொருள் உரைக்கின்றன.

இவற்றுள் ***"இன்னவிடத்தில் இன்னகேடு வருமென்று அறியாத"*** எனும் உரைக்கருத்தே சரியானது என்று குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

*1.* விளிதல் என்பதற்கு நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி, “செருதல், கோபித்தல், சாதல், மறிதல், வருத்தப்படுதல்”[8] எனும் பொருண்மைகளைக் குறிக்கின்றது.

*2.* விளிதல் எனும் சொல்லுக்கு ‘கெடுதல், சாதல்’ எனும் இருதன்மைகளும் பொருண்மைகளாக இருப்பதால் மேற்கண்ட குழப்பங்கள் ஏற்பட்டுள்ளன.

*3.* பாலைநில வழியில் செல்வோர் அனைவரும் இறந்துவிடுவதில்லை; ஆனால் துன்பப்படுதல் உண்டு.

**55:11 பொருதுபுண் ணாணிய**

கரிகால் பெருவளத்தானுக்கும் சேரலாதனுக்கும் நடைபெற்ற போரில் கரிகால்வளவன் வெற்றிபெறச் சேரலாதன் புறப்புண்பட்டான். அதனால் அவனின் நிலைபற்றி விளக்க,

“பொருதுபுண் ணாணிய” *(55:11)*

எனும் பாடம் பயின்று வந்துள்ளது.

இப்பாடத்திற்கு, ***“புண்ணுக்குத் தானழிந்தமை”*** என்று பழைய உரை பொருள் கூறுகிறது. ந.மு.வே.,கரந்தை.உரை ***“புறப்புண் பட்டமைக்கு நாணின”*** எனப் பொருள் உரைக்கிறது. இம்மாறுபட்ட உரைக்கருத்துகளில் பொருத்தமானதைக் கண்டறிய இப்பாடத்திற்குப் பின்வரும் செய்தி உதவுகிறது.

‘புறப்புண் பட்டவுடன் சேரன் வடக்கிருந்து உயிர்விட்டான்’ என்பது அதனைத் தொடர்ந்து வரும் செய்தியாகும். ‘புண்ணுக்கு அழிந்தான்’ என்பது ‘புண்ணுக்காக உயிர்விட்டான்’ என்பதனைத் தெளிவுபடுத்தும். ‘நாணினான்’ என்பது முதற்கண் ‘புண்ணுக்காக நாணினான்’ என்பதனை உணர்த்தும். ‘புறப்புண் பட்டமைக்கு முதற்கண் நாணி அதன்பின் உயிர்விட்டான்’ என்று உரை கூறுதலே பொருத்தமானது. எனவே, ***“புறப்புண் பட்டமைக்கு நாணின”*** எனும் உரைக்கருத்தைப் பொருத்தமுடையதாகக் கருதலாம்.

### 55:13 இன்னா இன்னுரை

சேரமான் புறப்புண் பட்டமைக்கு நாணி உயிர்விட்ட செய்தியை 'இன்னா இன்னுரை' என்று புலவர் குறிக்கிறார். இப்பாடத்திற்குப் பழைய உரை, ***"மரிக்கின்றானென்ற இன்னாமையும்"*** என்று மட்டும் பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரையில் ***"அச்செய்தியாகிய இன்னாமையும் இனிமையும் உடைய உரை"*** என்ற பொருள் காணப்பெறுகிறது.

பழைய உரையின் கருத்துப்படி 'அவன் இறந்த செய்தி கேட்டுப் பெரியோர் வருந்தினர்' என்ற பொருளை உணரமுடிகிறது. அது 'இன்னா உரை' என்பதற்குரிய கருத்து மட்டுமே ஆகும். ந.மு.வே.,கரந்தை.உரை 'இன்னா இன்னுரை' என்பதற்கு நேடியாகப் பொருள் கூறி, 'இன்னாவுரை அவன் இறந்த செய்தி' என்பதனை உரையில் தெளிவுபடுத்தி, இனியஉரை என்பதனை விளக்கவுரைப் பகுதியில் தெளிவுபடுத்துகிறது. அவ்வுரைக்கருத்து வருமாறு:

> "இன்னா இன்னுரை – மரிக்கின்றான் என்பதால் இன்னாமையும், புறப்புண்பட்ட பழிதீர இருந்து உயிர்விடுகின்றான் என்பதால் இனிமையும் உடைய உரை"[9].

இக்கருத்து, 'இன்னாஇன்னுரை' எதுவென்பதைத் தெளிவு படுத்துகிறது. இவற்றின்வழி இப்பாடத்திற்கு ந.மு.வே., கரந்தை. ஆகியோரின் உரையான, ***"அச்செய்தியாகிய இன்னாமையும் இனிமையும் உடைய உரை"*** என்பது பொருந்துவதனை அறியலாம்.

### 56:15 என்னுந் தன்னும் நோக்கி

தலைவன் பரத்தையுடன் கூடுவதற்கு உதவி புரிந்த பாணன், தெருவில் ஈன்றணிமையுள்ள பசு விரட்டியதால் தலைவியின் வீட்டிற்குள் புகுந்தான். அப்போது தலைவி 'இது உம்வீடல்ல; எம்வீடு' என்று கூறிய நிலையில் பாணனின் நிலைபற்றி விளக்குவதாக,

"என்னுந் தன்னும் நோக்கி" (56:15)

எனும் பாடம் பயின்று வந்துள்ளது.

இப்பாடத்தில் வரும் 'நோக்கி' என்பதற்குப் பழைய உரை ***"விசாரித்து"*** என்று பொருள் உரைக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை ***"பார்த்து"*** எனப் பொருள் குறிக்கிறது. இவ்விரு உரை வேறுபாடுகளில் ***"பார்த்து"*** எனும் உரைக்கருத்தே பொருத்தமானதாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'விசாரித்தல்' என்பது இதற்கு முன் அறியாதவரை வினவுதலாகும். 'பார்த்தல்' என்பது ஒருவரைப் பார்த்தல் (பயத்தால் பார்த்தல் என்பதும் அடங்கும்) எனப் பொருள்படும்.

2. பாணன் பசுவைக் கண்டு பயந்து தலைவியின் வீட்டிற்குள் புகுந்துவிட்டான். தலைவி வீட்டிற்குள் புகுந்த பாணன் அவளை 'விசாரித்தல்' என்பது பொருந்தாத ஒன்று.

3. தலைவனைப் பாணன் பரத்தை வீட்டுக்கு அழைத்துச் செல்வதன்வழித் தலைவிக்கும் நன்கு அறிமுகமானவன் என்பது இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

4. பயத்தால் நடுக்கம் கொண்டு தலைவியின் வீட்டிற்குள் நுழையும் பாணன் அங்கு தலைவி நிற்பதனைக் கண்டு அச்சத்தால் பார்க்கிறான் என்பதும் இங்குக் கருத்தாக அமையலாம்.

### 60:12 கொன்னுஞ் சிவப்போள் காணின்

இவ்வடிக்குப் பழைய உரை, ***"ஒரு பயனின்றியுங் கோபிக்குமவள்"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரையில், ***"ஏதுவின்றியும் சினப்பவளாகிய"*** எனும் பொருள் காணப்பெறுகிறது. இவ்விரு உரைவேறுபாடுகளில் 'ஏது' என்பது ஒரு செயலுக்கான காரணத்தையும் 'பயன்' என்பது அச்செயலால் விளையும் 'பயனையும்' குறிப்பன.

வரைவு கடாதலைச் செய்யும் தோழி நற்றாய் பற்றிக் கூறும்போது 'கோபப்படுபவள்' என்று கூறுகிறாள். 'தலைவி செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் காரணமின்றி நற்றாய் சினக்கிறாள்' என்பதால் ***"ஏதுவின்றியும் சினப்பவளாகிய"*** எனும் உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் குறிப்பிடலாம்.

***67:6 நிரையங் கொண்மார்***

மேற்கண்ட இப்பாடத்திற்குப் பழைய உரையின் கருத்தாக, ***"நரகம் புகுவார்; கொள்ளவேண்டி என்றுமாம்"*** என்பது அமைகிறது. ***"தன் நிரையை மீட்க வேண்டி"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரை பொருள் குறிக்கிறது.

இவ்வுரைவேறுபாடுகள் உடைய பாடல் சூழலில் ஆநிரைப்போர் பற்றிய கருத்துகள் உள்ளன. ஆநிரைப்போரில் இறந்துபட்ட வீரர்களுக்கு நடுகல் எடுத்துள்ள நிலையையும் இப்பாடல் விளக்குகிறது.

"அரம்போழ் நுதிய வாளி அம்பின்
நிரம்பா நோக்கின் நிரையங் கொண்மார்
நெல்லி நீளிடை எல்லி மண்டி
நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதிஅதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" *(67:5–10)*

என்ற அடிகள் இதற்குச் சான்றுகளாகும். மேலும், சொர்க்கம், நரகம் தொடர்பான குறிப்புகளும் இப்பாடலில் இல்லை. இதன்வழி, ***"தன்நிரையை மீட்க வேண்டி"*** எனும் உரைக்கருத்தே பொருத்தமானது என்பது தெளிவாகும்.

***84:11 எரிபுரை பன்மலர்***

பாசறையிலிருக்கும் தலைவன் தன் நாட்டின் வளம் கூறுவதாக,

"எரிபுரை பன்மலர் பிறழ வாங்கி
அரிஞர் யாத்த அலங்குதலைப் பெருஞ்சூடு
கள்ளார் வினைஞர் களந்தொறும் மறுகும்
தண்ணடை தழீஇய கொடிநுடங் காரெயில்" *(84:11–14)*

என்ற அடிகள் பயின்று வருகின்றன. இவ்வடிகளில் வரும் 'எரிபுரைபன்மலர்' எனும் பாடத்திற்கு, ***"தாமரை, செங்கழுநீர்"*** என்று பழைய உரை பொருள் குறிக்கிறது. ***"நெருப்புப்போன்ற பல மலர்களை"*** என்று ந.மு.வே.,கரந்தை. உரையில் பொருள் காணப்பெறுகிறது.

தாமரை, செங்கழுநீர் ஆகிய இரு மலர்கள் மட்டும் சிவப்பாகக் காணப்பெறுவதில்லை. மேலும் தாமரை மலரில் வெண்தாமரையும் உண்டு. வயல்வெளிகளில் தாமரை இருப்பது அரிது; சிவந்த நிறமுடைய சிறிய மலர்கள் பலவும் காணப்பெறும். எனவே, மேற்கண்ட இரு உரைக்கருத்துகளில் ***"நெருப்புப்போன்ற பல மலர்களை"*** என்ற உரையையே பொருத்தமானதாகக் குறிப்பிடலாம். 'தாமரை, செங்கழுநீர்' என்பதனை விளக்கவுரையில் அளிக்கலாம்.

**84:14 கொடுநுடங் காரெயில்**

இப்பாடத்தில் வரும் 'எயில்' என்பதற்குப் பழைய உரை, ***"ஊர்"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை ***"இவ்வரிய எயிலை"*** என்று மூலச்சொல்லையே பொருளாகக் குறித்து விளக்கவுரையில், ***"எயில்–அரண், ஊர்"*** என்று பொருள் குறித்துள்ளது.

வெற்றிபெற்ற மன்னனுக்குத் திறையாகப் பகை அரசன் கொடுப்பது பற்றிய குறிப்பைத் தரும் இப்பாடலில் 'எயில்' என்பதற்கு நேரடிப் பொருளான 'பாதுகாப்பு' என்பதைக் குறித்தால், இவ்விடத்திற்குப் பொருந்தாது. எனவே, 'அரண் (பாதுகாப்பு)' என்ற பொருள் பொருத்தமின்மையை அறியலாம். ஆனால், 'பகை அரசன் தன் ஊரைக் கொடுத்தான்; அதைப்பெறாது, இவன் மீண்டும் போரிட்டான்' என்பது இவ்விடத்தில் நன்கு பொருந்தும். இருப்பினும் 'கொடிநுடங் காரெயில் அருந்திறை கொடுப்பவும் கொள்ளான்' என்பதற்கு, ***"சிறந்த பாதுகாப்பு மிக்க ஊரைக் கொடுக்கவும் கொள்ளானாய்"*** என்று 'அரண் (பாதுகாப்பு), ஊர்' என்ற இரு பொருண்மைகளையும் சேர்த்து உரையமைப்பது மிகப் பொருத்தமாக அமையும் என்று குறிப்பிடலாம்.

**85:6 ஈன்றுநாள் உலந்த**

களிறு கன்று ஈன்ற பிடியின் பசியினைப்போக்க இரைதேடிச் சென்ற நிலையினை விளக்குவதாகப் பின்வரும் அடிகள் அமைகின்றன.

"ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி
கன்றுபசி களைஇய பைங்கண் யானை" *(85:6–7)*

இவ்வடிகளில் வரும் 'ஈன்றுநாள் உலந்த' என்பதற்கு, ***"ஈன்றுநாள் முடிந்த; ஈன்றணிமை கழிந்த"*** என்ற இரு பொருண்மைகள் பழைய உரையில்

காணப்பெறுகின்றன. ந.மு.வே.,கரந்தை.உரை, ***“ஈன்று அணிமை கழிந்த”*** எனும் உரைக்கருத்தை மட்டும் குறிக்கிறது. இவ்விரு உரைக்கருத்துகளில் ***“ஈன்று அணிமை கழிந்த”*** எனும் உரைக்கருத்தே பொருத்தமானதாகும். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. நாள்முடிந்த என்பதற்கு, ‘ஈன்ற நாள் முடிந்து மறுநாள்’ என்பது பொருளாகும். ‘ஈன்று அணிமை கழிந்த’ என்பது ‘ஈன்று சற்றுநேரம் கழிந்த’ எனப் பொருள் தரும்.

2. ‘ஈன்று ஒருநாள் முடிந்து மறுநாள் உணவு உண்டல் என்பதும் அதற்காகக் களிறு உணவு தேடுகிறது’ என்பதும் இங்குப் பொருந்தாது.

3. கன்று ஈன்ற சிறிது நேரத்தில் விலங்குகள் உணவு உட்கொள்ளும் என்பது இங்குக் குறிக்கத்தக்கது.

**89:15 அருங்கலந் தெறுத்த**

பாலைநிலத்தில் உள்ள வீரர்கள் வழியில் வரும் வணிகர்களிடம் வழிப்பறி செய்த நிலைபற்றிக் கூறும்போது, ‘அருங்கலந் தெறுத்த’ எனும் பாடம் பயின்று வருகிறது. இப்பாடத்திற்கு, ***“அரிய பண்டங்களைத் திரையாகக் குவித்த”*** என்று பழைய உரையும் ***“அரிய அணிகலன்களைத் திரையாகப் பெற்றுக் குவித்த”*** என்று ந.மு.வே.கரந்தை.உரையும் பொருள் உரைக்கின்றன.

இவ்வுரைக் கருத்துகளில் ‘பண்டங்கள்’ என்பது அணிகலன் உட்பட அனைத்துப் பொருள்களையும் குறிக்கும். ‘அணிகலன்’ என்பது நகைகளை மட்டும் குறிக்கும். இங்கு, ‘கலன்’ என்று குறித்திருந்தால் அணிகலன் என்பதை மட்டும் குறிக்கும் எனலாம். ஆனால், ‘கலம்’ என்று கூறப்பெற்றுள்ளது. ‘பண்டம்’ என்பது பாத்திரத்தை மட்டும் குறிக்காது; ‘பண்டம்’ என்பதற்குப் பொதுநிலையில் ‘பொருள்’ என்றும் கருத்துரைக்கலாம். வேற்று இடம் சென்று பொருள் தேடி வருவோர் அணிகலன்களை மட்டும் கொண்டு வருவதில்லை; கிடைக்கும் பொருட்கள் அனைத்தையும் கொண்டு வருவர். இதன்வழி, ‘அருங்கலந் தெறுத்த’ என்ற பாடத்திற்கு ***“அரிய பண்டங்களை/பொருட்களை திரையாகக் குவித்த”*** என்ற பொருண்மைகளையே சரியானதாகக் குறிக்கலாம்.

***93:1 கேள்கே டூன்றவும் கிளைஞ ராரவும்***

உறந்தையில் உள்ள மக்கள் பற்றிக் கூறும் இப்பாடலில்,

"கேள்கே டூன்றவும் கிளைஞர் ஆரவும்
கேளல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்" (93:1–2)

என்ற அடிகள் பயின்று வருகின்றன. இவ்வடிகளில் வந்துள்ள 'கிளைஞர் ஆரவும்' எனும் பாடத்திற்கு, ***"கிளைஞரைப் பெருக்கவும்"*** என்று ராஜகோபாலார்யன் குறிப்புரை (ராஜ.குறிப்புரை) பொருள் குறிக்கிறது. ***"கிளைகளாயுள்ளார் உண்ணவும்"*** என்ற பொருள் ந.மு.வே.,கரந்தை. உரையில் காணப்பெறுகிறது. ஆர்தல் என்பதற்கு,

"அனுபவித்தல், இணைத்தல், உடைத்தாயிருக்குதல், குடித்தல், தங்குதல், நிறைதல், புசித்தல், பொருந்தல்"[10]

எனும் பொருண்மைகளை நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி குறிக்கிறது. இவற்றுள் 'குடித்தல், தங்குதல், புசித்தல்' என்ற பொருண்மைகள் வழி "உண்ணவும்" என்ற பொருண்மையும் ***"நிறைதல், பொருந்தல்"*** என்ற பொருண்மைகள் வழி "பெருக்கவும்" என்ற உரைக்கருத்தும் குறிக்கப் பெற்றுள்ளன. தொடர்ச்சியான பொருண்மைகள் அடிப்படையில் ***"கிளைஞரைப் பெருக்கவும்"*** என்ற உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

***93:18 மீளி மொய்ம்பொடு***

சேரனின் யானைப்படையைப் பற்றிக் கூறும் இப்பாடலில் வலிமையான யானைப்படையைக் கொண்ட எனும் பொருளைக் குறிக்க, 'மீளி மொய்ம்பொடு' எனும் பாடம் குறிக்கப்பெற்றுள்ளது.

இப்பாடத்திற்கு ராஜ.குறிப்புரை, ***"மறம்பொருந்திய வலியோடு"*** என்றும் ந.மு.வே.,கரந்தை.உரை, ***"கூற்றுவனையொத்த வலியுடன்"*** என்றும் பொருள் உரைக்கின்றன. இவற்றுள் ந.மு.வே.,கரந்தை.உரையின் உரைக்கருத்தே பொருத்தமானதாக அமைகிறது. அது குறித்த விளக்கங்கள் வருமாறு:

1. 'மறம், வலிமை' எனும் இரு சொற்களும் ஒரு பொருள் உடையன. எனவே, ஒரு பொருளைக் குறிக்க ஒரே இடத்தில் இரு சொற்கள் வர வாய்ப்பில்லை.

2. வலிமையின் மிகுதிக்குக் கூற்றுவனைச் சான்று காட்டுதல் தற்கால வழக்கிலும் உண்டு.

3. 'மீளி' என்பதற்குக் கூற்றுவன் (நமன்)[11] என்ற பொருள் தமிழ்மொழி அகராதியிலும் காணப்பெறுகிறது.

**94:10 முதைப்புனங் காவலர்**

தினைக்கதிர்களை மேயவரும் பன்றிகளை ஓட்டுவதற்குத் தினைப்புனக் காவலர் ஒலி எழுப்புவர் என்பதனை,

"முதைப்புனங் காவலர் நினைத்திருந் தூதும்" (94:10)

எனும் அடி வெளிப்படுத்தும். இவ்வடியில் வரும் 'முதைப்புனம்' எனும் பாடத்திற்கு, "முற்றிய தினைப்புனம்" என்று ராஜ.குறிப்புரை, ந.மு.வே., கரந்தை.உரை ஆகியன பொருள் குறிக்கின்றன. மயிலம்வே.பதிப்பில் காணப்பெறும் 'இதன்பொருள்' எனும் உரை, ***"காட்டை வெட்டித் திருத்திய கொல்லை"*** என்று பொருள் குறிக்கிறது.

'காட்டை வெட்டித் திருத்திய கொல்லை' என்பது 'முதைப்புனம்/ தினைப்புனம்' என்பதற்கான விரிந்த பொருளாகும். எனவே, இதனை விளக்கவுரையில் குறிக்கலாம். உரைப்பகுதியில் ***"தினைப்புனம்"*** என்று குறிப்பதே பொருத்தமாக அமையும் எனலாம்.

**95:13 புரைய அல்ல என்மகட்குஎனப் பரைஇ**

களவொழுக்கம் பற்றிய ஊரார் அலர்பேச்சுப் பற்றிக் குறிப்பிடும் மேற்கண்ட அடிக்கு, ***"என்மகளுக்கு உயர்வான அல்லவென முருகனைப்பரவி"*** என்று ராஜ.குறிப்புரையும் ***"பொருந்துவன அல்ல என்று தெய்வத்தைப் பரவி"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் பொருள் உரைக்கின்றன. தலைவியின் நிலையைக் கூறி அவளுக்குப் பொருந்தும் தன்மை பற்றி இப்பாடலில் வருவதால் இவ்விடத்தில் 'உயர்வான' என்பதனை விட, ***'பொருந்துவன'*** என்பதே பொருத்தமான உரையாகும் எனலாம்.

**96:13 அண்ணல் யானை**

இப்பாடத்திற்கு, ***"தலைமை பொருந்திய யானை"*** என்று ராஜ. குறிப்புரையும் ***"பெருமை தங்கிய யானை"*** என்று ந.மு.வே.,கரந்தை. உரையும் பொருள் உரைக்கின்றன. 'அண்ணல்' என்பதற்குத் 'தலைமை'

என்பதே பொருளாகும்; 'பெருமை' என்பது பொருளல்ல. இதன்வழி, ***"தலைமை பொருந்திய யானை"*** என்ற உரைக்கருத்தே பொருத்தமானதாகும் எனலாம். இப்பாடத்தில் போரிடுதல் பற்றிய குறிப்பு வருவதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

### *98:26 அறிவ ருறுவிய*

"அறிவர் உறுவிய அல்லல்கண் டருளி" (98:26)

எனும் இவ்வடிக்கு, ***"நம் தலைவர் உறுவித்த இவ்வல்லலைக்"*** கண்டு அருளி என்று ராஜ.குறிப்புரை, ந.மு.வே.,கரந்தை.உரை ஆகியன பொருள் உரைக்கின்றன. மயிலம்வே.பதி. 'இதன்பொருள்' எனும் தலைப்பிலான உரை 'அறிவஞுருறுவி' என்று பாடம் குறிக்கிறது. ஆனால், மூலத்தில் வேறுபாடு இல்லை. அறிவஞுருறுவி என்பதற்கு, அறிவின்கண்ணே துன்பமுறுபவன் "அறிவஞுருறுவி" என்பார் (நற்றிணை.106) என்று அவ்வுரை பொருள் குறிக்கிறது.

இங்கு 'அறிவர்' என்பது தலைவனுக்காகக் கூறப்பெற்றுள்ளது. 'அறிவஞர்உறுவி' என்பது காணப்பெறவில்லை. 'தலைவன் உறுவித்த களவுத்துன்பம்' எனும் பொருளைத் தரும் ***"நம் தலைவர் உறுவித்த இவ்வல்லலைக்"*** கண்டு என்ற உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

### *100:15 அம்பல் வாய்த்த*

இப்பாடத்திற்கு, ***"அம்பல் உண்டாயின"*** என்று ராஜ. குறிப்புரையும் ***"அலர்"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் பொருள் உரைக்கின்றன. 'அம்பல், அலர்' என்ற இரண்டும் நுணுக்கமான வேறுபாடு கொண்டவை. 'அம்பல்' என்பதற்கு *"புறங்கூறல்"*[11அ] என்றும் 'அலர்' என்பதற்கு, "பலரறிந்து பழிதூற்றல், பழிச்சொல்"[12] என்னும் பொருண்மைகள் குறிக்கப்பெற்றுள்ளன. மூலத்தில் 'அம்பல்' என்று வந்திருப்பதால் 'அம்பல் உண்டாயின' என்ற உரைக்கருத்தே பொருத்தமானது என்று குறிக்கலாம்.

### *101:4 தகர்மருப்பு ஏய்ப்ப*

பாலைநில எயினர்களின் முடிபற்றிக் கூறும்நிலையில் இப்பாடம் பயின்று வந்துள்ளது. இதற்கு ராஜகோபாலார்யன் ***"யாட்டுக்கிடாயின்***

***மருப்பினை ஒப்ப"*** என்று உரை எழுதுகிறார். ந.மு.வே.கரந்தை. ஆகியோர் உரைகளில் ***"செம்மறியாட்டுக்கிடாயின் கொம்பினையொப்ப"*** எனும் பொருள் காணப்பெறுகிறது.

'தகர்' என்பதற்கு நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி, "சுறாவினான், செம்மறிக்கடா, தகரென்னேவல், துண்டு, துருவாட்டேறு, பராகம், பலாசு, பூமி, மேடவிராசி, யாளி, யானையிவற்றினாண்"[13] என்று பொருள் குறிக்கிறது. இப்பொருண்மைகளில் 'செம்மறிக்கடா' என்பது குறிக்கப்பெற்றுள்ளது. 'ஆட்டுக்கடா' என்பது குறிக்கப்பெறவில்லை. எனவே, மேற்கண்ட பாடத்திற்கான உரைகளில் ***"செம்மறியாட்டுக்கிடாயின் கொம்பினையொப்ப"*** எனும் உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

### 102:13 வீழாக் கதவம் அசையினன்

இவ்வடிக்கு, ***"தாள் வீழ்த்தாத கதவின் மருங்கே தங்கினவனாய்"*** என்று ராஜ.குறிப்புரையில் பொருள் காணப்பெறுகிறது. ந.மு.வே.,கரந்தை. உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியனவற்றில், ***"தாழ் வீழ்த்தாத கதவினருகே, தாழ் வீழ்த்தாத கதவினை"*** என்ற பொருட்குறிப்புகள் காணப்பெறுகின்றன.

'தாள்' என்பதற்கான பொருண்மைகளில் ஒன்றாக, "கதவுறுதாள்" என்பதும் 'தாழ்' என்பதற்கான பொருண்மைகளில் ஒன்றாகத் "தாழ்க்கோல்" என்பதும் தமிழ்மொழி அகராதியில் குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றின்வழி, 'வீழாக்கதவம்' என்பதற்கு இவ்விரு பொருண்மைகளில் எதைக் குறித்தாலும் தவறில்லை எனலாம்.

### 109:10-11 இறந்தோர், கைப்பொருள் இல்லை யாயினும்

இவ்வடிகளுக்கு ராஜகோபாலார்யன், ***"சென்றவரது கையிற் பொருள் இல்லையாயினும்"*** என்று உரை எழுதுகிறார். ந.மு.வே.,கரந்தை. உரையில், ***"அறியாது வந்தோர் கையிற் பொருள் இல்லையாயினும்"*** என்று குறிக்கப்பெற்றுள்ளது.

பாலைநிலத்தில் உள்ள மறவர்கள் வழிச் செல்வாரைத் துன்புறுத்தும் நிலைபற்றிக் கூறும் இவ்வடிக்கு, ***"சென்றவரது கையிற் பொருள்***

***இல்லையாயினும்"*** என்ற ராஜ.குறிப்புரைக் கருத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம். பாலைநில வழியில் செல்வோர் அங்குள்ள துன்பங்களை அறிவர். அந்நிலையில் "அறியாது வந்தோர்" என்று பொருள் குறிப்பது பொருந்தாது.

**110:20–21 நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும், என்னே குறித்த நோக்கமொடு**

தலைமக்களின் களவொழுக்கம் குறித்துச் செவிலிக்கு அறத்தொடு நிற்கும் தோழி மேற்கண்டவாறு கூறுகிறாள். இவ்வடிகளுக்கு ராஜ. குறிப்புரை, ***"நில்லாது பெயர்ந்த ஆயத்தார் பலருள்ளும்; தன்னையே குறித்த பார்வையோடு"*** என்றும் ந.மு.வே.,கரந்தை.உரை, ***"அங்கு நில்லாதுபோய பலருள்ளும், அவன் என்னையே குறித்து நோக்கிய பார்வையொடு"*** என்றும் ஒத்த கருத்துகளைப் பொருண்மைகளாகக் குறிக்கின்றன. மயிலம்வே.பதி.பொழிப்புரை இக்கருத்துகளிலிருந்து மாறுபட்டு, ***"அப்படிச் சென்ற பலருள்ளும் எம்தலைவியைக் குறித்த பார்வையொடு"*** என்று பொருள் குறிக்கிறது.

தலைவன் தோழி, தலைவி இருவரையும் பார்த்துக் கூறுவது வழக்கம். இங்கு 'என்னையே பார்த்தான்' என்று தோழி கூறுவது அக ஒழுக்கத்திற்குப் புறம்பானது. 'எம்தலைவியைப்' பார்த்தான் என்பது பொருந்துகிறது. இருப்பினும் அவ்விடத்தில் தோழியும் உள்ளாள். தலைவன், தலைவியைப் பார்த்தாலும் முதன் முதலில் தோழியிடமே பேசுவான். இவ்வடிகளைத் தொடர்ந்து,

> "..................... நன்னுதால்
> ஒழிகோ யானெனʺ (*110:21–22*)

என்று தலைவன் பேசுவதாகக் குறிக்கப்பெற்றுள்ளதும் இங்குக் கவனிக்கத்தக்கது. இங்குத் தலைவி, தோழி இவர்களைத் தனித்துவப்படுத்தாது ***"எம்மையே பார்த்துச் சென்றார்"*** என்று செவிலியிடம் தோழி கூறினாள் என்று பொருள் குறிப்பது பொருத்தமாக அமையும் எனலாம்.

**112:9 நாளிடைப் படின்**

> "நாளிடைப் படினென்தோழி வாழாள்" (*112:9*)

என்று தோழி கூறுகிறாள். தலைவியின் நிலைபற்றித் தலைவனிடம் இவ்வடியில் வரும் 'நாளிடைப் படின்' எனும் பாடத்திற்கு ராஜ.குறிப்புரை,

ந.மு.வே.,கரந்தை.உரை ஆகியன முறையே, ***"ஒருநாள் நீ வாராது இடைப்பட்டாலும், நீ வாராது ஒருநாள் இடையீடுறினும்"*** என்று பொருள் உரைக்கின்றன. மயிலம்வே.பதி. குறிப்புரை, ***"வரைதற்குரிய நாள் தாழ்க்கின்ற"*** என்று பொருள் குறிக்கிறது.

தலைவன் வரைதற்குக் காலந்தாழ்த்தும்போது தோழி இடித்துரைக்கின்ற நிலை சங்க இலக்கியத்தில் பரவலாகக் காணப்பெறுகிறது. ஆனால், இங்கு அதனைப் பொருத்தமுடையதாகக்கூற இயலாது. 'தலைவன் இரவுக்குறியில் வரும் வழியின் அருமை குறித்தே தலைவி வருந்துகிறாள்' என்பதனையே இங்குப் பொருத்தமுடையதாகக் கூறலாம்.

'வரைவிற்கு நாள் தாழ்த்துவதால் தலைவி வருந்துகிறாள்' என்பதைப் பொருத்தமற்ற உரை என்றும் ***"ஒருநாள் நீ வாராது இடைப்பட்டாலும்"*** உனக்கு ஏதேனும் துன்பம் உண்டாயிருக்குமோ என்று நினைந்து என் தோழி உயிர் வாழாள் என்ற உரைக்கருத்தே பொருத்தமானது என்றும் குறிப்பிடலாம்.

### ***114:15 அணங்கு சாலரிவையை***

இப்பாடத்தில் வரும் 'அணங்கு' என்பதற்கு ***"அருந்ததி"*** என்று ராஜ.குறிப்புரையில் பொருள் கூறப்பெற்றுள்ளது. ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.குறிப்புரை ஆகியன ***"தெய்வம்/தெய்வமகள்"*** என்றே பொருள் உரைக்கின்றன. 'அருந்ததி' என்பது பிற்காலக் கற்புக்குறியீட்டுத் தெய்வமாக உருவாக்கப்பட்டவள் ஆவாள். ஆனால் 'அணங்கு' என்பது தீண்டி வருத்தும் தெய்வமாகத் தொடக்க காலம் முதலே வழிபாட்டில் காணப்பெறுகிறது. எனவே, ***"தெய்வம்"*** என்பதே பொருத்தமானது எனலாம்.

### ***116:15 உடனியைந் தெழுந்த இருபெரு வேந்தர்***

இப்பாடலடியில் வந்துள்ள 'இருபெருவேந்தர்' எனும் பாடத்திற்கு ராஜ.குறிப்புரை ***"சேர, பாண்டியர் என்னும் இருபெருவேந்தரது"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை, குறிப்புரைகள் ஆகியன, ***"சேர, சோழர்"*** எனும் இருபெருவேந்தர் என்று பொருள் குறிக்கின்றன.

இதற்குமுன்வரும் 'செழியன்' என்பதற்கு மூன்று உரைகளும் நெடுஞ்செழியன் (பாண்டியன்) என்ற பொருண்மையையே குறிக்கின்றன. அவன், இருபெரு வேந்தர்களின் படைகளைத் தாக்கினான் என்பதைக் குறிக்கும் இவ்விடத்தில் இத்தகைய பொருள் மாறுபாடு காணப்பெறுகிறது. பாண்டியன் சேர, சோழரோடுதான் போரிடமுடியும். எனவே, "சேர, பாண்டியன் என்னும் இரு பெருவேந்தரது" என்பதனை அச்சுப்பிழை என்றே குறிக்கலாம். இதற்கு மாறாகக் குறிக்கப்பெற்றுள்ள ***"சேர, சோழர்"*** எனும் இருபெருவேந்தர் என்பதனைப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். இதுபோன்ற மிகப்பெரிய கருத்துப்பிழையைத் தோற்றுவிக்கும் அச்சுப்பிழைகள் மிகுந்த கவனத்தில் கொள்ளத்தக்கன.

***119:10 சுரன்வழக்கற்ற தென்னாது***

பாலைவழியில் போருக்குச் செல்லும் தலைவன், தம்மையும் உடன் கொண்டு செல்வாரோ என்று எண்ணிய தலைவி,

> "நோன்சிலை மறவர் ஊன்புழுக் கயரும்
> சுரன்வழக் கற்ற தென்னா துரஞ்சிறந்து
> நெய்தல் உருவின் ஐதிலங் ககலிலைத்
> தொடையமை பீலிப் பொலிந்த கடிகை
> மடையமை திண்சுரை மாக்காழ் வேலொடு
> தணியமர் அழுவம் தம்மொடு துணைப்பத்
> துணிகுவர் கொல்லோ ....." (119:9–15)

என்று கூறுகிறாள்.

இவ்வடிகளில் வரும் "சுரன்வழக்கற்ற தென்னாது" என்பதற்கு ராஜ. குறிப்புரையும் மயிலம்வே.பதி.பொழிப்புரையும் ***"சுரனானது மக்களால் போக்கொழிந்த தென்னாமல், நெறியானது மக்களுள் இயங்கப் பெறுவதொன்றன்று எனக் கருதாராய்"*** என்று பொருள் உரைக்கின்றன. ந.மு.வே.,கரந்தை.உரை, ***"சுரமானது பெண்டிரோடு இயங்குவதற்கு உரியதல்லாது என்று நினையாது"*** என்று பொருள் குறிக்கிறது. இவற்றுள் ந.மு.வே.,கரந்தை.உரையின் கருத்துகளே இங்குப் பொருத்தமுடையதாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. பாலைநிலவழி கொடுமையானது இருப்பினும் தலைவி, தலைவன் உடன் செல்ல எண்ணுவாள்.

2. தலைவன், தலைவியை உடன் அழைத்துச் செல்லுதல் இல்லை. பாலைநில வழியின் கொடுமையை மனதில் கொண்டு, தலைவியை விட்டுப்பிரிந்து செல்வது அக்காலச் சமூகநிலையாகும்.

**121:7 செங்கோல் வாலிணர்**

இப்பாடத்திற்கு, ***"சிவந்த காம்பினையுடைய வெள்ளிய கொத்து"*** எனும் பொருளை ராஜ.குறிப்புரை, ந.மு.வே.,கரந்தை.உரை ஆகியன குறிக்கின்றன. மயிலம்வே.பதி.குறிப்புரை ***"சிவந்த கிளைகளினுடைய வாலிப பூங்கொத்து என்றலுமாம்"*** என்று பொருள் உரைக்கிறது.

கிளைகள் செம்மை(சிவப்பு)யாக இருக்க வாய்ப்பில்லை; அதேவேளை அம்மரத்தில் உள்ள பூங்கொத்துகளின் காம்பு சிவந்திருக்க வாய்ப்புண்டு. எனவே, ***"சிவந்த காம்பினையுடைய வெள்ளிய கொத்து"*** எனும் பொருளே பொருத்தமுடையது எனலாம்.

**121:8 நெறியயன் மராஅத்து**

இப்பாடத்திற்கு ராஜ.குறிப்புரையும் மயிலம்வே.பதி. பொழிப்புரையும் ***"வழிக்கு அயலதாவுள்ள மராமரத்தின், வழியின் பக்கத்திலுள்ள மராமரத்திற்"*** என்று ஒரே பொருளைக் குறிக்கின்றன. ந.மு.வே.,கரந்தை.உரை ***"வழியின் பக்கத்திலுள்ள வெண்கடம்பின்"*** என்று பொருள் உரைக்கிறது.

மராம் என்பதற்குத் தமிழ்மொழி அகராதி, "கடம்பு, வெண்கடம்பு"[14] என்று பொருள் உரைக்கிறது. எனவே, இவ்வடியில் வரும் மராஅத்து என்பதற்கு ***"வெண்கடம்பின்"*** என்ற பொருளைக் குறிப்பதே சரியானதாக அமையும் என்று குறிப்பிடலாம்.

**121:9 வரிநிழல் அசைஇ**

பாலைநிலத்தின் வழியில் உள்ள மரத்தின் நிழல் பற்றிக் குறிப்பிடும் இப்பாடத்திற்கு, ***"வரிவரியாயுள்ள நிழலிலே தங்கி"*** எனும் பொருளை ராஜ.

குறிப்புரை, ந.மு.வே.,கரந்தை.உரை ஆகியன குறிக்கின்றன. மயிலம்வே.பதி. பொழிப்புரை, ***“வரிநிழல் – அலங்கரிக்கு”*** நிழல் என்று பொருள் குறிக்கிறது. இவ்விரு உரைக்கருத்துகளும் ஓரளவு பொருந்தக்கூடியதே ஆகும். எனவே, இப்பாடத்திற்கு இவ்விரு உரைக்கருத்துகளையும் சேர்த்து ***“வரிவரியாயுள்ள அலங்கரிக்கும் நிழலில் தங்கி”*** என்று உரை எழுதுவது பொருத்தமாக அமையும்.

***131:2 பசுங்கேழ் மெல்லிலை யருகுநெறித் தன்ன***

இவ்வடிக்கு ராஜ.குறிப்புரை, ந.மு.வே.,கரந்தை.உரை ஆகியன முறையே, ***“பசிய நிறமுடைய மெல்லிய இலைகள் ஒன்றினருகு ஒன்று ஒடித்து வைக்கப்பட்டாற்போல, பசிய நிறமுடைய மெல்லிய இலைகளை நெருங்கச் செறித்து வைத்தால் ஒத்த”*** என்ற பொருள்களைக் குறிக்கின்றன. மயிலம் வே.பதி.பொழிப்புரை, ***“பசிய நிறமுடைய மெல்லுகின்ற வெற்றிலையை அழகுறச் சுருளிட்டால் ஒத்த”*** என்ற பொருளைக் குறிப்பிடுகிறது.

தலைவியின் கூந்தலுக்கு இதனை மரத்தின் இலைச்செறிவைக் குறிக்கும் இவ்விடத்தில் ‘வெற்றிலை’ என்பது பொருத்தமானதாக அமையவில்லை. ***“பசிய நிறமுடைய இலைகள்”*** என்ற ராஜ.குறிப்புரை, ந.மு.வே.,கரந்தை.உரை ஆகியவற்றின் உரைக்கருத்தே பொருத்தமாக அமைகிறது.

***133:13 கென்னொன்று வினவினர்***

பிரிவினை மேற்கொள்ளும் தலைவன் தன்னிடம்,

“பூங்கலுழ் சுமந்த தீம்புனற் கான்யாற்று
வான்கொள் தூவல் வளிதர உண்கும்
எம்மொடு வருதல் வல்லையோ மற்றெனக்
கொன்னொன்று வினவினர்” *(133:10–13)*

என்று தோழியிடம் தலைவி கூறுகிறாள். இவ்வடிகளில் பயின்று வந்துள்ள ‘கொன்னொன்று’ எனும் பாடத்திற்கு ராஜ.குறிப்புரை, ந.மு.வே.,கரந்தை. உரை ஆகியன, ***“பெருமை பொருந்திய ஒரு வார்த்தை / மொழி”*** என்று பொருள் குறிக்கின்றன. மயிலம் வே.பதி. பொழிப்புரை, ***“பயமின்றாக ஒன்று வினாயினார்”*** எனக்கூறுகிறது.

தலைவன் 'துன்பம் நிறைந்த காட்டில் தலைவி வருதல் அரிது' என்பதனை உணர்ந்தே அவ்வாறு கூறுகிறான். ஒருவேளை தலைவி வருவதாகக் கூறினாலும் அவன் அழைத்துச்செல்லமாட்டான். ஆகையினால், இது 'பெருமை தங்கிய மொழி' ஆகாது; 'பயனற்ற மொழியே' ஆகும். எனவே, ***"பயமின்றாக வினாயினார்"*** என்ற உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

**135:9 கோடுகடை கழங்கின்**

பாலைநிலத்தில் இருப்பை மரத்தின் பூக்கள் உதிர்ந்து கிடக்கும் நிலை, 'கோடுகடை கழங்குபோல' இருப்பதாகக் கூறப்பெற்றுள்ளது. இப்பாடத்திற்கு ராஜ.குறிப்புரை, ***"சங்கினால் கடையப்பட்ட கழங்குபோல"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன, ***"யானை மருப்பினால் கடைந்து செய்த கழங்கினைப் போன்று/ யானைமருப்பிற் கடைந்த கழங்குபோல"*** என்று பொருள் உரைக்கின்றன.

சங்கினால் கடைதல் என்பது இயலாது; யானை மருப்பினால் கடையலாம். யானை மருப்பை உலக்கையாகப் பயன்படுத்தி வெதிர்நெல் குற்றியதான குறிப்பும் (கலி.47:7) சங்க இலக்கியத்தில் உள்ளது. எனவே, ***"யானை மருப்பினால் கடைந்து செய்த/யானை மருப்பிற் கடைந்த"*** எனும் உரைக்கருத்துகளே பொருத்தமானது எனலாம்.

**139:1 துஞ்சுவது போல இருளி**

கார்காலத்தின் கடைநாளில் மழைபெய்வது பற்றி,

"துஞ்சுவது போல இருளி விண்பக
இமைப்பது போல மின்னி உறைக்கொண்டு
ஏறுவது போலப் பாடுசிறந் துரைஇ
நிலம்நெஞ் சுட்க ஓவாது சிலைத்தாங்கு" (139:1-4)

மேகம் மழையைப் பெய்தது என்று புலவர் பதிவு செய்துள்ளார். இப்பதிவில் வரும், 'துஞ்சுவது' எனபதற்கு, ராஜகோபாலார்யன், ***"சாக்காடு"*** என்றும் ந.மு.வே.,கரந்தை. ஆகியோர், ***"உறங்குவது"*** என்றும் பொருள் குறிக்கின்றனர்.

பெரும்பாலும் 'துஞ்சுவது' என்பதற்கு 'சாக்காட்டையே' பொருளாகக் கூறுவர். ஆனால், இப்பாடலின் அடுத்த அடியில் 'இமைத்தல்'

என்ற ஒன்று வருகிறது. தொடர்புடைய ஒன்றை உவமிக்கும் பொழுது பெரும்பாலும் ஒரே தன்மையிலேயே உவமித்துக் கூறுவது இலக்கிய நயமாகும். இந்நிலையில் 'துஞ்சுதல்' என்பதற்கு 'சாக்காடு' என்று பொருள் கொண்டால், 'இமைத்தல்' என்பதற்கு உயிரோட்டமுள்ள பொருள் கிடைக்காது. ஆகையால் ***"உறங்குவது போல இருண்டு"*** என்று உரை குறித்தலே இவ்விடத்திற்குப் பொருத்தமானதாக அமையும்.

***141:8 அறுமீன் சேரும் அகலிரு நடுநாள்***

இவ்வடிக்குக் குறிப்புரை, ***"இப்பாட்டினுள் அறுமீன் என்பது உரோகிணி"*** என்று பொருள் குறிக்கிறது. இதனைப் பின்பற்றிய ராஜகோபாலார்யன், ***"உரோகிணி தன்னுடன் சேரும் இருள் அகன்ற நடு இரவில்"*** என்று மேற்கண்ட அடிக்கு உரை எழுதுகிறார். ந.மு.வே.,கரந்தை. உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன, ***"கார்த்திகையைச் சேரும் அகன்ற நடு இரவில் / கார்த்திகை நாளினையடையா நிற்கும் அகன்ற நடு ராத்திரியில்"*** என்று பொருள் குறிக்கின்றன.

அறுமீன் என்பதற்குத் தமிழ்மொழி அகராதி,

"கார்த்திகை நாள், கார்த்திகை மாதம்"[15]

என்று பொருள் குறிக்கிறது. எனவே, அறுமீன் சேரும் என்பதற்கு, ***"கார்த்திகையைச் சேரும்"*** என்று பொருள் குறிப்பதே பொருத்தமானது என்பதனை அறியலாம்.

***143:3 நீடுசினை வறியவாக***

பாலைநிலத்தின் வெம்மையால் மரங்கள் கருகிய நிலை பற்றிக் குறிக்க மேற்கண்ட பாடம் பயின்று வந்துள்ளது. இப்பாடத்திற்கு ராஜ. குறிப்புரை, ***"நெடிய கொம்புகள் இலையின்றி வறிய ஆகும்படி"*** என்றும் ந.மு.வே.,கரந்தை.உரை, ***"நீண்ட கிளைகள் வறியன ஆக"*** என்றும் மாறுபட்டுப் பொருள் உரைக்கின்றன.

இவ்வேறுபாடுகளில் ***"நீண்ட கிளைகள் வறியன ஆக"*** என்பதே பொருத்தமானதாக அமையும். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. மரத்தில் கொம்புகள் அனைத்தும் எப்போதும் தழைத்திருப்பதில்லை; சில நேரங்களில் சில கொம்புகள் இலையின்றி இருப்பதுண்டு.

2. மரத்தின் வறுமைநிலையை விளக்கக் கொம்பு வாடியிருத்தலைக் காட்டுதல் பொருந்தாது. மரத்தின் கிளை வாடியிருத்தலைக் காட்டுதலே பொருந்தும்.

3. 'சினை' என்பதற்குக் 'கிளை' என்று பொருள் கொள்ளுதலே பெரும்பான்மை. அதுவே மிகவும் பொருந்தக்கூடியது.

**165:3 ஒய்யென எழுந்த**

பெண்யானை குழியில் அகப்பட்டதால் ஆண் யானையின் அலறலைக்கேட்ட கன்று எழுந்த நிலையினைப் பற்றிக் கூறும் இப்பாடத்திற்கு, ***"விரைந்து எழுந்த"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் ***"மெல்லென எழுந்த"*** என்று மயிலம்வே.பதி.பொழிப்புரையும் மாறுபட்டுப் பொருள் உரைக்கின்றன.

குழியில் அகப்பட்ட பெண் யானையைக் கண்டு ஆண் யானை அலறுகிறது. அவ்அலறலைக் கேட்டு யானைக்கன்று 'மெதுவாக எழுந்திருத்தல்' என்பது பொருந்தாது, 'ஒய்' என்பது விரைவுச்சொல் ஆகும். எனவே, ***"விரைந்து எழுந்த"*** எனும் உரைக்கருத்தே பொருத்தமுடையது எனலாம்.

**191:4 தோல்புதை சிரற்றடி**

உப்பு வணிகர்கள் பற்றிய இப்பாடலில் அவர்களின் பாதங்களைக் குறிக்க மேற்கண்ட பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. இதற்குக் குறிப்புரை, ***"இப்பாட்டிற் சிரற்றடி என்றது பெல்லா அடியை"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன ***"செருப்பு ஒலிக்கும் அடியினையும்"*** என்று பொருள் கூறுகின்றன. இவ்விரு வேறுபட்ட பொருண்மைகளில் ***"செருப்பு ஒலிக்கும் அடி"*** என்பதே பொருத்தமுடையதாகும். இது தொடர்பான விளக்கங்கள் வருமாறு:

1. இப்பாடலில் உமணரின் தலை, தோள் ஆகியன ஒப்பனையுடன் கூறப்பெற்றுள்ளன. துய்தலை, வண்டுபடு கண்ணி (தோளுக்கு) என்பன அந்நிலைகளாகும். இந்நிலையில் காலுக்கான ஒப்பனையாகச் செருப்பு கூறப்பெற்றுள்ளது என்று குறிக்கலாம்.

2. உமணர் பல இடங்கள் கடந்து உப்பு விற்கச் செல்வதால் பல இடங்களுக்குமான பாதுகாவலுக்குச் செருப்பு அணிதல் வழக்கம். அதை அணிந்து நடக்கும்போது சிரற்றி நடத்தல் உண்டு.

3. உமணர்கள் எந்தத் தீங்கும் செய்யாதவர்கள்; பாலைநில மறவர்களே தீங்கு செய்பவர்கள். எனவே, இவர்களின் அடிகளைப் 'பொல்லா அடி' எனல் பொருந்தாது.

**201:7 பழையர் மகளிர்**

இப்பாடத்திற்குக் குறிப்புரை, ***"இப்பாட்டிற் பழையர் என்பார் பரத்தியர்"*** என்று பொருள் குறித்து, ***"மூத்தியாரென்றும் பாடம்"*** எனும் உரை வேறுபாட்டினைக் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம் வே.பதி.பொழிப்புரை ஆகியன ***"பழையரது பெண்டிர் / பழையர் மகளிர்"*** என்று மூலத்தையே பொருளாகக் குறிப்பிட்டு குறிப்புரைகளில் ***"பழையர்-நெய்தல்நில மக்கள்"*** என்று பொருள் குறிக்கின்றன.

'பழையர்' என்பற்குத் தமிழ்மொழி அகராதி, "கள்விற்போர், தொல்லோர்"[16] என்று பொருள் குறிக்கிறது. அகநானூற்றில் உள்ள 'பழையர் மகளிர்' (201, 331) எனும் பாடம் தவிர்ந்து மலை.459 ஆம் அடியிலும் இச்சொல் காணப்பெறுகிறது.

"பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்" (மலை.459)

என்பது அவ்வடியாகும். இவ்வடிக்கான உரைக்கருத்தாக,

> "பகன்றைப் பூவாற் செய்த கண்ணியையுடைய கள்விற்கும் வலையருடைய மகளிர்"[17]

என்பது காணப்பெறுகிறது. இதில் அகராதி குறிப்பிடும் 'கள்விற்போர், தொல்லோர்' எனும் இரு பொருண்மைகளும் வருவதை அறியலாம். எனவே, பாடலின் உரைப்பகுதியில் ***"பழையர் மகளிர்"*** என்பதையே பொருளாகக் குறிப்பிட்டு, விளக்கவுரைப் பகுதியில் இது குறித்த பிற விளக்கங்களை அளிக்கலாம்.

**208:1 யாம இரவின்**

'யாம இரவின்' என்பதற்கு, ***"இரவின் கடையாமத்தே"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் ***"நடு இரவில்"*** என்று மயிலம்வே.பதி. பொழிப்புரையும் பொருள் உரைக்கின்றன.

‘யாமம்’ என்பதற்கு, “இராத்திரி சாமம்”[18] என்று தமிழ்மொழி அகராதி பொருள் குறிக்கின்றது. எனவே, ‘யாம இரவின்’ என்ற பாடத்திற்குப் பாடலின் சூழ்நிலை கருதி ***“இரவின் கடையாமத்தே”*** என்ற பொருளைக் குறித்தலே பொருத்தமானது எனலாம். இப்பாடல் குறிஞ்சித்திணையில் அமைந்தது என்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கதாகும்.

**208:2 குன்றம் பாடும்**

ஆஅய் எயினன் என்பானது நாட்டினைப் பாடுநர் பாடுவது பற்றிக் குறிக்க, ‘குன்றம் பாடும்’ எனும் பாடம் பயின்று வந்துள்ளது. இதற்கு, ***“தனது குன்றினைப் பாடுகின்ற”*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் ***“தன் மலையைப் பாடுகின்ற”*** என்று மயிலம்வே.பதி.பொழிப்புரையும் பொருள் குறிக்கின்றன. மலை என்பது பெரியது; மக்கள் வாழ்வதற்கு உரியதாகாது. மேலும் குறுநில மன்னர்கள் குன்றினையே தனக்குச் சொந்தமாக்கி வாழ்வர்; இது மக்கள் வாழ்வதற்கு ஏற்றது. எனவே, ***“தனது குன்றினைப் பாடுகின்ற”*** என்ற உரைக்கருத்தைப் பொருத்தமானது எனலாம்.

**210:4 விசும்பணி வில்லிற் போகி**

பரதவரால் பிடித்து எறியப்பட்ட மீன் துள்ளி வளைந்து விழுந்தமை பற்றிக் கூற ‘விசும்பணி வில்லிற்போகி’ என்ற உவமை நலம் கூறப்பெற்றுள்ளது. இதற்கு ந.மு.வே.,கரந்தை.உரை, ***“விசும்பினை அணி செய்யும் வில்லைப்போன்று தாவிச்சென்று”*** என்றும் மயிலம்வே.பதி. பொழிப்புரை, ***“இந்திரவில்போலத் தாவிச்சென்று”*** என்றும் பொருள் குறிக்கின்றன.

‘விசும்பினை அணி செய்யும் வில்’ வானவில் ஆகும். இதனை மக்கள் ‘இந்திரனின் வில்’லாகக் குறிப்பது நம்பிக்கை. இந்நிலையில் நம்பிக்கை வயப்பட்ட கருத்தை முதன்மையாகக் கொள்ளுதல்; பொருள் குறித்தல் பொருத்தமாக அமையாது. இவ்விடத்தில், ***“விசும்பினை அணி செய்யும் வானவில் பொலத் தாவிச்சென்று”*** என்பதனைப் பொருளாகக் குறிப்பது பொருத்தமாக அமையும்.

**214:9 பொம்மல் ஓதி**

தலைவன் கூந்தல் பற்றிக் குறிக்கும் இப்பாடத்திற்கு ***“பொலிவுற்ற கூந்தலை, அடர்ந்த கூந்தலை”*** என்ற இருவேறுபட்ட கருத்துகளை ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன குறிக்கின்றன.

'பொம்மல் ஓதி' எனும் சொல் சங்க இலக்கியத்தில் 13 இடங்களில் காணப்பெறுகிறது. இப்பாடல் தவிர்ந்த 12 இடங்களில் 8 இடங்களுக்குப் பொலிவுற்ற (நற்.71,129,293,அகம்.65,221,257,311,353) எனும் உரைக்கருத்தும் 3 இடங்களுக்குச் செறிந்த (நற்.252,274,379) எனும் உரைக்கருத்தும் உரையாசிரியர்களால் குறிக்கப்பெற்றுள்ளன. ஒரு பாடலுக்கு மட்டும் மலர்களால் பொங்குதலையுடைய கூந்தல் (குறுந்.191) எனும் பொருள் குறிக்கப்பெற்றுள்ளது. இவற்றின்வழி மேற்குறித்துள்ள இரு பொருண்மைகளையும் சேர்த்துப் 'பொம்மல் ஓதி' என்பதற்கு, ***"பொலிவுற்ற, அடர்ந்த கூந்தல்"*** என்று பொருள் குறிக்கலாம்.

**253:3 அமரா முகத்தினள்**

தலைவியின் மேனியில் பசலை படர்தல் பற்றி அறிந்த அன்னையின் முகம் பற்றிக்கூற 'அமரா முகத்தினள்' எனும் இப்பாடம் பயின்று வந்துள்ளது. இப்பாடத்திற்கு ந.மு.வே.,கரந்தை.உரை ***"வெறுத்த முகத்தினள்"*** என்றும் மயிலம்வே.பதி.குறிப்புரை, ***"அமரா – பொருந்தாத, வெறுத்த"*** என்றும் பொருள் குறிக்கின்றன.

இவ்விடத்தில் வெறுத்த என்று பொருள் குறிப்பதைவிடப் ***"பொருந்தாத"*** என்று பொருள் குறித்தலே பொருத்தமானதாக அமையும். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'வெறுத்த' என்பது மிகுதியான வெறுப்பைத் தரும்; 'பொருந்தாத' என்பது 'அந்நிலைக்கு மட்டும் மாறுபட்டு' என்று பொருள் தரும்.

2. தலைவியின் களவொழுக்கம் அன்னைக்கு வெறுப்பைத்தரும்; அதேவேளை தலைவி வெறுப்பைத் தருபவள் அல்லள்.

3. தம் வீட்டில் செல்வாக்காக வளர்ந்த தலைவி, தலைவன் வீட்டில் சென்று வேலை பார்த்தலைக் குறிப்பிடும் தாயாரையும் (குறுந்.167) உடன்போக்குச் சென்றபின் தலைவியைச் சுரம்வரைச் சென்று தேடும் தாயாரையும் (கலி.9) சங்கப்பாடல்கள் காட்டுகின்றன. இவை, அன்னை மகள் மீது கொண்டுள்ள அன்புக்குச் சான்றுகளாகும்.

***284:2 கூரலங் குறுமுயல்***

முல்லைக் காட்டில் இருக்கும் முயல்பற்றி,

"சிறியிலை நெல்லிக் காய்கண் டன்ன

குறுவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்" (284:1-2)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. இவ்வடிகளில் வரும் 'கூரலங் குறுமுயல்' எனும் பாடத்திற்கு ந.மு.வே.,கரந்தை.உரை, ***"கூரிய மயிரினையுடைய குறிய முயல்கள்"*** என்று பொருள் உரைக்கின்றன. மயிலம்வே.பதி. பொழிப்புரை, குறிப்புரை ஆகியன முறையே, ***"வளைந்த அழகிய குறிய முயல்கள், கூரல் வளைந்த"*** என்ற பொருண்மைகளைக் குறிக்கின்றன.

ந.மு.வே.,கரந்தை.உரை 'கூரலம்' என்பதற்குக் 'கூரிய மயிர்' என்றும் மயிலம்வே.பதி.பொழிப்புரை, குறிப்புரைகள் 'வளைந்த' என்றும் பொருள் கொள்கின்றன. 'முயல் வளைந்திருக்கிறது' என்பது பொருந்தாது. அதேவேளை 'முயலின் மயிர் கூர்மையாக உள்ளது' என்பது பொருந்தக்கூடியது. "மாரிக்கொக்கின் கூரலகு அன்ன" (நற்.100:2) என்ற நற்றிணைப் பாடலடிக்கும் 'கூர்மையான அலகுடைய கொக்கு' என்ற உரைக்கருத்தே காணப்பெறுகிறது. எனவே, ***"கூரிய மயிரினையுடைய குறிய முயல்கள்"*** என்ற ந.மு.வே.,கரந்தை.உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

***292:12 உடுவுறு கணையிற்போகி***

இப்பாடத்திற்கு, ***"இறகினைப் பொருந்திய அம்பென விரைந்து சென்று"*** என்ற பொருளை ந.மு.வே.,கரந்தை.உரை குறிக்கிறது. மயிலம் வே.பதி.பொழிப்புரையில், ***"விண்மீனைச் சென்று அடையும் அம்புபோலப் போய்"*** என்ற உரைக்கருத்துக் காணப்பெறுகிறது.

'உடு' என்பதற்குத் தமிழ்மொழி அகராதியில்,

"அகழி, அம்பிறகு, அம்பு, அம்புத்தலை, ஆடு, உடுவென்னேவல், ஓடக்கோல், சீக்கிரிமரம், விண்மீன்"[19]

என்ற பொருண்மைகள் குறிக்கப்பெற்றுள்ளன. மேற்கண்ட இரு உரைக் கருத்துகளையுடைய பொருண்மைகளும் இவ்வகராதிப் பொருண்மைகளில் காணப்பெறுகின்றன. இப்பொருண்மைகளில் ***"இறகினைப் பொருந்திய***

***அம்பென விரைந்து சென்று"*** என்ற உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம். அக்காலத்தில் அம்பு விரைந்து செல்வதற்காக இறகினைப் பின்னே இணைத்துக் கட்டுவர் என்பது நினைவில் கொள்ளத்தக்கதாகும்.

**302:8 அரிய போலும்**

தினை முற்றினமையால் தலைவி இல்லில் வைக்கப்பெற்றாள். இதனால் தலைவனைக் காண்பதும் அவனுடன் விளையாடுவதும் அரியது என்பதனை விளக்க, மேற்கண்ட பாடம் குறிக்கப்பெற்றுள்ளது. இப்பாடத்திற்கு ந.மு.வே.,கரந்தை. ஆகியோர் ***"அரியன போலும்"*** என்று உரை குறிக்கின்றனர். மயிலம்வே.பதி.பொழிப்புரை, ***"இயலாது போகும் போலும்"*** எனப் பொருள் குறிக்கிறது.

அரியது என்பது, 'எப்பொழுதும் தலைவனுடன் இருத்தல் அரிது; என்றாவது ஒருநாள் இருக்கலாம்' என்னும் பொருள் தரக்கூடியது. இயலாது என்பது, ***"இனி எப்பொழுதும் தலைவனைக் காணுதல் இயலாது"*** என்ற பொருளைத் தரும். தினைப்புனத்தில் பகற்குறியில் சந்தித்த தலைமக்கள் இற்செரிக்கப்பட்டபின் 'இரவுக்குறியில் சந்திப்பர்' என்பதனை நினைவில் கொண்டே புலவர் 'அரிய போலும்' எனும் பாடத்தைக் குறித்திருக்க வேண்டும். இந்நிலையில் 'இயலாது போகும்' என்பது பொருத்தமற்றதாக அமைகிறது. எனவே, ***"அரியன போலும்"*** எனும் உரைக்கருத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

**304:8 தெறிநடை மடப்பிணை**

'தெறிநடை மடப்பிணை' எனும் இப்பாடத்திற்கு ந.மு.வே., கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன முறையே, ***"துள்ளிய நடையினையுமுடைய இளைய பெண்மான், துள்ளும் நடையுடைய பெண்மான்"*** என்று பொருள் குறிக்கின்றன.

இப்பாடத்தில் 'இளைய' என்ற பொருளுக்கான குறிப்பேதும் காணப்பெறவில்லை. அதேவேளை 'மடப்பிணை' என்பதற்கான பொருளாகப் 'பெண்மாண்' என்று மட்டும் குறிப்பது பொருந்தாது. இந்நிலையில் ***"துள்ளிய நடையினையுடைய மடப்பத்தையுடைய***

***பெண்மான்"*** என்று உரை குறிப்பது இப்பாடத்திற்குப் பொருத்தமானதாக அமையும்.

**306:9 இதுவோ மற்றுநின் செம்மல்**

தலைமகனுக்கு வாயில் மறுக்கும் தலைவி, அவன் பரத்தமை ஒழுக்கம் குறித்துக் கூறும்போது,

"இதுவோ மற்றுநின் செம்மல்" (306:9)

என்று குறிப்பிடுகிறாள். இதற்கு ந.மு.வே.,கரந்தை.உரையில், ***"இதுதான் நினது தலைமையோ"*** என்ற பொருள் காணப்பெறுகிறது. மயிலம்வே.பதி. பொழிப்புரையில், ***"இதுவோ உனது செல்வம்"*** என்று பொருள் குறிக்கப்பெற்றுள்ளது.

தலைவனின் பண்பு நலன் பற்றிக் குறிக்கும் இப்பாடலில் 'செல்வம்' என்பதைவிட, ***"இதுதான் நினது தலைமையோ"*** என்ற ந.மு.வே.கரந்தை. ஆகியோரின் உரைக்கருத்தே பொருத்தமானது என்று குறிப்பிடலாம்.

**317:4–5 வையெயிற்று, நகைமுக மகளிர்**

பெண்டிர் பற்றிய மேற்கண்ட பாடத்திற்கு, ***"கூரிய பற்களையும் ஒள்ளிய முகத்தினையுமுடைய பெண்டிரது"*** என்ற பொருளை ந.மு.வே.,கரந்தை.உரை குறிக்கிறது. மயிலம்வே.பதி.பொழிப்புரையில் ***"கூரிய பற்களையும் நகைமுகத்தையும் உடைய பெண்களது"*** என்ற உரை காணப்பெறுகிறது.

இப்பாடத்தில் 'நகைமுக மகளிர்' என்று வெளிப்படையாக வந்துள்ளதால், ***"கூரிய பற்களையும் நகைமுகத்தையும் உடைய பெண்களது"*** என்ற மயிலம்வே.பதி.பொழிப்புரையையே பொருத்தமானதாகக் குறிப்பிடலாம்.

**317:12–13 விளரி, உதைத்துவிடு நரம்பின்**

குரவமரத்தின் மலரைச் சுற்றி ஒலிக்கும் வண்டின் ஒலியைப் பற்றிக் கூறும் மேற்கண்ட பாடத்திற்கு, ***"விளரி நரம்பின் ஒலிபோல"*** என்று ந.மு.வே.,கரந்தை. ஆகியோர் உரை வரைகின்றனர். ***"சொரிநரம்பின் ஒலிபோல"*** என்று மயிலம்வே.பதி.பொழிப்புரை பொருள் குறிக்கிறது. விளரி என்பதற்குத் தமிழ்மொழி அகராதி,

"இளமை, ஏழிசையினொன்று அது நெஞ்சாற் பிறப்பன,
நெய்தனிலயாழ், மிகுதி, யாழினோர் நரம்பு"[19அ]

என்ற பொருண்மைகளைக் குறிக்கிறது. சங்க இலக்கியத்தில் 'விளரி' என்பது 5 இடங்களில் (குறுந்.336,அகம்.299,317,புறம்.260,291) காணப்பெறுகிறது. இவையனைத்திற்கும் மேற்கண்ட அகராதிப் பொருண்மையை ஒத்த உரைகளே காணப்பெறுகின்றன. 'சொரிநரம்பு' என்பது போலப் பொருண்மைகள் ஏதும் காணப்பெறவில்லை. எனவே, ***"விளரி நரம்பின் ஒலிபோல"*** என்ற ந.மு.வே.,கரந்தை.உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**342:13 அவ்வரி அல்குல்**

இப்பாடத்திற்கு ந.மு.வே.,கரந்தை.உரை, ***"அழகிய வரிகளையுடைய தலைவி"*** என்றும் மயிலம்வே.பதி.பொழிப்புரை, ***"அழகிய வரிகளையுடைய அல்குலையுடையளாகிய"*** என்றும் பொருள் உரைக்கின்றன. அல்குல் என்ற சொல் மூலத்தில் காணப்பெறுவதால் இவ்விரு உரைக்கருத்துகளில், ***"அழகிய வரிகளையுடைய அல்குலையுடையளாகிய தலைவி"*** என்ற பொருளைப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**350:11 வலம்புரி மூழ்கிய**

மேற்கண்ட இப்பாடத்திற்கு, ***"வலம்புரியின் முத்தினை மூழ்கியெடுத்த"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் ***"வலம்புரிச்சங்கினை மூழ்கியெடுத்த"*** என்று மயிலம்வே.பதி.பொழிப்புரையும் பொருள் குறிக்கின்றன. கடலுக்குள் மூழ்கும் பரதவர்கள் மிகுந்த துன்பத்திற்கிடையில் மூழ்கி எடுப்பர் என்பதனை,

"இலங்கிரும் பரப்பின் எறிசுறா நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்றிமிற் பரதவர்" (350:10–11)

என்ற அடிகள் விளக்கும்.

இத்தகைய மிகுந்த துன்பத்திற்கிடையில் கடலில் மூழ்குவோர் 'வலம்புரிச் சங்கை' எடுத்தல் என்ற நிலையில் மூழ்கார். வலம்புரிச் சங்கை அவர்கள் எடுத்தாலும் அதற்குள் இருக்கும் முத்திற்காகத்தான் அதனை எடுப்பர். எனவே, இங்கு முத்துதான் முதன்மைப் பொருள் ஆகும். மேலும்

இவ்வாறு கடலுக்குள் மூழ்குவதை 'முத்துக்குளியல்' என்றே குறிப்பர். இதனால், ***"வலம்புரியின் முத்தினை மூழ்கியெடுத்த"*** என்ற உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் குறிப்பிடலாம்.

**352:2 கல்லாக் கடுவன்**

பலாப்பழத்தைக் கொண்டுவரும் குரங்குக் கூட்டங்களுக்குரிய தலைவனைக் 'கல்லாக்கடுவன்' எனும் பாடம் உணர்த்துகிறது. இதற்குக் ***"கல்லாத ஆண் குரங்கு"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் ***"மரமேறுதல் தொழிலையன்றிப் பிறிதொன்றைக் கல்லாத ஆண் குரங்கு"*** என்று மயிலம் வே.பதி.பொழிப்புரையும் பொருள் குறிக்கின்றன.

இங்கு 'கல்லாத ஆண் குரங்கு' என்று பொருள் குறிப்பிட்டால் எதனையும் 'கல்லாத / கற்றறியாத / தெரியாத ஆண் குரங்கு' என்று பொருள்படும். அதற்குள் மரமேறுதல் தொழிலும் அடங்கும். எனவே, ***"மரமேறுதல் தொழிலையன்றிப் பிறிதொன்றைக் கல்லாத ஆண் குரங்கு"*** என்ற உரைக்கருத்தைப் பொருத்தமானதாகக் குறிக்கலாம். உரையில் 'கல்லாத ஆண் குரங்கு' என்று பொதுப்படக்கூறி விளக்கவுரையில் ***"கல்லாத- மரமேறுதல் தொழிலையன்றிப் பிரிதொன்றைக் கல்லாத"*** என்றும் இதற்கு உரை எழுதலாம்.

**352:17 வதுவை நாளினும்**

தலைவி, தோழியிடம் தலைவனைப் பற்றிக் கூறும்போது,

"வதுவை நாளினும் இனியனால் எமக்கே" (352:17)

என்று குறிப்பிடுகிறாள். இவ்வடியில் வரும் 'வதுவை நாளினும்' என்ற பாடத்திற்கு, ***"வதுவை செய்த நாளினும்"*** என்று ந.மு.வே.,கரந்தை. ஆகியோரும் ***"முதற்புணர்ச்சிக் காலத்தினும்"*** என்று மயிலம்வே.பதி. பொழிப்புரைகாரரும் மாறுபட்டுப் பொருள் உரைக்கின்றனர். இவற்றுள் ***"வதுவை செய்த நாளினும்"*** என்ற உரைக்கருத்தைப் பொருத்தமானதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. இப்பாடலின் துறைக்குறிப்புகள் "வரைந்து எய்திய பின்றை மணமனைக்கட்சென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது, வரைவு மலிந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்" என்று காணப்பெறுகின்றன.

2. ‘முதற்புணர்ச்சி’ என்பது முதற்கண் இயற்கைப் புணர்ச்சியில் சந்தித்த காலம், தலைமக்கள் மெய்யுறு புணர்ச்சியில் ஈடுபட்ட காலம் எனும் இருபொருளையும் குறிக்கிறது.

3. ‘வதுவை’ என்பது சங்க இலக்கியங்களில் 35[19-ஆ] இடங்களில் காணப்பெறுகிறது. அது ‘திருமணச் சடங்கு’ என்ற பொருளையே குறிக்கின்றது.

**353:8 ஞெமையிலை உதிர்த்த**

‘கோடை வெம்மையால் ஞெமை மரங்கள் இலைகள் உதிர்ந்து நின்றன’ என்பதனை விளக்க, ‘ஞெமையிலை உதிர்த்த’ என்ற பாடம் பயின்று வந்துள்ளது. இதற்கு ந.மு.வே.,கரந்தை.உரை, ***“ஞெமை மரத்தின் இலைகளை உதிர்த்த”*** என்றும் மயிலம்வே.பதி.பொழிப்புரை, ***“ஞெமை மரத்தின் கிளைகளை உதிர்த்த”*** என்றும் பொருள் குறிக்கின்றன.

கோடை காலத்தில் வெம்மை தாங்காது மரத்தின் இலைகள் உதிர்வது இயல்பு. ஆனால், கிளைகள் உதிர்வது இல்லை. கிளைகளை வெட்டினால் தான் அது மரத்தைவிட்டுப் பிரியும்; வெப்பத்தால் அது பிரியாது. மேலும் ‘உதிர்தல்’ என்பது இலையுடன் தொடர்புடையது. எனவே, ***“ஞெமை மரத்தின் இலைகளை உதிர்த்த”*** எனும் உரைக்கருத்தே ‘ஞெமையிலை உதிர்த்த’ எனும் பாடத்திற்குப் பொருத்தமானதாக அமைகிறது எனலாம்.

**373:10 இரும்பல் கூந்தல்**

‘இரும்பல் கூந்தல்’ எனும் இப்பாடத்திற்கு, ***“நீண்ட பலவாய கூந்தலையும்”*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் ***“கரிய பலவாய கூந்தலையும்”*** என்று மயிலம்வே.பதி.பொழிப்புரையும் பொருள் குறிக்கின்றன. மூலத்தில் வரும் ‘இரும்பல்’ எனும் பாடம் “இருண்ட பலவாய” எனும் பொருளைத் தருகிறது. எனவே, மேற்கண்ட இரு உரைக்கருத்துகளையும் சேர்த்து ***“கரிய (இருண்ட) பலவாய கூந்தலையும்”*** என்ற உரைக்கருத்தை இங்குப் பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

**376:3 மருதோங்கு படப்பை**

‘கழாஅர்’ எனும் இடத்தில் உள்ள மருதமரத் தோட்டம் பற்றிக் குறிக்க, ‘மருதோங்கு படப்பை’ எனும் இப்பாடம் குறிக்கப்பெற்றுள்ளது.

இப்பாடத்தில் வரும் ‘ஓங்கு’ என்பதற்கு ***“உயர்ந்த”*** என்ற பொருளை ந.மு.வே.,கரந்தை.உரையும் ***“நிறைந்த”*** என்பதனை மயிலம்வே.பதி. பொழிப்புரையும் பொருண்மைகளாகக் குறிக்கின்றன. ‘ஓங்குதல்’ என்பதற்குத் தமிழ்மொழி அகராதி,

> “அதிகப்படல், உயர்தல், உயர்த்துதல், பெருமையுறல் தேறுதல், வளர்தல்”[19இ]

என்ற பொருண்மைகளைக் குறிக்கிறது. இங்கு ‘நிறைதல்’ என்ற பொருள் குறிக்கப்பெறவில்லை. இதன்வழி மேற்கண்ட பாடத்திற்கான உரைக்கருத்துகளில் ***“உயர்ந்த”*** என்பதே பொருத்தமானது என்று குறிப்பிடலாம்.

***380:3 முன்னாட் போகிய துறைவன்***

தலைவனின் நிலை பற்றிக் கூறும்,

> “தேர்சேண் நீக்கித் தமியன் வந்துநும்
> ஊர்யா தென்ன நணிநணி ஒதுங்கி
> முன்னாட் போகிய துறைவன் நெருநை
> அகலிலை நாவல் உண்டுறை உதிர்த்த
> கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்
> தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம்
> அலவற் காட்டி நற்பாற்றிதுவென
> நினைந்த நெஞ்சமொடு நெடிதுபெயர்ந் தோனே” *(380:1–8)*

எனும் அடிகளில் காணப்பெறும் ‘முன்னாட் போகிய துறைவன்’ என்ற பாடத்திற்கு, ***“முன்னாளில் சென்ற துறைவன்”*** என்ற பொருளை ந.மு.வே., கரந்தை.உரை உரைக்கிறது. மயிலம்வே.பதி.பொழிப்புரையில் ***“நேற்றுச் சென்ற துறைவன்”*** என்ற பொருள் காணப்பெறுகிறது.

இவற்றுள் ***“முன்னாளில் சென்ற துறைவன்”*** என்ற உரைக்கருத்தே பொருத்தமானதாக அமையும். அதற்கான காரணங்கள் வருமாறு:

***1.*** முன்னாள் என்பதற்கு முன்பொருநாள், நேற்று என்று இரு பொருண்மைகள் உள்ளன. இங்கு முன்பொருநாள் என்பதே பொருந்துகிறது.

2. "முன்னாட்போகிய துறைவன்" என்ற பாடத்தைத் தொடர்ந்து 'நெருநை' என்ற பாடம் வருகிறது. இது நேற்று என்ற பொருள் தரக்கூடியது.

3. முன்பொருநாள் வந்து சென்ற தலைவன், நேற்று 'துணையொடு வரும் நண்டினைப் பார்த்துக் கூறினான்' என்று இங்குக் குறிக்கப்பெற்றுள்ளது. எனவே, ஒருபொருள் குறிப்பதாக இரு சொற்கள் ஒரே அடியில் வர வாய்ப்பில்லை.

### *392:16 வாரணம் கதற*

மலையிடத்திலிருந்த உயர்ந்த பரணியிலிருந்து கானவன் எறிந்த கவண்கல்லால் துன்பமுற்று யானைக்கூட்டம் தெறிகெட்டு ஓடிய நிலையினை விளக்க, 'வாரணம் கதற' எனும் பாடம் பயின்று வந்துள்ளது. இதில் வரும் கதற என்பதற்கு ந.மு.வே.,கரந்தை.உரை "***கதற***" என்றும் மயிலம்வே.பதி.பொழிப்புரை "***பிளிற***" என்றும் மாறுபட்டுப் பொருள் உரைக்கின்றன.

கதற என்பது மரபுப்பிழையாகும். பிளிற என்பதே சரியான சொல் ஆகும். இங்கு யானையின் மிகுதியான துன்பத்தைக் குறிக்கக் 'கதற' எனும் பாடம் பாடலில் பயன்படுத்தப்பெற்றுள்ளது. இதனையே உரையாகக் குறித்தல் பொருந்தாது. எனவே, மரபுப்பிழை நீங்கிய, "***யானை பிளிற***" என்ற உரைக்கருத்தையே சரியானது என்று குறிப்பிடலாம்.

### மூன்று உரைவேறுபாடுகள் காணப்பெறுதல்

ராஜகோபாலார்யன் பதிப்பின் உரைகள் (பழைய., குறிப்.,ராஜ. குறிப்புரைகள்), ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பின் உரைகள் (பத.,பழைய.,பொழிப்.,குறிப்புரைகள்) ஆகிய மூன்று பதிப்புகளின் உரைகளும் ஒரு பொருளுக்கான தன்மையில் வேறுபட்டுக் காணப்பெறும் இடங்களும் உண்டு. இவற்றை 3 உரை வேறுபாடுகள் எனக் குறிக்கலாம். இத்தன்மை 27 இடங்களில் காணப்பெறுகிறது (விவரம்: பின்னிணைப்பு-26). இவற்றுள் 26 இடங்கள் 1-160 பாடல்களுக்குள்ளும் ஓரிடம் மட்டும் 331 ஆம் பாடலுக்குரியதாகவும் அமைகின்றன. அவை குறித்து விளக்குவதாக இனிவரும் பகுதி அமைகிறது.

### *1:1 ததைந்த*

'ததைந்த' எனும் இப்பாடத்திற்குப் பழையஉரை, ***"சிதறின, மலர்ந்த"*** எனும் உரைக்கருத்துகளைக் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, ***"மலர்ந்த"*** என்பதனையும் மயிலம்வே.பதி.பழையஉரை, ***"நெருங்கியிருக்கின்ற"*** என்பதனையும் உரைக்கருத்துகளாகக் குறிக்கின்றன. இவற்றின் வழித் 'ததைந்த' என்பதற்கு, ***"சிதறின, மலர்ந்த, நெருங்கியிருக்கின்ற"*** எனும் மூன்று உரைக்கருத்துகள் இருப்பதை அறியலாம். 'நெடுவேள் ஆவி' எனும் மன்னன் பற்றிக் குறிக்கும் இப்பாடல்,

"வண்டுபடத் ததைந்த கண்ணி" *(1:1)*

சூட்டியவன் என்று குறிப்பிடுகிறது. இவ்வடிக்கான உரைக்கருத்துகளில் ***"மலர்ந்த"*** எனும் உரைக்கருத்தே பொருத்தமானது. அதற்கான காரணங்கள் வருமாறு:

*1.* வண்டுகள், 'மலர்ந்த' பூவில் மொய்க்கும்.

*2.* 'சிதறின' என்பது 'சிதைந்த' எனும் பொருள் தரும். சிதைந்த பூவில் மாலை கட்டுதல் இல்லை.

*3.* பூக்களை நெருக்கமாக வைத்து மாலை கட்டுதல் உண்டு. எனினும், அது மொட்டாக இருக்கும் தருவாயில் வண்டு மொய்க்க வாய்ப்பில்லை. மலரும்போது மட்டுமே வண்டுகள் மொய்க்கும்.

### *5:11 உதிர்வன படூஉம்*

இப்பாடத்தில் வரும் 'படூஉம்' என்பதற்கு, ***"படுதல்–உண்டாதல்"*** எனும் பொருளைப் பழையஉரை குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன முறையே, ***"உதிர்ந்து கிடக்கும், உதிர்ந்துபடுகின்ற"*** எனும் பொருண்மைகளைக் குறிக்கின்றன. இந்நிலையில் படூஉம் என்பதற்கு, "உண்டாதல், கிடக்கும், உதிர்ந்துபடுகின்ற" எனும் மூன்று உரைக்கருத்துகள் இருப்பதை அறியமுடிகிறது. சிறுவர்கள் விளையாடும் வட்டுக்காய்களைப் பற்றிய,

"பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை ஈட்டுவட்டேய்ப்ப
உதிர்வன படூஉம் கதிர்தெறு கவாஅன்" *(5:9–11)*

என்ற அடிகள் குறித்து விளக்கும்போதே மேற்கொண்ட உரை வேறுபாடுகள் வந்துள்ளன. 'வட்டுக்காய்கள் போன்ற அமைப்புடைய நெல்லிக்காய்கள் உதிர்ந்து கிடக்கின்றன' என்ற பொருண்மையுடைய இவ்வடிகளில் வந்துள்ள 'படூஉம்' என்பதற்கான உரைவேறுபாடுகளில் ***"உதிர்ந்து கிடக்கும்"*** என்ற உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். "உதிர்ந்து படுகின்ற" என்ற உரைக்கருத்தும் உதிர்ந்து கிடக்கும் என்ற பொருளையே தரும்.

### 16:8 செத்தனள் பேணி

தெருவில் வரும் தலைவனின் மகனைப் பார்த்த பரத்தையின் நிலைபற்றிக் கூறுவதாக,

> "யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனை
> தேர்வழங்கு தெருவில் தமியோர் கண்டே
> கூரெயிற் றரிவை குறுகினள் யாவரும்
> காணுநர் இன்மையின் செத்தனள் பேணி" *(16:5–8)*

என்னும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் காணப்பெறும் 'செத்தனள் பேணி' எனும் பாடத்திற்கு, ***"கருதிப் பேணி, நின் ஒப்புமை கருதிப் போற்றி, நின்னொத்திருத்தலை விரும்பி"*** என்ற மூன்று விதமான உரைக்கருத்துகள் காணப்பெறுகின்றன.

இம்மூன்று உரைக்கருத்துகளில் ***"நின்னொத்திருத்தலை விரும்பி"*** எனும் உரைக்கருத்தையே மிகப் பொருத்தமானதாகக் குறிக்கலாம். அது குறித்த விளக்கங்கள் வருமாறு:

*1.* 'பேணுதல், போற்றுதல்' இவையிரண்டும் பரத்தை, புதல்வனைப் பாதுகாப்பாக எடுத்தலைக் குறிக்கும். 'விரும்புதல்' என்பது அவன்மீது கொண்ட அன்பு மிகுதியைக் குறிக்கும்.

*2.* பொதுவாகக் குழந்தைகள் மீது பெண்கள் அன்பு கொள்ளுதல் என்பது இயல்பு. இருப்பினும் தனக்கு விருப்பமான தலைவனின் மகன் என்பதால் பரத்தையின் மிகுதியான அன்பு வெளிப்படுதலை அறியலாம்.

*3.* மேலும் புதல்வன் தலைவனைப்போன்று இருப்பதும் அவள் அன்பு மிகுதிக்குக் காரணம் என்றும் கூறலாம்.

4. அன்பு இருந்தாலே பேணுதல், போற்றுதல் இரண்டும் தானே வரும்.

**38:3–4 வெஞ்செலற், கணைவலந் தெரிந்து**

இப்பாடத்திற்குப் பழையஉரை, ***"வலந்தெரிந்து – வலத்தை ஆராய்ந்து கொண்டு"*** என்று பொருள் உரைக்கின்றது. ந.மு.வே.,கரந்தை. உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன முறையே, ***"வலியமைந்த அம்புகளை ஆராய்ந்து கொண்டு, வலக்கையிலாராய்ந் தெடுத்து"*** என்று பொருள் குறிக்கின்றன.

தலைவனின் தோற்றம் பற்றிய இப்பாடலில் அவன் வில், அம்பைக் கொண்டிருக்கும் நிலைபற்றி,

> "அஞ்சிலை யிடவ தாக வெஞ்செலற்
> கணைவலந் தெரிந்து துணைபடர்ந் துள்ளி" *(38:3–4)*

என்ற அடிகள் விளக்குகின்றன. 'இடக்கையில் வில் உள்ளது' எனும் குறிப்புக் காணப்பெறுவதால், வலக்கையில் அம்பை எடுத்து வர வாய்ப்புண்டு. எனவே, ***"வலக்கையிலாராய்ந் தெடுத்து"*** எனும் மயிலம்வே.பதி.பொழிப்புரையை பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

**38:8 மாறிய மருங்கும்**

தலைவன், தலைவியைத் தேடி வந்து அவளைக் காணாதபோது தவிக்கும் தலைவனின் நிலைபற்றியதாக,

> "..................... வான்தோய் வெற்பன்
> வந்தன னாயின் அந்தளிர்ச் செயலைத்
> தாழ்வில் ஓங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்
> றூசல் மாறிய மருங்கும்" *(38:5–8)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் வந்துள்ள, 'மாறிய மருங்கும்' எனும் பாடத்திற்குப் பழையஉரை, ***"மாறுதல் – ஆடாதொழிதல்"*** என்றும் ந.மு.வே.,கரந்தை.உரை, ***"இல்லாதொழிந்த இடத்தையும்"*** என்றும் பொருள் உரைக்கின்றன. மயிலம்வே.பதி.பொழிப்புரை, ***"மாறுபட்டிருக்கின்ற இடத்தையும்"*** எனும் பொருளைத் தருகிறது.

இப்பொருள் மாறுபாடுகளையுடைய இவ்வடிகளைத் தொடர்ந்து தலைவி இல்லாத சுனை, தினைப்புனம் இவை பற்றிய குறிப்புகளும் அங்கு 'தலைவன் தன்னைத் தேடுவான்' என்ற தலைவியின் குறிப்பும் வருவதால், தலைவி தினைப்புனக்காவல் முடித்து வீடு சென்ற நிலையினை அறிய முடிகிறது. அந்நிலையில் அங்கு (பகற்குறி நடைபெற்ற தினைப்புனத்தில்) ஊஞ்சல் இருக்க வாய்ப்பில்லை. எனவே, 'மாறிய மருங்கும்' எனும் பாடத்திற்கான உரைவேறுபாடுகளில், ஊஞ்சல் ***"இல்லாதொழிந்த இடத்தையும்"*** என்ற பொருளைக் குறித்தலே பொருத்தமானது எனலாம்.

**98:8–9 முதுவாய்ப் பொய்வல் பெண்டிர்**

கட்டுவிச்சியர் பற்றிய இப்பாடத்திற்கு ராஜ.குறிப்புரை, ***"அறிவு வாய்ந்த பொய்கூறுதல் வல்ல கட்டுவிச்சியர்"*** என்றும் ந.மு.வே.,கரந்தை. உரை, ***"முதுமை வாய்ந்த பொய்கூறல் வல்ல கட்டுவிச்சியராய பெண்டிர்"*** என்றும் பொருள் உரைக்கின்றன. மயிலம்வே.பதி.பழையஉரை, ***"முதிர்ந்து வாய்மையினையுடைய பொய் வல்ல பெண்டிர்"*** என்று பொருள் குறிக்கக் குறிப்புரை, ***"கட்டுவிச்சி முதுபெண்டிருடனிருந்து கட்டுக் கண்டுரைப்பது வழக்காதலாற் பெண்டிரென்றார்"*** என்ற பொருளைத் தருகிறது. குறிப்புரையின் இவ்உரைக்கருத்து விளக்க நிலையில் அமைகிறது.

'அறிவு வாய்ந்த பெண்டிர்' என்பது பொருத்தமின்றி அமைவதாலும் மயிலம்வே.பதி.குறிப்புரைக் கருத்து விளக்க நிலையில் அமைவதாலும், ***"முதுமை வாய்ந்த பொய்கூறல் வல்ல கட்டுவிச்சியராய பெண்டிர்"*** எனும் ந.மு.வே.,கரந்தை.உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**98:21–22 மயங்கிய மையற் பெண்டிர்க்கு**

வெறியாடுங்களத்தில் வந்து கூடியோர் பற்றிக் குறிக்க,

"..................... மயங்கிய
மையற் பெண்டிர்க்கு" *(98:21–22)*

எனும் பாடம் பயின்று வந்துள்ளது. இப்பாடத்திற்கு ராஜ.குறிப்புரை, ***"வெறியயர் களத்து வந்து கூடியுள்ள மயக்கங்கொண்ட கட்டுவிச்சிகளின் பொருட்டு"*** என்று பொருள் குறிக்கிறார். ***"வெறியாடுங் களத்துக் கூடிய***

***மயக்கம் பொருந்திய பெண்டிர்க்கு”*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் ***“மையற் பெண்டிர் – பித்தினையுடைய பெண்டிர்”*** என்று மயிலம்வே.பதி. பழையஉரையும் பொருள் குறிக்கின்றன. இம்மூன்று உரைக்கருத்துகளில் ***“வெறியாடுங் களத்துக் கூடிய மயக்கம் பொருந்திய பெண்டிர்க்கு”*** என்ற உரைக்கருத்தே பொருத்தமானதாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. வெறியாட்டுக் களத்தில் கட்டுவிச்சிகள் மட்டும் கூடுவதில்லை.

2. மயக்கம் இருவகையில் அமையும். கட்டுவிச்சிகளின் மயக்கமாவது மருளாடுதலுடன் தொடர்புபடுத்தக் கூடியதாகவும் பிற பெண்டிரின் மயக்கமாவது வேலனின் வெறியாட்டைக் கண்டு மயங்குவதாகவும் அமையும்.

3. கட்டுவிச்சிகளின் மயக்கத்தைவிடப் பொதுவான பெண்டிரின் மயக்கம் மிகுதியாக ஏற்படக்கூடியது.

4. தற்காலத்திலும் சிற்றூர்களில் நடத்தப்பெறும் சாமியாட்டங்களில் இந்நிகழ்வுகளைக் காணமுடிகிறது.

**98:22–23 நொவ்வலாக ஆடிய பின்னும்**

வேலன் வெறியாட்டுப் பற்றிய இப்பாடத்திற்கு ராஜ.குறிப்புரை, ***“விரைவாக வேலன் ஆடிய பின்னும்”*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பழையஉரை ஆகியன முறையே, ***“துன்பம் உண்டாக வேலன் ஆடிய பின்னும், நொவ்வல் – வருந்துதல்”*** என்று பொருள் உரைக்கின்றன.

மேற்கண்ட மூன்று உரைக்கருத்துகளில் ‘துன்பம் உண்டாக, வருந்துதல்’ என்பன ஏறக்குறைய ஒரே பொருண்மையில் அமைவன. ‘விரைவாக’ என்பது அவற்றிலிருந்து மாறுபட்டமைவது. ‘நொவ்வலாக’ எனும் பாடத்திற்கு முன் ‘மையற் பெண்டிர்க்கு’ எனும் பாடம் வருகிறது. எனவே, மயக்கம் பொருந்திய பெண்டிர்க்கு, ***“துன்பம் உண்டாக”*** வேலன் வெறியாடினான் எனும் உரைக்கருத்தே இம்மூன்று கருத்துகளில் பொருந்தக்கூடியது எனலாம்.

**99:6 அதிரல்**

'அதிரல்' எனும் மலரின் பெயர் பற்றிய இப்பாடத்திற்கு ராஜகோபாலார்யன் ***"பாதிரி"*** என்றும் ந.மு.வே.,கரந்தை. ஆகியோர் ***"கோங்கம்"*** என்றும் பொருள் உரைக்கின்றனர். மயிலம்வே.பதி. குறிப்புரையில், ***"ஆதிரல் மோசிமல்லிகை என்பர் அடியார்க்கு நல்லார் (சிலப்.புறஞ்சேரி.156), 'புனலிப்பூ' என்பர் நச்சினார்க்கினியர் (குறிஞ்சிப்பாட்டு – 75)"*** என்ற பொருண்மைகள் காணப்பெறுகின்றன. இவற்றின்வழி 'அதிரல்' எனும் பாடத்திற்கு, ***"பாதிரி, கோங்கம், மோசிமல்லிகை, புனலிப்பூ"*** என்ற நான்கு பொருண்மைகள் குறிக்கப் பெற்றுள்ளதை அறியலாம்.

மேற்கண்டவாறு பொருள் மாறுபாடுகளையுடைய 'அதிரல்' என்பதற்குத் தமிழ்மொழி அகராதி,

"அதிர்தல், புனலிப்பூ, மோசிமல்லிகை, விரிதூறு"[20]

என்று பொருள் உரைக்கின்றது. 'பாதிரி, கோங்கம்' என்பனவற்றிற்கு முறையே,

"பாதிரி – பாதிரிமரம், அது தசமூலத்தில் ஒன்று, மூங்கில்"[21]

"கோங்கம் – ஒரு புட்பம், நடு, நெல்லி"[22]

என்ற பொருண்மைகள் தமிழ்மொழி அகராதியில் குறிக்கப்பெற்றுள்ளன.

இந்நிலையில் 'பாதிரி, கோங்கம்' என்பனவற்றிற்கு 'அதிரல்' எனும் பொருள் காணப்பெறாமையாலும் 'அதிரல்' என்பதற்கான அகராதிப் பொருண்மைகளில் 'பாதிரி, கோங்கம்' என்பன காணப்பெறாமையாலும் அதிரல் என்பதற்கான பொருண்மைகளில் 'பாதிரி, கோங்கம்' என்பன பொருந்தாது என்பதனை அறியலாம். ஆனால், 'புனலி, மோசிமல்லிகை / காட்டுமல்லிகை' என்பன பரவலாகக் குறிக்கப்பெற்றுள்ளன. இதனைப் பிற சங்கப் பாடல்களின் உரை வழியும் (நற்.52, 124, 337 : பின்னத்தூரார் உரை, பரி.20:பரிமே. உரை, புறம்.269:2 உ.வே.சா. குறிப்புரை, முல்.51, குறி.75 : நச்சர். உரை) அறியமுடிகிறது.

இவற்றின்வழி அதிரல் என்பதற்கு, 'புனலிப்பூ, மோசிமல்லிகை / காட்டுமல்லிகை' எனும் பொருண்மைகள் இருப்பதை அறியலாம். இந்நிலையில் இப்பாடலுக்கான உரையில் ***"அதிரல்"*** என்றே குறிப்பிட்டு, விளக்கவுரையில் மேற்கண்ட பொருண்மைகளைக் குறிக்கலாம்.

**101:8 நுரைதெரி மத்தம்**

இப்பாடத்திற்கு, ***"நுரை தெரிதற்குக் காரணமான மத்தினை"*** என்று ராஜ.குறிப்புரையும் ***"வெண்ணெயை வெளிப்படுத்தும் கடையும் மத்தினை"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் பொருள் உரைக்கின்றன. மயிலம்வே.பதி.பொழிப்புரை இவற்றிலிருந்து வேறுபட்டு, ***"நுரைபோன்ற மத்திகைகள் கொண்டு"*** என்று பொருள் குறிக்கிறது.

மேற்கண்ட உரைக்கருத்துகளில் ராஜ.குறிப்புரை, ந.மு.வே., கரந்தை.உரை ஆகியனவற்றின் உரைக்கருத்துகள் ஒரே பொருண்மை உடையன. ராஜ.குறிப்புரை மோர் கலக்குதலில் உள்ள முதல்நிலையை, அதாவது வெண்ணெய் நுரைநுரையாக வெளிப்படும் நிலையைக் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை நுரையானது வெண்ணெய்யாக மாறிய நிலையினைக் குறிக்கிறது. ஆனால் மயிலம்வே.பதி.பொழிப்புரைக்கருத்து மத்தினையே நுரைபோன்றது என்று குறிப்பிடுகிறது.

இந்நிலையில் மேற்கண்ட பாடத்திற்கு, ***"நுரை தெரிதற்குக் காரணமான மத்தினை/வெண்ணெயை வெளிப்படுத்தும் கடையும் மத்தினை"*** எனும் உரைக்கருத்துகளைப் பொருத்தமுடையனவாகக் கருதலாம்.

**102:9 மறம்புகல் மழகளிறு**

குறிஞ்சி நிலத்தில் உள்ள யானையைப் பற்றிக் குறிப்பதாக 'மறம்புகல் மழகளிறு' எனும் பாடம் பயின்று வந்துள்ளது. இப்பாடத்திற்கு, ***"ஆண்மையை விரும்பும் இளங்களிறு"*** என்று ராஜ.குறிப்புரையும் ***"வீரத்தினை விரும்பிய இளைய களிறு"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் பொருள் குறிக்கின்றன. மயிலம்வே.பதி.பொழிப்புரை, ***"வீரமமைந்த இளைய களிறு"*** என்ற பொருளைக் குறிக்கிறது. இவ்வுரைக் கருத்துகளில் மயிலம் வே.பதி. பொழிப்புரைக் கருத்தே பொருத்தமானதாக அமைகிறது. அதுகுறித்த விளக்கங்கள் வருமாறு:

1. ‘மறம்’ என்பதற்கு ‘வீரம்’ என்பதே நேரடிப் பொருளாகும். ‘ஆண்மை’ என்பது ஆணாதிக்கச் சூழலில் ஏற்பட்ட பொருள் எனலாம்.

2. பெண்மைக்கும் வீரம் உண்டு.

3. ‘மறம்புகல்’ என்பதற்கான நேரடிப் பொருளாக, ‘வீரம் அமைந்த’ என்பது அமைகிறது.

4. ‘வீரத்தினை விரும்பிய’ என்பது ‘வீரமில்லாத யானை வீரத்தை விரும்புகிறது’ என்பது போன்ற பொருள் மயக்கத்தைத் தோற்றுவிக்கிறது.

**106:2 பொரியகைந் தன்ன**

மருதநிலத்தின் வளமை பற்றிய இப்பாடலில்,

“எரியகைந் தன்ன தாமரைப் பழனத்துப்
பெரியகைந் தன்ன பொங்குபல சிறுமீன்” (106:1–2)

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன. இவ்வடிகளில் காணப்பெறும் ‘பொரியகைந்தன்ன’ எனும் பாடத்திற்கு, “***தீப்பொறிகள் கிளைத்தாற்போல***” என்று ராஜ.குறிப்புரையும் “***நெற்பொரி முதலியன தெறித்தாற்போன்று***” என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் பொருள் குறிக்கின்றன. மயிலம்வே.பதி.பொழிப்புரை, குறிப்புரை ஆகியன முறையே, “***பொரியிறைத்தா லொத்த, பொரிதழைத்தாலொத்த***” என்ற பொருண்மைகளைக் குறிக்கின்றன.

இம்மாறுபட்ட உரைக்கருத்துகளில் “***பொரியிறைத்தாலொத்த***” எனும் மயிலம்வே.பதி.பொழிப்புரைக் கருத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. ‘பொரியகைந்தன்ன’ எனும் பாடமே மூலத்தில் குறிக்கப் பெற்றுள்ளது. அது என்ன பொரி என்பது குறிக்கப்பெறவில்லை. அந்நிலையில் ‘நெற்பொரி’ என்று பொருள் குறித்தல் பொருந்தாது. நெல், சோளம் முதலானவற்றில் பொரி தயாரித்தல் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

2. தழைத்தல் என்பது உயிருள்ள தாவரத்திற்கே பொருந்தும். இதன்வழிப் ‘பொரிதழைத்தல்’ என்பது பொருத்தமற்ற பொருள் என்பதனை அறியலாம்.

3. முதல் அடியில் 'தீப்பொறி போன்று தாமரை மலர்கள் உள்ளன' என்று தீப்பொறி குறித்த பதிவு வருவதால், மீன் என்பதற்கும் தீப்பொறி என்று வர வாய்ப்பில்லை.

**107:18 மரைகடிந்து ஊட்டும்**

பாலைநிலச் சிற்றூரைப் பற்றிய இப்பாடற் குறிப்பில்,

"மரைகடிந் தூட்டும் வரையகச் சீறூர்" (107:18)

எனும் அடி பயின்று வந்துள்ளது. இவ்வடியில் வரும் 'மரை' என்பதற்கு ***"மரையா"*** என்று ராஜகோபாலார்யன் பொருள் குறிக்கிறார். ***"மரைமான்"*** என்று ந.மு.வே.,கரந்தை. ஆகியோரும் ***"மரை"*** என்பதனை மயிலம்வே.பதி. குறிப்புரைகாரரும் பொருண்மைகளாகக் குறிக்கின்றனர்.

'மரையா' என்பது காட்டுப்பசுவைக் குறிக்கும். 'மரை' என்பது மானின் ஒருவகையைக் குறிக்கும். எனவே, இதற்கு "மரையா" என்று பொருள் குறிப்பது பொருந்தாது; ***"மரைமான்/மரை"*** எனும் உரைக்கருத்துகளே பொருத்தமானதாக அமையும்.

**109:6 விழைவெளி லாடும்**

இரண்டு அணில்கள் விளையாடுதலைக் குறிக்கும் இப்பாடத்திற்கு, ***"ஏறும் பிணையுமாகித் தம்மின் ஒன்றையொன்று விழையும் அணில்களாடும்"*** என்று ராஜ.குறிப்புரை பொருள் உரைக்கிறது. ந.மு.வே., கரந்தை.உரை, மயிலம்வே.பதி.குறிப்புரை ஆகியனவற்றில் முறையே, ***"ஒன்றையொன்று விழைந்த அணில்கள் கூடி ஆடும், விரும்பத்தக்க அணில்கள் உலாவுகின்ற"*** என்ற உரைக்கருத்துகள் காணப்பெறுகின்றன.

இம்மாறுபட்ட உரைக்கருத்துகளில் ***"ஒன்றையொன்று விழைந்த/விரும்பத்தக்க அணில்கள்"*** என்ற உரைக்கருத்துகளைப் பொருத்தமுடையதாகக் கூறலாம். அதற்கான காரணங்களாகப் பின்வருவனவற்றைக் குறிக்கலாம்.

1. 'விழைதல்' என்பதற்கு 'விரும்புதல்' என்பதே நேரடிப் பொருளாகும்.

2. 'விரும்புதல்' என்பதற்கு 'ஆண், பெண்' இரண்டு மட்டும் நட்புக் கொள்ளுதல் என்று பொருள் கொள்வது ஏற்கத்தக்கதல்ல. தம்முடன் கூடி விளையாடும் அனைவரையும் விரும்புதல் என்பது குறிக்கத்தக்கது.

3. மூலத்தில் ஆண், பெண் என்பதற்கான குறிப்புகள் ஏதும் இல்லை. எனவே, 'ஏறும் பிணையுமாகி' என்பதனை விளக்கவுரையில் வேண்டுமானால் குறிக்கலாம்.

***113:20 அறுதுறை யயிர்மணல் படுகரை***

இப்பாடத்திற்கு ராஜ.குறிப்புரை, ***"சிலவாகிய நீரும் அற்றுப் போகின்ற துறைக்கண்ணே"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை. உரை, ***"மக்கள் இயக்கம் அற்ற துறையாகிய நுண்மணல் பொருந்திய கரையினைத்தாண்டி"*** என்றும் மயிலம்வே.பதி.குறிப்புரை, ***"சிவந்த நிறத்தையுடைய சின்னீர் அறுத்தோடுகின்ற துறையின் நுண்ணிய மணல்"*** என்றும் பொருள் உரைக்கின்றன.

பாலைநில மறவர்கள் வழியில் செல்லும் புதியவர்களைக் கொன்று தம் எரிபடையை நீரில் கழுவுவதால் நீர் சிவந்து செல்லும் துறை என்பதனை,

> "நெறிசெல் வம்பலர் கொன்ற தெவ்வர்
> எறிபடை கழீஇய சேயரிச் சின்னீர்
> அறுதுறை யயிர்மணல் படுகரைப் போகி" (113:18–20)

என்ற அடிகள் விளக்குகின்றன.

இச்சூழலுக்கான மேற்கண்ட உரைக்கருத்துகளில், ***"சிவந்த நிறத்தையுடைய சின்னீர் அறுத்தோடுகின்ற துறையின் நுண்ணிய மணல்"*** எனும் மயிலம்வே.பதி.குறிப்புரைக் கருத்தே பொருத்தமாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'நீர் அற்றுப்போகின்ற துறை' என்றால் படைக்கலங்களைக் கழுவுதல் என்பதும் சிவந்த நீர் வருதல் என்பதும் இருக்க இயலாது.

2. 'மக்கள் இயக்கம் அற்ற துறை' என்பதனைப் பொருளாகக் கொள்ளும்போது, பாலைநிலத்தவர் கொன்றது யாரை? என்ற வினா எழ வாய்ப்புண்டு.

3. ‘பாலைநில எயினர் வழியில் வரும் மக்களைக் கொன்றதால் சிவந்த படைக்கலங்களைக் கழுவி, நீரானது சிவந்து அரித்தோடுகின்றது’ என்பது இயல்பாகவும் பொருத்தமாகவும் அமைகிறது.

**116:13 மையணி யானை**

செழியனின் யானைப்படையைப் பற்றிய மேற்கண்ட பாடத்திற்கு ராஜ.குறிப்புரை, ***“அஞ்சனமணிந்த யானை”*** என்றும் ந.மு.வே.,கரந்தை. உரை, ***“மையணிந்த யானை”*** என்றும் பொருள் உரைக்கின்றன. மயிலம் வே.பதி.குறிப்புரை, ***“மேகம் போலழகிய யானை”*** என்று பொருள் குறிக்கிறது.

இம்மூன்று கருத்துகளில் ‘மேகம் போன்ற யானை’ என்பது யானையின் முழு உருவத்தையும் குறிப்பதாக அமைகிறது. ***“அஞ்சனம் அணிந்த/மை அணிந்த”*** என்பன யானை மையணிந்த தன்மையைக் குறிக்கிறது. எனவே, ***“அஞ்சனம்/மைஅணிந்த”*** யானை எனும் உரைக்கருத்தையே பொருத்தமுடையதாகக் கருதலாம்.

**123:6 சில்லைங் கூந்தல்**

தலைவியின் கூந்தல் பற்றிய இப்பாடத்திற்கு, ராஜ.குறிப்புரை, ***“சிலவாகிய ஐந்து பகுதியையுடைய கூந்தலாற்”*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.குறிப்புரை ஆகியன முறையே, ***“சிறப்புற்ற சிலவாகிய ஐம்பகுதியையுடைய கூந்தலையுடைய”*** என்றும் ***“சில்லென்னும் தலைக்கோலமணிந்த ஐந்து வகையாக முடித்தற்குரிய கூந்தலையுடைய”*** என்றும் பொருள் குறிக்கின்றன.

மேற்கண்ட உரைக்கருத்துகளில் ந.மு.வே.கரந்தை.உரையில் காணப்பெறும் ‘சிறப்புற்ற’ எனும் வார்த்தை கூந்தல் நலத்திற்காகக் கூடுதலாகச் சொல்லப்பெற்றுள்ளது. மயிலம்வே.பதி.குறிப்புரையில் காணலாகும், ‘சில்லென்னும் தலைக்கோல மணிந்த’ என்பதனை ஏற்க முடியவில்லை. கூந்தலின் மிகுதியான அழகு ஐந்து வகையாகப் பின்னி முடித்ததாகவே சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பெற்றுள்ளது. தலைக்கோலம் பற்றிய குறிப்பேதும் இப்பாடப் பதிவிலும் இல்லை. எனவே, ***“சிலவாகிய ஐந்து பகுதியையுடைய”*** என்ற ராஜ.குறிப்புரைக் கருத்தையே பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

***123:11 கழைமாய் காவிரிக் கடல்மண்டு பெருந்துறை***

மேற்கண்ட அடிக்கு, ***“காவிரியானது சென்றடையும் கடற்பெருந் துறைக்கண்ணே”*** என்று ராஜ.குறிப்புரையும் ***“ஓடக்கோலும் மறையும் நீத்தத்தையுடைய காவிரி கடலில் மண்டும் பெருந்துறையின் கண்ணே”*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையும் பொருள் குறிக்கின்றன. மயிலம்வே.பதி.குறிப்புரையில், ***“பெருந்துறை–காவிரிப்பூம்பட்டினத்துறை”*** என்ற கருத்து காணப்பெறுகிறது. இவ்வுரை வேறுபாடுகளில், ***“காவிரியானது சென்றடையும் கடற்பெருந் துறைக்கண்ணே”*** என்ற ராஜ.குறிப்புரையின் கருத்தே பொருத்தமானதாக அமைகிறது. அதற்கான காரணங்கள் வருமாறு:

1. ‘மண்டும் பெருந்துறை’ என்பதற்கு ‘மிகுதியான அளவில் நீர்பெருகும் பெருந்துறை’ என்பதனைப் பொருளாகக் குறிக்கலாம்.

2. ‘நீர்ப்பெருக்கத்தால் ஓடக்கோல் மறைதல்’ என்பது காவிரியாற்றின் நீர் வரத்துப் பெருமை குறித்து விளக்குவதாக அமைகிறது.

3. காவிரி சென்றடையும் இடத்திற்குக் ‘காவிரிப்பூம்பட்டினம்’ என்னும் பெயர் வந்தது பிற்காலத்திலாகும்.

4. ‘நீர்ப்பெருக்கத்தால் ஓடக்கோல் மறைதல், காவிரி சென்றடையும் இடத்திற்குக் காவிரிப்பூம்பட்டினம் எனும் பெயர் இருத்தல்’ இவற்றை விளக்கவுரைப் பகுதியில் கூடுதல் கருத்தாகக் கொடுக்கலாம்.

***126:7 மாலிரு ணடுநாட் போகி***

பாண்மகளின் தமையன்மார் இரவில் சென்று மீன்பிடித்து வரும் நிலைபற்றி விளக்க, ‘மாலிரு ணடுநாட் போகி’ எனும் பாடம் பயின்று வந்துள்ளது. இப்பாடத்திற்கான உரைக்கருத்துகளாக, அமைந்த ராஜ. குறிப்புரை, ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன முறையே வருமாறு:

> ***“மயக்கத்தைச் செய்கின்ற இருண்ட நள்ளிரவிலே சென்று”***
> ***“கரிய இருளையுடைய நடுஇரவில் சென்று”***
> ***“கரிய மிக்க இருளினையுடைய பாதியிரவிற் சென்றதன்னையர்”***

இவ்வுரைக் கருத்துகளில் காணலாகும், ***“மயக்கத்தைச் செய்கின்ற இருண்ட நள்ளிரவு, கரிய இருளையுடைய நடு இரவு, கரிய மிக்க***

***இருளினையுடைய பாதியிரவு"*** என்பன மாறுதலாகக் காணப்பெறுகின்றன. ஆனால், அவற்றின் பொருண்மைகள் ஒன்றே ஆகும். 'மாலிருள்' என்பதற்கு மயக்கந்தரும் இருள் என்பது பொருளாகும். இந்நிலையில் மூலத்துடன் நேரடியாகப் பொருந்துவதாக, ***"மயக்கத்தைச் செய்கின்ற இருண்ட நள்ளிரவிலே சென்று"*** என்ற உரைக்கருத்தே அமைகிறது. எனவே, ராஜகோபாலார்யனின் அவ்வுரைக் கருத்தே பொருத்தமுடையது எனலாம்.

**126:8 கணைக்கோட்டு வாளை**

பாண்மகளின் தமையன்மார் பிடித்து வந்த 'வாளைமீனின் நிலை' பற்றியதாக வரும் இப்பாடத்திற்கு, ***"உடலிடத்துவரியுள்ள வாளைமீனுக்கு"*** என்ற உரைக்கருத்து ராஜ.குறிப்புரையிலும் ***"திரண்ட கோடுகளையுடைய வாளைமீனுக்கு"*** எனும் உரைக்கருத்து ந.மு.வே.,கரந்தை.உரையிலும் காணப்பெறுகின்றன. மயிலம்வே.பதி.குறிப்புரை இவற்றிலிருந்து மாறுபட்டு, ***"திரண்ட கொம்பினையுடைய வாளைக்கு"*** எனும் உரைக்கருத்தைக் குறிப்பிடுகிறது.

வாளைமீனுக்குக் கொம்புகள் இருப்பதில்லை. ஆனால், உடலில் வரிகள் உண்டு. எனவே, ***"உடலிடத்து வரியுள்ள, திரண்ட கோடுகளையுடைய"*** எனும் உரைக்கருத்துகளைப் பொருத்தமுடையதாகக் குறிப்பிடலாம்.

**127:6 நன்னகர் மாந்தை**

சேரலாதனின் வெற்றியால் பகைவர்கள் திறைதருதலைக் குறிக்கும் இடத்து,

> "நன்னகர் மாந்தை முற்றத் தொன்னார்
> பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்" *(127:6-7)*

எனும் அடிகள் பயின்று வந்துள்ளன.

இவ்வடிகளுக்கு ராஜ.குறிப்புரை, ***"தன்கோயிலின் முற்றத்துப் பகைவர் பணிந்து திறையாகத் தந்த"*** என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே., கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை ஆகியன முறையே, ***"மாந்தை எனும் ஊரிலுள்ள தனது மனையின் முற்றத்து, நல்ல மாந்தை நகர் முற்றத்திடைக் கொணர்ந்து திறையாகத் தந்த"*** என்று பொருள் குறிக்கின்றன.

பாடலில் 'நன்னகர் மாந்தை முற்றத்து' என்று வருவதால், ***"நல்ல மாந்தை நகர் முற்றத்திடைக் கொணர்ந்து திறையாகத்தந்த"*** என்ற மயிலம் வே.பதி.பொழிப்புரைக் கருத்தைப் பொருத்தமானதாகக் குறிக்கலாம்.

***127:15 கல்லா மழவர்***

பாலை நிலத்தவர்களைப் பற்றிக் குறிக்கும் இப்பாடத்திற்கு, ***"ஆறலைக்கும் தொழிலையன்றிப் பிறதொழிலைக் கல்லாத மழவர்"*** என்று ராஜ.குறிப்புரையும் ***"அறிவில்லாத மழவர்"*** என்று ந.மு.வே.,கரந்தை. உரையும் பொருள் உரைக்கின்றன. மயிலம்வே.பதி.பொழிப்புரை, குறிப்புரைகளில் முறையே, ***"உலக இயல்பு அறியாத வீரர், நன்னெறியைக் கல்லாத மழவருமாம்"*** என்ற உரைக்கருத்துகள் காணப்பெறுகின்றன.

இவ்வுரைக் கருத்துகளில் 'அறிவில்லாத மழவர், உலக இயல்பு அறியாத வீரர்' எனும் உரைக்கருத்துகள் பொருந்தாது. ஏனெனில், அவர்களின் தொழிலான ஆறலைத்தலையும் கொலைபுரிதலையும் மிகச்சரியாகச் செய்பவராகச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. இந்நிலையில், ***"ஆறலைக்கும் தொழிலையன்றிப் பிறதொழிலைக் கல்லாத மழவர்"*** என்பதனைப் பொருத்தமான உரைக்கருத்தாகக் குறிப்பிட்டு, ***"நன்னெறியைக் கல்லாத மழவருமாம்"*** என்பதனை விளக்கவுரையில் குறிக்கலாம்.

***136:16 மழைபட்டன்ன***

திருமண நிகழ்வு பற்றிய குறிப்பைத் தருமிடத்தில்,

"மழைபட் டன்ன மணன்மலி பந்தர்" *(136:16)*

எனும் பாடம் பயின்று வந்துள்ளது. இப்பாடத்திற்கு, ***"மழையொலி உண்டானாற்போல"*** என்று ராஜ.குறிப்புரை பொருள் குறிக்கிறது. ந.மு.வே., கரந்தை.உரை, ***"மேகம் ஒலித்தாலொத்த"*** என்றும் மயிலம்வே.பதி. பொழிப்புரை, ***"ஒலிக்கும் இடிக்குரலுடைய மேகத்தின் முதற்பெயல் பெய்து விட்டவுடன்"*** என்றும் பொருள் உரைக்கின்றன.

இப்பாடலின் இவ்வடியிலேயே 'மழைபட்டன்ன' என்பதனைத் தொடர்ந்து 'மணம்மலி பந்தர்' என்பது வருகிறது. இது திருமணவிழாவில் இசைக்கப்பெறும் 'மங்கல இசையைக் குறிப்பது' எனலாம். இந்நிலையில்

மேற்கண்ட உரைக்கருத்துகளில் மயிலம்வே.பதி.பொழிப்புரைக் கருத்தை ஓரளவு பொருத்தக்கூடியது எனக் கருதினாலும் "முதற்பெயல் பெய்து விட்டவுடன்" எனும் உரைக்கருத்தைப் பொருத்தமுடையதாகக் கருத இயலவில்லை. ஏனெனில், 'மழைபட்டன்ன' என்பதற்கு 'மழைபெய்வது போல' என்பதே பொருளாக அமைகிறது. எனவே, ***"இடியுடன் கூடிய மழைஒலிபோல"*** மங்கல இசையுடைய பந்தல் என்பதனை இதற்குப் பொருத்தமான உரையாகக் குறிப்பிடலாம்.

**141:19 கமஞ்சூல் வெண்குருகு**

இப்பாடத்திற்கு ராஜ.குறிப்புரை, ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம் வே.பதி.பொழிப்புரை ஆகியன முறையே,

***"நிறைந்த சூலையுடைய வெள்ளிய குருகு"***

***"நிறைந்த சூலினையுடைய வெள்ளிய பறவை"***

***"நிறைந்த சூலையுடைய வெளிய நாரை"***

என்ற பொருண்மைகளைக் குறிக்கின்றன.

இம்மூன்று உரைக்கருத்துகளில், ***"நிறைந்த சூலையுடைய வெள்ளிய குருகு"*** என்று மூலச் சொல்லையே பொருளாகக் குறிக்கும் ராஜ. குறிப்புரைக் கருத்தைப் பொருத்தமுடையதாகக் குறிக்கலாம். அதற்கான காரணங்கள் வருமாறு:

1. 'குருகு' என்பது 'வெள்ளைக் கொக்கைக் குறிக்கும்' என்பது 'சங்க இலக்கியத்தில் மரையா, குருகு – மீளாய்வு'[23] எனும் நூலில் விளக்கப்பெற்றுள்ளது.

2. 'பறவை' எனும் பெயர் பொதுப்பெயர். இதனை அனைத்துப் பறவைகளுக்கும் குறிப்பிடலாம். குருகு என்பதற்கு மட்டும் தனித்துக் கூற வேண்டியதில்லை.

3. 'நாரை' என்பது 'குருகு' என்ற பறவைக்கான பொருள் ஆகாது என்பது தகுந்த சான்றுகள் அடிப்படையில் மேற்கண்ட நூலில் விளக்கப்பெற்றுள்ளது.

4. 'குருகு' என்ற மூலச் சொல்லைப் பொருளாகக் குறித்தல் பொருந்தும் எனினும் அதற்கு, 'வெள்ளைக் கொக்கு/கொக்கு'[24] என்று பொருள் குறிப்பது மிகச் சரியானதாக அமையும்.

5. பொருள் வேறுபாடுகளையுடைய இப்பாடத்திலும் 'வெண்குருகு' என்று குறிக்கப்பெற்றிருப்பதும் இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

**141:27 கல்சேர் வேங்கை**

சுரநெறியில் உள்ள மரங்களைப் பற்றிக் குறிக்கும் மேற்கண்ட பாடத்திற்கு, ***"கற்பாறையிடையே வளர்ந்த வேங்கையினது"*** என்று ராஜ.குறிப்புரை பொருள் குறிக்கிறது. ***"மலையிடத்துள்ள வேங்கை மரத்தின்"*** என்று ந.மு.வே.,கரந்தை.உரையிலும் ***"நெறிகளுள்ள வேங்கை மரங்களையுடைய"*** என்று மயிலம்வே.பதி.பொழிப்புரையிலும் பொருண்மைகள் காணப்பெறுகின்றன.

பாலைநிலத்தில் மலை இருக்க வாய்ப்பில்லை; குன்றுகள் மட்டுமே இருந்திருக்க வாய்ப்புண்டு. இதனைப் பாலைத்திணைப் பாடல்களும் தெளிவுபடுத்தும். குன்றுகளுடன் கற்பாறைகள் இருக்கவும் வாய்ப்புண்டு. எனவே, "மலையிடத்துள்ள வேங்கை மரத்தின்" எனும் உரைக்கருத்துப் பொருந்தாமையை அறியலாம். 'நெறி' என்பதற்கு 'வழி' என்பது பொருளாகும். மூலத்தில் 'கல்சேர்' என்று வந்துள்ளதேயன்றி வழியுடன் தொடர்புடைய எந்தச் சொல்லும் இடம்பெறவில்லை. எனவே, ***"கற்பாறையிடையே வளர்ந்த வேங்கையினது"*** என்ற ராஜ.குறிப்புரைக் கருத்தையே பொருத்தமுடையதாகக் குறிக்கலாம்.

**156:1 முரசுடைச் செல்வர்**

இப்பாடத்திற்கு ராஜ.குறிப்புரை, ***"வெற்றி, தியாகம், வீரம் எனப்படும் மூன்று முரசத்தினையுமுடைய செல்வரது குதிரையின்"*** என்று உரை கூறுகிறது. ந.மு.வே.,கரந்தை.உரை ***"முரசங்களையுடைய செல்வரது குதிரையது"*** என்றும் மயிலம்வே.பதி.பொழிப்புரை, ***"முரசு முழங்கு முன்றிலினையுடைய செல்வரது குதிரையின்"*** என்றும் பொருள் குறிக்கின்றன.

இவ்வுரைக்கருத்துகளில் ராஜ.குறிப்புரை, மயிலம்வே.பதி. பொழிப்புரைக் கருத்துகள் வலிந்து கூறுவனபோல் உள்ளன. ந.மு.வே., கரந்தை.உரைக்கருத்தே இயல்பானதாகவும் பொருத்தமானதாகவும் அமைகிறது. எனவே, ***"முரசங்களையுடைய செல்வரது குதிரையது"*** என்ற

ந.மு.வே.,கரந்தை.உரையின் கருத்துகளைப் பொருத்தமானதாகக் குறித்துப் பிற உரைகளின் கருத்துகளை விளக்கவுரையில் குறிப்பிடலாம்.

***331:5 பழையர் மகளிர்***

இப்பாடத்திற்குக் குறிப்புரை, "***இப்பாட்டிற் பழையர் மகளிரென்பது வேட்டுவிச்சியரையும் உழத்தியரையும்***" என்று பொருள் குறிக்கிறது. ந.மு.வே.,கரந்தை.உரை, "***பசிய தளிர்களாலாய தழையுடையராகிய எயினர் மகளிர்***" என்று குறிப்பிட்டு விளக்கவுரையில், "***பழையர்-கள்விற்போர், எயினர்***" என்று பொருள் குறிக்கிறது. மயிலம் வே.பதி.பொழிப்புரை, "***தழையுடையணிந்த எயினப்பெண்டிர்***" என்று குறிப்பிட்டுக் குறிப்புரையில், "***பழையர் – எயினரைக் குறிக்கும்***" எனும் உரைக்கருத்துக் காணப்பெறுகிறது.

இவற்றின் வழிப் பழையர் என்பதற்கு, "***வேட்டுவிச்சியர், உழத்தியர், எயினர் மகளிர், கள்விற்போர்***" ஆகிய பொருண்மைகள் இருப்பதை அறியலாம்.

பழையர் என்பதற்கு, "***கள்விற்போர், தொல்லோர்***" என்பன பொருண்மைகளாகின்றன என்பதும் "***பழையர் மகளிர்***" என்பதையே உரையாகக் கொண்டு உரைப்பகுதியில் குறித்து, பிற விளக்கங்களை விளக்கவுரைப் பகுதியில் விளக்கலாம் என்பதும் 201 ஆம் பாடலுக்கான உரைவேறுபாட்டுப் பகுதியில் விளக்கப்பெற்றுள்ளது.

இப்பாடலில் உழத்தியரைக் குறிக்கும் சூழல் எதுவும் காணப்பெறவில்லை. ஆனால், உழத்தியரும் தொல்லோர் மகளிரேயாவர். எனவே, இப்பாடலுக்கான விளக்கவுரைப் பகுதியில் 'உழத்தியர்' தவிர்ந்த பிற குறிப்புகளையும் விளக்கங்களையும் அளிக்கலாம்.

மேற்கண்டவாறு விளக்கப்பெற்றுள்ள உரைவேறுபாடுகளில் ந.மு.வே.,கரந்தை.உரைக்குறிப்புகள் 51 இடங்களில் (அகம்.க.வா.,*1,8,9,11,13,16,22,26,31,32(2),37(3),43,48,49,55(2),56,60,67,84,85,93,95,101,119,121,139,143,165,208(2),284,292,302,304,306,317,352,353,350,376,380,1,38,98(2),156*) பொருத்தமாக அமைகின்றன. மயிலம்வே.பதி. பொழிப்புரை 12 இடங்களுக்கும் (*133,317,342,352,373,392,16,38,102,106,127,331*)

ராஜ.குறிப்புரை 10 இடங்களுக்கும் (93,96,100,109,123(2),126,127,141(2)) பொருத்தமான உரையைத் தருகின்றன. பழையஉரை, மயிலம்வே.பதி. குறிப்புரை ஆகியன முறை 6 இடங்கள் (1,5,27,54,55,89), 2 இடங்கள் (253,113) என்றவாறு பொருத்தமான பொருளைக் குறிக்கின்றன.

இவைதவிர இரண்டு உரைகள் பொருத்தமான உரைப்பொருளைத் தருமிடங்களும் காணப்பெறுகின்றன. அவை குறித்த விவரங்கள் வருமாறு:

- ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை – 9 இடங்கள் (7,9,11,22,116,141,191,5,107)
- ராஜ.குறிப்புரை, ந.மு.வே.,கரந்தை.உரை – 7 இடங்கள் (94,98,112,121,131,101,116)
- பழையஉரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை – 4 இடங்கள் (5,13,31,135)
- ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.குறிப்புரை – 3 இடங்கள் (26,114,109)
- ந.மு.வே., கரந்தை. உரை, மயிலம் வே.பதி. பதவுரை – 1 இடம் (க.வா.)
- ந.மு.வே., கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பழையவுரை – 1 இடம் (98)

மேற்கண்ட தன்மைகள் தவிர்ந்து எந்த உரைக்கும் தனித்துப் பொருந்தாமல் அனைத்து உரைக்கருத்துகளையும் சேர்த்து ஆய்வாளரால் உரை குறிப்பனவாக 9 இடங்கள் (84,102,110,121,201,210,214,99,136) அமைகின்றன. இக்கருத்துகள் வழி ந.மு.வே.,கரந்தை.உரைத்தன்மைகளே மிகுதியாகப் பொருந்துவதனை அறியமுடிகிறது. அகநானூற்றின் 400 பாடல்களுக்கும் அவ்வுரை காணப்பெறுவதால் அது மிகுதியாகப் பொருந்துகிறதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

### தொகுப்புரை

இவ்வியல்வழி அறியலாகும் கருத்துகள் வருமாறு:

- அகநானூற்றுப் பதிப்புகளில் மொத்தம் 116 உரை வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. அவற்றுள் 89 உரைவேறுபாடுகள் 2 உரைப் பொருண்மைகளைக் கொண்டும் 27 உரைவேறுபாடுகள் 3 உரைப் பொருண்மைகளைக் கொண்டும் அமைகின்றன.
- இவ்உரைவேறுபாடுகளில் ந.மு.வே.,கரந்தை.உரையின் உரைக் கருத்துகளே மிகுதியான அளவில் (51 இடங்கள்) பொருந்துகின்றன. 400 பாடல்களுக்கும் அவ்வுரை காணப்பெறுவது அதற்குக் காரணமாகலாம்.
- இரண்டு உரைகள் சேர்ந்து ஒரே பொருளைக் குறிக்கும் நிலையில் ந.மு.வே.,கரந்தை.உரை, மயிலம்வே.பதி.பொழிப்புரை மிகுதியாகப் (9 இடங்கள்) பொருந்துகின்றன.
- அகநானூற்றுப் பதிப்புகளில் காணலாகும் எந்த உரைக்கருத்திற்கும் பொருந்தாமல் 9 பாடங்கள் காணப்பெறுகின்றன. அப்பத்துப் பாடங்களும் அனைத்து உரைகளின் துணையுடன் தனித்துப் பொருள் குறிக்கப்பெறுவனவாக அமைகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா. வேங்கடாசலம் பிள்ளை (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்***, பா.எ.க.வா.
2. எஸ்.கௌமாரீஸ்வரி (பதி.), ***நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி***, ப.1224
3. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்***, பா.எ.8
4. எஸ்.கௌமாரீஸ்வரி (பதி.), ***ஆ.சிங்காரவேலு முதலியாரின் அபிதான சிந்தாமணி***, ப.623
5. உ.வே.சாமிநாதையர் (பதி.), ***புறநானூறு மூலமும் உரையும்***, பா.எ.205
6. மேலது
7. எஸ்.கௌமாரீஸ்வரி (பதி.), ***நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி***, ப.1210
8. மேலது, ப.1313
9. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை (உரை.), ***அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்***, பா.எ.55
10. எஸ்.கௌமாரீஸ்வரி (பதி.), ***நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி***, ப.197
11. மேலது, ப.1177

11அ, மேலது, ப.107

12. மேலது, ப.133
13. மேலது, ப.738
14. மேலது, ப.1140
15. மேலது, ப.157

16. மேலது, ப.987

17. உ.வே.சாமிநாதையர் (பதி.), *பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையும்,* பா.எ.மலை.459

18. எஸ்.கௌமாரீஸ்வரி (பதி.), *நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி,* ப.1223

19. மேலது, ப.267

19அ. மேலது, ப.1313

19ஆ. நற்.125:7,386:10,393:13,ஐங்.61:5,294:4,399:2,பதி.89:17, பரி.5:28,19:7,கலி.39:37,52:23,25,66:12,69:3,75:11,76:20,98:3,114:4, 115:20,அகம்.25:5,36:12,46:10,56:9,66:8,78:8,86:17,136:8,166:13, 206:12,221:4,352:17,378:2,புறம்.372:10,திரு.117,மலை.30

19இ. எஸ்.கௌமாரீஸ்வரி(பதி), *நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி,* ப.353

20. மேலது, ப.58

21. மேலது, ப.1008

22. மேலது, ப.541

23. மா.பரமசிவன், *சங்க இலக்கியத்தில் மரையா, குருகு மீளாய்வு.*

24. மேலது, ப.51

# முடிவுரை

***'அகநானூற்றுப் பதிப்புகள்:பாடவேறுபாடுகளும் உரை வேறுபாடுகளும்'*** எனும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வுவழி அறியலாகும் கருத்துகள் வருமாறு:

அகநானூற்றின் முதற்பதிப்பு 1918இல் வெளிவந்துள்ளது. அது களிற்றியானைநிரை மட்டுமானதாகும். அதனைப் பதிப்பித்து வெளியிட்டவர் கம்பர் விலாசம் ராஜகோபாலார்யன் ஆவார். அப்பதிப்புத் தொடங்கி 2010 இறுதிவரை அகநானூற்றுப் பதிப்பு, வெளியீடுகள் என்ற வகையில் 49 நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றுள் 13 நூல்கள் பதிப்புகளாகவும் பிற நூல்கள் வெளியீடுகளாகவும் அமைகின்றன.

அகநானூற்றின் முதற்பதிப்புத் தொடர்பாக அறிஞர்களிடையே மூன்றுவிதக் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. அவை வருமாறு:

1. அகநானூற்றின் முதற்பதிப்பு 1918இல் வெளிவந்தது (பூ.அமிர்தலிங்கம் (2000), இ.சுந்தரமூர்த்தி (2004), பா.இளமாறன் (2008), கா.அய்யப்பன் (2009)) என்றும் 1920இல் வெளிவந்தது (புலியூர்க்கேசிகன் (1960), ந.சஞ்சீவி (1973), குளோறியா சுந்தரமதி (1984)) என்றும் முதல்வகைக் கருத்து வேறுபாடு நூல் வெளிவந்த காலம் தொடர்பானதாக அமைகின்றது.

2. இரண்டாம் வகைக் கருத்து வேறுபாடாகப் பதிப்பாசிரியர் குறித்த கருத்து வேறுபாடு அமைகிறது. அகநானூற்றின் முதற்பதிப்பைப் பதிப்பித்து வெளியிட்டவர் ரா.இராகவையங்கார் (ந.சஞ்சீவி (1973), மு.சண்முகம்பிள்ளை (1980), பூ.அமிர்தலிங்கம் (2000), இ.சுந்தரமூர்த்தி (2004), சு.கௌசல்யா (2005)) என்றும் ராஜகோபாலார்யன் (இராஜகோபாலய்யங்கார்) (சமாஜப் பதிப்பின் பதிப்பாசிரியர் குழு (1940), வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் (1943), புலியூர்க்கேசிகன் (1960), மயிலம் வே.சிவசுப்பிரமணியன் (1990), பா.இளமாறன் (2008), அ.சதீஷ் (2008), கா.அய்யப்பன் (2009)) என்றும் அக்கருத்துவேறுபாடு காணப்பெறுகிறது.

3. அகநானூற்றின் முதற்பதிப்பு களிற்றியானைநிரை மட்டுமானது (அ.சதீஷ் (2008), பா.இளமாறன் (2008), கா.அய்யப்பன் (2009)), நித்திலக்கோவை மட்டுமானது (பூ.அமிர்தலிங்கம் (2000), அ.ஆலிஸ் (2009)),

நூல் முழுமைக்குமானது (சமாஜப் பதிப்பின் பதிப்பாசிரியர் குழு (1940), வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் (1943), புலியூர்க்கேசிகன் (1960), ந.சஞ்சீவி (1973), இ.சுந்தரமூர்த்தி (2004)) என நூல் அளவு தொடர்பானதாக மூன்றாம் வகைக்கருத்து வேறுபாடு அமைகிறது.

இவ்வகையிலான கருத்து வேறுபாடுகளுடைய அகநானூற்றின் முதற்பதிப்பு வெளிவருவதற்கு முன்னர் சி.வை.தாமோதரம் பிள்ளை (1897), ரா.இராகவையங்கார் (1903), பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் (1908), உ.வே.சாமிநாதையர் (1903 முதல் வாழ்நாள் இறுதிவரை) ஆகிய நால்வர் அகநானூற்றினைப் பதிப்பிக்க முயற்சிகள் மேற்கொண்டுள்ளனர். ஆனால் இவர்களின் பதிப்பு முயற்சிகள் முற்றுப்பெறவில்லை.

1918இல் வெளிவந்துள்ள அகநானூற்றின் முதற்பதிப்பு நூல் கிடைக்கப்பெறாத சூழலில் அதன் முகப்பை மட்டும் தற்பொழுது காணஇயலுகிறது. அம்முகப்பு 'அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதி, MADRAS, KAMBAR VILAS BOOK DEPOT, MYLAPORE, 1918' எனும் குறிப்பை மட்டும் கொண்டு விளங்குகிறது. (விவரம்: பின்னிணைப்பு-28) அம்முகப்பில் முதற்பகுதி என்று வருவதாலும் அகநானூற்றின் முதற்பதிப்பிற்கான நூலக ஆணைக்குறிப்பு தற்பொழுது கிடைப்பதாலும் (விவரம்: பின்னிணைப்பு-28) அம்முதற்பதிப்பு 1918இல் வெளிவந்துள்ளது என்பதனை அறியமுடிகிறது. மேலும் 'கம்பர் விலாசம்' என்று தன் இல்லத்திற்குப் பெயர்சூட்டி அதனையே பதிப்பகமாகக் குறித்து அகநானூற்றைப் பதிப்பித்தவர் கம்பர் விலாசம் வே.இராஜகோபாலையங்கார் (ராஜகோபாலார்யன்) ஆவார். இதனை 1923இல் வெளிவந்துள்ள அவரின் அகநானூற்றுப் பதிப்புவழி அறியமுடிகிறது.

ராஜகோபாலார்யன் 1923 இல் அகநானூற்றைப் பதிப்பிக்க முற்படும்போது அவரின் பதிப்பு முயற்சிக்கு உதவி செய்து பாடங்களை இறுதிக்கட்டச் சோதனைக்கு உட்படுத்திச் சோதித்தளித்தவர் ரா.இராகவையங்கார் ஆவார். இதனால் அவருக்குப் பெருமைதரும் வகையில், 'இவை ஸேதுஸமஸ்தான மகாவித்வான் பாஷா கவிசேகரர் ஸ்ரீ உ.வே.ரா. இராகவையங்கார் ஸ்வாமிகள் பரிசோதித்துத் தந்தன' எனும் குறிப்பை 1923இல் வெளிவந்துள்ள அகநானூற்றுப் பதிப்பின் முகப்புப் பக்கத்தில் குறித்துள்ளார் ராஜகோபாலார்யன்.

அகநானூற்றின் முதலிருபதிப்புகளில் பதிப்பாசிரியர் பெயர்க்குறிப்பு இல்லாததாலும் 1923இல் ரா.இராகவையங்காரின் பெயரை முகப்புப்பக்கத்தில் பதிவு செய்திருப்பதாலும் அகநானூற்றைப் பதிப்பிக்க முயற்சித்தவர்களுள் ரா.இராகவையங்காரும் ஒருவர் என்பதாலும் முதற்பதிப்பாசிரியரின் பெயர் தொடர்பான கருத்து வேறுபாட்டில் ரா.இராகவையங்காரின் பெயர் குறிக்கப்பெற்றிருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால், ராஜகோபாலார்யனே அகநானூற்றின் முதற்பதிப்பாசிரியர் என்பதனை உறுதிப்படுத்தச் சான்றுகள் கிடைக்கின்றன.

நால்வர் பல்வேறு ஆண்டுகளில் அகநானூற்றைப் பதிப்பிக்க முயற்சி செய்திருந்தாலும் அவர்களின் பதிப்பு முயற்சிகள் முற்றுப் பெறவில்லை. எனவே, முதற்பதிப்பு 1918இல் வெளிவந்துள்ளது என்பதையும் அப்பதிப்பின் முகப்பில் 'முதற்பகுதி' என்ற குறிப்புக் காணப்பெறுதல், அகநானூற்றின் முதற்பதிப்பிற்கான நூலக ஆணையில் 120 Stanzas (விவரம்: பின்னிணைப்பு-28) என்ற செய்தி இடம்பெறுதல் ஆகியவற்றின்வழி அப்பதிப்பு களிற்றியானைநிரை மட்டுமானது என்பதனையும் அறியமுடிகிறது.

இம்முதற்பதிப்பை வெளியிட்ட ராஜகோபாலார்யன் தம் பதிப்பு, வெளியீடுகளை ஏழு கட்டங்களாகப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இவற்றுள் 5 பதிப்புகளும் 2 வெளியீடுகளும் அடங்குகின்றன. அவரின் பதிப்பு, வெளியீட்டு முயற்சிகள் 1918, 1920, 1923, 1926, 1933 ஆகிய ஆண்டுகளில் நிகழ்ந்துள்ளன. இத்தகைய வேறுபட்ட ஆண்டுகளில் வெளிவந்துள்ள அவரின் பதிப்புகளிடையே 241 பாடவேறுபாடுகள் (விவரம்: பின்னிணைப்பு-2) காணப்பெறுகின்றன. இவ்வேறுபாடுகள் பதிப்பு அனுபவத்தாலும் திருத்தமான சுவடிகள் கிடைக்கப்பெற்றதாலும் அவரின் உரை முயற்சியாலும் ஏற்பட்டனவாகும். இவ்வகையில் சிறந்த, பொருத்தமான பாடங்களைக் கொண்ட ராஜகோபாலார்யன் பதிப்பாக 1933இல் வெளிவந்த பதிப்பு அமைகிறது.

ராஜகோபாலார்யன் பதிப்புகளைத் தொடர்ந்து 1940இல் சமாஜப் பதிப்பு, 1943,1944 ஆம் ஆண்டுகளில் பாகனேரி வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு, 1958இல் மர்ரேஎஸ்.இராஜம் பதிப்பு, 1990இல் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு ஆகியன வெளிவந்துள்ளன.

இவற்றுள் மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு 1903 முதல் உ.வே.சா. சேகரித்து வைத்திருந்த குறிப்புகளைப் பயன்படுத்தி வெளியிடப்பெற்றதாகும்.

மேற்கண்ட அகநானூற்றுப் பதிப்புகளிடையே 2367 பாடவேறுபாடுகள் கண்டறியப்பெற்றுள்ளன. இவற்றுள் 1191 பாடவேறுபாடுகள் அகநானூற்றுப் பதிப்புகளின் முதன்மைப் பாடங்களில் வேறுபாடுகளின்றி அடிக்குறிப்புகளில் பதிப்பாசிரியர்களால் குறிக்கப்பெற்ற பாடங்களாகும். அப்பாடவேறுபாடுகள் (1191) நீங்கிய 1176 பாடவேறுபாடுகள் 'அகநானூறு: பாடவேறுபாடுகள்' எனும் பகுதியில் விளக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் 182 வேறுபாடுகள் மட்டுமே பொருள் மாற்றமுடையனவாக அமைகின்றன. அவை, அடிநிலை வேறுபாடுகள் (17), சொல்நிலை வேறுபாடுகள் (67), எழுத்துநிலை வேறுபாடுகள் (16), அடிக்குறிப்புகளுடன் கூடிய வேறுபாடுகள் (82) (விவரம்: பின்னிணைப்பு–3) என்று வகைப்படுத்தப்பெற்று விளக்கப்பெற்றுள்ளன. பிற 994 வேறுபாடுகள் அச்சுப்பிழை, ஒற்றெழுத்து, உடம்படுமெய், ஆய்த எழுத்து வேறுபாடுகளாக அமைகின்றன.

பாடவேறுபாடுகளுள் மிகுதியான பாடவேறுபாடுகளைக் குறிக்கும் பதிப்பாக மயிலம்வே.சிவசுப்பிரமணியன் பதிப்பு அமைகிறது. பெரும்பாலான பாடவேறுபாடுகள் அச்சுப்பிழை முதலான காரணங்களால் ஏற்படுவனவாகவும் சில வேறுபாடுகள் பிற பதிப்புகளிலிருந்து வேறுபட்டு அமையவேண்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் வலிந்து அமைக்கப் பெற்றனவாகவும் அப்பதிப்பின் பாடவேறுபாடுகள் அமைகின்றன. அச்சுக்கருவிகள் முதலான அறிவியல் சாதனங்கள் நன்கு வளர்ச்சியடைந்த காலத்தில் (1990) தோன்றிய ஒரு பதிப்பில் மிகுதியான அச்சுப்பிழை போன்ற தன்மைகள் காணப்பெறுதல் என்பது தற்காலப் பதிப்பாளர்களின் கவனமின்மையை உணர்த்துகிறது என்றே குறிப்பிடலாம்.

அகநானூற்றுப் பதிப்புகளில் உரையுடன் கூடியனவாக ராஜகோபாலார்யன் பதிப்புகள் (1920, 1923, 1926, 1933), வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் பதிப்பு (1943, 1944), மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பு (1990) ஆகியன அமைகின்றன. அப்பதிப்புகளில் பின்வரும் உரைகள் காணப்பெறுகின்றன. அவை:

1. குறிப்புரை – குறிப்பிட்ட 56 பாடல்கள்
2. பழைய உரை – முதல் 90 படல்கள்
3. ராஜகோபாலார்யன் குறிப்புரை – 91 முதல் 160 பாடல்கள்
4. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை பதவுரை, விளக்கவுரைகள்
5. மயிலம்வே. சிவசுப்பிமணியன் பதிப்பின் பழைய உரை, பதவுரை, பொழிப்புரை, குறிப்புரைகள் – 1 முதல் 170 பாடல்கள்.
6. மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பொழிப்புரை, குறிப்புரைகள் – 171 முதல் 400 பாடல்கள்.

மேற்கண்ட உரைகள் பாடவேற்றுமைக்குத்தக மாற்றம் அடைந்து உரைவேறுபாடாக மாறுவது உண்டு. அவ்வகையிலான மாற்றம் பாடவேறுபாடாகவே கருதப்பெற்றுப் பாடவேறுபாட்டுப் பகுதியிலேயே விளக்கப்பெற்றுள்ளது. பாடம் வேறுபடாது உரை மட்டும் வேறுபடும் தன்மைகளே உரைவேறுபாட்டுப் பகுதியில் விளக்கப்பெற்றுள்ளன. இவ்வகையில் அகநானூற்றுப் பதிப்புகளில் காணலாகும் மேற்கண்ட உரைகளிடையே 116 வேறுபாடுகள் கண்டறியப் பெற்றுள்ளன. அவை, இரண்டு வேறுபாடுகள் காணப்பெறுதல் (89), மூன்று வேறுபாடுகள் (27) காணப்பெறுதல் என்று பகுத்து விளக்கப்பெற்றுள்ளன.

உரைவேறுபாடுகளிலும் மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பின் உரைகளுக்கென்று தனித்துவம் ஏதும் இல்லை. முன்னர் வந்த உரைகளைப் பின்பற்றியனவாகவே அவ்வுரைகள் உள்ளன. 1 முதல் 90 பாடல்கள் வரையிலான 'பழைய உரை' ராஜகோபாலார்யன் பதிப்பில் காணலாகும் பழைய உரை ஆகும். ராஜகோபாலார்யன் 91 முதல் 160 வரையிலான பாடல்களுக்கு மட்டுமே உரை எழுதியுள்ளார். அவ்வுரை விரிவாக, தெளிவாக அமைகிறது. அவ்வுரைத் தன்மைகளைப் பின்பற்றியே ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை ஆகியோர் உரை வரைந்துள்ளனர் என்பதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

அகநானூற்றுப் பதிப்புகளில் காணலாகும் எந்த உரைக்கருத்தும் தனித்துப் பொருந்தாமல் அமைவனவாக 84:14, 102:13, 110:20–21, 121:9, 201:7, 210:4, 214:9, 99:6, 136:16 ஆகிய ஒன்பது பாடல்களுக்கான

உரைக்கருத்துகள் அமைகின்றன. இவ்வொன்பது இடங்களுக்கும் முன்னர் வெளிவந்த உரைகளின் உதவியுடன் இவ்வாய்வில் பொருத்தமான உரை குறிக்கப்பெற்றுள்ளது.

பாடத்தேர்வு, உரைப்பொருத்தம் ஆகியவற்றின் அடிப்படையில் இதுவரையில் வெளிவந்திருக்கும் அகநானூற்றுப் பதிப்புகளில் 1933இல் வெளிவந்திருக்கும் ராஜகோபாலார்யன் பதிப்பை ஓரளவிற்குச் சிறந்த பதிப்பாகக் குறிப்பிடலாம். உரையுடன் கூடிய சிறந்த பதிப்பாக ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை ஆகியோர் உரையெழுதி, பாகனேரி வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் 1943, 1944 ஆம் ஆண்டுகளில் பதிப்பித்து வெளியிட்ட அகநானூற்றுப் பதிப்பைக் குறிப்பிடலாம். இருப்பினும் அவற்றிலும் சில திருத்தங்கள் செய்யப்பெற வேண்டும் என்பதையும் பாடத் தேர்வுக்கான காரணங்களுடன் கூடிய செம்பதிப்பு அகநானூற்றிற்குத் தேவை என்பதையும் இவ்வாய்வின்வழி அறியமுடிகிறது.

### எதிர்கால ஆய்வுகள்

அகநானூற்றின் பதிப்பு வரலாறுபோல் உரைவரலாறும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். பல்வேறு காலக்கட்டங்களில் தோன்றிய உரைகளைக் கால வரிசைப்படுத்தி ஆய்வு செய்வதும் சமூகவியல் நோக்கில் உரை வேறுபாடுகளை ஆராய்வதும் 1990 இல் வெளிவந்துள்ள மயிலம்வே. சிவசுப்பிரமணியன் பதிப்பில் காணலாகும் 121 முதல் 170 வரையிலான பொழிப்புரை, குறிப்புரைகள் உ.வே.சா.வால் எழுதப்பெற்றனவா? என்பது குறித்த ஆய்வும் இவ்வாய்வின் தொடர்ச்சியாகச் செய்ய வேண்டிய எதிர்கால ஆய்வுகளாக அமைகின்றன.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை நூல்கள்

***அகநானூற்றுப் பதிப்புகள்***


இராஜகோபாலையங்கார் வே. (பதி.), ***ஸ்ரீ: எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும்,*** இவை ஸேதுஸமஸ்தான வித்வான் ஸ்ரீ.உ.வே.ரா. இராகவையங்கார் ஸ்வாமிகள் சோதித்துத் தந்தன, கம்பர் விலாசம், மயிலாப்பூர், சென்னை, 1923.

இராஜம் மர்ரேஎஸ்.(பதி.), ***அகநானூறு,*** மர்ரே அண்டு கம்பெனி, தம்புச்செட்டி தெரு, சென்னை, 1958.

காசிவிசுவநாதன் செட்டியார் வெ.பெரி.பழ.மு.(பதி.), ***எட்டுத்தொகையுள் ஒன்றாகிய அகநானூறு களிற்றியானைநிரை,*** ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற பதவுரை, விளக்கவுரைகளுடன், தனைவசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம்: கழக வெளியீடு, சென்னை, 1943.

காசிவிசுவநாதன் செட்டியார் வெ.பெரி.பழ.மு.(பதி.), ***எட்டுத்தொகையுள் ஒன்றான அகநானூறு நித்திலக்கோவை,*** ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற பதவுரை, விளக்கவுரைகளுடன், தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம்: கழக வெளியீடு, சென்னை, 1944.

காசிவிசுவநாதன் செட்டியார் வெ.பெரி.பழ.மு.(பதி.), ***எட்டுத்தொகையுள் ஒன்றான அகநானூறு மணிமிடைபவளம்,*** ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு இரா.வேங்கடாசலம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்ற பதவுரை, விளக்கவுரைகளுடன், தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம்: கழக வெளியீடு, சென்னை, 1944.

ராஜகோபாலார்யன்(பதி.), *ஸ்ரீ:எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் முதற்றொண்ணூறு பாட்டிற்குப் பழைய உரையும் இறுதி முப்பது பாடல்களுக்கு ஸ்ரீ வத்ஸசக்ரவர்த்தி ராஜகோபாலார்யன் குறிப்புரையும்,* கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர், சென்னை, 1926.

ராஜகோபாலார்யன்(பதி.), *ஸ்ரீ:எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும்,* இவை ஸேதுஸமஸ்தான மகாவித்வான் பாஷா கவிசேகரர் ஸ்ரீ உ.வே.ரா. இராகவையங்கார் ஸ்வாமிகள் பரிசோதித்துத் தந்தன, கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர், சென்னை, 1933.

சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), *அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும்,* உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, 1990.

சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), *அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும்,* உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, 1990.

சிவசுப்பிரமணியன் மயிலம்வே.(பதி.), *அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும்,* உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை, 1990.

வையாபுரிப்பிள்ளை எஸ்.(பதி.), *சங்க இலக்கியம் பாட்டும் தொகையும்,* பாரிநிலையம், சென்னை, 1967(ம.ப.).

ஆ.பெ.இ., *ஸ்ரீ அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும்,* MADRAS KAMBAR VILAS BOOK DEPOT, MYLAPORE, 1920.

## துணைநூல்கள்

இப்பகுதியில் அகநானூற்று வெளியீடுகள் தவிர்ந்த பிற நூல்கள் கொடுக்கப்பெற்றுள்ளன. அகநானூற்று வெளியீடுகளின் எண்ணிக்கை 34 நூல்கள் என்பதால் அவை இங்குக் குறிக்கப்பெறவில்லை. அந்நூல்கள் குறித்த விவரங்கள் பின்னிணைப்பு–1இல் கொடுக்கப்பெற்றுள்ளன.

### மூலநூல்கள்


இராஜகோபாலையங்கார் வே., ***ஸ்ரீ: பொன் ஆடு,*** கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர், சென்னை, 1927.

சாமிநாதையர் உ.வே.(பதி.), ***பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையும்,*** கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1956 (ஐ.ப.)

.................... (பதி.), ***புறநானூறு மூலமும் உரையும்,*** கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1956 (ஐ.ப.)


### ஆய்வு நூல்கள்


அய்யப்பன் கா.(பதி.), ***செம்மொழித் தமிழ் நூல்கள் பதிப்புரைத் தொகுப்பு தமிழ்ப் பதிப்பு வரலாற்று ஆவணம்,*** காவ்யா, கோடம்பாக்கம், சென்னை, 2009.

இராமகிருட்டிணன் மூ., ***பிரதிபேத ஆராய்ச்சி,*** வேங்கடாசலபுரம் (வழி), தேனி, மதுரை மாவட்டம், 1960.

இளங்குமரன் இரா., ***சுவடிக்கலை,*** அரிமாப் பதிப்பகம், அம்மாப்பேட்டை, சேலம், 2000 (இ.ப.)

இளமாறன் பா., ***பதிப்பும் வாசிப்பும் – தமிழ் நூல்களின் பதிப்பு மற்றும் ஆய்வு,*** சந்தியா பதிப்பகம், சென்னை, 2008.

குளோறியா சுந்தரமதி இல., ***டாக்டர் உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள்,*** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

சஞ்சீவி ந., ***சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,*** சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1973.

சதாசிவம் மு.,(பதி.), ***பதிப்பு நெறிமுறைகள்,*** சரசுவதி மகால் நூல்நிலையம், தஞ்சாவூர், 1991.

சுந்தரமூர்த்தி இ., ***பதிப்பியல் சிந்தனைகள்,*** என்.சி.பி.எச்., சென்னை, 2010.

பரமசிவன் மா., ***சங்க இலக்கியத்தில் மரையா, குருகு – மீளாய்வு,*** முத்து பதிப்பகம், 6/29, கல்லறுப்பான்வயல், கம்மங்காடு – 614 616, அறந்தாங்கி வட்டம், 2009.

.................... ***அகநானூறு: பதிப்பு வரலாறு (1918–2010),*** காவ்யா, கோடம்பாக்கம், சென்னை, 2010.

மாதவன் வே.ரா., ***சுவடிப்பதிப்பியல்,*** பாவை வெளியீட்டகம், 30, நட்சத்திரநகர், முதல்தெரு, தஞ்சாவூர் – 613 005, 2000.

விசாலாட்சி ந., ***பழந்தமிழ்ப் பதிப்புகள்,*** Google Search - Sanga Ilakkiyam.

விநாயகமூர்த்தி அ., ***புத்தகக்கலை,*** பாலமுருகன் பதிப்பகம், 17, புதுத்தெரு, செங்குட்டை, காட்பாடி – 632 007, வேலூர் மாவட்டம், 1999.

**கட்டுரைகள்**

அய்யப்பன் கா., "தமிழ்ப் பதிப்பு வரலாறு: ரா.இராகவையங்கார் (20.09.1870–11.07.1946)", ***தமிழ்ப் புத்தக உலகம் 1800–2009, புதிய புத்தகம் பேசுது சிறப்பு மலர்,*** பாரதி புக்தகாலயம், சென்னை, 2009.

ஆலிஸ் அ., "அகநானூற்றுப் பதிப்புகள்", சிவகாமி ச.(பதி.), ***தொல்காப்பியம், சங்க இலக்கியம்: பதிப்பும் பதிப்பாளரும்,*** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2009.

சண்முகம் பிள்ளை மு., "சேதுசமஸ்தான மகாவித்வான் ரா.இராகவையங்கார்", வி.மி.ஞானப்பிரகாசம், க.சி.கமலையா (பதி.), ***ஆய்வுலகம் போற்றும் ஆசிரிய மணிகள்,*** தமிழ்ப் பண்பாட்டு மன்றம், விற்பனைஉரிமை: பாரிநிலையம், சென்னை, 1980.

செல்லையா பிள்ளை சு., "பாடவேறுபாடும் மூலபாட ஆய்வும்", ***தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் – இலக்கியம்,*** செ.ஜீன்லாரன்ஸ், கு.பகவதி (பதி.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை – 600 113, 2003.

**அகராதிகள், களஞ்சியங்கள்**

அமிர்தலிங்கம் சு., ***சங்க இலக்கியக் களஞ்சியம்,*** மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2000.

.................... (பதி.), ***ஆ.சிங்காரவேலு முதலியாரின் அபிதான சிந்தாமணி,*** சாரதா பதிப்பகம், சென்னை, 2003.

கௌமாரீஸ்வரி எஸ்.(பதி.), ***நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி,*** சாரதா பதிப்பகம், சென்னை, 2003.

மாதையன் பெ., ***சங்க இலக்கியச் சொல்லடைவு,*** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2007.

## பின்னிணைப்பு – 1

### காலவரிசைப்படுத்தப்பெற்ற அகநானூற்றுப் பதிப்புகளும் வெளியீடுகளும்

- *1918:* அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதி, MADRAS, KAMBAR VILAS BOOK DEPOT, MYLAPORE.
- *1920:* ஸ்ரீ : அகநானூறு மூலமும் உரையும், முதற்பகுதியும் இரண்டாம் பகுதியும், MADRAS, KAMBAR VILAS BOOK DEPOT, MYLAPORE.
- *1923:* வே.இராஜகோபாலையங்கார் (பதி.), ஸ்ரீ : எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும், இவை ஸேதுஸமஸ்தானம் மகாவித்வான் ஸ்ரீ.உ.வே.ரா.இராகவையங்கார் ஸ்வாமிகள் சோதித்துத் தந்தன, சென்னை, மயிலாப்பூர், கம்பர் விலாசம், வே.இராஜகோபாலையங்கார் பதிப்பு.
- *1926:* ராஜகோபாலார்யன் (பதி.), ஸ்ரீ : எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் முதற்றொண்ணூறு பாட்டிற்குப் பழைய உரையும் இறுதி முப்பது பாட்டிற்கு ஸ்ரீ வத்ஸசக்ரவர்த்தி ராஜகோபாலார்யன் எழுதிய குறிப்புரையும், சென்னை, கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர்.
- *1933:* ராஜகோபாலார்யன் (பதி.), ஸ்ரீ : எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூன்றாவது நித்திலக்கோவை மூலம், இது ஸேதுஸமஸ்தான மகாவித்வான் பாஷா கவிசேகரர் ஸ்ரீ உ.வே.ரா. ராகவையங்கார் ஸ்வாமிகள் பரிசோதித்துத் தந்தது, கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர், சென்னை.
- *1933:* ராஜகோபாலார்யன் (பதி.), ஸ்ரீ : எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும், இவை

ஸேதுஸமஸ்தான மகாவித்வான் பாஷா கவிசேகரர் ஸ்ரீ. உ.வே.ரா. இராகவையங்கார் ஸ்வாமிகள் பரிசோதித்துத் தந்தன, ஸ்ரீ வத்ஸ சக்ரவர்த்தி ராஜகோபாலார்யன் பதிப்பு, கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர்.

- *1933* : ராஜகோபாலார்யன் (பதி.), ஸ்ரீ : எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு மூலமும் பழைய உரையும், இவை ஸேதுஸமஸ்தான மகாவித்வான் பாஷா கவிசேகரர் ஸ்ரீ. உ.வே.ரா. இராகவையங்கார் ஸ்வாமிகள் பரிசோதித்துத்தந்தன, ஸ்ரீ வத்ஸசக்ரவர்த்தி ராஜகோபாலார்யன் பதிப்பு, கம்பர் புஸ்தகாலயம், கம்பர் விலாசம், மயிலாப்பூர் (இது நித்திலக்கோவை மட்டுமானது).
- *1938* : ந.சி.கந்தையா, அகநானூறு களிற்றியானைநிரை வசனம், ஒற்றுமை ஆபீஸ், சென்னை, மறுபதிப்பு : அமிழ்தம் பதிப்பகம், சென்னை, 2003 (மூன்று பகுதிகளும் சேர்ந்தது).
- *1940* : சைவசித்தாந்த மகாசமாஜம் (பதி.), சங்க இலக்கியம் எட்டுத் தொகையும் பத்துப்பாட்டும், சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை, மறுபதிப்புகள் : பாரிநிலையம், சென்னை, 1967, முல்லை நிலையம், சென்னை, 2005.
- *1941* : ந.சி.கந்தையா, அகநானூறு மணிமிடைபவளம் வசனம், ஒற்றுமை ஆபீஸ், சென்னை.
- *1941* : ந.சி.கந்தையா, அகநானூறு நித்திலக்கோவை வசனம், ஒற்றுமை ஆபீஸ், சென்னை.
- *1943* : ந.மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை (உரை.), எட்டுத்தொகையுள் ஒன்றாகிய அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும், பாகனேரி வெ.பெரி.பழ.மு.காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால்

வெளியிடப்பெற்றது, தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம் : கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு : தமிழ் மண் அறக்கட்டளை, சென்னை, 2007 (மூன்று பகுதிகளும்).

- 1944: ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை (உரை.), எட்டுத்தொகையுள் ஒன்றான அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும், பாகனேரி வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது, தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம் : கழக வெளியீடு, சென்னை.
- 1944: ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை (உரை.), எட்டுத்தொகையுள் ஒன்றான அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும், பாகனேரி வெ.பெரி.பழ.மு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்றது, தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், பாகனேரி, கிடைக்குமிடம் : கழக வெளியீடு, சென்னை.
- 1958 : மர்ரே எஸ்.இராஜம் (பதி.), அகநானூறு, மர்ரே அண்டு கம்பெனி, தம்புச்செட்டி தெரு, சென்னை, மறுபதிப்பு : என்.சி.பி.எச்., சென்னை, 1981.
- 1959 : வே.வடுகநாதன், அகநானூறு மணிமிடைபவளம் வசனம், ஒற்றுமை ஆபீஸ், சென்னை.
- 1959 : சு.அ.இராமசாமிப்புலவர், அகநானூறு நித்திலக்கோவை வசனம், ஒற்றுமை ஆபீஸ், சென்னை.
- 1960 : புலியூர்க்கேசிகன் (பதி., உரை.), அகநானூறு களிற்றியானைநிரை தெளிவுரை, அருணா பப்ளிகேசன்ஸ், சென்னை, மறுபதிப்புகள் : சாரதா பதிப்பகம், சென்னை, 2010, கங்கை புத்தக நிலையம், சென்னை, 2010 (மூன்று பகுதிகளும் சேர்ந்தது).

- *1960 :* புலியூர்க்கேசிகன் (பதி., உரை.), அகநானூறு மணிமிடைபவளம் தெளிவுரை, அருணா பப்ளிகேசன்ஸ், சென்னை.
- *1962 :* புலியூர்க்கேசிகன் (பதி., உரை.), அகநானூறு நித்திலக்கோவை தெளிவுரை, அருணா பப்ளிகேசன்ஸ், சென்னை.
- *1968 :* பொ.வே.சோமசுந்தரனார் (உரை.), அகநானூறு களிற்றியானை நிரை (1–50), கழக வெளியீடு, சென்னை.
- *1969 :* பொ.வே.சோமசுந்தரனார் (உரை.), அகநானூறு களிற்றியானை நிரை (51–100), கழக வெளியீடு, சென்னை.
- *1970 :* பொ.வே.சோமசுந்தரனார் (உரை.), அகநானூறு நித்திலக்கோவை (301–400), கழக வெளியீடு, சென்னை.
- *1970 :* பொ.வே.சோமசுந்தரனார் (உரை.), அகநானூறு மணிமிடைபவளம் & நித்திலக்கோவை (121–400), கழக வெளியீடு, சென்னை.
- *1970 :* பொ.வே.சோமசுந்தரனார் (உரை.), அகநானூறு களிற்றியானை நிரை, மணிமிடைபவளம் & நித்திலக்கோவை, கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்புகள் : 1973, 1974, 1976.
- *1987 :* மு.ரா. பெருமாள் முதலியார், அனைவரும் படிக்க அகநானூறு (நூற்றிருபது செய்யுள்), கழக வெளியீடு, சென்னை.
- *1990 :* மயிலம்வே.சிவசுப்பிரமணியன் (பதி.), அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும், உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை.
- *1990 :* மயிலம்வே.சிவசுப்பிரமணியன் (பதி.), அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும், உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை.
- *1990 :* மயிலம்வே.சிவசுப்பிரமணியன் (பதி.), அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும், உ.வே.சா. நூல்நிலையம், பெசன்ட் நகர், சென்னை.

- 1995 : அழகம்மை சிங்காரவடிவேலன் (பதி.), புறநானூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, கலித்தொகை உரைநூல், வெற்றிவேல் அறக்கொடைப் பதிப்பகம், தேவகோட்டை.
- 1999 : அ.மாணிக்கனார் (உரை.), அகநானூறு களிற்றியானைநிரை மூலமும் உரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை.
- 1999 : அ.மாணிக்கனார் (உரை.), அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை.
- 1999 : அ.மாணிக்கனார் (உரை.), அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை.
- 1999 : A.Dakshinamurthy (Translater), Translation of Tamil Classics, Akananuru (The Akam Four Hundred), Book-I Kalitriyanainirai (Tamil-English), Bharathidasan University, Trichy.
- 1999 : A.Dakshinamurthy (Translater), Translation of Tamil Classics, Akananuru (The Akam Four Hundred), Book-II Manimidaipavalam (Tamil-English), Bharathidasan University, Trichy.
- 1999 : A.Dakshinamurthy (Translater), Translation of Tamil Classics, Akananuru (The Akam Four Hundred), Book-III Nithilakovai (Tamil-English), Bharathidasan University, Trichy.
- 2002 : எஸ். சிவலிங்கராசா (பதி.), எட்டுத்தொகையுள் நெடுந்தொகை ஆகும் அகநானூறு களிற்றுயானைநிரை, வித்துவசிரோமணி சி.கணேசையர் உரை, தனலக்குமி புத்தகநிலையம், கலாசாலை வீதி, திருநெல்வேலி.
- 2004 : இரா.செயபால் (உரை.), அகநானூறு இரு தொகுதிகள், என்.சி.பி.எச்., அம்பத்தூர், சென்னை, மறுபதிப்பு : 2007.

- *2004 : நா.மீனவன், தெ.முருகசாமி (உரை.), அகநானூறு களிற்றியானை நிரை மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர்.*
- *2004 : நா.மீனவன், சுப.அண்ணாமலை (உரை.), அகநானூறு மணிமிடைபவளம் மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர்.*
- *2004 : தமிழண்ணல், நா.மீனவன் (உரை.), அகநானூறு நித்திலக்கோவை மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர்.*
- *2006 : ச.வே.சுப்பிரமணியன் (பதி.), சங்க இலக்கியம் மூலம் முழுவதும், மணிவாசகர் பதிப்பகம், சென்னை.*
- *2008 : இரா.இளங்குமரன், பி.தமிழகன் (பதி.), அகநானூறு (ந.சி.க. வசன உரையுடன்), தமிழ்மண் அறக்கட்டளை, தமிழ்மண் பதிப்பகம், சென்னை.*
- *2008 : ச.வே.சுப்பிரமணியன் (பதி.), தமிழ்ச் செவ்வியல் நூல்கள் மூலம் முழுவதும், மணிவாசகர் பதிப்பகம், சென்னை.*
- *2009 : வ.த.இராமசுப்பிரமணியம் (உரை.), அகநானூறு மூலமும் தெளிவுரையும், திருமகள் நிலையம், சென்னை.*
- *2010 : ம.வே.பசுபதி (பதி.), செம்மொழித் தமிழ் இலக்கண, இலக்கியங்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.*
- *2010 : ப.ஆறுமுகம், சங்கஇலக்கியம் என்உரை, ஸ்ரீநிதி பதிப்பகம், திருச்சிராப்பள்ளி.*
- *ஆ.வி.இ. : மா.சிவஞானம், அகநானூறு களிற்றியானைநிரை வசனம், ஒற்றுமை ஆபீஸ், சென்னை.*

## பின்னிணைப்பு: 2 - ராஜ. பதிப்புகளின் பாடவேறுபாடுகள்

*ராஜகோபாலார்யன் 1918,1920,1923,1926,1933 என்று ஐந்து கட்டமாக அகநானூற்றுப் பதிப்பிறைத்துள்ளார். இவ்வைந்துகட்டப் பதிப்புகளில் 1918 இல் வெளிவந்த பதிப்பு கிடைக்கப்பெறவில்லை. அதனை விடுத்து பிற நான்கு பதிப்புகளுக்கான பாடவேறுபாடுகளே இவ்வட்டவணையில் குறிக்கப்பெறுகின்றன. இவற்றுள் 1926 இல் வெளிவந்த பதிப்பு களிற்றியானைநிரை மட்டுமானதாகும். எனவே, இவ்அட்டவணையில் அகம்.120:3 ஆம் பாடம் வரையில் 1926 என்ற பகுதி காணப்பெறும். அதனைத் தொடர்ந்த பாடப்பகுதிகளுக்கு 1926 என்ற பகுதி காணப்பெறாது.*

| பா.எண். அ.எண். | 1920 | 1923 | 1926 | 1933 |
|---|---|---|---|---|
| 3:13 | துறக்கு நெஞ்ச | துரக்கு நெஞ்ச | துரக்கு நெஞ்ச | துரக்கு நெஞ்ச |
| 14 | பொய்மொழியெம் | – | – | பொய்ம்மொழி யெவ்வமென் |
| | யெவ்வமென் களைமா | – | – | களைமா |
| 4:9 | நரம்பார்ப்பன்ன | – | – | நரம்பார்த்தன்ன |
| 18:1 | வூழுறு புதிர்ந்த | – | – | வூழுறு புதிர்ந்து |
| 44:9 | புனறுறை யென்றாங் | புன்றுறை யென்றாங் | புன்றுறை யென்றாங் | புன்றுறை யென்றாங் |
| 50:14 | ளென்செய்கோ வெனவே | னென்செய்கோ வெனவே | னென்செய்கோ வெனவே | னென்செய்கோ வெனவே |
| 59:5 | யுடீயர் | யுடீஇயர் | யுடீஇயர் | யுடீஇயர் |
| 81:2 | தீம்பழ முளையிற் | தீம்பழ முனையிற் | தீம்பழ முனையிற் | தீம்பழ முனையிற் |
| 89:16 | விலங்கெழு குறும்பிற் | வில்கெழு குறும்பிற் | வில்கெழு குறும்பிற் | வில்கெழு குறும்பிற் |
| | கொண்டிமுறை பகுக்குங் | கோண்மூ பகுக்குங் | கோண்மூ பகுக்குங் | கோண்முறை பகுக்குங் |
| 93:17 | லயந்திகழ் பிழிதரும் | – | வயந்திகழ் பிமிழ்தரும் | வயந்திகழ் பிமிழ்தரும் |
| 95:1 | பசந்தது | – | பசந்த (பசந்தது) | பசந்த |

| | | | | |
|---|---|---|---|---|
| 96:1 | துடக்கலி னிறவுக்கலித்துப் (நுடக்கலின்) | – – | நுடக்கலி னிறவுக் கலித்துப் (துடக்கலின்) | நுடக்கலி னிறவுக் கலித்துப் (துடக்கலின்) |
| 4 | னரவா ளன்ன (அரவாயன்ன) | – | னரவாயன்ன (அரவாளன்ன) | னரவாயன்ன (னரவாளன்ன) |
| 15 | மொருகளத் தொழிய (வேந்தரும் பொருதுகளத்) | – – | பொருதுகளத் தொழிய (வேந்தருமொருகளத்) | பொருதுகளத் தொழிய (வேந்தருமொருகளத்) |
| 97:17 | வரும்பவிழ் வேனி | – | வரும்பத வேனி(அரும்பவிழ்) | வரும்பத வேனி (அரும்பவிழ்) |
| 19 | துறையணி மருதமொ டிகல்கொள | – – | துறையணி மருது தொகல்கொள (மருதமொ டிகல்கொள) | துறையணி மருது தொகல்கொள (மருதமொ டிகல்கொள) |
| 20 | கலுழ்தளி ரணிந்த | – | கலிழ்தளி ரணிந்த | கலிழ்தளி ரணிந்த |
| 101:4 | சுற்றுபு புரிந்த (சுற்றுபு சுரிந்த) | – | சுற்றுபு சுரிந்த (சுற்றுபு புரிந்த) | சுற்றுபு சுரிந்த (சுற்றுபு புரிந்த) |
| 12 | விசும்பிற் கூடம் போலப் (கூட்டம்) | – | – | விசும்பிற் கோடம் போலப் (கூடம்) |
| 103:4 | லேமஞ் சேப்ப | – | லேமஞ் செப்ப | – |
| 12 | உயவுத் துயைாக (உயவுத்துணையாகிய) | – | உயவுத்துணையாகிய | உயவுத் துணையாகிய |
| 14 | தானே சென்ற நலனு | – | தாமே சென்ற நலனு | தாமே சென்ற நலனு |
| 106:2 | பொங்குபல் சிறுமீன் | – | பொங்குபல சிறுமீன் | பொங்குபல சிறுமீன் |
| 107:2 | தசாஅப்பொறை | – | தாயாப்பொறை | தாயாப்பொறை |
| 9 | வால் அவெண்சோறு | வாஅல் வெண்சோறு | வாஅல் வெண்சோறு | வாஅல் வெண்சோறு |
| 13 | மன்னுறஞ்சு (பன்னுறஞ்சு) | – | நுகுமணுறஞ்சு (பன்னுறஞ்சு) | துகுமணுறஞ்சு (பன்னுறஞ்சு) |
| 109:12 | செகா விட்டகன்ற பல்சூர்ப் | செகா விட்டக றப்பற்குப் | செகா விட்டக றப்பற்குப் | செகா விட்டக றப்பற்குப் |

| | | | | |
|---|---|---|---|---|
| 110:21–22 | நன்னுத லொழிகோ | – | நன்னுதா லொழிகோ | நன்னுதா லொழிகோ |
| 112:11 | கழியாக் கதல (கழியக் காதல) | – | கழியக் காதல | கழியக் காதல |
| 113:4 | மாவீசு (னன்மாவீசு) | – | னமர்வீசு (மகன்மாவீசு) | னமர்வீசு (மகன், மாவீசு) |
| 11 | யகன்சூ லஞ்சுரைப்(யகனல்சூ) | – | னல்கு வன்சுரைப் | னல்கு வன்சுரைப் |
| 115:10 | வள்ளுயர் | – | வள்ளுயிர் | வள்ளுயிர் |
| 14 | வயமானஞ்சி | – | வாமானஞ்சி | வாமானஞ்சி |
| 116:8 | காழின் வனமுலை | – | காழியல் வனமுலை (காழின்) | காழியல் வனமுலை (காழின்) |
| 119:9 | னொண்சிலை மழவ | – | னோன்சிலை மழவ | னோன்சிலை மழவ |
| 13 | மரக்காழ் வேலொடு | – | மாக்காழ் வேலொடு | மாக்காழ் வேலொடு |
| 14 | தனியமரமுவந் | – | தணியமரமுவந் | தணியமரமுவந் |
| 15 | துனிகொள (துனிகொள்பு) | – | துணிகொள (துணிகொள்பு) | துணிகொள (துணிகொள்பு) |
| 120:3 | கொக்கி னிரைபறை | – | கொக்கின நிரைபறை | கொக்கின நிரைபறை |

| பா.எண். அ.எண். | 1920 | 1923 | 1933 |
|---|---|---|---|
| 121:1 | நாணகை (நாநகை) | – | நாநகை |
| 1 | கடுந்திறல் (கடுந்தெறல்) | – | கடுந்தெறல் (கடுந்திறல்) |
| 11 | யூறுகணை மழவ ருள்கீண் டிட்ட (யுறுகண்) | – | யுறுகண மழவ ருருள் கீண்டிட்ட (யூறுகணை மழவருள்கீண்) |
| 13 | கன்மிசைக் கடுவளி (கணைவிசை) | – | கணைவிசைக் கடுவளி (கன்மிசை; கணைவிசை) |
| 123:3 | வரைசேர் | – | வரைசெறி |
| 124:6 | மாட மாநகர்ப் (மாடமாணகர்) | – | மாட மாணகர்ப் (மாடமாநகர்) |
| 14 | யந்தி காவ லாம்பணை யிமிழிசை | – | யந்தி காவல ரம்பணை யிமிழிசை |
| 125:6 | கோளுறு குவளைப் (தாதுறு) | – | தாதுறு குவளை (க்கேழுறுக்கோளுறு) |
| 7 | பாடாஅப் | படாஅப் | படாஅப் |
| 9 | வோங்குசெலற் (பொங்குசெலற்) | – | பொங்குசெலற் (வோங்குசெலற்) |
| 130:8 | புலவுப் பொரு தழிந்த (பொருதிழிந்த) | – | புலவுப் பொரு தழித்த (பொருதிழிந்த) |
| 131:1 | மாத்தா ளீகைப் | – | மாத்தா ளிகணைப் (ளீகைப்) |
| 13 | வெருவரு தருந் கான | – | வெருவரு தருந கானம் |
| 133:14 | யிதன்முள் ளொப்பின | – | யிதன்முள் ளொப்பின் |
| 135:14 | விளிந்தன்று (கலங்கின்று) | – | கலங்கின்று (விளிந்தன்று) |
| 136:1 | புழுக்கி நெய்க்கனி (புழுக்கி னெய்க்கனி) | – | புழுக்கி னெய்க்கனி (புழுக்கி நெய்க்கனி) |
| 11 | பழங்கன்று கறிக்கும் (பழங்கன்று கறித்த) | – | பழங்கன்று கறித்த (பழங்கன்று கறிக்கும்) |
| 18 | தமர்நமக் கீந்த (ஈத்த) | – | தமர்நமக் கீத்த (கீந்த) |

| | | | |
|---|---|---|---|
| 25 | பையென | – | மொய்யென |
| 138:11 | தொடங்குபு (நுடங்குபு) | – | நுடங்குபு (பாடித் தொடங்குபு) |
| 141:17 | பெருங்செந் நெல்லின் | – | பெருஞ்செய் நெல்லின் |
| 18 | பாசவ லிடித்த பெருங்கா ழுலக்கை<br>(பாசவலிடிக்கு மிருங்கா) | – | பாசவலிடிக்கு மிருங்கா ழுலக்கை<br>(பாசவ லிடித்த பெருங்கா) |
| 142:4 | மாந்தரன் | – | மாந்தரம் (நிறையிருந்தானை மாந்தரன்) |
| 8 | முறையியல் வழாஅ (முறையின் வழாஅ) | – | முறையின் வழாஅ (முறையியன் வழாஅ) |
| 23 | பெயலைக் கலங்கிய | – | பெயலலைக் கலங்கிய<br>(பெயலைக் கலக்கிய மிலைப்பூங்) |
| 24 | கோங்குசேர் புறைப்பத் | – | கொங்குசோர் புறைப்பத் |
| 145:5 | நுண்ணிதி னுளர்க்கும்<br>(நுண்ணிதி னிவக்கும்;னிழக்கு) | – | நுண்ணிதி னிவக்கும்<br>(நுண்ணிதி னிளக்கும், னுளர்க்கு) |
| 15 | குருகொடாலுந் | – | குருகோ டாலுந் |
| 146:1 | னண்ணல் லேறு | னண்ணல் லேஎறு | னண்ணல் லேஎறு |
| 10 | வளிபோர்த் துயல்வரும் | வளிபொரத் துயல்வரும் | வளிபொரத் துயல்வரும் |
| 11 | றண்பனி | – | கண்பனி |
| 150:2 | வம்புடைக் (வம்புவிட) | – | வம்புவிடக் (வம்புடைக்) |
| 153:17 | கண்கமழ் பனிமலர் (தண்கமழ்;புதுமலர்) | – | கண்கமழ் புதுமலர் (தண்கமழ், பனிமலர்) |
| 155:16 | மருங்கின | – | மருங்கின் |
| 156:3 | செழுஞ்செந் நெல்லின் | – | செழுஞ்செய் நெல்லின் (செந்நெல்) |
| 6 | கரும்பரிதி யார்க்குந் | – | கரும்பருத்தி யாக்குந்<br>(பருகி; யார்க்குந்) |

| | | | |
|---|---|---|---|
| 9–10 | கழுநீ ராம்பன் முழுநெறிப் பகைத்தழை காமர் ஞாயிற் றாகத் தலைப்பெயப் (கழனியாம்ப) | – | கழனி யாம்பன் முழுநெறிப் பைத்தழை காயா ஞாயிற் றாகத் தலைப்பப் (கழுநீராம்ப; பைந்தழை, காமர் ஞாயிற்றாகத் தலைப்பெய) |
| 14 | நால்செவிக் கடாஅய் | – | நல்செவிக் கிடாஅய் |
| 16 | தணிமருந் தறியாள் | – | தணிமருங்கறியாள் (தருமருந்தறி, தணிமருந்தறி) |
| 157:1 | ரல்கிற் கொண்ட (பெண்டிரல்குற்) | – | னல்குற் கொண்ட |
| 10 | நெஞ்சுண் மொழிப | – | நெஞ்சுண மொழிப |
| 14 | லாற்று வோர்க்கே (தல்வல்லு வோர்க்கே) | – | வல்லுவோர்க்கே (தலாற்றுவோர்க்கே) |
| 158:16 | முருகினன்ன | – | முருகனன்ன (முருகி) |
| 160:10 | வாயுடை மையின் | – | வாவுடைமையின் |
| 13 | நுதிமுகங் குறைத்த | – | நுதிமுகங் குறைந்த |
| 161:9 | தோட்டாழபு | தோட்டாழ்பு | தோட்டாழ்பு |
| 165:5 | பெருமுலை மாந்தும் | – | பெறுமுலை மாந்தும் |
| 166:2 | தோயுடை யுப்பின் (கோதுடை வைப்பின்) | – | கோஒயுடைப்பின் (தோயுடையுப்பின், கோதுடைவைப்பின்) |
| 6 | நூதல் கழியு | – | நூதல கழியும் |
| 167:14 | மரஞ்சேர் மாடக் கெழுதணி கடவுள் | – | மரஞ்சோர் மாடக் கெழுதணி கடவுள் |
| 15 | (மாடக் கெழுதணி) | – | (மாடக்கெழுதணி) |
| 169:6 | கடல்விழை | கடல்விளை | கடல்விளை |
| 171:13 | பழம்போற் செற்ற | பழம்போற் சேற்ற | பழம்போற் சேற்ற |
| 176:15 | தழுவணிப் பொலிந்து | – | தழூஉவணிப் பொலிந்து |

| | | | |
|---|---|---|---|
| *179:13* | மதியோர் வாண்முகம் புலம்பப் (வாணுதல் புலம்ப) | – | மதியோர் வாணுதல் புலம்பப் (வாண்முகம்) |
| *183:3* | மத்தம ரழுவ | – | மத்தமா ரழுவ |
| *184:14* | விணைமகிழ் | – | விளைமகிழ் |
| *185:5* | வலித்து வவ்வினர் (வலித்து வல்லினர்) | – | வலித்து வல்லினர் (வலிது வல்லினரே) |
| *186:10* | மண்டை பாழ்பட | – | பண்டை யாழ்பாட (மண்டை பாழ்பட) |
| *187:16* | வேனில் வெற்பிற் கானிலங் காய (வேனில் வைப்பிற் கானங்காய) | – | வேனில் வெற்பிற் கானலங் காய (வேனில் வைப்பிற் கானிலங்காய) |
| *188:5* | பெருஞ்சே யாடவர் | – | பெருஞ்செ யாடவர் (பெருஞ்சேய்) |
| *191:11* | பிரிந்துறை வவ்விச் (வல்வி) | – | பிரிந்துறை வல்லி (வவ்வி) |
| *192:1* | மதியிருப் பன்ன மாசறு திருநுதல் (மதியரும் பன்ன மாசறு சுடர்நுதல்) | – | மதியிருப் பன்ன மாசறு சுடர்நுதல் |
| *198:15* | கவிரம் பேரிய (கவுரியம் பெயரிய) | – | கவிரம் பெயரிய (கவுரியம்; பேரிய) |
| *199:13* | பிற்பிடப் பிறர்போற் | – | பிற்படப் பிறர்போற் |
| *207:4* | பெருஞ்சே யாடவர் | – | பெருஞ்செ யாடவர் |
| *212:13* | புரவுக்கால் கடுப்ப | – | புரவுக்கார் கடுப்ப |
| *213:24* | லுறவில் | லுறவின் | லுறவின் |
| *214:8* | யமருந் தம்வயி னதுவே நமரென | – | யமரு நம்வயி னதுவே நமரென |
| *217:11* | குயினா நரலக் (குருகினா நரல; குருகினநரல) | – | குருகின நரலக் (குருதினாநரல; குகியினாநரல) |
| *15* | துணையுடை யீர்க்கென | – | துணையுடை யீர்க்கே |
| *219:7* | முண்ணென் றூட்டப் | – | முண்ணென் றூட்டிப் |
| *11* | நெஞ்ச நோவென் | – | நெஞ்ச நோவேன் |
| *14* | பொறியரை | – | பொரியரை |

| | | | |
|---|---|---|---|
| 220:6 | முன்முயன் றரிதனின் | – | முன்முயன் றரிதினின் |
| 14 | விருபுட் போல (இரும்புள்) | – | விரும்புட் போல (இருபுள்) |
| 16 | செங்கொ லவ்வலை | – | செங்கோ லவ்வலை |
| 223:6 | வெங்கட் (வெங்காட்) | – | வெங்காட் (வெங்கட்) |
| 230:7 | னொண்டூ | – | னொண்டு |
| 12 | கைவல் பர்கன் | – | கைவல் பாகன் |
| 231:2 | குறுமிடத் துலக்கு | – | குறுமிடத் துவக்கு |
| 234:9 | வல்விரைந் தூர்தி | – | வல்விரைந் தூர்மதி |
| 236:18 | புனலொழிந் தன்றெனக் | – | புனலொளித் தன்றெனக் (புனலொழித்) |
| 237:3 | வாலெயிற் | வரவெயிற் | வரவெயிற் |
| 241:2 | னீயரம்ம (னீயாரம்ம; னினியரம்ம) | – | னினியரம்ம (னீயாரம்ம, னினியாரம்ம) |
| 16 | நீண்மர (நன்மர) | – | நன்மர (நீண்மர) |
| 245:12 | மன்றொடு புதல்வன் | – | மன்றோடு புதல்வன் |
| 248:12 | பூச்சேர் மாலை | – | பூச்சோர் மாலை |
| 252:12 | லெரிதிரைத் திவலை | லெறிதிரைத் தவலை | லெறிதிரைத் திவலை |
| 253:7 | யிங்கியான் | – | யீங்கியான் |
| 9 | வாடா | – | வடாஅ |
| 16 | துறுதாழ் வல்சியர் | – | துறுகாழ் வல்சியர் |
| 260:5 | தகையா டலவ னளைவயிற் செறியச் | – | கரையா டலவ னளைவயிற் செறியச் (மறப்பத் தகை) |
| 262:13 | மாயினேம் | – | மாயினெம் |
| 263:2 | வுருவுகெழு மண்டிலங் | – | வுருகெழு மண்டிலங் |

